بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْم



இருப்பது ஒன்றுதானே ....
ஏழு வானும், எழுபதினாயிரம் திரையும்
நீயும் நானும் ஒன்றானபின்
அதுகள் இல்லாமல் போகிறது.

இருப்பது ஒன்றுதானே....
இருப்பினும்....
உன் அச்சத்திற்கும், உன் ஆதரவுக்கும்
நடுவில் இருக்கவே விரும்புகிறேன்.

இருப்பது ஒன்றுதானே ....
உன்னிடம் அருளைக் கேட்பதைக் காட்டிலும்
ராவில் தனித்தே நின் உதவியை எண்ணி
அழுவதில் ஆன்ம சுமை குறைந்தே போகிறது

இருப்பது ஒன்றுதானே ....
என் உடல் உறுப்புகளெல்லாம்
எனக்கெதிராக சாட்சி சொல்லும்போதே
புரிந்துகொண்டேன் இந்த உடலில் ' நான் ' இல்லை என்று !

இருப்பது ஒன்றுதானே ....
நீயும் நானும் ஒன்றானபின்
நான் ' உன்னை எங்கே தேடுவது ?
எதற்கு உன்னை நான் தேடுவது ?

இருப்பது ஒன்றுதானே ....
பாரமும் , பழிபாவமும் மீஸானுக்குத்தானே.
சுவனமும், நரகமும் உன் படைப்புதானே
அதில் சுகமும், வேதனையும் நின் அருளுதானே

இருப்பது ஒன்றுதானே ....
காண கிடைக்க வேணும் உன் லிகாதானே.
கண்டு குளிர வேணும் திருக்கல்யாணம்தானே
அதில் கரைந்து போவதும் என் ஆத்மாதானே

ஆமாம், இருப்பது ஒன்றுதானே!!!!!

ரஹ்மத் ராஜகுமாரன்

+919486909903 /// +91936018103

(பேஸ்புக்)




பேஸ் புக்கின் பதிவுகள் மூலம் ஆன்மீகத்தின் அடிநாதம் வரை புரிய வைத்திருக்கிறது!!!
வார்டு முதல் நாடு வரை உள்ள அரசியலும் செய்திதாளில் வராத உள்குத்துகளும் முகநூலில் காண முடிந்தது!!!

இப்போ கூட செய்திதாளில் வெளிவராத சிரிய போரின் தாக்கல் பேஸ்புக்கில் ஈரகுலை நடுங்க காண முடிகிறது!!!

செல்லரித்த எத்தனையோ வரலாறுகளுக்கு சொல்வடிவம் கொடுத்து கூடவே படத்துடன் பரிமாறப்பட்டிருக்கிறது!!

முகநூல் எத்தனையோ பேர்களை கவிஞர்களாக்கி இருக்கிறது!!!

ஆன்மீகவாதியாக்கி இருக்கிறது!!!

சிந்தனைவாதியாக செதுக்கி இருக்கிறது!!!

புத்தகங்களாக்க முடியாத எத்தனையோ படைப்புகள்
முகநூல் நூலாக்கி அந்த உடனே படிக்கவும் கிடைக்கச் செய்திருக்கிறது!!

நூல்களுக்கு கூடக் கிடைக்காத சுடச் சுட விமர்சனம் முகநூலுக்கு கிடைத்திருக்கிறது!!!

எத்தனையோ சீர்கேடுகளையும் சில்லறைத் தனங்களையும் சின்னத்திரையின் வாயிலாக வெளிப்படுத்தி அவைகளை செவ்வன சீர்படுத்தி இருக்கிறது!!!

படைப்புகளை உருவாக்குகிறவனை " "படைப்பாளி " என்று இலக்கியம் கூறுகிறது.

படைப்பாளிகளை உருவாக்குகிற "மார்க்"(MARK ZUCKERBERG)கை என்னவென்று கூறுவது ?

---

*✍ரஹ்மத் ராஜகுமாரன்*

---







**மனித பிரஜைகளோடு கொரோனா மரண யுத்த பிரகடனம் !**

வைரஸ்களின் உலகத்தில் பேசி முடிக்கப்பட்ட தீர்மானத்தை அமலாக்க கொரோனா வைரஸ்கள் சில விதிகளை மனித குலத்திற்கு சட்டமாக்குகிறது .

சட்டத்தை மீறும் சில மனிதகுல பிரஜைகளுக்கு மரணத்தை இலவசமாக வழங்க வேண்டும் .
" டேய் மனிதா ! தனித்திரு , சேர்ந்திருந்தால் தள்ளி இரு , உங்களின் சுயமே முகமூடி கொள்ளை தானே ? பிறகென்ன முகமூடி கொள்ளைக் காரானாக மனிதர்களைப் பார்க்க எங்களுக்கு ஆசை. போடுங்கள் முகமூடியை ."
"மனிதா..! எத்தனை எத்தனை வேஷம் இந்த முகத்தில் போட்டாய்...? நாங்கள் காண சகிக்காத உன் மொரக்கட்டை இழுத்து மூடிக் கொள். "

"எத்தனை எத்தனை மாறு வேஷம் போட்டு உலக மேடையில் நடித்தாய் ? "
" இப்போ உச்சி முதல் உள்ளங்கால் வரை நீ யாருன்னு தெரியாத ஒரு பிணம் மாதிரியான மாறு வேஷத்தை போடு. "
" மனிதா .. !..மூச்சு திணற திணற எத்தனை பாவம் செய்தாய் ? ரத்தம் உறையும் அளவிற்கு எத்தனை எத்தனை கொடுமையடா நீ செய்தாய் ? "

" இதெல்லாம் மனிதர்களாகிய உங்களிடமிருந்து நாங்கள் கற்றுக் கொண்ட பாடங்கள்தான் .இந்த கொடுமை ஒன்றும் உங்களுக்கு புதியதல்ல "
"மனிதா..! நீ பாவங்கள் செய்ய எத்தனை எத்தனை அவதாரம் எடுத்தாய் ? நாங்களும்தான் அவதாரம் எடுத்தோம் .அப்போ முதல் அலை . இப்போ இரண்டாம் அலை . இன்னும் ஐந்து அலைகள் ஐந்தாம் படையாய் எங்களிடம் இன்னும் பாக்கி இருக்கிறது . இந்த படை போதுமா ? இன்னும் கொஞ்சம் வேண்டுமா ? "
"உலகையே முற்றுகையிட்டிருக்கிறோம்

முட்டாள் மனிதா , உன்னையும் சேர்த்தே முடக்கியிருக்கிறோம் "
" மனிதா ..! முதல்ல நீ அடங்கு . பின் உன் ஊரடங்கு . எங்களுக்கு அஞ்சி அடங்காத மனிதா..! உன் மூச்சை நாங்கள் அடக்குவோம் .பின் உன்னையே அடக்குவோம் "
" மனிதா ! கண்ணுக்குத் தெரியாத எதிரிகள்தான் நாங்கள் ஆனாலும் நீ கூட இருந்தே குழிபறித்த துரோகி நீ .
உனக்கு நாங்கள் எவ்வளோ மேல் " .

" உன் ஓட்டை சட்டத்தால் எத்தனை எத்தனை குற்றவாளியை நிரபராதியாக்கினாய் ? எத்தனை எத்தனை நிரபராதியை குற்றவாளியாக்கினாய் ? "
"உன் ஓட்டை சட்டம் எங்களை ஒன்றும் செய்ய முடியாது "
" அடங்கி இரு . இல்லையேல் அடக்க வருவோம் " .

இப்படிக்கு ,
கொரோனா ஐக்கிய உலக சர்வதிகார பிரஜைகள்.

✍ரஹ்மத் ராஜகுமாரன்

உண்ணும் உணவு முறைகள்

போன மாதம் பார்த்த நண்பர் புகாரி திடீரென மெலிந்து இருப்பதைப் பார்த்து , " உடம்புக்கு என்ன ?" என்று விசாரித்தால் " இப்போதான் நல்லா இருக்கேன்.எல்லாம் டயட் செய்ற மாயம் " என்கிறார்.

*நண்பர் நிஷா மன்சூர்* அவர் ஒரு டயட் பற்றி சொல்கிறார். நண்பர் #ibrahimsyed (சையத் சாதிக்) அவர்கள் பேலியோ பற்றி பேசுகிறார் .

இணையம் வழியாக நம்மூரில் GM Diet , Paleo Diet என்ற மெலிய வைக்கும் சில அதிரடி உணவு பழக்கங்கள் பிரபலமாகி வருகின்றன.

இந்த இரண்டு டயட்கள் மூலமும் தடாலடியாக மெலிந்து நம்மை பொறாமைப்பட வைக்க நிறைய பேர் இருக்கத்தான் செய்கிறார்கள் .

சரி.. அது என்ன உணவு வகைகள் ?

GM Diet என்றால் அதிகமான மரக்கறி வழி , Paleo Diet அதிகமான புலால் வழி

GM Diet கடைப்பிடித்த எட்டாவது நாளில் 8 கிலோ குறைந்து இருக்கும் ' என சூடம் அணைத்து சத்தியம் செய்பவர்கள் உண்டு .GM Diet என்றதும்

'Genetically modified Diet' என பதற வேண்டாம் . இது General motors கம்பெனிக்காரர்கள் அவர்களின் ஊழியர்களுக்காக செதுக்கிய உணவு திட்டம் என்கிறது இணையம்.

இந்த உணவு திட்டத்தில் முதல் நாள் வாழைப்பழம் தவிர பிற பழங்கள் மட்டும் உட்கொள்ள அறிவுறுத்தப்படுகிறது.

இரண்டாம் நாள் உருளைக்கிழங்கு தவிர பிற காய்கறிகள் மட்டும் ,

மூன்றாம் நாள் பழங்களும் காய்கறிகளும் ,

நான்காம் நாள் பாலும்-பழமும் ,

ஐந்தாம் நாள் தக்காளி, புலால் மட்டுமே , ஆறாம் நாள் புலாலும் காய்கறியும் ஏழாம்நாள் பழுப்பு அரிசி /சிறுதானியம் மற்றும் காய்கறிகள் என பட்டியல் தரும் இவர்கள் பழங்களுக்கும், காய்கறிகளுக்கும் அளவு விதிக்கவில்லை .

நீர் காய்கறிகளான தர்பூசணி , கிர்ணி வகைகளையே அதிகமாக உட்கொள்ள சொல்கிறார்கள் கூடவே ' புலாலா... நான் சைவமாச்சே ?' எனப் பதறுவோருக்கு மரக்கறியாக கைக்குத்தல் பழுப்பு அரிசியை சாப்பிட சொல்கிறார்கள்.

அதேபோல் ஆதிமனிதன் உணவு என பேலியோ டயட் (Paleo Diet) முன்னிறுத்தப்படுகிறது .வேளாண் சமூகமாக மாறுவதற்கு முன்னர் வேட்டைச் சமூகமாக இருந்த காலத்தில் நாம் இப்போது போல தானியங்களை சாப்பிடவில்லை, புலாலை அதிகமாகவும் எப்போதாவது கொஞ்சம் தானியங்களையும் , காய்கறிகளையும் சாப்பிட்டோம்.

அதனால் பேலியோ டயட் மூலம் கொஞ்ச காலத்திற்கு அதிகமாக இறைச்சி, முழு முட்டை , கொழுப்பு நீக்காத பால் , பாதாம், முந்திரி போன்ற விதைகள் ஆகியவற்றை மட்டுமே சாப்பிட்டும் மெலிந்து ஆரோக்கியமாக இருக்கலாம் இதுதான் ஆதிமனிதனின் முதல் உணவு மற்றும் ஆரோக்கிய உணவும் என்று கூட விளக்குகிறார்கள் .

குறைந்தபட்சம் 70 தலைமுறைகளாக வேளாண் உணவுப் பிடிக்கு மாறிவிட்ட நாம் மீண்டும் ஆதித் தந்தையின் சாப்பாட்டுக்கு அடுத்த மெனுவிலேயே மாறிச் செல்வது எல்லோருக்கும் சரியா இருக்குமா ?

' கொலஸ்ட்ரால் பூச்சாண்டியை பார்த்து பயப்படாதீர்கள் .கெட்ட கொழுப்பு என நம்மை பயமுறுத்துவதற்காகக் காட்டப்படும் லோ டென்சிட்டி கொலஸ்ட்ரால்தான் ஒவ்வொரு நாளும் ரத்தக் குழாய்க்குள் உண்டாகும் காயத்தை ஆற்றுகிறது . நாம் நினைப்பது போல் கொலஸ்ட்ரால் தீவிரவாதி அல்ல ; சீர்திருத்தவாதி ' என விளக்கம் தருகிறார்கள் .

அதேசமயம் அதிகமான வெப்பத்தில் எண்ணெயில் வேகவைத்தும் வறுத்தும் பார்பக்யூவில் வேகவைத்தும் செய்யப்படும் புலாலில் உருவாகும் **polycyclic aromatic hydrocarbons and Heterocyclic aromatic amines** மூலம் உண்டாகும் கேன்சர் காரணிகள் , கெட்ட கொழுப்பின் மூலம் ரத்த குழாய் உட்சுவரில் ஏற்கனவே அதிகமாக பூசப்பட்டுள்ள கொழுப்பு அடைப்பின் மீது இறைச்சி கொழுப்பாக போய் சேராதா ? என்னும் கேள்விக்கு தெளிவான விளக்கம் இல்லை .

பெரிதும் பிழைபடாத , சற்று ஆரோக்கியமான உடம்புக்கு , எடையை குறைக்க மேலும் நலம் அடைய மட்டுமே மேற்கண்ட டயட்கள் உதவக்கூடும் .

ஏற்கனவே சர்க்கரை நோய் , ரத்தக் கொதிப்பு , மாரடைப்பு , கேன்சர் முதலான பாரம்பரிய வாழ்வியல் நோய்களில் பிடியில் உள்ளவர்கள் அல்லது அதற்கான காத்திருப்பு பட்டியலில் உள்ளவர்கள் குடும்ப மருத்துவர் ஆலோசனைப்படி இத்தகைய பயிற்சி கொள்வதே நலம்.

நபி (ஸல்) அவர்களுக்குப் பிடித்த உணவுகளும்; அவற்றின் நன்மைகளும்!

**1. பார்லி:**

ரசூலுல்லாஹ் (ஸல்) சொன்னார்கள்- ''காய்ச்சலுக்கு இதை சூப்பாகக் குடிப்பது நல்லது,''.

**2. ஈச்சம் பழம்:**

ரசூலுல்லாஹ் (ஸல்) சொன்னார்கள்-''ஈச்சம் பழம் இல்லாத வீடு உணவு இல்லாத வீடு என்றும்; பிள்ளை பிறக்கும் நேரங்களில் உண்பது மிகவும் நல்லது என்றும்,''.

**3. அத்திப்பழம்:**

ரசூலுல்லாஹ் (ஸல்) சொன்னார்கள்: ''அத்திப்பழம் சுவர்க்கத்துக் கனியாகும். இது மூல நோய்களுக்கு உகந்தது''.

**4. திராட்சைப் பழம்:**

ரசூலுல்லாஹ் (ஸல்) அவர்கள் மிகவும் விரும்பிச் சாப்பிட்ட திராட்சைப் பழம், ரத்தத்தை சுத்தப்படுத்துவதோடு சிறுநீரக ஆரோக்கியத்துக்கு மிகவும் உயர்ந்தது.

**5. தேன்:**

ரசூலுல்லாஹ் (ஸல்) சொன்னார்கள்- ''வயிற்றுப் போக்குள்ளவர்கள் தேனை சுடு நீரில் கலந்து சாப்பிடுவது நல்லது. இதை, காலையில் இளம் சூடான நீரில் கலந்து குடிப்பது நன்மை பயக்கும்,''.

**6. தர்பூசணி:**

ரசூலுல்லாஹ் (ஸல்) சொன்னார்கள்- ''பிரசவமாகியுள்ள பெண்கள் தர்பூசணிக் காய்களை உண்டால் அழகிய முகத்தோற்றமும் நல்ல குணங்களையும் உள்ள பிள்ளைகளை உற்பத்தி செய்ய முடியும்,'' என்று...

**7. பால்:**

ரசூலுல்லாஹ் (ஸல்) சொன்னார்கள்-''பால் இதயத்தின் சூட்டைத் தணிப்பதோடு, மூளை, கண் பார்வையை புதுப்பிப்பதோடு; மறதியையும் போக்கச் செய்கின்றது,''.

**8. காளான்:**

ரசூலுல்லாஹ் (ஸல்) சொன்னார்கள்- ''காளான் கண்ணுக்கு நல்ல மருந்தாகும். அத்துடன் பக்கவாதத்துக்குமான மருந்தாகும்,''.

**9. ஆலிவ் எண்ணெய்:**

ரசூலுல்லாஹ் (ஸல்) சொன்னார்கள்- ''ஆலிவ் எண்ணெய் சருமத்துக்கும், தலை முடிக்கும் நல்ல பயனுள்ளதுடன் வயிற்று வீக்கத்தையும் கட்டுப்படுத்தும்,''.

**10. மாதுளம் பழம்:**

ரசூலுல்லாஹ் (ஸல்) சொன்னார்கள்- ''மாதுளம் பழம் 40 நாட்களுக்கு ஷைத்தானுடைய தீங்குகளிருந்தும்; கெட்ட ஆசைகளில் இருந்தும் பரிசுத்தமாக்கும்,''.

**11 வினிகர்:**

ரசூலுல்லாஹ் (ஸல்) அவர்கள், வெள்ளரிக்காய் உடன் வினிகரையும், ஆலிவ் எண்ணையையும் ஒன்றாக சேர்த்து சாப்பிடுவது வழக்கமாக இருந்தது.

**12 தண்ணீர்:**

ரசூலுல்லாஹ் (ஸல்) சொன்னார்கள்- ''இந்த உலகின் நல்ல பானமானது தண்ணீராகும். தாகமெடுத்தால் தண்ணீரை உறிஞ்சிக் குடிக்குமாறும் அவசரமாகக் குடித்தால் அது ஈரலில் வருத்தத்தை உண்டுபண்ணும்,''

ரஹ்மத் ராஜகுமாரன்

# என்னைக் கடந்த பொழுதுகள்?



நீங்கள் குண்டா... ஒல்லியா... என்பதை அறிய உதவும் அளவுதான் **BMI (Body Mass Index).** அதைக் கணக்கிடுவதும் எளிதுதான்.
பி.எம்.ஐ = உடல் எடை (கிலோ கிராமில்) உயரம் (மீட்டர்)2 – இதுதான் அதற்கான ஃபார்முலா.
உதாரணத்துக்கு... **78 கிலோ எடை 164** செ.மீட்டர் உயரம் எனில், உங்கள் **பி.எம்.ஐ 78/(1.64)2=29**
விடை 23-க்கு மேல் இருந்தால் நீங்கள் அதிக உடல் எடையுடன் **(Over weight)** இருக்கிறீர்கள் என்றும், 30-க்கு அதிகம் இருந்தால் 'குண்டுப் பேர்வழி' **(Obesity)** என்றும் பொருள்.

பி.எம்.ஐ பட்டியலில் இந்திய அளவில் தமிழ்நாட்டுக்கு 4-வது இடம்.

'குண்டாக இருந்தால் நீரழிவு நோய் வருவதற்கு வாய்ப்புகள் மிக அதிகம்' என்பது எவ்வளவு உண்மையோ அவ்வளவு உண்மை புற்றுநோய் வருவதற்கும் வாய்ப்புகள் அதிகம் .

புற்று நோயாளிகளில் 20 பேரில் ஒருவர் குண்டாக இருக்கிறார் என்ற புள்ளிவிவரம் சொல்கிறது.
'இரண்டு வயதுக்குள் குண்டாக இருக்கும் குழந்தைகள் எதிர்காலத்தில் எப்போதுமே குண்டாக இருப்பதற்கும் அதனால் உடலில் எந்தப் பாகத்திலாவது புற்று வருவதற்கும் ஆபத்துக்கள் மிக அதிகம் ' என்கின்றன ஆய்வுகள்.
உடல் எடை அதிகம் உள்ளவர்களுக்கு தான் மார்பகம் , மலக்குடல் , கர்ப்பப்பை போன்ற பாகங்களில் புற்றுகள் அதிகம் பற்றிக் கொள்கின்றன . இவற்றை ஆரம்பத்திலேயே கண்டறிந்தால் 'அறுவை கீமோ கதிர்வீச்சால் ' குணப்படுத்திவிட முடியும் .

ஆனால் கணையம் , பித்தப்பை, உணவுக்குழல் போன்ற உடலின் உள் பாகங்களில் உண்டாகும் குணப்படுத்த கடினமான புற்றுகள் மற்றவர்களைவிட குண்டான உடல்வாகு கொண்டவர்களே அதிகம் தீண்டுகின்றன.

அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் இறைமறுப்பாளர் ஒருவர் விருந்தாளியாக வந்து தங்கினார். அவருக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஓர் ஆட்டிலிருந்து பால் கறந்து கொடுக்கும்படி உத்தரவிட்டார்கள். அவ்வாறே கற(ந்து அவரிடம் கொடு)க்கப்பட்டது. அவர் அந்தப் பாலைப் பருகினார்.

பிறகு மற்றோர் ஆட்டில் பால் கறக்கப்பட்டது. அதையும் பருகினார்.
பிறகு மீண்டும் ஓர் ஆட்டில் கறக்கப்பட்டது. அதையும் பருகினார்.
இவ்வாறாக ஏழு ஆடுகளிலிருந்து கறக்கப்பட்ட பாலை அவர் பருகினார்.
மறுநாள் காலையில் அவர் இஸ்லாத்தைத் தழுவினார். அப்போது ஓர் ஆட்டில் பால் கறந்து அவருக்கு வழங்கும்படி அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உத்தரவிட, அவர் அந்தப் பாலைப் பருகினார். மற்றோர் ஆட்டில் பால் கறந்து கொடுக்கும்படி உத்தரவிட்டபோது, அவரால் அதை முழுவதுமாகப் பருக முடியவில்லை.
அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "இறை நம்பிக்கையாளர் ஒரே குடலில் பருகுவார். இறைமறுப்பாளன் ஏழு குடல்களில் பருகுவான்" என்று கூறினார்கள். முஸ்லிம் : 4189.

## என்னைக் கடந்த பொழுதுகள்? - 1 22-12-2020



தீவிர சிந்தனையின் ஆய்வாகவும் இல்லாமல் , அதற்காக ஒரேயடியாக பத்தி எழுத்துக்களாகவும் இல்லாமல் நடுத்தரத்தில் எழுதப்போகும் தொடர் .

இத்தொடரில் என்னுடைய வானம் அதில் வந்து போன பொழுதுகள் குறித்து சொல்ல இருக்கிறேன் .
எல்லோருமே வானம் என்றால் அண்ணாத்து மேலே பார்ப்பீர்கள். உங்களில் சிலர் இந்த அம்மா மாதிரி வலைதளத்தில் தேடுவீர்கள் ஆனால் ...எனக்கான வானம் உங்கள் காலுக்கடியிலிருந்து உயரும் வானம் . இந்த படத்தை தலைகீழாக்கிப் பாருங்கள் அந்த சிறுவன் பார்க்கும் வானம் உங்களுக்குத் தெரியும்.

அதுதான் என் வானம்

இந்த அம்மா இயற்கையானவர்கள் என்றால் சிறுவனும் அவன் வானமும் செயற்கையாய் வரைந்தது .
இல்லை இல்லை அச்சிறுவன் பார்ப்பது இயற்கை காட்சிகள் என்றால் அந்த அம்மா கணனியில் தேடுவது செயற்கை வானம் . இப்படித்தான் என் கட்டுரையும் இருக்கும் என நினைக்கிறேன் .

அதுபோல இந்த தொடர் சற்று வித்தியாசமான என்னை கடந்த பொழுதுகள் பார்த்தது ,படித்தது , சிந்தித்தது , கொஞ்சம் கவிதை, பேட்டி , ஓவியம், இசை , காதல் , துரோகங்கள், சினிமா , எனக்கு மட்டும் ஏன் இப்படி ?, கொஞ்சம் அதிகமாக கலாய்ச்சிட்டோமோ ? , .... இப்படி மாதிரி விஷயங்களெல்லாம் கலந்துகட்டி உங்களிடம் சொல்ல வருகிறேன்.
இன்ஷா அல்லாஹ் .
ர.ரா.

என்னைக் கடந்த பொழுதுகள் – 2 23-12-2020

"மாற்றம் ஒன்றே மாறாதது"



உங்களுக்குத் தெரிந்த ஓவியர் ஒருவரின் பெயரைச் சொல்லுங்கள் என்று யாரைக் கேட்டாலும் பெரும்பாலானவர்கள் முதலில் குறிப்பிடும் பெயர் **"பிக்காசோ "**

பிக்காசோவின் ஓவியம் உலகம் தழுவிய புகழுக்கு என்ன காரணம் ?

ஆரம்ப காலங்களில் ஓவியங்களை அகலம் நீளம் என்ற எல்லைக்குள் மட்டும் அதாவது Two Dimension ல் மட்டுமே வரைந்து கொண்டிருந்தார்கள் மைக்கேல் ஏஞ்சலோவும் லியோனார்டோ டாவின்ஸி ஓவியங்களுக்கு ஆழம் கொடுத்து Three Dimension- எபெக்ட் கொடுக்க ஓவியக்கலை மிகப்பெரிய #மாற்றம் அடைந்தது .

இவர்கள் வாழ்ந்து மறைந்து பல நூற்றாண்டுகள் ஆன பிறகும் ஓவியக் கலைக்கு யாராலும் ஒரு புதிய திருப்பத்தை கொடுக்க முடியவில்லை . இன்னொருபுறம் கேமராவின் வருகை ஓவியங்களில் முக்கியத்துவத்தை குறைக்க ஆரம்பித்தது .

ஓவியர்கள் தாங்கள் பார்க்கும் காட்சிகளை என்னதான் தத்ரூபமாக வரைத்தாலும் , போட்டோவின் வேகத்திற்கும் தரத்திற்கும் ஓவியங்களால் ஈடுகொடுக்க முடியவில்லை .

ஓவியக்கலை தனது முக்கியத்துவத்தை இழந்து விடுமோ என்ற அச்சம் முளைவிட ஆரம்பித்தது . அந்த சமயம் அதாவது 1907 ஆம் ஆண்டு பிக்காசோ வரைந்த ஐந்து பெண்களில் ஓவியம் , ஓவியக் கலைக்கு மிகப்பெரிய திருப்புமுனையைக் கொடுத்தது.

" ஒரு காட்சியை கண்கள் எப்படி பார்க்கிறதோ , அதே மாதிரி வரைவதில் என்ன புதுமை இருக்கிறது ..? அந்த காட்சி மனதில் ஏற்படுத்தும் உணர்ச்சிகள்தான் ஓவியம் பிரதிபலிக்க வேண்டும் " என்ற புதிய ஓவிய கோட்பாட்டை பிக்காஸோ சொன்னார் . இந்த அடிப்படையில்தான் அவர் ஓவியங்களை வரைந்தார்.

புகழ்பெற்ற பல்துறை கலைஞரான லியானர்டோ டாவின்சி அவர்களால் பதினாறாம் நூற்றாண்டுகளில் ஆரம்பத்தில் வரையப்பட்டது மோனலிசா ஓவியம் .

பல சர்ச்சைகள் திருட்டுக்கு மத்தியில் உலக மக்கள் அனைவராலும் விரும்பப்படும் ஓவியம் ஒருவகை பொப்லாரில் எண்ணெய் வகை ஓவியம். புகழ்பெற்ற இந்த ஓவியத்தை பாரிசின் லூவர் அருங்காட்சியகத்தில் **1804** ஆம் ஆண்டு முதல் மக்களின் பார்வைக்காக வைத்துள்ளனர் . இங்கிருந்தும் பலமுறை திருடப்பட்டுள்ளது .

பின்னர் கண்டுபிடிக்கப்பட்ட ஓவியம் 2005 ஆம் ஆண்டு மோனலிசா ஓவியத்தை குண்டு துளைக்காத கண்ணாடி பெட்டகத்தில் புற ஊதாக் கதிர் போன்ற ஒளி ஊடுருவி ஓவியத்தின் தன்மையை பாதிக்காத வண்ணம் பாதுகாக்கப்பட்டு வைக்கப்பட்டுள்ளது .

இந்த ஓவியத்தில் இருக்கும் பெண்ணை சுற்றி பல மர்மங்கள் இருப்பதாக இன்றும் பல சர்ச்சைகள் உலா வருகின்றன . மோனாலிசாவின் புன்னகை , ஒரு ரகசியத்தை மனதிற்குள் வைத்து வெளியில் சொல்ல முடியாத சோகம் நிறைந்த புன்னகையாக இருக்கிறது . மோனலிசா ஓவியத்தை நாம் எந்தப் பக்கம் இருந்து பார்த்தாலும் நம்மை காண்பது போலவே ஒரு மாயத் தோற்றத்தை ஏற்படுத்தும் வண்ணம் டாவின்சி இந்த ஓவியத்தை மிகவும் நேர்த்தியான முறையில் வரைந்துள்ளார் .

**மோனலிசா ஓவியத்தின் இன்றைய மதிப்பு சுமார் 860 மில்லியன் டாலர்கள் ஆகும்** . ஆனால் லியனார்டோ டாவின்சியின் அரிய கலை படைப்பானது மக்களுக்கு சொந்தமானது என்றும் இதை யாரும் தனிப்பட்ட முறையில் வாங்க முடியாது என்றும் பிரென்ச் அரசாங்கம் அறிவித்து விட்டது.

என்னதான் புகைப்பட கேமிராக்கள் புதிது புதிதாக வந்தாலும் மனிதன் வரைந்த இந்த ஓவியத்திற்கு நிகராக எந்த புகைப்படமும் இதுவரை வரவில்லை.

சரி, ஓவியத்திலிருந்து புகைப்படம் மாற்றத்தைத் தடுக்க முடியாதா ?

முடியாது . காரணம் மாற்றம்

**மாற்றம் ஒன்றே மாறாதது"** என்ற இந்த பொன்மொழியைச் சொன்னவர் **ஹெராகிளிடஸ் (HERACLITUS)** – என்ற கிரேக்க அறிஞர்.
இவர் கிரேக்கத்தில் சொன்னதை ஆங்கிலத்தில் "மாற்றம் ஒன்றே மாறாதது **(Change is the only immutable)"** மற்றும் "மாற்றம் ஒன்றே நிலையானது **(Change is the only constant)"** என்று இரண்டு விதமாக மொழிபெயர்த்தனர். இன்னும் சிலர் "**There is nothing permanent, except Change"** என்றும் எழுதினர்.

ஹெராகிளிடஸ், **Ephesus** என்ற நகரில் (இது ஆசியா மைனர் என்ற இடத்தில், தற்போதைய துருக்கி நாட்டில் உள்ளது) ஒரு செல்வந்தர் குடும்பத்தில் பிறந்தவர். சுதந்திரமான சிந்தனையாளர். உலகளாவிய ஒரே ஒரு சக்தியின் மேல் நம்பிக்கை உள்ளவர். தனிமை விரும்பி. புலம்பல் ஞானி **(Weeping Philosopher)** என்று அழைக்கப்பட்டவர். தனக்கென்று பின்தொடரும் மாணவர் பட்டாளம் ஏதும் இல்லாதவர். இவரது காலம் கிறிஸ்து பிறப்பதற்கு முன்னர் **(கி.மு 535 – கி.மு 475)** ஆகும்.

நபி (ஸல்) அவர்கள் காலத்தில் பள்ளிவாசல்களுக்கு மினராக்கள் இல்லை . ஆனால் இன்று பள்ளிவாசலை அடையாளமிட மினராக்கள் தேவை. அவைகள் பெரிய அளவில் கட்டப்படுகின்றன.
இறை திக்ரை ஓதுவதற்கு நபிகளார் காலத்தில் கை விரல்களே போதுமானதாக இருந்தது .இன்றைய காலக்கட்டத்தில் தஸ்பீஹ் மணிகள் தேவையானதாக பரிணாமித்து விட்டது .
இது பற்றி பெரிய ஆய்வை **இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் "தர்க்கத்திற்கு அப்பால் "** நூலில் விவரித்துள்ளார்
ஆமாம் "மாற்றம் ஒன்றே மாறாதது "
ரஹ்மத் ராஜகுமாரன்

என்னைக் கடந்த பொழுதுகள்- 3

பல் துலக்குதல்



இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: 'என் சமுதாயத்திற்குச் சிரமமாகி விடும் என்று இல்லாவிட்டால் ஒவ்வொரு தொழுகைக்கும் பல் துலக்குமாறு நான் கட்டளையிட்டிருப்பேன்.'
என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.
ஸஹீஹ் புகாரி : 887.

டூத்பேஸ்ட் அறிமுகமாவதற்கு ரொம்ப காலத்திற்கு முன்பே டூத் பிரஸ் அறிமுகமாகி விட்டது என்பது பற்றி தெரியுமா ?
மனித குலத்தின் சரித்திரத்திலேயே முன் எப்போதும் இல்லாத விடவும் பற்கள் உறுதியாகவும் பலமாகவும் இருக்கின்றன என்றால் அது இப்போதுதான் ! பற்களை எது கொண்டு சுத்தப்படுத்துவது என்று தெரியாமல் பல ஆயிரம் வருஷங்கள் மனிதன் கைக்குக் கிடைத்ததை எல்லாம் போட்டு பல்லிலே 'பரபர' வென்று தேய்த்து இருக்கிறான்

பல நூறு ஆண்டுகளுக்கு முன்பு இந்தியாவில் செங்கல் பொடி, வறட்டிச் சாம்பல் போன்றவற்றை எடுத்து பல் துலக்க ஆரம்பித்த சமயம் .... ஐரோப்பியர்கள் மீன் எலும்பு பொடி , முட்டை ஓட்டு தூள் போன்றவற்றால் பல் துலக்கி வந்தனர் .

இதற்கெல்லாம் வெகுகாலம் முன்பே ரோமானியர்களுக்கும் பல் விளக்கும் பழக்கம் இருந்தது . அவர்கள் இதற்கு பயன்படுத்தியது தேனில் தோய்த்து எடுத்த துணி .

பண்டைய கிரேக்க நாட்டைச் சேர்ந்த மக்கள் கொத்தமல்லி தழையை காய வைத்துப் பொடியாக்கி அதைக் கொண்டு பற்பொடியாகப் பயன்படுத்தி இருக்கின்றனர் . இந்த பற்பொடி அவர்களுக்கு புத்தம் புது மணமூச்சை கொடுத்ததால் இதுவே முதல் மவுத் வாஷ் என்று சொல்லலாம் !

டூத் பிரஷ் என்று எடுத்துக்கொண்டால் இந்தியர்கள் பயன்படுத்திய ஆலங்குச்சியும் , வேப்பங்குச்சியும்தான் உலகத்தின் முதல் டூத் பிரஸ் ! இப்போது புழக்கத்தில் இருக்கும் பிரஷ்ஷைப் போல் தோற்றத்தில் ஒற்றுமை கொண்ட டூத் பிரஸ் என்றால் அது 1500 ஆம் ஆண்டு சீனாவில் புழக்கத்திலிருந்த பிரஷ்தான் !

'மிஸ்வாக் ' என்பது உகாய் மரத்தின் குச்சி பல் துலக்கப் 7000 ஆண்டுகளுக்கு முன்பே பயன்படுத்தப்படுகிறது. மிஸ்வாக் மரத்தை அரபி மொழி அராக் என்றும் மலாய் மொழியில் காயு சுகி என்றும் அழைக்கப்படுகிறது .

யானைக்கு நான்கு அடி நீளத்துக்கு தந்தங்கள் வெளியே நீட்டிக் கொண்டு இருந்தாலும் வாய்க்குள் இருப்பது வெறும் எட்டே எட்டு பற்கள்தான் ! நமக்கெல்லாம் பால் பற்கள் விழுந்து நிரந்தரப் பற்கள் முளைத்தால் ... அவ்வளவுதான் அவற்றைக் கண் மாதிரி பாதுகாக்க வேண்டும் . அவை சொத்தையாகி விட்டதால் மீண்டும் புதுப் பற்கள் முளைக்காது . ஆனால் யானைக்கு அப்படி இல்லை ஆறு முறை பற்கள் விழுந்து விழுந்து முளைக்கும் ஆறாவது செட் பல் விழுந்து விட்டால் அப்புறம் யானை எதையும் மென்று சாப்பிட முடியாமல் பட்டினி கிடந்து இறந்துவிடும் . அதனால்தான் உயிரியல் பூங்காவில் இருக்கும் யானை போன்ற மிருகங்களுக்கு இன்றும் கூட பற்களை சுத்தம் செய்து விடுகிறார்கள் . யானை போன்ற மிருகங்கள் என்ன பல்லா தேய்க்கிறது ? என்று குழந்தைகளுக்கு ஆதரவாக சொல்லி வைக்காதீர்கள் .

கலிபோர்னியாவில் இருக்கும் திமிங்கலம் ஒன்று தினமும் பல் விளக்க சமர்த்தாக ஒத்துழைக்கிறதாம் ! அது மட்டுமல்ல அது தானாகவே தண்ணீர் கொப்பளித்துக் கீழே உமிழ்கிறது !
அமெரிக்காவின் முதல் ஜனாதிபதியான ஜார்ஜ் வாஷிங்டனுக்கு ஒரு வினோத பழக்கம் இருந்தது. அவருடைய கோச்சு வண்டி ஆறு வெள்ளைக் குதிரைகளுமே அவருக்கு படு சுத்தமாக இருக்க வேண்டும். குதிரைகளை பராமரிப்பவர் இந்த ஆறு குதிரைகளுக்கும் தினமும் பல்விளக்கி விட வேண்டும் என்பதை அவர் உத்தரவு போட்டிருந்தார்.

19ஆம் நூற்றாண்டில் பிரஷ் என்பது ஒரு சமூக அந்தஸ்தை காட்டும் பொருளாக இருந்தது .வெள்ளி மற்றும் யானை தந்தத்தால் ஆன கைப்பிடி கொண்ட டூத் பிரஷ் அந்த காலத்தில் செல்வந்தர்களிடம் பிரபலமாக இருந்தது மாவீரன் நெப்போலியனின் டூத் பிரஷ்ஷின் கைப்பிடி தங்கத்தால் ஆனது போர்க் களங்களுக்குச் செல்லும்போது கூட இவன் மறக்காமல் தனது தங்க டூத் பிரஷ்ஷை எடுத்துச் செல்வானாம் .

**பல் துலக்குவது , வாயை தூய்மைப்படுத்வது இறைவனின் பொருத்தத்தைப் பெற்றுத் தரும் என நபி ஸல்லல்லாஹு அலைஹி கூறியதாக ஆயிஷா (ரலி) நூல் : நஸயீ 5**

ஹள்ரத் அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நான் ஒரு நாள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் இரவு தங்கினேன். இரவின் நான்கு முறை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் விழித்தார்கள். நான்கு முறையும் மிஸ்வாக் செய்தார்கள்.
(நூல்: அபூதாவூத்)
ரஹ்மத் ராஜகுமாரன்

**என்னைக் கடந்த பொழுதுகள்- 4**

விஞ்ஞானத்தின் அகங்காரம்




8-ம் வகுப்பு படிக்கும் போது, நான் புஸ்வானம் வெடி தீப்பொறியை ஏன் கக்கவில்லை என்று இடது கையால் எடுத்த போது , அதில் பதுங்கி இருந்த புஸ்வானக் கங்கு திடீரென நெருப்பு மழையாய் பொழிய, இடது கையின் ஆள்காட்டி விரலில் வெள்ளையாய் தீத் தழும்பு இன்னும் இருக்கிறது . அன்றைய பொழுதின் வேதனையும் வலியும் சொல்லி மாளாது. இந்த நெருப்பின் வேதனை மனதில் நீங்காமல் எனக்குள் கங்காய் இன்னும் கழன்று கொண்டே இருக்கிறது .

இதைவிட உலகின் கொடூர நெருப்பு நாள் **1945 ஆகஸ்ட் 6-ல்** ஜப்பானைத் தாக்கியதை நினைத்துப் பார்க்கிறேன் . இது விஞ்ஞான கண்டுபிடிப்பின் அகங்காரம் .

" ஐயோ கடவுளே.... நான் இப்படி ஒரு தவறை செய்து விட்டேனே "
-சுமார் 2000 அடி உயரத்திலிருந்து ஹிரோஷிமா நகர் மீது நான் போட்ட அணுகுண்டின் ஆக்ரோஷத்தை பார்த்து அமெரிக்க விமானத்தில் கோ- பைலட் சொன்ன வார்த்தைகள் இவை !

1945 ஆகஸ்ட் 6ஆம் தேதி ஒரு குளிர் காலை ஏழு மணி B - 29 என்ற அமெரிக்க விமானம் வீசிய அணுக் குண்டால் ஜப்பானின் ஹிரோஷிமா நகர கட்டடங்கள் அப்பளங்களாக நொறுங்கின . இரும்புக் கர்டர்கள் வெப்பத்தால் உருகின . கல்தூண்கள் காற்றாடிகளாப் பறந்தன பச்சை மரங்கள் தீப்பந்தங்கள் ஆக மாறின !

அணுகுண்டு வெடித்து ஓய்ந்த பல மணி நேரத்திற்கு பின்பும் அது விட்டுச்சென்ற நெருப்பு ஓயவே இல்லை , சுழன்று சுழன்று அடித்த காற்று நெருப்பை இன்னும் ஊதி விட்டது . இந்த நெருப்பில் இருந்து தப்பிக்க ஆற்றில் இறங்கியவர்களை காட்டாற்று வெள்ளம் இழுத்துச் சென்றது . எத்தனை எத்தனை சோதனை .அப்பப்பா ஒரே நாளில் மொத்தம் 78 ஆயிரம் பேர் செத்து மடிந்தனர் . பிணத்தின் துர்வாடை நகரத்தை ஆக்கிரமித்தது. காயப்பட்டவர்கள் ஏறக்குறைய இதே எண்ணிக்கையில்தான் .

இந்த அணுகுண்டின் அட்டூழியம் அதோடு முடியவில்லை அணுகுண்டால் ஏற்பட்ட கதிர்வீச்சு இரண்டு வாரத்தில் இன்னும் 12 ஆயிரம் ஜப்பானியர்களை காவு வாங்கியது . இந்நகரை விட்டு பல கிலோமீட்டர்கள் தள்ளி ஒதுங்கி இருந்த சில ஆயிரம் பேர் மட்டுமே உயிர் பிழைக்க முடிந்தது . ஆனால் அவர்களில் பெரும்பாலோரது முகமும் , உடம்பும் உருக்குலைந்து போனது. ஏன் என்று அவர்களுக்கு அப்போது தெரியவில்லை.

அணுகுண்டு வெடித்த இடத்திலிருந்து பாதுகாப்பான தூரத்தில் இருந்தவர்கள் 'அப்பாடா நாம் பிழைத்தோம் ' என்று நிம்மதி பெருமூச்சு விட்டனர் . ஆனால் அணு குண்டால் ஏற்பட்ட கதிரியக்கம் தங்களுக்குள் கான்சர் நோயை செலுத்திவிட்டு விட்டுப் போனதையும் , தங்களுக்கு இனி பிறக்கப்போகும் குழந்தைகள் ஊனமாக பிறக்க என்ன வேண்டுமோ அதை அணுகுண்டு செய்துவிட்டது என்பதையோ அப்போது அவர்கள் அறிந்திருக்கவில்லை.

'சரணடைந்தால் சரித்திரம் பழிக்குமே ... " என்று ஜப்பானிய தளபதிகள் வேதனைப் பட்டார்கள் . இருப்பினும் சுய கௌரவத்தை விட்டு சரணடைந்தனர் .
ஜப்பான் சுதாரித்துக் கொள்வதற்குள் அமெரிக்கா நேரம் கொடுக்கவில்லை. முதல் அணுகுண்டு கிளம்பிய நெருப்பு கூட முழுமையாக அகலாத நிலையில் அதாவது மூன்றே நாட்களுக்குள் அமெரிக்கா , இங்கிலாந்து

விஞ்ஞானிகளால் உருவாக்கப்பட்ட புளூட்டோனியம் அணு குண்டை தூக்கிக்கொண்டு ஜப்பானின் கப்பல் கட்டும் துறைமுக நகரான ஜன சந்தடி மிகுந்த நாகசாகியின் மீது போட்டது .

இந்த குண்டு முதல் குண்டை விட பல மடங்கு சக்தி படைத்தது . கெட்ட நேரத்திலும் ஒரு நல்ல நேரம் , நாகசாகியின் இதயத்தை குறிவைத்து அமெரிக்கா விமானங்கள் வீசிய அணுகுண்டு இந்த முறை லேசாக குறி தவறியது . அதனால் வெறும் 38 ஆயிரம் பேர் தான் குண்டு வெடிப்பில் மாண்டு போனார்கள் .
இந்த இரண்டு அணுகுண்டு தாக்குதலுக்கு இடையில் ரஷ்யா ஜப்பான் வசம் இருந்த மஞ்சூரியா மீது படையெடுத்து அதை கைப்பற்றியது .இது வெந்த புண்ணில் வேல் பாய்ச்சிய மாதிரி ...
இனி இழப்பதற்கு ஒன்றுமில்லை தொடர்ந்து வந்த தோல்விகளால் துவண்டு போன ஜப்பான் மன்னர் 1945 ஆகஸ்ட் 15ஆம் தேதி தனது மக்களுடன் ரேடியோவில் பேசினார் .

"நேரமும் விதியும் நமக்கு எதிராக இருக்கின்றன. அதனால் எந்தத் தோல்வியை நம்மால் சகித்துக் கொள்ள முடியாதோ அதை சகித்துக்கொண்டு அமைதிக்கு வழி விடுவோம் "
இதையடுத்து அமெரிக்காவின் தலைமை தளபதி மேக் ஆர்த்தர் முன்னிலையில் ஒட்டுமொத்த ஜப்பான் நடுக்கடலில் சரணடைய ...மன்னர் ஹிரோஹிட்டோவின் மாளிகை வாசலில் , " உங்களுக்கு வெற்றியைத் தேடிக் கொடுக்க முடியாத எங்களை மன்னித்துவிடுங்கள் " என்று மக்கள் பெரும் திரளாக திரண்டு வந்து கதறி அழுதனர் .
ஐரோப்பாவில் 1945ஆம் ஆண்டு ஏப்ரல் மாதமே யுத்தம் முடிந்து விட்டது . இன்னொரு புறம் ஜப்பானும் தோல்வியின் விளிம்புக்கு வந்து மன்னிப்பும் கேட்டு சரணனும் அடைந்தது . இப்படிப்பட்ட சூழ்நிலையில் அமெரிக்கா ஜப்பான் மீது அணுகுண்டு வீசியது ஏன் ?
இரண்டாம் உலகப்போரை சீக்கிரமாக முடிந்து போனதை தொடரவா ? அல்லது தான் தயாரித்த அணுக்குண்டை பரிசோதித்து பார்க்கவா ? அல்லது புதிய எதிரியாக உருவெடுத்துக் கொண்டிருந்த ரஷ்யாவை அச்சுறுத்தவா ? என்ற கேள்விகள் இன்னும் உலக வரலாற்றில் கேட்கப்பட்டுக் கொண்டே இருக்கிறது .
பதில் : மூன்றும்தான் .
وَمَنْ يَّكْسِبْ خَطِيْٓــٴَــةً اَوْ اِثْمًا ثُمَّ يَرْمِ بِهٖ بَرِيْٓـــًٔا فَقَدِ احْتَمَلَ بُهْتَانًا وَّاِثْمًا مُّبِيْنًا
எவரேனும், யாதொரு குற்றத்தையோ அல்லது பாவத்தையோ செய்து அதனை குற்றமற்றவர் மீது சுமத்தினால் நிச்சயமாக அவன் அபாண்டமான பொய்யையும் பகிரங்கமான பாவத்தையுமே சுமந்து கொள்கிறான்.
(அல்குர்ஆன் : 4:112)
ரஹ்மத் ராஜகுமாரன் .

ஜப்பானிய படைகளிடம் சிக்கி போர்கைதிகளாக சித்ரவதைகளுக்கு உட்படுத்தப்பட்ட அமெரிக்க, ஆங்கிலேய, ஆஸ்திரேலிய ராணுவ வீரர்கள் மற்றும் அவர்களது குடும்பத்தார் ( மனைவியர், காதலிகள்) கொடுத்த கெடுபிடியின் விளைவே - Exacting Revenge:
Little Boy (Hiroshima 06 Aug) & Fat Man (Nagasaki 09 Aug). ("Pearl Harbour" could not be cited as a reason as it still counts comprehensively as Warfare)
Come August, WW2 had already been won by the Allies like it has been mentioned in the article and surrender talks were being conducted between the Allies and the Japanese Imperial Army.
On those two fateful days the Asian part of the World were taught a lasting lesson by the West on who deserves to be the Master!

என்னைக் கடந்த பொழுதுகள் - 5

திரைக்கு வந்த வேற்று கிரகவாசி




பல கோடி ஆண்டுகளுக்கு முன்பே இந்த மண்ணை விட்டு மறைந்து விட்ட டினோஸர்களை கால _ கல்லறையிலிருந்து தோண்டி எடுத்து உலா விட்ட 'ஜுராசிக் பார்க் ' ஆகட்டும்.... பல லட்சம் ஒளி ஆண்டுகள் தூரத்தில் இருக்கும் கிரகங்களில் இருந்து வினோதமான உயிரினத்தை பூமிக்கு அழைத்து வந்த ' ஈ.டி 'ஆகட்டும்... ஸ்டீபன் ஸ்பீல்பெர்க் எந்த மாதிரி கதை சொன்னாலும் சரி 'பார்ப்பதெல்லாம் நிஜம்தானோ ? 'என்று பிரமையை சிறுவர்/ சிறுமிகளுக்கு மட்டுமன்றி பெரியவர்களுக்கு ஏற்படுத்திவிடும் .

விஞ்ஞானிகள் , மருத்துவர்கள் , வழக்கறிஞர்கள் இன்று எத்தனை பெரிய ஆளாக இருந்தாலும் சரி...ஸ்பீல்பெர்க் வெள்ளித்திரையின் செய்யும் மாயா ஜாலங்களில் மயங்கி குழந்தையின்
மனநிலைக்கு வெகு சுலபமாக மாறி விடுவார்கள் . இத்தனைக்கும் ஸ்பீல்பெர்க் சயின்ஸ் சம்பந்தமான கற்பனை கதைகளை படிப்பதில் நாட்டம் இல்லாதவர்.

இந்தக் கதையை படமாக எடுக்கலாமே என்று யாரோ ஒரு நண்பர் "ஜாஸ் " என்ற புகழ்பெற்ற நாவலை ஸ்பீல்பெர்க்கிடம் கொடுப்பதற்கு முன்பு வரை ஸ்பீல்பெர்க் அது பல் மருத்துவத்தை மையமாக வைத்து எழுதப்பட்ட நாவல் என்றுதான் நினைத்திருந்தார் .

**ஸ்பீல்பெர்க்** இயக்கத்தில் 1975ஆம் ஆண்டு திரைக்கு வந்த இந்த "ஜாஸ்" சினிமாதான் உலகம் முழுக்க அவரை பிரபலமாக்கியது .இப்போதும் மக்கள் கடற்கரையில் இருந்து கடலுக்குள் குதித்ததும் அவர்கள் மனதில் ஜாஸ் என்கிற சுறா வந்துவிடும் .

ஸ்பீல்பெர்க் சினிமா மீது மோகம் ஏற்பட்டதே ஒரு சுவாரசியமான விஷயம். எலக்ட்ரிக்கல் இன்ஜினியரிங் படித்து விட்டு அப்பாவின் கேமராவை நைசாக திருடிக் கொண்டு போய் தனது பொம்மை ரயில்களை ஒன்றோடு ஒன்று மோதவிட்டு படம் எடுத்தபோது ஸ்பீல்பெர்க்கிற்கு வயது பனிரெண்டு.
ஸ்கூலுக்கு மட்டம் அடித்துவிட்டு அப்பாவின் கேமராவை வைத்துக் கொண்டு விளையாட சிறுவன் ஸ்பீல்பெர்க் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு யுக்தியை கண்டுபிடிப்பான்
பிற்காலத்தில் ஸ்பீல்பெர்க் பெரும் புகழையும் பெயரையும் சம்பாதித்து தந்த ஈ.டி படத்தில் வருவது மாதிரி தெர்மாமீட்டரை பல்புக்கு பக்கத்தில் வைத்து சூடாக்கி விட்டு, " பார் 100 டிகிரி ஜுரம் அடிக்கிறது " _ என்று சொல்லி ஸ்கூலுக்கு லீவு எடுத்துக் கொள்வான்.

ஸ்பீல்பெர்க் இப்படி எடுத்த படங்கள்தான் ஆரம்பத்தில் டிவிக்கும் பிறகு சினிமாவுக்குள் நுழைய அவருக்கு பாதை போட்டுக் கொடுத்தன !
1982-ஆம் ஆண்டு அவர் இயக்கிய ஈ.டி என்ற வேற்றுகிரகவாசிகளின் பூலோக அனுபவம் பற்றிய திரைப்படம் சினிமா சரித்திரத்தில் முன்னெப்போதும் இல்லாத அளவுக்கு வசூலை வாரி வாரி கொட்டியது . இந்த திரைப்படத்திற்கு எடிட்டிங் , பின்னணி, இசை போன்ற விஷயங்களுக்கு ஆஸ்கார் விருது கூடக் கிடைத்தது .

ஆனால் சினிமா விமர்சகர்கள் ஸ்பீல்பெர்க்கை ஸ்பெஷல் எபெக்ட்டையும் , சென்டிமென்ட்டையும் வைத்து கதை பண்ணும் கமர்ஷியல் இயக்குனராக தான் பார்த்தார்களேயொழிய சீரியஸான டைரக்டராக ஏற்றுக்கொள்ளவே இல்லை !
ஸ்பீல்பெர்க் அதைப் பற்றியெல்லாம் கொஞ்சமும் கவலைப்படாமல் படங்களை தயாரிப்பது , டைரக்ட் செய்வது என்று சுறுசுறுப்பாக இருந்தார்.

1993 ஆம் ஆண்டு ஜுராசிக் பார்க் வந்து உலகத்தையே மிரட்டியது. பொருளாதார ரீதியாக இந்த படம் அடைந்த வெற்றியைப் பற்றி சொல்லவே தேவையில்லை. என்றாலும் , இந்த சினிமாவும் இயக்குனருக்கான ஆஸ்கர் விருதை ஸ்பீல்பெர்க்ப் பெற்றுத்தரவில்லை .

ஜுராசிக் பார்க் - உலகம் முழுவதும் சரித்திரம் காணாத வெற்றி பெற்றுக் கொண்டிருந்த சமயம்.... இரண்டாம் உலகப்போரில் யூதர்களுக்கு நேர்ந்த கொடுமைகளை பின்னணியாகக் கொண்ட "ஷிண்ட்லர்ஸ் லிஸ்ட்" என்ற கருப்பு - வெள்ளை சினிமாவை வேண்டுமென்ற தயாரித்து அவர் வெளியிட ....இத்தனை ஆண்டுகளாக ஆட்டம் காட்டிக்கொண்டிருந்த ஆஸ்கார் விருது ஸ்பீல்பெர்க்கைத் தேடி வந்தது .

இதன் பிறகு ஸ்பீல்பெர்க் எடுத்த "லாஸ்ட் வேர்ல்ட் " திரைப்படம் மீண்டும் அவரைச் சிறுவர்களின் சூப்பர்ஸ்டார் ஆக்கியது .
*"உங்களால் மட்டும் எப்படி சிறுவர்களை இந்த அளவுக்கு ஈர்க்க முடிந்தது ? என்று யாரோ கேட்க ,*
*அப்போது ஸ்பீல்பர்க் சொன்னார் :*
*"இது என்ன கேள்வி நான் இப்போதும் சிறுவன் தானே ! "*
*நபி மூஸா (அலை) அவர்கள் 6 லட்சம் யூதர்களுடன் எகிப்திலிருந்து இரவோடு இரவாக வெளியேறி செங்கடலை பிளந்து , தப்பி தீஹ் பிரதேசத்தில் தங்கிய காலத்தில் , நபி மூஸா (அலை) அவர்களை தூர் ஸீனா மலைக்கு தனியாக இறைவன் அழைக்க ...*
*நபியவர்கள் போய் 30 நாட்களுக்கு மேல் ஆகியும் மீண்டு வராத போது ஸாமிரி என்பவன் யூதர்களின் நகைகளை வாங்கி , உருக்கி, தங்கத்தில் காளைக் கன்று செய்து அதற்குள் எப்போமோ எடுத்து பத்திரப்படுத்தி வைத்திருந்த ஜிப்ரயீல் (அலை) அவர்களின் குதிரையின் காலடி மண்ணை அதன் வாயில் போட அது முன் பின் நகரவும் , தெளிவற்ற சப்தத்தையும் கொண்டிருந்தது .*
*ஆறு லட்சம் யூதர்களுக்கு வராத இந்த யுக்தி ஸாமிரி என்பவனுக்கு மட்டும்தானே வந்தது .*
*அதுபோல டைனோஸர்களைப் பற்றியும் வேற்றுகிரகவாசிகளைப் பற்றியும் விஞ்ஞானம் பேசியதை எத்தனை இயக்குநர்கள் கேட்டாலும் , கேள்வி பட்டாலும் அதை இந்த மாதிரி யுக்திகளைப் பயன்படுத்தி ஸ்பீல்பெர்க்கால் மட்டும் தானே திரையில் சொல்ல முடிந்தது .*

உண்மை ! ...... ஸ்பீல்ஃபெர்க் விரித்த வலையில் விழாத பள்ளி பருவத்து மனிதர்களே இருக்க முடியாது ! இன்னொரு முக்கியமான படம் ஸ்டார் வார்ஸ் ! சுஜாதா தன் கதையான " ஆ " வில் விவரித்த வெட்டவெளியில் பிம்பம் ஏற்படுத்தும் ஹோாலோகிராம் எனும் விஞ்ஞான நுட்பத்தை இந்தப் படத்தில் காட்டியிருப்பார் ! இந்தப்படத்தை பார்த்துத்தான் சுஜாதா தன் கதையில் பயன்படுத்தியிருக்கக் கூடும் !

**Rahmath Rajakumaran**

**Nagarajan Ramasubramaniyan**
கொலையுதிர் காலம் நாவல் ரொம்பவும் திகில்

என்னைக் கடந்த பொழுதுகள்- 6

மருத்துவ உலகம்



உலகத்தில் அதிகமான மக்கள் மடிந்து வீழ்ந்தது எதனால் ?
துப்பாக்கியாலா ? பீரங்கி குண்டுகளாலா ? போர்களாலா ? அல்லது புயல், வெள்ளம் , பூகம்பம் போன்ற இயற்கையின் சீற்றங்களாலா ? இவை எதுவுமே இல்லை....அப்போ எது ? லட்சக்கணக்கான மக்களை கிராமம் கிராமமாக , நகரம் நகரமாக ...ஆண், பெண் , குழந்தை , வயோதிகர் என்று எந்த வித்தியாசமும் பார்க்காமல் மாய்த்த கொடூரமான வில்லன் நோய்கள் !

பெரியம்மை , போலியோ, வயிற்றுப்போக்கு என்று இந்த வில்லன் ஒவ்வொரு அவதாரம் எடுக்கும் போதும் உலகத்தில் பிணங்களின் எண்ணிக்கை, புதைக்கவோ எரிக்கவோ முடியாத அளவுக்கு மலைபோலக் குவிந்துவிடும்.
மருத்துவத்துறை முதல் அடி கூட எடுத்து வைக்காத ஆரம்ப காலத்தை நினைத்துப் பார்க்கவே நெஞ்சம் பதறுகிறது !

தென் அமெரிக்கா கற்காலத்தைக் கடந்து கொண்டு இருந்த காலம் . அதாவது
12 ஆயிரம் வருடங்களுக்கு முன்பு உடம்பு சரியில்லை என்று யார் படுத்தாலும் அவர்களை பேய் பிடித்திருப்பதாக சமூகம் கருதியது . மண்டை ஓட்டை உடைத்துத் துவாரம் போட்டால் பேய் மண்டைக்குள் இருந்து வெளியேறிவிடும் என்று நம்பினார்கள் .

இந்த நம்பிக்கையால் தலைவலி வந்தவரின் கை, கால்களை கட்டிப்போட்டு விட்டு கூர்மையான ஆயுதத்தால் தலையில் ஓங்கி ஓங்கி அடித்து ஓட்டு போடுவார்கள் . சிகிச்சை எடுத்துக்கொள்ள வந்தவரோ
துடிதுடித்து இரத்த வெள்ளத்தில் செத்துப் போவார் . நோய்க்கு சிகிச்சை என்பது உலகின் பிறபகுதிலும் கூட ஏறக்குறைய இதே மாதிரிதான் !

நாஜிப் படையினரிடம் கைதிகள்பட்ட சித்ரவதையை விடப் பல மடங்கு வலியை நோயாளிகள் , மருத்துவர் வேஷம் போட்டிருந்த பூசாரிகளிடமும் அனுபவித்தார்கள்.
கிறிஸ்து பிறப்பதற்கு 400 வருடங்களுக்கு முன்பு கிரேக்க நாட்டில் வாழ்ந்த ஹிப்போகிரேட்டஸ் என்பவர்தான் விஞ்ஞான ரீதியாக மருத்துவத்தை அணுகிய முதல் நபர் ! நோய்கள் வருவதற்கு பேய் பிசாசுகளின் மீது காரணத்தைப் போடுவது முட்டாள்தனம் என்று துணிச்சலோடு சொன்ன முதல் நபரும் இவர்தான் !
இறந்துபோனவர்களின் உடம்பை ஆராய்ச்சிக்காக திறந்து பார்ப்பது குற்றம் என்று மதகுருமார்கள் கடுமையாக எச்சரித்திருந்ததால் மனித உடலின் செயல்பாடு அந்த காலத்தில் மர்மமாக இருந்தது . ஹிப்போகிரேட்டஸ் அடுத்து துருக்கி நாட்டைச் சேர்ந்த கேலன் என்ற மருத்துவர் வந்தார் .

மனித உடலில் ரத்தம் , சளி , பித்தநீர், கருப்பு பித்த நீர் என்று நான்கு வகையான திரவங்கள் இருக்கின்றன இதில் எந்த ஒரு திரவத்தின் அளவு குறைந்தாலும் அல்லது அதிகம் ஆனாலும் சரி ....நோய்தான் ! என்று பல ஆயிரம் வருடங்களாக கிரேக்கர்கள் கொண்டிருந்த கருத்து உண்மைதான் என்று இவர் சர்டிபிகேட் கொடுத்தார் . உலகம் கண்ணை மூடிக்கொண்டு அதை ஏற்றுக்கொண்டது .

16 ஆம் நூற்றாண்டு கிறிஸ்தவ தேவாலயங்களில் அதிகாரம் சரி ஆரம்பித்த சமயம்... இறந்து போனவரின் உடம்பை வைத்து அனாடமி படிக்க வாய்ப்பு கிடைத்தது !
இதை அடுத்து இதயத்துடிப்பு மற்றும் ரத்த ஓட்டம் பற்றி உலகத்துக்கு இருந்த தவறான கருத்துக்கள் **1628** ஆம் ஆண்டு வில்லியம் ஹார்வி என்ற ஆங்கில விஞ்ஞானியால் தகர்க்கப்பட்டது . தன் உடம்புக்குள் இருக்கும் இதயம் துடிக்கிறது என்பதை மனிதன் முதல்முறையாக உணர ஆரம்பித்தான்!

பாக்டீரியாக்களிடமிருந்து மனிதனைக் காப்பாற்றும் தடுப்பு மருந்தை லூயி பாஸ்டயூர் கண்டுபிடிக்க... மனிதனுக்கும் முதல்முறையாக ' பாக்டீரியா ப்ரூஃப் கவசம் கிடைத்தது !

ஏறக்குறைய இதே காலகட்டத்தில் அனஸ்தீஷியாவும் கண்டுபிடிக்கப்பட்டது இதையடுத்து நோயாளிகளின் வீடுகளில் நடந்து வந்த பல அறுவை சிகிச்சைகள் மருத்துவமனைகளுக்கு இடம் மாறின .

பத்தொன்பதாம் நூற்றாண்டு...கூச்ச சுபாவம் கொண்ட ரெனே என்ற பிரஞ்சு மருத்துவர் பெண்களின் மார்பில் காதை வைத்து இதயத் துடிப்பை கேட்க சங்கோஜப்பட்டார். தன் சௌகரியத்திற்காக அவர் கண்டுபிடித்த கருவிதான் ஸ்டெதாஸ்கோப் . பிறகு கலிலியோ கண்டுபிடித்த தெர்மாமீட்டர் புது வடிவம் எடுத்தது இதையடுத்து எக்ஸ்ரே கண்டுபிடிக்கப்பட்டது என்டோஸ்கோப் வந்தது .

மருத்துவ கண்டுபிடிப்பிப் **1928ஆம்** ஆண்டு ஸ்காட்லாந்தைச் சேர்ந்த **அலெக்சாண்டர் ஃபிளெமிங்** கண்டுபிடித்த **(ஆன்ட்டி - பயாட்டிக் ) பென்சிலின்,** நோய்களை எதிர்த்துப் போர் புரிய மனிதனுக்கு ஒரு புதிய ஆயுதத்தைக் கொடுத்தது !

இதன்பிறகு ஈசிஜி , ஸ்கேன் , என்று பல சாதனங்கள் வந்தன கிட்னி மாற்று அறுவை சிகிச்சையிலிருந்து இதய மாற்று அறுவை சிகிச்சை வரை டெஸ்டில் இருந்து கிளோனிக் வரை மருத்துவம் நான்கு கால் பாய்ச்சலில் அபார வேகத்தில் முன்னேறியது முன்னேறுகிறது
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள் : 'அல்லாஹ் எந் நோயையும் அதற்குரிய நிவாரணியை அருளாமல் இறக்குவதில்லை'
என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.
ஸஹீஹ் புகாரி : 5678.

ஒவ்வொரு முறையும் புதிய
மருந்துகளைக் கண்டுபிடிக்கும் போதும் அது வேலை செய்கிறதா இல்லையா என்று பரிசோதிப்பது சிரமமான காரியம். அதனால் நோய்க்கிருமிகளை முதலில் தங்கள் உடம்பில் ஏற்றிக்கொண்டு நோய் வந்ததும்... தாங்கள் கண்டுபிடித்த மருந்தை தங்களது உடம்பிலேயே செலுத்திக்கொண்டு, டாக்டர்கள் பரிசோதனை நடத்துவார்கள் ! மனித குலத்தின் மேம்பாட்டுக்காக டாக்டர்கள் இப்படி பல தியாகங்களை செய்திருக்கிறார்கள் . மனித இனம் நன்றி உடையது அது இந்த தியாகிகளை மறக்காது
பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே மூலிகைகளைக் கொண்டு வியாதிகளை குணப்படுத்தும் முறையை இந்தியா கற்றறிந்தது ! அனாடமி பற்றிய விபரங்கள் இல்லாமலேயே பல அறுவைச் சிகிச்சைகளை செய்யும் வித்தைகளை கூட அவர்கள் கற்று இருந்தார்கள் ! ஏன் அப்போது பிளாஸ்டிக் சர்ஜரியே கூட செய்திருக்கிறார்கள் !
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ' ஒவ்வொரு நோய்க்கும் நிவாரணம் ஒன்று உண்டு. நோய்க்குரிய நிவாரணம் சரியாக அமைந்துவிட்டால், வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ்வின் அனுமதியால் குணம் ஏற்படும்.- இதை ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
ஸஹீஹ் முஸ்லிம் 4432.

ரஹ்மத் ராஜகுமாரன்

## என்னைக் கடந்த பொழுதுகள் - 7

## வேம்பயர் டிராகுலா (Vimpire Dracula )




பதினைந்தாம் நூற்றாண்டில் இருந்து சுமார் 400 ஆண்டுகள் .... அமெரிக்காவிலிருந்து ஆஸ்திரேலியா வரை , ஏழைகள் இருந்து பணக்காரன் வரை... யாராக இருந்தாலும் சரி, இரவு வந்தாலே பலருக்கு இதயத்துடிப்பு அதிகமாகும் ஈரக்குலை சில்லிட காதுகளை அடைத்துக் கொள்ளும். பயத்தில் உடம்பிலே ஒர் உஷ்ணம் பரவும் நாக்குகள் வறண்டு போகும் !

காரணம் வேம்பயர் ! அதாவது டிராகுலா. டிராகுலா என்பது உயிருள்ள பிணம் இந்த பிணம் ரத்த வெறி பிடித்தது ! இரவானால் தன் உடம்பு தோலை உரித்து வைத்து விட்டு வவ்வால் மாதிரி பறந்து வரும் இதைக் கண்டு உலகமே அத்தனை கதவுகளையும் அடைத்துக்கொண்டு வீட்டுக்குள் அடங்கி ஒடுங்கிவிடும். ஆனால் வேம்பயர் விடாது சாவித்துவாரம் அளவுக்கு ஒரு சந்து இருந்தால் கூட போதும் உள்ளே வந்து தூங்கிக்கொண்டிருக்கும் குழந்தையின் ரத்தத்தை அது குடித்து விடும் .

ரத்த வெறியோடு காம வெறியும் பிடித்த வேம்பயர் ஆக இருந்தால் இதனிடம் மாட்டும் இளம்பெண்கள் வேண்டாம் அவர்கள் எப்படி செத்துப் போவார்கள் என்பதை சொல்லாமல் இருந்து விடுவோம் .
இதில் எது கதை... எது உண்மை.. எது ஜோடனை ...எது வதந்தி.. என்று இனம் பிரித்துப் பார்க்க முடியாத அளவுக்கு மொத்த உலகமே பயத்தில் இருண்ட கண்களோடு அப்போது இருந்தது இதனால் அவர்கள் பார்த்து பயந்ததெல்லாம் டிடிராகுலாதான் தெரிந்தது .

டிராகுலா யாரை கொன்று ரத்தத்தைக் குடிக்கிறதோ அவர்களும் ரத்தவெறி பிடித்த டிராகுலா ஆக மாறி விடுவார்கள் என்பதால் 'டிராகுலாவால் கொல்லப்பட்டவர் ' என்று சந்தேகப்படும் நபர்களின் பிணங்களை அட்டைக்கரி ஆகும் அளவுக்குத் தீயிலே பொசுக்கிப் பூமிக்கு வெகு ஆழத்தில் புதைத்தார்கள் .
நீல நிற கண்களை உடையவர்கள்.. பிறக்கும் போதே பற்களோடு பிறக்கும் குழந்தைகள் , மூளை கோளாறு கொண்டவர்கள் இவர்கள் எல்லோரையும் டிராகுலா என்று உலகம் அஞ்சி விலகியது .
உலகின் ஒவ்வொரு மூலையிலும் வெவ்வேறு பெயர்களில் வெவ்வேறு அர்க்கத்தனங்களுடன் வேம்பயர் தோன்ற ஆரம்பித்தது .

சிலுவைக்குறி , பூண்டு இவை இரண்டு மட்டுமே வேம்பயர் அஞ்சும் என்ற நம்பிக்கை இருந்ததால் மக்கள் தங்கள் கழுத்தில் சிலுவைக்குறியையும் வீட்டின் ஜன்னல் கதவுகளில் பூண்டுக் கொத்துக்களையும் தொங்கவிட்டார்கள் உலகம் விஞ்ஞான யுகத்தில் காலடி எடுத்து வைத்த பிறகும் கூட வேம்பயர் மறையவில்லை .
எப்படி ஆரம்பித்தது இந்த டிராகுலா பீதி ?

**1430 ம் ஆண்டு ட்ரான்ஸில்வேனியாவில் (இப்போது ருமேனியாவில் இருக்கிறது**) வ்ளாட் டிராகுலா என்ற ஓர் இளவரசன் இருந்தான் . அவன் சிறுவனாக இருந்தபோது அவனின் கண்களுக்கு முன்பே அவன் அப்பாவையும் அண்ணனையும் துருக்கிய எதிரிகள் கொடூரமாக சிதைத்து உயிரோடு எரித்த பிறகு இச்சிறுவன் மன்னனான பிறகு தான் சிறைபிடிக்கும் துருக்கியர்களை பழிக்குப்பழி வாங்க அவர்களை இரும்பு கம்பிகளால் குத்தி குத்தி சித்திரவதை செய்தான் .

அப்போது அவனுக்கு மனித ரத்தத்தின் சுவை பிடிக்க ஆரம்பித்தது . மனித மாமிசம் அவன் நாக்கை ருசிக்க வைத்தது . தன்னை எதிர்ப்பவர்களை அவன் கொதிக்கும் வெந்நீரில் தள்ளினான் . பாலியல் குற்றம் புரியும் பெண்களின் உடம்பு முழுவதுமாக உரித்து விட்டு அவர்கள் கதற கதற நம்மால் கற்பனை செய்ய முடியாத காரியங்களைச் செய்தான் .

ஒருநாள் அவனுக்கு ரொம்ப போரடிக்க தன் படையோடு கிராமத்துக்கு போன அவன் ஒரே நாளில் தன் சொந்த நாட்டைச் சேர்ந்த 30 ஆயிரம் மக்களை மிருகங்களைப் போல வேட்டையாடிக் கொன்றான் . வ்ளாட் டிராகுலா பற்றி இப்படி சொல்லிக்கொண்டே போகலாம் ...
1476 ஆம் ஆண்டு அவன் துருக்கியர்களால் தலை துண்டிக்கப்பட்டு கொல்லப்பட்டான் .

ஆனால் சில ஆண்டுகள் கழித்து அவன் சவப் பெட்டியைத் திறந்து பார்த்தபோது அங்கே அவனின் பிணம் இல்லை ! இந்த செய்தி மக்கள் மத்தியில் பரவ வ்ளாட் டிராகுலாவால் பலர் ரத்தம் உறிஞ்சப்பட்டுக் கொல்லப்படுவதாக வதந்தி பரவியது . அப்போது ஆரம்பித்த வதந்தியும் பயமும் பல நூறு ஆண்டுகளாகியும் மறையவில்லை .
இந்த பயத்தை மறையவிடாமல் செய்யும் பொறுப்பை வதந்திகளும் மக்களின் அறியாமையும் ஏற்றுக்கொண்டன .பிறகு இந்த வேலையை நாவலாசிரியர்கள் , சினிமாக்காரர்களும் தூக்கிப் பிடித்துக் கொண்டு அதை வைச்சி செய்ந்தனர் .

டிராகுலா வைத்து நாவல்கள் எழுதப்படாத மொழியே இல்லை என்றாலும் 1897ஆம் ஆண்டு பிராம்ஸ்டோக்கர் எழுதிய ' டிராகுலா ' தான் இதில் நம்பர் ஒன் ! பிறகு வந்த திரைப்படங்களில் கிறிஸ்டோபர் லீ டிராகுலாவாக வந்து எல்லோரையும் பயமுறுத்தும் தனிதிரைக்கதை !
சரி அப்படி என்றால் வேம்பயர் என்ற ஒன்று இருந்ததா இல்லையா ?
தெரியாது .
ஆனால் மனித ரத்தம் குடிக்கும் வேம்பயர் வவ்வால்கள் உலகில் உண்டு இது விஞ்ஞான பூர்வமான உண்மை .
இது மாதிரி வதந்திகளைப் பற்றி இஸ்லாம்....

இன்றைய நவீன காலத்தில் தகவல் பரப்பும் சாதனங்களால் உண்மையை விட உண்மைக்கு புறம்பான வதந்திகள்தான் அதிகம் பரப்புரை செய்யப்படுகிறது. வதந்திகளை நம்பாமலும் பரப்பாமலும் வாழ்வதே அண்ணலம் பெருமானார் (ஸல்) அவர்களின் அறிவுரையாகும்
"முமின் களே! (சந்தேகமான) பல எண்ணங்களிலிருந்து விலகிக்கொள்ளுங்கள். ஏனெனில், நிச்சயமாக எண்ணங்களில் சில பாவங்களாக இருக்கும்; (பிறர் குறைகளை) நீங்கள் துருவித்துருவி ஆராய்ந்து கொண்டிராதீர்கள்; அன்றியும் உங்களில் சிலர் சிலரைப் பற்றி புறம் பேச வேண்டாம்" (49:12) என்பது திருக்குர்ஆன் வசனமாகும்.

இறைவன் இங்கே மூன்று விதமான அம்சங்களை பட்டியல் போடுகிறான்.

1) **ஊகம், 2) துருவித்துருவி ஆராய்வது, 3) புறம்**.

இம்மூன்று அம்சங்களிலும் நன்மையைவிட பாவமே மிகைத்து நிற்கும். இம்மூன்றுமே ஒன்று மற்றொன்றுடன் தொடர்புடை உடையது
ஊகம் என்பது உறுதிப்படுத்தாத வதந்தியாகும். வதந்தியை துருவித்துருவி ஆராயும்போது பிறர் மீது புறம் பேசக்கூடிய நிலைக்கு தள்ளிவிடும். வதந்தியால் பரவக்கூடிய செய்தியால் நன்மையை விட தீங்குகளே அதிகம்.
எனவே, வதந்தியை பாவங்களின் பட்டியலில் சேர்த்துவிட்டு அதிலிருந்து மக்கள் முற்றாக விலகி நிற்க வேண்டும் என இஸ்லாம் உத்தரவு பிறப்பிக்கிறது.
"முமின்களே! தீயவன் எவனும் உங்களிடம் ஒரு செய்தியைக் கொண்டு வந்தால் அதைத் தீர்க்க விசாரித்துக் கொள்ளுங்கள். (இல்லையேல்) அறியாமையினால் (குற்றமற்ற) ஒரு சமூகத்தாருக்கு நீங்கள் தீங்கு செய்து விடலாம்; பின்னர் நீங்கள் செய்தவை பற்றி நீங்களே கைசேதப்படுபவர்களாக (கவலைப்படுபவர்களாக) ஆவீர்கள்" (திருக்குர்ஆன் 49:6).
ர.ரா

**Soundappan Jayaraman**
ஒவ்வொரு தகவலின் முடிவிலும் இஸ்லாத்தின்
**அருமையான**
கருத்துக்களை இணைக்கிறீர்கள் ஐயா...சிறப்பு

**Rahmath Rajakumaran**

**Soundappan Jayaraman**

மிக்க மகிழ்ச்சி தங்களின் கருத்துக்கு மிக்க நன்றி

என்னைக் கடந்த பொழுதுகள் -- 8

பூமத்திய ரேகையில் 6-ல் ஒரு பங்கு





ஆங்கில எழுத்தாளர் தாமஸ் கார்லைன், பிரஞ்சுப் புரட்சி பற்றி நூல் எழுதி, கையெழுத்துப் பிரதியை அரசியல் சிந்தனையாளரும் எழுத்தாளருமான ஜான் ஸ்வேர்ட்மில்லிடம் படிக்க கொடுத்தார். சில தினங்கள் கழித்து அதை திரும்பப்பெற சென்ற போது, மில் சொன்ன பதில் அவரை பிரமை கொள்ள வைத்தது. மில்லின் வேலைக்காரி அதை ஏதோ பழைய காகிதம் என அடுப்பெரித்து விட்டாளாம்.

இரவு, பகல் பாராமல் அவர் உழைத்த உழைப்பு, எரிந்ததை நினைத்து சோர்ந்து விடவில்லை. அவர் லட்சியம் பிரஞ்சு புரட்சி பற்றி நூல் எழுதுவது. மறுபடியும் புத்தகத்தை எழுத துவங்கி விட்டார். இலக்கியத் தரம் வாய்ந்ததாக கருதப்படும் அந்த புத்தகம் அவர் இரண்டாவதாக எழுதிய புத்தகம்.

சர் ஐசக் நியூட்டன் தன் பரிசோதனை குறிப்பினை தனது மேசை மீது வைத்துவிட்டு திரும்பி வருவதற்குள், அவரது செல்ல நாய் மேசை மீதிருந்த எரியும் மெழுகுவர்த்தியை தட்டிவிட்டதில் அவரது குறிப்புகள் அனைத்தும் எரிந்து போயின. மீண்டும் நினைவுபடுத்தி குறிப்புகளை எழுதினார். விடாமுயற்சிக்கு இதைவிட நல்ல உதாரணம் சொல்ல முடியாது
....இப்படி எத்தனையோ தடங்களுக்கு இலக்காகி உலக வரலாற்றின் மிகப்பெரிய விஷயமான சீனப் பெருஞ்சுவர் , அசைக்க முடியாத முயற்சியால் உருவாக்கப்பட்டது .

சுமார் 2500 ஆண்டுகளுக்கு முன்பு பொருளாசை எடுக்கும்போதெல்லாம் பசியைத் தணித்துக் கொள்ள மங்கோலிய குதிரை வீரர்கள் படை சீனா மீது வெறியோடு பாயும் மங்கோலியர்களுடன் போரிட்டுப் போரிட்டு களைத்துப்போன சீன மன்னர்கள் எதிரிகள் தங்கள் நாட்டின் உள்ளே நுழையாமல் தடுக்க தங்கள் நாட்டின் எல்லைகளில் தனித்தனியாக பெரிய பெரிய சுவர்களை எழுப்பினார்கள் .

உலகின் மிக நீண்ட சுவர் ஒன்றை அதாவது பூமத்திய ரேகையில் ஆறில் ஒரு பகுதி சுவரை நிர்மாணித்து கொண்டிருக்கிறோம் என்பது அப்போது அந்த மன்னர்களுக்கே தெரியாது !
**கிபி 221 ஆம் ஆண்டு ' சின் 'என்ற** குறுநில மன்னன் ஜெங் என்பவன் 36 சின்ன சின்ன நாடுகளாகச் சிதறிக் கிடந்த சீனாவைத் தனது சொந்த முயற்சியின் சாதுரியத்தால் ஒருங்கிணைத்தான் .
ஒருங்கிணைந்த புதிய சாம்ராஜ்யத்திற்கு சொந்த நாட்டின் சின் என்ற பேரையே வைக்க அது ' சீனா ' பிறந்தது .
ஜெங் சகல அதிகாரங்களையும் பெற்றான் . அவன் தன்னை சீனாவின் முதல் சக்கரவர்த்தியாக ( க்வின் ஷி ஹுயாங்ஷி ) அழைத்துக்கொள்ள அதுவே அவன் பெயராக மாறியது .

சங்கிலித் தொடர் மாதிரி பல ஆயிரம் கிலோமீட்டர் நீளத்துக்கு சுவர் எழுப்பப் கூலிக்கு ஆள் வைத்து நடக்குமா ? அதனால் சிறைச்சாலையில் இருந்த அத்தனை கைதிகளையும் சுவர் கட்ட நாட்டின் பல பகுதிகளுக்கும் அனுப்பினான் .

சுவரைக் கட்ட கைதிகள் மட்டும் போதுமா அதனால் வேலையில் தவறு செய்யும் அதிகாரிகளில் ஆரம்பித்து , தனது கருத்துக்கு மாறான கருத்துக்கள் கொண்ட அறிஞர்கள் வரை ...அத்தனை பேருக்கும் சுவர் கட்டும் வேலையை 'தண்டனையாக ' கொடுத்தான். ஆனால் இதெல்லாம் எந்த மூலைக்கு...சுவர் கட்ட அப்போதும் ஆட்கள் போதவில்லை வீட்டில் மனைவியோடும் , குழந்தையோடும் கொஞ்சிக் கொண்டிருந்த இளைஞர்களை மன்னனின் போர்வீரர்கள் சுவர் கட்டுவதற்கு வலுக்கட்டாயமாக இழுத்துக் கொண்டு போனார்கள் .

சுவர் கட்டும் பணி குடியிருப்புப் பகுதிகளுக்கு பல கிலோமீட்டர்கள் தள்ளி சுட்டெரிக்கும் பாலைவனத்திலும், மலைகளிலும் நடந்தது . அங்கே சாப்பிட உணவு இல்லாமல் செத்தவர்களின் எண்ணிக்கையை கூட யாரும் கணக்கு வைத்துக்கொள்ளவில்லை . செத்தவன் கணக்கு நமக்கு எதற்கு என்று விட்டு விட்டார்களோ என்னவோ ...சீனப் பெருஞ்சுவரின் தலைமை ஆர்கிடெக்ட் மெங் தியன் என்ற ராணுவ அதிகாரி செத்து விழுந்த தொழிலாளிகளை வீணாக்க இஷ்டமில்லை இறந்தவர்களின் பிணங்களை அஸ்திவாரத்தில் தள்ளி அவற்றின் மீது சுவரை எழுப்பினான் .

கிபி 2010 ஆம் ஆண்டு சக்கரவர்த்தி க்வின் ஷி இறந்தான் . ஆனால் சீனப்பெருஞ்சுவர் வேலை நிற்கவில்லை! அவனுக்கு பிறகு வந்த பல மன்னர்கள் சீனப் பெருஞ்சுவரின் நீளத்தை கூட்டிக்கொண்டு போனார்கள். வேறு சில மன்னர்கள் சீரமைத்தார்கள் என்றாலும் 14ஆம் நூற்றாண்டில் மிங் வம்ச மன்னர்கள் ஆட்சியின் போது சீனப் பெருஞ்சுவர் முழுவீச்சில் புதுப்பிக்க மட்டுமேபட்டது.

சுமார் 200 வருடங்கள் நடந்த இந்த புதுப்பிக்கும் பணியில் சீனப் பெருஞ்சுவரில் ஆயிரக்கணக்கான கண்காணிப்பு கோபுரங்கள் நிர்மாணிக்கப்பட்டன . ஆனால் எந்த நோக்கத்துக்காக இந்தச் சுவர் கட்டப்பட்டதோ அந்த நோக்கம் நிறைவேறவேவில்லை ! மங்கோலியப் படை பல சமயம் சீன பெருஞ்சுவரை தாண்டி வந்து சீனாவில் வெறியாட்டம் ஆடியது . இதைவிட பரிதாபம் என்னவென்றால் இந்த சீன பெருஞ்சுவரையே மங்கோலியப் படை வீரர்கள் தங்கள் கூடாரமாகக் கூட சில சமயம் பயன்படுத்தினார்கள்.

சீனப் பெருஞ்சுவரை சுற்றி குடியிருப்புகள் தோன்ற ஆரம்பித்த காலகட்டத்தில் வீடுகள் கட்டுவதற்காக பெரிய அளவில் கற்கள் தேவைப்பட்டன. அப்போது மக்கள் இந்தச் சுவரில் இருந்து தங்களுக்கு தேவையான கற்களை பெயர்த்து நைசாக எடுத்துக்கொள்ள இப்போது எஞ்சியிருப்பது பாதி சுவர் மட்டுமே .

பட்டு , வெடிமருந்து, டீ ,ஆச்சு என்ற பல விஷயங்களை உலகுக்குக் கொடுத்த சீனாவுக்கு மிக நீண்ட வரலாறு உண்டு ; என்றாலும் தனது பாரம்பரியத்தை எடுத்துச்சொல்ல அந்த நாட்டுக்கு பிரமிடுகளோ , கோயில்களோ ,

அஜந்தா, எல்லோரா போன்ற கலைக் களஞ்சியங்களோ கிடையாது. ஒண்னே ஒண்ணு கண்ணே கண்ணு என்று சீனாவுக்கு இருக்கும் ஒரே பாரம்பரிய சொத்து சீனப்பெருஞ்சுவர் மட்டுமே.
சரித்திர காலத்தில் மட்டுமல்ல நவீன காலத்தைப் பொறுத்தவரை கூட இந்தச் சுவர் துரதிர்ஷ்டம் செய்ததுதான் .
ஆம் உலகின் ஏழு அதிசயங்களில் ஒன்று என்ற பெருமையை கூட உலகம் இந்த சுவருக்கு கொடுக்கவில்லை
சுவரை கட்டியெழுப்ப எடுத்த முயற்சி மாதிரி .. அந்த சுவரைக் கட்டி காக்க எந்த முயற்சியும் சீனா எடுக்கவே இல்லை !

اِنَّ سَعْيَكُمْ لَشَتّٰى
(மனிதர்களே!) நிச்சயமாக உங்களுடைய முயற்சிகள் பலவாறாக இருக்கின்றன.
(அல்குர்ஆன் : 92:4)
ர.ரா

என்னைக் கடந்த பொழுதுகள்- 9

சகுனி என்ற முனாஃபிக்



ஹிட்லர் சிறுவனாக இருக்கும்போது ஓவியத்தில் மிகப்பெரிய ஆர்வம் கொண்டிருந்தார் . ஓவியப் பள்ளியில் அவருக்கு சீட் கிடைக்கவில்லை. ஓவியம் வரையதான் ஹிட்லருக்கு கொடுத்து வைக்கவில்லையே தவிர , உலக நாடுகளின் வரைபடங்களை மாற்றி வரையும் வல்லமை பிற்காலத்தில் அவருக்கு கிடைத்தது.

போலந்து , செக்கோஸ்லோவேகியா ஹங்கேரி என உலகத்தில் உள்ள பல நாடுகளின் எல்லைக் கோடுகளை அவர் இராணுவத் துப்பாக்கி முனையால் மாற்றி வரைந்தார் .
சிறுவயதில் சோம்பேறியாக பொறுப்பில்லாமல் ஊர் சுற்றித்திரிந்த ஹிட்லரின் இளமைப்பருவத்தில் உலக வரலாறுகளை படிக்கும் ஆர்வம் இருந்தது.இந்த வரலாறுகள் படிக்கும் பழக்கத்தால் கிடைத்த பலன் பிற்காலத்தில் ரொம்பவும் உதவியாக இருந்தது .

குளிர் பிரதேசமான ஜெர்மானியில் இரவு நேரங்களில் ஏழை எளிய மக்களுக்காக சுடச்சுடச் சூப் ஊற்றுவார்கள் .
வரிசையில் நின்று அதை வாங்கி குடிக்கும் அளவுக்குத்தான் அப்போது ஹிட்லரின் வசதி இருந்தது.
என்றாலும் ஜெர்மானியரான தனக்கு சரிசமமாக ஒரு யூதரோ வேறு ஒரு இனத்தவரோ வரிசையில் நின்றால் ஹிட்லருக்கு பொறுக்காது ! எந்த இனமும் தன் இனத்திற்கு சரிசமம் இல்லை தன் இனம் மட்டும்தான் உயர்ந்தது என்ற கருத்து இளமையிலேயே அவரின் அடி மனதில் படிந்து இருந்தது .

1914 ஆம் ஆண்டு உலகப் போர் மூண்டது ஹிட்லர் ஒரு சாதாரண சிப்பாயாக ராணுவத்தில் சேர்ந்தார். அங்குதான் ஹிட்லரின் வாழ்க்கை திசை மாறியது. இல்லை இல்லை ...உலகத்தின் நடப்புகளே திசைமாறின !
இத்தனைக்கும் ராணுவ வாழ்க்கையில் கூட அவர் பிரமாதமாக எதையும் சாதித்துவிடவில்லை .

முதல் உலகப்போர் முடிந்ததும் ஹிட்லர் ஜெர்மானியர்கள் இன உணர்வை தக்க சமயம் பார்த்து அவ்வப்போது தூண்டிவிட்டுக் கொண்டே பிரச்சாரம் செய்வார் . அந்த பிரச்சாரத்தில் யூதர்களை நயவஞ்சகத்தனமாக வஞ்சித்து பொய் கலந்து பேசுவார் இத்தனை நாளாக ஹிட்லருக்குள் அடங்கிக் கிடந்த பேச்சாற்றல் அப்போதுதான் விஸ்வரூபம் எடுத்து வெளிப்பட்டது .

ஹிட்லர் National **socialist German Worker's Party** என்ற (சுருக்கமாக நாஜி) கட்சியைத் தொடங்கினார் . ஆனால் 1929 வரை ஹிட்லரை ஜெர்மானியர்கள் சீரியஸாக எடுத்துக் கொள்ளவில்லை .

1930 ஆம் ஆண்டு ஹிட்லருக்கு ஒரு லக்கி பிரைஸ் அடித்தது ஜெர்மனியும் மற்ற ஐரோப்பிய அமெரிக்க நாடுகளைப் போலவே பெரிய அளவில் பொருளாதார வீழ்ச்சியைக் கண்டது ! இதனால் பாதிக்கப்பட்ட மக்களின் கோபம் ஆட்சியாளர்கள் மீது திரும்பியது . ஹிட்லர் இதை நன்கு பயன்படுத்திக்கொண்டார்

ஹிட்லருக்குள் இருந்த சகுனி ( முனாஃபிக்) இப்போது வெளிப்பட ஆரம்பித்தான் . ஜெர்மன் நாடாளுமன்றத்தை ஹிட்லர் தனது நாஜி படையினரை விட்டே கொளுத்தி விட்டு, பழியை வஞ்சகத்தனமாக எதிரிகள் மீது போட்டார் . மக்கள் நம்பி ஹிட்லரின் பக்கம் சாய்ந்தனர்.
இன்னொருபுறம் ஹிட்லரின் மேடைப் பேச்சுத் திறன் பெருவாரியான ஜெர்மனியினரை ஹிட்லரின் பக்கம் ஈர்த்தது .

வேலை வெட்டி இல்லாமல் ஜாலியாக ஊர் சுற்றிக் கொண்டிருந்த காலத்தில் ஹிட்லருக்கு கிடைத்த நிறைய அவகாசத்தில் அவர் படித்த உலக வரலாற்று சரித்திரங்களை மேடைப்பேச்சில் புகுத்தி அழகாக இவருக்கு சாதகமாக பேசினார்.

1934 ஆம் வருடம் ஜெர்மனியை அதுவரை ஆண்டுவந்த ஜனாதிபதி இறந்து போனார் அப்போது இவரின் இடத்துக்கு ஹிட்லர் உயர்ந்தார் அப்போது ஹிட்லர் தன்னை ஜனாதிபதி என்று சொல்லிக் கொள்ளவில்லை தலைவர் என்று சொல்லிக் கொண்டார்

ஹிட்லர் பிறகு நடத்திய உலக அரசியல் சித்துக்கள் அனைத்தும் தனித்தனிப் பதிவுகளாக போடவேண்டிய அளவுக்கு இருக்கிறது . எனவே நாம் அவரின் கடைசி காலத்திற்கு வருவோம்
1945 ஆம் ஆண்டு ஏப்ரல் 30ஆம் தேதி போரில் இறங்கு முகத்தில் இருந்த ஹிட்லருக்கு ஒரு அதிர்ச்சி செய்தி வந்தது . எதிரி நாடான ரஷ்யப் படைகள் தன்னைச் சூழ்ந்து விட்டன என்றும் இனி தப்பித்து ஓட வழி இல்லை என்றதும் ஹிட்லரும் அவரின் மனைவி ஈவாவும் தற்கொலை செய்து கொண்டனர் .
இதில் விசித்திரம் என்னவென்றால் பல ஆண்டுகாலம் ஈவாவுடன் வாழ்ந்த ஹிட்லர் தற்கொலை செய்வதற்கு முந்தைய நாள்தான் இவர் முறைப்படி திருமணம் செய்து கொண்டார் .
ஹிட்லர் இறந்த பிறகு கூட நாஜிப் படை பொய் பிரச்சாரத்தை நிறுத்தவில்லை போர்க்களத்தில் ஹிட்லர் குண்டடிபட்டு வீரமரணம் அடைந்ததாக அது அறிவித்தது !

**ஹிஜ்ரத் சமயத்தில், அப்துல்லா இப்னு உபை** என்பவன் மதீனாவின் தலைவனாக இருந்தான். இன்னும் மதீனாவின் மணிமுடியை அலங்கரிக்க வேண்டும் என்ற ஆசையுடன் அவன் இருந்த காலத்தில் தான் மதீனாவின் அன்ஸார்கள் இறைத்தூதர் (ஸல்) அவர்களுடன் மக்காவில் அகபா என்னும் இடத்தில் ஒப்பந்தம் ஒன்றைச்செய்து நபியவர்களை மதீனாவில் வந்து தங்கி விடுமாறு அழைப்பு விடுத்தார்கள். அந்த அழைப்பினை ஏற்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் மக்காவினை விட்டு வெளியேறி ஹிஜ்ரத் செய்து மதீனாவில் வந்து தங்கி வரலானார்கள்.
தான் ஆட்சியாளராக வரவிருந்த நிகழ்வு இறைத்தூதர் (ஸல்) அவர்களின் வருகையால் கெட்டு விட்டதை அறிந்து வெறுப்பிற்குள்ளானான் அப்துல்லா இப்னு உபை. மதீனாவின் அனைத்து குலங்களும் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டதன் காரணமாக அப்துல்லா இப்னு உபையும் தானும் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்ட மாதிரி வஞ்சகத்தனமாக நடித்தான் . ஆனாலும், இஸ்லாத்திற்கு எதிரான பல்வேறு செயல்களில் சகுனியாக மறைமுகாக ஈடபடலானான்.

உஹத் போரின் பொழுது ஆயிரம் முஸ்லிம்களுடன் போர் ஆரம்பிக்க இருந்த கடைசி நேரத்தில் தனது முன்னூறு பேர் கொண்ட குழுவினரை போர் செய்ய விடாமல் தடுத்து , தனது குழுவினருடன் மதீனாவிற்குத்திரும்பி வந்து விட்டான்.

இன்னும் பனீ முஸ்தலக் போரின் சமயத்தில் போரின் கலந்து கொண்ட இறைப் போராளிகளுக்கு எதிராகவும் இறைத்தூதர் (ஸல்) அவர்களின் மீதும் தகாத வார்த்தைகளைக் கூறினான். இன்னும் அப்போருக்கு பின்னர் திரும்பும் வழியில்... ஆயிஷா (ரலி) அவர்களின் மீது களங்கம் சுமத்திய சம்பவத்தில் இவன்தான் முன்னணி வகித்தான்.

இந்த நிலையில் இவனைக் கொல்வதற்கு தனக்கு அனுமதி தருமாறு உமர் (ரலி) அவர்கள் இறைத்தூதர் (ஸல்) கேட்டார்கள். கருணை உருவான இறைத்தூதர் (ஸல்) அவர்கள் அதற்கு அனுமதி தர மறுத்து விட்டார்கள். அப்துல்லா இப்னு உபையின் நயவஞ்சகத்தை அறிந்திருந்த வல்ல அல்லாஹ்வும்...
.." அவர்களுக்காக நீர் பாவமன்னிப்புக் கோரினாலும் அல்லது பாவமன்னிப்புக் கோராவிட்டாலும் அவர்களுக்குச் சமமேயாகும்; அல்லாஹ் அவர்களுக்குப் பாவமன்னிப்பளிக்க மாட்டான் - பாவம் செய்யும் சமூகத்தாரை நிச்சயமாக அல்லாஹ் நேர்வழியில் செலுத்த மாட்டான். (குர்ஆன்-63:6)
என்ற திருவசனத்தை குர்ஆனில் இறக்கினான் .

என்னைக் கடந்த பொழுதுகள் – 10

துவந்த யுத்தம் .





அதென்ன துவந்த யுத்தம் ? அப்புறமா சொல்றேன் .
**"புஷ்கின் " - அலெக்சாண்டர் புஷ்கின். ரஷ்யாவின் பாரதி.**

புஷ்கினின் தந்தை , செர்கீ ஒர் இலக்கிய அபிமானி .மாலைப் பொழுதுகளில் செர்கீ இல்லத்தில் ரஷ்ய எழுத்தாளர்கள் பலரும் கூடுவதும் வழக்கம் அவர்களுடைய உரையாடல்கள் சர்ச்சைகள் , விமர்சனங்கள், கவிதை உரையாடல்கள் ஆகிய பலவற்றையும் சிறுவன் புஷ்கின் உன்னிப்பாக கவனித்து வந்தார் .
செர்கீயின் படிப்பறை , அந்த எழுத்தாளர்கள் பட்டிமன்றம் , கவிதையின் இலக்கிய போக்கு இவைகள் சிறுவன் புஷ்கினை மாபெரும் கவிஞனாக உருமாற்றம் செய்த பட்டறை !

13- வது வயதிலேயே எழுதத் தொடங்கிய புஷ்கின் கவிதைகள் பலவும் அப்போதே பிரசுரமாக தொடங்கின. ரஷ்யாவில் ஒரு கவிதை பிரசுரமாவது என்பது லேசுப்பட்ட காரியமல்ல .
புஷ்கினுடைய வாழ்க்கையும் கூட அவரது கவிதைகளைப் போலவே உணர்ச்சிகரமானது. கொந்தளிப்பும், போராட்டமும் நிறைந்தது . ஜார் மன்னனை விரோதியாக ஆக்கிக் கொண்டது .

"நாட்லி ! " _ புஷ்கினின் மனைவி.
மாஸ்கோவிலிலும் பீட்டர்ஸ்பர்க்கிலும் பிரபலமான பேரழகி , சீமாட்டி
நாட்லியோடு சேர்ந்து நடனமாடும் வாய்ப்புக்காக பலரும் துடித்துக் கொண்டிருந்தார்கள் . மன்னன் முதலாம் நிக்கலாஸே கூட , அவளைப் பலமுறை அவனோடு ஆட அழைத்தது உண்டு !
இரண்டு குழந்தைகளுக்கு தாயான பின்னரும் கட்டுக்குலையாத , மெருகு கலையாத மேனி வண்ணம் அவளுக்கு இருந்தது .

'டி 'அந்தஸ் . இவன் பிரான்சில் படிப்பை முடித்துக்கொண்டு பீட்டர்ஸ்பர்க் வந்து சேர்ந்தான் . ஒரு விருந்து நிகழ்ச்சியின்போது டி அந்தஸ் நாட்லியைக் கண்டான் . அவளும் அவனை கண்டாள் . டி அந்தஸ் ஒரு ஆடம்பர பிரியன் . குஷி பேர்வழி மறைமுகமாக காதல் கொண்டார்கள் .
புஷ்கினுக்கும் அது தெரியவந்தது. அவரால் அதைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. நெஞ்சைப் பிளந்து நெருப்பை கொட்டியது போல் துடித்தார்.

நாட்டிலி அப்போது அவருக்கு மனைவி மட்டுமல்ல ; அவருடைய இரு குழந்தைகளுக்குத் தாய் கூட .
டி அந்தஸ்துடைய காதலை முறித்தாலொழிய மனைவியின் துரோகத்திற்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்க முடியாது .
புஷ்கினுடைய கோபம் டி அந்தஸ் மீது திரும்பியது.
கணவனான கவிஞர் துவந்த யுத்தத்திற்கு அழைத்தார். அவனும் தயங்காமல் அந்த யுத்தத்திற்கு தயார் தான் என்று சம்மதித்து விட்டான்

"அது என்ன துவந்த யுத்தம் ? "
" டாய்டு ! ஒண்டிக்கு ஒண்டி வர்ரீயா ? "
பகைகொண்ட கனவான்கள் இருவர் "நீயா ...நானா ..? "என்று ஒரு கை பார்ப்பதற்கு கையில் துப்பாக்கியுடன் நேரெதிர் நின்று கொண்டு கணக்குத் தீர்த்துக் கொள்ளும் துவந்த யுத்தத்திற்கு அரசாங்கத்தின் முன் அனுமதி பெற்றிருக்க வேண்டும் என்பது முதல் விதி . இடம் , நாள் , நேரம் இவற்றையும் முன்னதாகவே நிச்சயித்து இருப்பது இன்னொரு விதி .

புஷ்கின் , டி அந்தஸ் ஆகிய இரு இருவரது நண்பர்களும் இதற்கான சகல ஏற்பாடுகளையும் செய்து முடிக்க, டி அந்தஸின் வளர்ப்புத் தந்தை மேலும் இரண்டு வாரத்திற்கு தள்ளி போட அனுமதி கேட்கிறார்.அனுமதி அளிக்கப்படுகிறது .

அவகாசம் கிடைத்ததும் டி அந்தஸ் அவசர அவசரமாக நாட்லின் தங்கையும், புஷ்கினின் மைத்துனிமான காதரீனைக் கல்யாணம் செய்து கொண்டான். இந்த திருமணமே ஒரு முழு மோசடி என்பதை புஷ்கின் கண்டு கொண்டார்.
மைத்துனிக்காக கருணை காட்டி , துரோகி டி அந்தஸ்தை அவர் மன்னிக்கத் தயாராக இல்லை .
நிச்சயித்த நாளும் வந்தது !
இடைவெளி தூரத்தை அளந்து தரையில் கிழித்திருந்த கோடுகளுக்கு முன்னே புஷ்கினும் , டி அந்தஸ்தும் எதிரும் புதிருமாக நின்றிருந்தனர் .
விசில் ஊதும் சத்தம் கேட்கும் இருவரும் தரையில் வைக்கப்பட்டிருக்கும் துப்பாக்கியை கையில் எடுத்துக் கொள்ள வேண்டும் . இருவரும் தத்தம் எதிரியை குறிபார்த்து துப்பாக்கியால் சுட வேண்டும். இரண்டும் இமைப் பொழுதில் நடந்தாக வேண்டும். புஷ்கின் விசில் சத்தத்தை கேட்பதற்காக காதுகளை கூர்மையாக்கிக் கொண்டார்
விசில் ஊதப்பட்டது . அவ்வளவுதான் இருவருமே சட்டென்று குனிந்து தரையில் இருந்த அவரவர் துப்பாக்கி அவசர அவசரமாக எடுத்தனர்.

டி அந்தஸ் முந்திக் கொண்டான் . துப்பாக்கி குண்டு புஷ்கின் வயிற்றில் பாய்ந்திருந்தது .
புஷ்கின் "நிறுத்து " என்றார் . மாற்றுத் துப்பாக்கி ஒன்று கேட்டார் .நண்பர்கள் கொடுக்க , டி அந்தஸை குறி பார்த்து சுட்டார் . வெடித்த குண்டு டி அந்தஸை உராய்ந்தபடி சென்று விட்டது .
புஷ்கினின் முதல் துப்பாக்கியில் சதி விளையாடி இருந்தது .
நண்பர்கள் அவசர அவசரமாக புஷ்கினை குதிரை வண்டியில் அவரது வீட்டுக்கு கொண்டு போய் சேர்த்தார்கள் .
ஆம் ...! காதலியை மீட்கும் போட்டியில் புஷ்கின் தோல்வி அடைந்துவிட்டார்.
ஒரு கவிதை முற்றுப் பெறாமலேயே முடிந்துவிட்டது !
திருமணம் மூலம் அல்லாமல் கள்ளத் தொடர்பு வைக்கும் ஆண்களாயினும், பெண்களாயினும் இஸ்லாமிய ஆட்சியில் கடும் தண்டனைக்கு உள்ளாக்கப்படுவார்கள்.

திருமணம் செய்யாத நிலையில் இதுபோல் விபச்சரம் செய்பவருக்கு நூறு கசையடிகளும் திருமணத்துக்குப் பின் விபச்சாரம் செய்பவருக்கு மரண தண்டனையும் இஸ்லாமிய ஆட்சியில் வழங்கப்படும்.

يٰۤاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْا لَا يَحِلُّ لَـكُمْ اَنْ تَرِثُوا النِّسَآءَ كَرْهًا ‌ وَلَا تَعْضُلُوْهُنَّ لِتَذْهَبُوْا بِبَعْضِ مَاۤ اٰتَيْتُمُوْهُنَّ اِلَّاۤ اَنْ يَّاْتِيْنَ بِفَاحِشَةٍ مُّبَيِّنَةٍ‌ وَعَاشِرُوْهُنَّ بِالْمَعْرُوْفِ‌ فَاِنْ كَرِهْتُمُوْهُنَّ فَعَسٰۤى اَنْ تَكْرَهُوْا شَيْـًـا وَّيَجْعَلَ اللّٰهُ فِيْهِ خَيْرًا كَثِيْرًا
"நம்பிக்கையாளர்களே! யாதொரு பெண்ணை பலவந்தமாக அடைவது உங்களுக்கு ஆகுமானதல்ல.
மேலும், பகிரங்கமாக யாதொரு மானக்கேடான காரியத்தைச் செய்தாலன்றி (உங்கள் மனைவியாக வந்த) பெண்களுக்கு நீங்கள் கொடுத்ததில் சிலவற்றை எடுத்துக் கொள்வதற்காக அவர்களை (உங்கள் வீட்டில்) நீங்கள் தடுத்தும் வைக்காதீர்கள்.
மேலும், அவர்களுடன் கண்ணியமான முறையிலும் (சகிப்புத் தன்மையுடனும்) நடந்து கொள்ளுங்கள். அவர்களை நீங்கள் வெறுத்தபோதிலும் சரியே! ஏனென்றால், நீங்கள் வெறுக்கும் ஒன்றில் அல்லாஹ் பல நன்மைகளை வைத்திருக்கலாம். (அல்குர்ஆன் : 4:19)

*புஷ்கின் கவிதை :*
*"நான் உன்னை நேசித்திருக்கிறேன்,*
*அநேகமாக நான் இன்னும் உன்னை அளவிலா நேசமுடன் நேசிக்கிறேன்,*
*அந்த நேசிப்பின் தீச்சுடர் இன்னும் மாயவில்லை :*
*அது என் ஆன்மாவினுள் அமைதியாக கனல்கிறது,*
*இனியும் அதன்பொருட்டு நீ அவலமுறாதே !*
*அமைதியாய் மற்றும் நம்பிக்கையற்று*
*நான் உன்னை நேசிக்கிறேன்,*
*சில தருணங்களில் பொறாமையுடனும்*
*ஒரு சில சமயங்களில் கூச்சமடைந்தும் ,*
*இளகியும், வாய்மையாய், என்னைபோல்*
*உன்னை அகமுணர்ந்து நேசிக்கும்*
*இன்னொருவனை தேடியடைய*
*கடவுள் கொடையருளட்டும்."*
*-Alexander Pushkin-.*
(தமிழாக்கம் : எஸ்.சண்முகம்)

வாடகைத் தாய் பற்றி இஸ்லாம்

(முழுமையாக படிக்கவும் ) 30-12-2020




**சரோகசி (Surrogacy)** என்றால் என்ன?
ஒரு பெண் இன்னொரு பெண்ணின் கர்ப்பத்தைத் தாங்கி குழந்தையைப் பெற்று எடுப்பது தான் சரோகசி.
சரோகசி என்கிற இந்த சொல் surrogatus என்கிற இலத்தீன் மொழி வார்த்தையிலிருந்து வந்தது. இதன் அர்த்தம் 'ஒருவருக்கு பதிலாக' அல்லது 'ஒருவரின் இடத்தில்' என்பது.
ஒரு பெண் தன் கர்ப்பப்பையை இன்னொருவரின் கர்ப்பத்தைத் தாங்குவதற்காக பயன்படுத்துவதுதான் இந்த சரோகசி.
இப்படி இன்னொருவரது கர்ப்பத்தைத் தாங்கும் பெண்ணை சரோகேட் மதர் அல்லது வாடகைத் தாய் என்கிறார்கள். மரபியல் மூலமாக வாடகைத் தாய்க்கும் அவர் பெற்றெடுக்கும் குழந்தைக்கும் எந்தவிதத் தொடர்பும் இருக்காது.

வாடகை கர்ப்பப்பையை ஏன் நாட வேண்டும்?
பல முறை ஐ.வி.எஃப் முறை செய்தும் ஒரு பெண்ணால் கர்ப்பம் தரிக்கமுடியாமல் போகிறது. சில சமயங்களில், பெண்ணின் கர்ப்பப்பை, கர்ப்பத்தை 10 மாதங்கள் தாங்க முடியாதபடி பலவீனமாக இருக்கும் போது, அல்லது கர்ப்பப்பை தொற்றுநோய் தாக்குதலுக்கு ஆளாகி கர்ப்பம் தரிக்கமுடியாமல் போகும் போதும் இன்னொரு பெண்ணின் உதவியுடன் தன் குழந்தையை பெற்றெடுக்க ஒரு பெண் விரும்பலாம்.
இந்திய மருத்துவ ஆராய்ச்சி கழகம் (ICMR) இந்த சரோகசி முறைக்கு பல விதிமுறைகளை நடைமுறைப் படுத்தியுள்ளது

ஒரு பெண்ணால் உடல் ரீதியாகவும், மருத்துவ ரீதியாகவும் குழந்தை பெறமுடியாமல் போகும் போது மட்டுமே அந்தப் பெண்ணின் அனுமதியுடன் சரோகசி சிபாரிசு செய்யப்பட வேண்டும்.

வாடகைத் தாய் மூலம் பிறக்கும் குழந்தை, **'Deoxyribo Nucleic Acid'** எனப்படும் டி. ஏன்.எ. பரிசோதனை மூலம் இன்னாரின் குழந்தை என்று நிரூபிக்கப் பட வேண்டும். இல்லாத பட்சத்தில் அந்தக் குழந்தை உருவாகக் காரணமாக இருந்த உயிரியல் பெற்றோர்கள் **(biological parents)** அக்குழந்தையை தத்து எடுத்துக் கொள்ளவேண்டும்.
கர்ப்ப காலத்தில் வாடகைத் தாய்க்கு கொடுக்கப்படும் பண உதவிக்கு ஆவணச் சான்றுகள் இருக்க வேண்டும். அவருக்கு கர்ப்பத்தினால் ஏற்படும் செலவுகள் அனைத்தையும் ஈடு செய்யும் அளவுக்கு பண உதவி அளிக்கப் படவேண்டும்.

ஒரு பெண் மூன்று தடவைக்கு மேல் தன் கர்ப்பப்பையை வாடகைக்குக் கொடுக்கக் கூடாது.

வாடகைத் தாயை எப்படித் தேர்ந்தெடுக்கிறார்கள்?
நம் நாட்டில் சரோகசிக்கென்றே இருக்கும் பல அமைப்புகளும், மகப்பேறு மருத்துவர்களும் குழந்தைப்பேறு இல்லாமல் இருக்கும் பெண்களுக்கு இந்த சரோகசி முறையைப் பற்றி சொல்லுகிறார்கள்.
அவர்களின் சம்மதத்திற்குப் பிறகு இந்த அமைப்புகளின் கவுன்சிலர்கள் வாடகைத் தாயாக ஆவதற்கு தயாராக இருக்கும் பெண்களிடம் பல முறை பேசுகிறார்கள். இந்த முறையை பற்றிய முழு விவரமும் அவர்களுக்கு சொல்லி அவர்களது சம்மதத்தை எழுதி வாங்குகிறார்கள். இரண்டு தரப்பும் ஒப்புக்கொண்ட பிறகே இம்முறை

செயல் வடிவம் பெறுகிறது. இதில் இரு தரப்பினருக்கும் லாபம். ஒரு பெண்ணுக்கு குழந்தையும், இன்னொருவருக்கு பணமும் கிடைக்கிறது.

இந்த சரோகசி முறை இயற்கையில் கர்ப்பம் தரிக்க முடியாத, கர்ப்பப் பை பலவீனமாக இருக்கும் பெண்களுக்கு ஒரு வரப்பிரசாதம் என்று சொல்லலாம். அதே போல வறுமையில் இருக்கும் பெண்களுக்கும் இப்படி கர்ப்பபையை வாடகைக்குக் கொடுப்பதில் நல்ல வருமானம் கிடைக்கிறது. கர்ப்ப காலம் முழுமைக்கும் ஆயுள் காப்பீடும், ஒரு மாதத்திற்கு 3000 ரூபாயும், குழந்தை பிறந்த பிறகு 2.5 லட்ச ரூபாயும் வாடகைத் தாய்மார்களுக்குக் கொடுக்கப்படுகிறது.

தற்சமயம் நம் நாட்டில் இந்த முறையை ஒழுங்கு படுத்த சட்டம் இல்லை. இந்திய ஜனத் தொகையில் கிட்டத்தட்ட 10 % மக்கள் மலட்டுத் தன்மையால் பாதிக்கப் பட்டுள்ளனர். சரோகசி முறையை சரிவரப் பயன்படுத்தினால் பல பெண்களுக்கு குழந்தை பாக்கியம் கிடைக்கும் என்று மருத்துவர்கள் கருத்துத் தெரிவிக்கிறார்கள்.
இந்தியா போன்ற பழமையில் ஊறிய நாடுகளில் இம்முறை சிறிது தாழ்ந்த கண்ணோட்டத்துடனேயே பார்க்கப்படுகிறது.

ஆமீர் கானைப் போன்ற பிரபலங்கள் வெளிப்படையாக தங்களுக்கு இம்முறையில் குழந்தை பிறந்ததைப் பற்றிக் கூறும் போது பழமையில் ஊறிய மனங்களும் மாறும் என்று எதிர் பார்க்கப்படுகிறது.
ஆதாரம் : ஏடுஜெட்தமிழ்நாடு

கூடுதல் செய்தி : இந்தி சினிமாவின் சூப்பர் ஸ்டாரான ஷாரூக்கான் மூன்றாவது குழந்தை இப்படி ஒரு வாடகைத்தாய் மூலம் பிறந்தது என்ற செய்தி சென்ற ஆண்டு வட இந்தியாவில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது .

குழந்தை ஷாருக்கானின் ரத்தம்தான் ஆனால் ஷாருக்கானின் மனைவி காவ்ரிக்கு அதில் பங்கு இல்லை .
சரியோ தப்போ இந்த வாடகைத்தாய் ஏற்பட்டால் ஒரு குடும்பத்தில் ஏற்படப் போகும் உளவியல் சிக்கல்களை யாரால் தீர்க்க முடியும் ? இந்தி சினிமாவின் சூப்பர் ஸ்டாரின் கருவை தன் வயிற்றில் ஏற்று பத்து மாதம் சுமந்து பெற்று கொடுத்துவிட்டு, ஆயுள் முழுவதும் அந்த குழந்தையின் மீது எந்த உரிமையும் கோர முடியாத அந்தப் பரிதாபகரமான பெண்ணின் வேதனைக்கு யாரால் பதில் சொல்ல முடியும் ?

இதற்கு இஸ்லாம் கூறும் வழிமுறை
உங்கள் மனைவியர் உங்களின் விளைநிலங்கள். உங்கள் விளைநிலங்களுக்கு விரும்பியவாறு செல்லுங்கள். (அல்குர;ஆன் 2: 223)

அல்லாஹ் மனைவியரை விளைநிலங்களுக்கு உவமையாக இங்கு குறிப்பிடுகின்றான். அதனைத் தொடர்ந்து உங்கள் விளைநிலங்களுக்கு விரும்பியவாறு செல்லுங்கள் என்று மேலும் தெளிவுபடுத்துகின்றான்.
இந்த அல்குர்ஆன் வசனத்தின் மூலம் மேலோட்டமாக பார்த்தால் கணவன் மனைவியிடம் எல்லா விதத்திலும் உரிமை படைத்தவன் என்று புலப்படுகின்றது. ஆனால் எல்லாம் வல்ல அல்லாஹ் 'விளைநிலம்' என்ற சொல்லின் மூலம் நமக்கு ஏராளமான விளக்கங்களை அருளியுள்ளான்.

படைத்த படைப்பாளன் மட்டும்தான் முக்காலங்களும் அறிந்தவன். உலகம் அழிவதற்குள்ளான காலம் மட்டும் ஏற்படும் விளைச்சலுக்கான விளைநிலத்தை மனிதன் எவ்வாறு அணுக வேண்டும் என்ற தீர்க்கமான முடிவை அல்லாஹ் 'விளைநிலம்' என்ற சொற் பிரயோகத்தின் மூலம் நமக்கு தெளிவுபடுத்துகின்றான்.

ஒரு மனிதன் விளைநிலத்தைப் பயன்படுத்துவதன் நோக்கம் விளைச்சலைப் பெறுவதற்கே. மேலே குறிப்பிடப்பட்ட அல்குர்ஆன் வசனத்தில் விளைநிலம் மனைவியாக இருப்பதால் விளைச்சல் குழந்தைகளாக இருக்கின்றன. விளைச்சலான குழந்தையை எதிர்ப்பார்த்து விளைநிலமாகிய மனைவியுடன் கணவன் விரும்பியவாறு அறுவடை செய்யலாம் என இந்த அல்குர்ஆன் வசனம் தெளிவுபடுத்துகின்றது.

எல்லோரும் நினைக்கலாம் இதில் என்ன புதுமை இது தெரிந்த விஷயம் தானே என்று. ஆனால், அறுவடையின்போது விளைச்சல் பெறப்படவில்லை என்றால் தான் பிரச்சினை ஆரம்பமாகின்றது. வேறு வழிகளில் விளைச்சலைப் பெறுவதற்கு மனிதன் முற்படுவான். எனவே, இஸ்லாத்தில் இது கூடுமா? கூடாதா? என்ற சந்தேகம் அனைவர் மனதிலும் எழும்.

முன்னைய காலத்தை விட இக்கால கட்டத்தில் குழந்தைப் பாக்கியம் இல்லாதவர்கள் கூடுதலாக காணப்படுகின்றனர். அதே போல் நவீன கண்டுபிடிப்புக்களின் உதவியுடன் இதற்கான தீர்வு முறைகளும் வைத்தியத் துறையில் காணப்படுகின்றன. அத்தீர்வு முறைகளில் சிலவற்றை கடைபிடிப்பது மார்க்கத்திற்கு முரணானதா? என்ற கேள்வி எழுகின்றது. இதற்குக் காரணம் நமக்கு வாழ்க்கைக்கு வழி காட்டியாக வந்த

முஹம்மது நபி (ஸல்) அவர்கள் காலத்தில் இம்முறைகள் இருக்கவில்லையே அவர்கள் இவ்வாறு செய்யுமாறு ஏவவில்லையே என்ற மனக் குழப்பம்.

இஸ்லாம் முழுமைப் பெற்ற மார்க்கம் என்று அல்லாஹ் கூறுகின்றான்.
இன்று உங்கள் மார்க்கத்தை உங்களுக்காக நிறைவு செய்து விட்டேன். எனது அருளை உங்களுக்கு முழுமைப்படுத்தி விட்டேன். இஸ்லாத்தை உங்களுக்கான வாழ்க்கை நெறியாக பொருந்திக் கொண்டேன்.
(அல்குர்ஆன் 5: 3)

அல்குர்ஆனும், நபி வழியும் மட்டுமே பின்பற்றுவதற்கு மார்க்க ஆதாரமாகும் எனவும் அல்லாஹ் கூறுகின்றான்.
அல்லாஹ்வுக்கும், அவனது தூதருக்கும் கட்டுப்படுங்கள்! முரண்படாதீர்கள்!
(அல்குர்ஆன் 8: 46)

இவ்விரு அல்குர்ஆன் வசனங்களிலிருந்து அல்குர்ஆனிலும், ஹதீஸ்களிலும் (ஆதாரமானவையாக இருக்க வேண்டும்) எல்லா வகையான பிரச்சினைகளுக்கும், சந்தேகங்களுக்கும், குழப்பங்களுக்கும் தீர்வு உண்டு என சந்தேகமில்லாமல் தெளிவாகின்றது. காரணம் இஸ்லாமிய மார்க்கம் முழுமைப்படுத்தப்பட்டுள்ளது.
இனி, குழந்தைப் பாக்கியம் இல்லாதவர்களுக்கு வைத்தியத் துறையின் நவீன சிகிச்சை முறைகள் என்ன என்பதையும், அவை மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்டவையா? என்பதையும் பார்ப்போம்.
செயற்கை கருத்தரிப்பு முறைகள்.

தம்பதியினரில் கணவன் அல்லது மனைவியிடம் உடல் ரீதியான குறைபாடுகள் அதாவது பெண்ணின் முட்டையின் வளர்ச்சி போதாமை, பெண்ணின் கருவறைச் சுவரின் கலங்கள் வேறு இடத்தில் வளர்ந்து காணப்படுதல் இதற்கு பெரிட்டோனிட்டிஸ் **(Peritonitis)** கோளாறு என்பர். இதனால் கருத்தரிக்கக்கூடிய வாய்ப்புக்கள் குறைவு. மேலும், பெண்களில் கருக்கட்டல் நடைபெறக்கூடிய பலோபியன் குழாயின் சிதைவு, ஆண்களின் விந்துக்களின் தரக் குறைவு ஆகிய காரணங்களால் குழந்தை பாக்கியம் இல்லாமல் போகின்றது.
இங்கு ஒன்றை முக்கியமாக கவனத்தில் கொள்ள வேண்டும். அதாவது அல்லாஹ் நாடினால் எந்தக் குறைபாடு இருந்தாலும் குழந்தை பாக்கியம் அமையும். சிலர் எந்தவித குறைபாடுகள் அற்றவர்களாக இருந்தும் குழந்தை பாக்கியம் இல்லாமல் இருக்கின்றனர்.

வானங்கள் மற்றும் புமியின் ஆட்சி அல்லாஹ்வுக்கே உரியது. அவன் நாடியதைப் படைக்கிறான். தான் நாடியோருக்குப் பெண்(குழந்தை)களை வழங்குகிறான். தான் நாடியோருக்கு ஆண்(குழந்தை)களை வழங்குகின்றான். அல்லது ஆண்களையும், பெண்களையும் சேர்த்து அவர்களுக்கு வழங்குகிறான். தான் நாடியோரை மலடாக ஆக்ககிறான். அவன் அறிந்தவன். ஆற்றலுடையவன். (அல்குர்ஆன் 42: 49,50)

இரு வகையான செயற்கை கருத்தரிப்பு முறைகளாவன:

**Intrauterine insemination (IUI)** – செயற்கை விந்தூட்டல் முறை
இது ஒரு செயற்கை கருத்தரிப்பு முறையாகும். இம் முறையில் ஆணிடமிருந்து பெறப்பட்ட விந்து மாதிரி ஆய்வு கூட செயல் முறையின் மூலம் பரிசோதிக்கப்பட்டு மிக வேகமாக நகரும் விந்து ஏனைய குறைவாக நகரக்கூடிய விந்துக்களிலிருந்து பிரித்தெடுக்கப்பட்டு நேரடியாக கருப்பை வாய் அல்லது கருப்பை அல்லது பலோபியன் குழாய் ஆகிய ஏதேனும் ஒன்றினுள் பெண்ணின் மாதாவிடாய் சக்கரத்தின் முட்டை வெளியாகும் காலப்பகுதியைக் கணித்து கருவியின் உதவியுடன் உட்செலுத்தப்படும்.

இம் முறையின் மூலம் விந்து எந்தவித தடங்களும் இல்லாமல் குறைவான தூரத்தில் பயணம் செய்யக்கூடியதாக இருக்கும். இயற்கையான முறையை விட இம் முறையில் கருத்தரிப்பு சாத்தியங்கள் அதிகமாகக் காணப்படும். கருப்பையில் விந்து வைக்கப்படுவதே இம் முறையின் விஷேட நிகழ்வாகும்.
இம் முறையினால் ஏற்படும் கர்ப விகிதமானது இதற்குப் பயன்படுத்தப்படும் அதி உயர் தொழிநுட்பத்தின் அளவுக்கு இல்லாவிடினும் இம்முறையானது மலட்டுத் தன்மை உடையவர்களுக்கு (ஆணாக இருந்தாலும், பெண்ணாக இருந்தாலும்) ஒரு திறவுகோளாக அமைந்திருக்கின்றது.

**In Vitro Fertilization (IVF) – Test tube pregnancy – பரிசோதனைக்குழாய் குழந்தை.**
இதுவும் ஒரு செயற்கை கருத்தரிப்பு முறையாகும். இச் செயல்முறையின் மூலம் செயற்கையான கருக்கட்டல் மனித உடலுக்கு வெளியே ஆய்வுகூடத்தின் சோதனைக் குழாயில் நடைபெறுகின்றது. இதனாலேயே இம் முறையில் பிறக்கும் குழந்தை **Test tube Baby** என அழைக்கப்படுகின்றது.

இம்முறை பலோபியன் குழாய் சேதமடைந்தவர்களுக்கும், முன்னர் குறிப்பிட்ட IUI முறையின் கீழ் சிகிச்சை பெற்று சிகிச்சை பயனளிக்காதவர்களக்கும், ஏனைய சில காரணங்களால் கருத்தரிப்பு அடையாதவர்களுக்கும் உகந்தது. வைத்தியர்களின் ஆலோசனை இம்முறையில் சிகிச்சை பெறும் பெண்கள் 38 வயதுக்கு உட்பட்டவர்களாக இருப்பதே சிறந்தது. இது மிகவும் சிக்கலான செயல்முறையாகவும், அதிகமான செலவையும்,

நேரத்தையும் கொண்டதாகவும் இருக்கின்றது. இச் சிகிச்சை முறை வெற்றி அளிக்கக்கூடிய விகிதம் 15-30% ஆகும்.

இச் சிகிச்சை முறைக்கு தம்பதியினர் ஏற்றவர்கள் என முடிவு செய்யப்பட்ட பின் விந்து பகுப்பாய்வு (semen analysis) விந்து கலாச்சாரம் **(semen culture),** ஹார்மோன் சார் மதிப்பீடு, மாதவிடாய் சுழற்சி மதிப்பீடு ஆகிய சோதனைகள் மேற்கொள்ளப்படும். பெண்ணின் முட்டைகளின் வளர்ச்சியை ஊக்குவிக்க மருந்துகள் கொடுக்கப்படும். இதனால் பல தகுந்த வளர்ச்சியடைந்த முட்டைகள் உருவாவதற்கான சாத்தியக்கூறுகள் ஏற்படுகின்றன.

இவற்றில் ஒன்று முதலில் குறிப்பிட்டது போல் பிரித்தெடுக்கப்பட்ட வேகமாக நகரக்கூடிய விந்துடன் சோதனைக்குழாயில் கருக்கட்டச் செய்யப்பட்டு வெற்றிகரமாக கருவறையில் உள்வைக்கப்படும். கருவின் வளர;ச்சியின் முன்னேற்றம் பெண்ணின் இரத்தம் மற்றும் சிறுநீர் பரிசோதனை அல்லது செவி உணரா ஒலி **(ultrasound)** மூலம் கணிக்கப்படுகின்றது.

செயற்கை முறையினால் கூட கருத்தரிக்கும் வாய்ப்பு இல்லாதவர்கள்.
சில தம்பதியினருக்கிடையே சில நிரந்தரமான குறைபாடுகள் காணப்படலாம். அதாவது கணவனின் விந்தின் செயற்பாடு போதாமை, ஹார்மோன் சமனிலையின்மை, இன்னும் ஏராளாமான கெட்ட பழக்க வழக்கங்களின் மூலம் ஏற்படும் குறைபாடுகள், மனைவியின் முட்டை தகுந்த வளர்ச்சியடைந்து காணப்படாமை, ஹார்மோன் சமநிலையின்மை, பாதிக்கப்பட்ட சூலகங்கள், பலோபியன் குழாய்களில் ஏற்படும் பாதிப்பு, Endometriosis கோளாறுகள் (கருவறைச் சுவரின் கலங்கள் வேறு இடத்தில் வளர;ச்சியடைதல்), கருப்பையில் ஏற்படும் கட்டிகள் **(Polycystic ovary syndrome)** போன்ற காரணங்களால் ஒரு பெண் செயற்கை முறைகளாலும் கர்ப்பம் தரிக்கும் வாய்ப்புக்களை இழக்கும் சாத்தியக்கூறுகள் அதிகம்.

ஆகையால் தற்போதைய நவீன தொழிநுட்ப வளர்ச்சியில் தம்பதியினருக்கு வேறு ஆணிடமிருந்து விந்தையோ அல்லது வேறு பெண்ணிடமிருந்து முட்டையையோ நன்கொடையாக பெறக்கூடிய சாத்தியங்கள் காணப்படுகின்றன. இதற்காக விந்து மற்றும் முட்டை வங்கி **(Sperm and egg Bank)** உலகில் காணப்படுகின்றது.

அது மட்டுமில்லாது கருப்பையில் குழந்தையை சுமக்க முடியாத நோய்க் காரணிகளைக் கொண்டவர்களுக்கு வாடகை தாய்மார்கள் **(Surrogate Mother)** அதாவது பிற தம்பதியினருடைய அல்லது பிற ஆணினது குழந்தையை செயற்கை கருத்தரிப்பு முறையான Test tube முறை மூலம் கருக்கட்டப்பட்ட நுகத்தை தன் கருப்பையில் சுமந்து பிரசவித்துக் கொடுக்கும் பெண்ணே வாடகைத் தாய் என்று அழைக்கப்படுகிறாள்.

விந்து அல்லது முட்டை நன்கொடை, வாடகைத் தாய், இஸ்லாத்தில் கூடுமா?

மேலுள்ள தகவல்களின் மூலம் செயற்கை கருத்தரிப்பு முறைகளுக்கு தம்பதியினருடைய அல்லாத வேறு நபர்களுடைய விந்து அல்லது முட்டையும் கருத்தரிப்புக்கு பயன்படுத்தப்படுவது தெளிவாகின்றது.
மேலுள்ள அல்குர்ஆன் வசனத்தில் உங்கள் விளைநிலங்களுக்கு விரும்பியவாறு செல்லுங்கள்' என்பதிலிருந்து ஒரு குழந்தையை ஈன்றெடுப்பதற்கு அந்த தம்பதியினரின் ஈடுபாட்டைத் தவிர வேறு எந்த நபரின் பங்களிப்பிற்கும் அனுமதி இல்லை. அத் தம்பதியினருக்கு வேறு ஒருவரின் முட்டையையோ அல்லது விந்தையோ அல்லது கருவறையையோ பயன்படுத்த அனுமதி இல்லை.

விளைநிலம் என்பது விளைச்சலைத் தரக்கூடியது. எனவேதான் எல்லாம் வல்ல அல்லாஹ் மனைவியரை 'விளைநிலம்' என உவமையாக்கி மனைவியிடம் மட்டுமே விளைச்சலை விரும்பியவாறு பெற்றுக் கொள்ளுமாறு ஏவுகின்றான்.

ஒருவருக்கு இஸ்லாம் அனுமதித்த ஒன்றுக்கு மேற்பட்ட மனைவியர் இருந்தால் கருத்தரிப்பிற்கு சாத்தியம் இல்லாத, கருப்பையில் குழந்தையை சுமக்க முடியாத மனைவிக்காக மற்ற மனைவியின் கருவறையில் சோதனைக் குழாயில் கருக்கட்டப்பட்ட நுகத்தை உட்பதிப்பதற்கு மார்க்கத்தில் அனுமதி உண்டு. காரணம் அந்த கணவரைப் பொருத்தவரை இரு மனைவியரும் அவரது விளைநிலங்களாகும்.

இதிலிருந்து தம்பதியினர் செயற்கை முறையில் குழந்தையை நாடினால் அவர்களின் விந்து, முட்டை அல்லாத வேறு நபர்களினது விந்து அல்லது முட்டையை பாவிப்பது கூடாது என்றும், தம்முடைய விந்து, முட்டை ஆகியவற்றால் உருவான கருவாக இருந்தாலும் வேறு ஒரு கருப்பையில் பதிப்பது அதாவது வாடகைத் தாய் கூடாது எனவும் தெளிவாகின்றது. தம்முடைய குழந்தையின் உருவாக்கத்தை எதிர்பார்த்து தம்பதியினர் அல்லாத மூன்றாவது நபரின் பங்களிப்பிற்கு இஸ்லாத்தில் அனுமதி இல்லை என்பதை மேற்குறிப்பிட்ட அல்குர்ஆன் வசனத்தின் மூலம் அல்லாஹ் மனிதர்களிடம் ஏற்படும் பல சிக்கல்களுக்கு தீர்வு அளிக்கின்றான்.

ஆக்கம் : பாத்திமா ஷஹானா

நன்றி மறவாமை

மனமே மனிதமே - 1



" கலங்காதிரு மனமே !" என்ற தொடர் பதிவுகள் கடந்த காலங்களில் பதிவு செய்திருந்தேன். அதனைத் தொடர்ந்து இன்று முதல் "மனமே மனிதமே " என்ற தொடர் பதிவு இன்ஷா அல்லாஹ் .

" எதுவுமே சரியாக நடப்பதில்லை அல்லது ''நிலைமை மோசமாகிக் கொண்டிருக்கிறது " என்று புலம்ப நேர்ந்த சூழல்களை நாம் ஒவ்வொருவரும் நம் வாழ்வில் கண்டிப்பாக சந்தித்திருப்போம் .
என் குடும்பத்திலும் அப்படிப்பட்ட ஒரு சூழல் ஏற்பட்டபோது , சாலையோரம் கடந்த ஒரு சாதாரண கூழாங்களை ஒன்றே நான் கண்டெடுத்தேன். அதை என் பாக்கெட்டில் போட்டுக்கொண்டு, இக்கல்லை தொடும்போதெல்லாம், நன்றி பாராட்டக் கூடிய ஏதாவது விஷயத்தை நினைத்துக் கொள்ளப் போகிறேன் என்று எனக்கு நானே கூறிக்கொண்டேன்.

அதனால் ஒவ்வொரு நாள் காலையிலும் எழுந்தவுடன் என் ஒப்பனை மேஜை மீது இருக்கும் அக்கல்லை எடுத்து என் பாக்கெட்டில் போட்டுக்கொண்டு நான் நன்றி உணர்வுடன் இருக்கும் விஷயங்களை எல்லாம் நினைவு கூறுவேன் . அதேபோல் இரவிலும் என் பாக்கெட்டை காலி செய்யும்போது மீண்டும் அதையே செய்தேன் .
இதுதொடர்பாக எனக்கு ஓர் அற்புதமான அனுபவம் ஏற்பட்டது ஒரு சமயம் நான் வைத்திருந்த அக்கல் கீழே விழுந்து விட்டது . அப்போது என்னுடன் இருந்த தென்னாப்பிரிக்க நண்பர் ஒருவர்,
"அது என்ன ? " என்று கேட்டார்.

நான் அவருக்கு அக்கல்லைப் பற்றி விவரித்தேன். அவர் அதை **"நன்றி உணர்வு கல்"** என்று அழைத்தார் பின் அவர் தனது சொந்த நாடான தென் ஆப்பிரிக்காவுக்கு சென்றுவிட்டார் .
இரண்டு வாரங்கள் கழித்து அவரிடமிருந்து எனக்கு ஒரு மின்னஞ்சல் வந்தது அதில் அவர் " என் மகன் ஒரு அபூர்வமான வியாதியால் கஷ்டப்பட்டு கொண்டிருக்கிறான் அது ஒருவிதமான ஈரல் அலர்ஜி நோய். எனக்காக 3 நன்றியுணர்வு கற்களை அனுப்ப முடியுமா ? என்று கேட்டு இருந்தார் .

அது நான் தெருவோரம் கண்டெடுத்த கல் அதனால் அவருக்கு , "சரி அனுப்புகிறேன் "என்று பதிலளித்தேன் .
அக்கற்கள் தனித்துவம் வாய்ந்தவையாக இருக்கவேண்டும் என்ற நினைவோடு அருகில் இருந்த ஒரு நீரோடைக்குச் சென்று, சில நல்ல கற்களை பொறுக்கி எடுத்து அவருக்கு அனுப்பி வைத்தேன் .
நான்கைந்து மாதங்கள் கழித்து அவரிடமிருந்து பதில் வந்தது அதில் அவர் , "என் மகன் இப்பொழுது குணம் ஆகிவிட்டான். நன்றாக உள்ளான். உங்களுக்கு இன்னொரு விஷயத்தையும் குறிப்பிட்டாக வேண்டும் ஒரு நன்றியுணர்வு கல் தலா 10 டாலர் வீதம் 1000 கற்களை நாங்கள் பொறுக்கி எடுத்து விபரம் கூறி விற்று அந்த பணத்தை அறங் காரியங்களுக்காக நாங்கள் கொடுத்தோம் . உங்களுக்கு எங்கள் நன்றி உரித்தாகுக "என்று எழுதியிருந்தார் .
ஆக நன்றி உணர்தல் மனப்பான்மையைக் கொண்டு இருத்தல் மிகவும் முக்கியமானது என்பதாக
**லீ புரோவர் , நூலாசிரியர் - ரோன்டா பைர்ன் எழுதிய "The Secret"**

5431. முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் தம் பாதங்கள் புடைக்கும் அளவுக்கு நின்று தொழுவார்கள். அவர்களிடம், "இந்த அளவுக்கு நீங்கள் சிரமம் எடுத்துக்கொள்ள வேண்டுமா? தங்களின் முந்தைய மற்றும் பிந்தைய தவறுகளை அல்லாஹ் மன்னித்துவிட்டானே?" என்று கேட்கப்பட்டது.

அதற்கு அவர்கள், "நான் நன்றியுள்ள அடியானாக இருக்கவேண்டாமா?" என்று கேட்டார்கள்.
நபி ஈஸா (அலை) அவர்கள் ,

ஒரு செல்வந்தனை கண்டு இறைவனின் அருட்கொடையை அவனுக்கு உணர்த்த விரும்பி அவனை ஒரு ஏழையிடம் அழைத்து வந்து அவனை காண்பித்து கூறினார்கள். "இவனைப்போன்று அல்லாஹ் உன்னை ஏழையாக்காமல் விட்டானே அதற்கு நீ இறைவனுக்கு நன்றிசெலுத்து " என்றார்கள்.

பிறகு அந்த ஏழையை நோயாளியிடம்
அழைத்து சென்று , " நீ ஏழையாகத்தான்
இருக்கின்றாய் நோயாளியாக இல்லை. இறைவன் இவரைப்போன்று
உன்னையும் ஏழையாகவும் , நோயாளியாகவும் ஆக்கியிருந்தால்,
உன் நிலை என்னவாகும் எனவே அதை நினைத்து அந்த ஏழ்மைக்கு நன்றிசெய் "என்றார்கள்.

பிறகு நோயாளியும்,ஏழையுமான அவரைஒரு இறைமறுப்பாளரிடம் அழைத்துச்
சென்று "இவரைப் போன்று அல்லாஹ் உன்னை காபிராகவும்,
நோயாளியாகவும் ,ஏழையாகவும்
ஆக்கியிருந்தால் உன் நிலை
என்னவாகும். எனவே இதை
நினைத்துப்பார்த்து
அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்து "என்றார்கள்.
ர.ரா

கிடைத்தற்கு நன்றி செய் 02-01-2021

மனமே மனிதமே 2



உங்கள் வாழ்க்கையை மாற்றியமைக்க துவங்க இக்கணத்தில் எதைச் செய்யலாம் ?

முதலில் செய்ய வேண்டியது நீங்கள் எதற்கெல்லாம் நன்றி செலுத்தக் கூடியவராக இருக்கிறீர்கள் என்ற ஒரு பட்டியலைத் தயாரிப்பதுதான். அது உங்களுடைய ஆற்றலை இடம்பெறச் செய்து உங்களது சிந்தனையில் மாற்றத்தை தூண்டும் .

இப்பயிற்சிக்கு முன்பு நீங்கள் உங்களது புகார்கள் பற்றி , பிரச்சினைகள் பற்றி, உங்களிடம் இல்லாத விஷயங்கள் பற்றி கவனம் செலுத்தி இருக்கக்கூடும். இருந்தாலும் ...

இப்பயிற்சிக்கு பிறகு நீங்கள் முற்றிலும் வேறான திசையில் செல்வீர்கள் . உங்களை மகிழ்ச்சியான மனநிலையில் வைத்திருக்கும் அனைத்து விஷயங்கள் குறித்தும் நன்றியுணர்வை தெரிவிக்க தூங்குங்கள்.

" நன்றியுணர்தல் உங்களுடைய முழு மனத்தையும் பிரபஞ்சத்தின் படைப்பாற்றலுடன் ஐக்கியப்படுத்த கூடியது என்ற கருத்து , உங்களைப் பொறுத்தவரை புதிதாக இருக்குமெனில் அது குறித்து நன்றாக சிந்தியுங்கள் .அது உண்மையென்பது உங்களுக்குப் புரிந்துவிடும் "

உங்களைச் சுற்றிலும் உற்றுநோக்கி நான் விரும்பும் கார் என்னிடம் இல்லையே... நான் ஆசைப்படும் வீடு எனக்கு கிடைக்கவில்லையே... நான் ஏங்கிய மனைவி எனக்குக் கிட்டவில்லையே...நான் விரும்பிய ஆரோக்கியம் என்னிடம் இல்லையே... என்று கூறிக் கொண்டு இருக்கிறீர்களா ?

போதும்......போதும்...நிறுத்துங்கள் ! அவையெல்லாம் உங்களிடம் இல்லாதவை . அதில் கவனம் செலுத்தாமல் ஏற்கனவே உங்களிடம் இருக்கும் நன்றி பாராட்டத்தக்க விஷயங்களில் கவனம் செலுத்துங்கள். அது இதைப் படித்துக் கொண்டிருக்கும் உங்களது கண்களாக இருக்கலாம், உங்களிடம் இருக்கும் நேர்த்தியான உடைகளாக

இருக்கலாம் . வாகனங்களாக இருக்கலாம்.நெட்டோடு தொடர்பு கொண்டிருக்கும் உங்கள் செல்போனாகக் கூட இருக்கலாம் .

உங்களிடம் ஏற்கனவே இருப்பவை குறித்து நன்றியுணர்வு உங்களிடம் தோன்றும் போது நீங்கள் விரும்பும் உங்களை விரைவாக வந்தடையும் .

' தங்கள் வாழ்க்கையில் மற்ற எல்லாவற்றிலும் சரியான ஒழுங்கு கொண்டிருப்பவர்கள் கூட வறுமையில் உழலக் காரணம் அவர்களிடம் நன்றியுணர்தல் இல்லாதிருப்பதுதான் .

- வாலஸ் வாட்டில்ஸ் (1860 - 1911)

وَاِذْ تَاَذَّنَ رَبُّكُمْ لَٮِٕنْ شَكَرْتُمْ لَاَزِيْدَنَّـكُمْ وَلَٮِٕنْ كَفَرْتُمْ اِنَّ عَذَابِىْ لَشَدِيْدٌ

அன்றி, உங்கள் இறைவன் (உங்களை நோக்கி, "இதற்காக) நீங்கள் (எனக்கு) நன்றி செலுத்தினால் (நான் என்னுடைய அருளைப் பின்னும்) உங்களுக்கு அதிகப்படுத்துவேன். நீங்கள் (என்னுடைய அருளுக்கு நன்றி செலுத்தாது) மாறுசெய்தால், நிச்சயமாக என்னுடைய வேதனை மிகக் கொடியதாக இருக்கும் என்று அறிக்கையிட்டதையும் (நபியே!) நீங்கள் (அவர்களுக்கு) ஞாபகமூட்டுங்கள்.

(அல்குர்ஆன் : 14:7)

ரஹ்மத் ராஜகுமாரன்

கொடுத்ததற்கே நன்றி சொல்ல முடியவில்லை

மனமே மனிதமே - 3

நீ கொடுத்ததற்கே நன்றி சொல்ல முடியவில்லை இன்னும் இனி அடுத்தடுத்து கேட்பதற்கு அஞ்சுதே என் உள்ளம்..

யாஅல்லாஹ்... யா அல்லாஹ்... சுபஹானல்லாஹ் .
பூமி, வான மண்டலங்கள் பொருத்தமாக படைத்தாய்
அதை புரிந்துகொள்ள புலன்களையும் திருத்தமாக அமைத்தாய்
மேன்மையாக்கி மனிதனுக்கே வான்புகழை குவித்தாய்...
வரம்பு மீறிடாமல் காத்திடவே வேதத்தையும் கொடுத்தாய்.
யாஅல்லாஹ்... யா அல்லாஹ்... சுபஹானல்லாஹ் .
பிறக்கும் போது தீன் குலத்தில் பிறக்கும் பேறு கொடுத்தாய் .
அதில் பிறந்து வளரும் போது பாதை தவறிடாமல் காத்தாய்
மறக்கும் மனித இயல்பில் உனை மறந்திடாமல் வைத்தாய்...
இனி இறக்கும்போதும் இந்த பெயரும் நிலைக்கும் வாழ்வு தந்தாய் .
யாஅல்லாஹ்... யா அல்லாஹ்... சுபஹானல்லாஹ்
தூய்மையாக்கி வைப்பதற்கே தொழுகை, நோன்பு விதித்தாய்..
உன்னைத் துதித்துப் போற்றி மகிழ்வதற்கே நேசத்தையும் பதித்தாய் ...
ஆய்ந்து உணர அகத்தில் நீயும் அறிவுக்கண்ணை திறந்தாய்..
தவறி அறியாமல் செய்துவிடும் பிழைகளையும் பொறுத்தாய்.
யாஅல்லாஹ்... யா அல்லாஹ்... சுபஹானல்லாஹ்

அன்பு, பாசம், நட்பு,கருணை,அழகு குணங்கள் அமைத்தாய்
உன் அஸ்மாவுல் உஸ்னாவில் மனிதனுக்கும் பகிர்ந்தாய் .
இன்பம் துன்பம் இரண்டிலும் உன் ரஹ்மத்தையே அமைத்தாய்
அந்த உண்மை தன்னை உணர வைத்து உனது பக்கம் அழைத்தாய்
யாஅல்லாஹ்... யா அல்லாஹ்... சுபஹானல்லாஹ்
எனது தேவை என்னவென்று படைத்த உனக்கு தெரியும் .
என் அவசரத்தில் புலம்பி உந்தன் அருளில் என்ன குறையும் ?
நாடியதை செய்து காட்டும் நாயகனே அருள்வாய் ...
நபிநாதர் வழியில் எனை நடத்தி கருணை மழை பொழிவாய்...
யாஅல்லாஹ்... யா அல்லாஹ்... சுபஹானல்லாஹ்

வியாதியிலிருந்து விடுதலை .

மனமே மனிதமே - 4



உங்களுக்கு ஒரு நோய் இருந்து , நீங்கள் அதில் கவனம் செலுத்தி ,அதைப் பற்றி பிறரிடம் பேசிக்கொண்டு இருப்பதன் மூலம் மேலும் வியாதியின் அணுக்களை அதிகமாக உற்பத்தி செய்கிறீர்கள் என்பதை உணருங்கள் .
நீங்கள் முழுமையான ஆரோக்கியமான உடலில் வசிப்பதாக கற்பனையாவது செய்து கொள்ளுங்கள்.வியாதிகளை மருத்துவம் கவனித்துக் கொள்ளட்டும் .

ஏதாவது ஒரு வியாதி வந்துவிட்டால் , மக்கள் பெரும்பாலும் செய்கிற காரியம் அதைப் பற்றியே எப்போதும் பேசிக் கொண்டிருப்பதுதான் அதற்கு காரணம் அதைப்பற்றியே அவர்கள் எந்நேரமும் சதா சிந்தித்துக் கொண்டிருக்கின்றனர் !
அதனால் அவர்கள் அந்த வியாதிக்கு வார்த்தைக்கு வார்த்தை நோய்க்கு வடிவம் கொடுக்கின்றனர். நீங்கள் சிறிது நலமற்று இருந்தால் அதை பற்றி பேசவே பேசாதீர்கள் . அது உங்களுக்கு இன்னும் அதிகமாக வர வேண்டும் என்றால் மட்டுமே பேசுங்கள். அட்லீஸ் அதைப் பற்றிய பேச்சை குறைத்து வாயை பொத்துங்கள்.
வியாதிக்கு காரணம் உங்களது எண்ணங்கள்தான் என்பதை உணர்ந்து கொண்டு, 'நான் நன்றாக இருப்பதாக உணருகிறேன் , நான் மகிழ்ச்சியாக இருப்பதாக கருதுகிறேன் ' என்று எவ்வளவு தடவை முடியுமோ அவ்வளவு தடவை கூறி கொள்ளுங்கள் மேலும் அதை மனதார உணருங்கள்.

நாம் எல்லோரும் **"சுயப் பிணிநீக்கம் "** என்னும் அடிப்படை திட்டத்தோடுதான் இறைவன் நம்மை படைத்துள்ளான் .
உங்களுக்கு ஒரு காயம் ஏற்பட்டால் அது தானாகவே சரியாகி விடுகிறது ! உங்களுக்கு ஒரு நுண்ணுயிர் தாக்குதல் ஏற்படும் போது , உடலின் நோய் தடுப்பு அமைப்பு **சிஸ்டம் ( immunity )** அந்த நுண்ணுயிரியோடு இரவு பகலாக போராடி அழித்து அந்த நோயை குணமாக்குகிறது .
நோய் தடுப்பு அமைப்பின் நோக்கமே நோயை குணமாக்குதல்தான். இந்த புனித அமைப்பிற்கு எதிரான எண்ணத்தை , உங்களுக்கு எதிராக நீங்களே உருவாக்காதீர்கள் .
சந்தோஷமான எண்ணங்கள் மகிழ்ச்சியான உயிரிவேதியலுக்கு இட்டுச்செல்லும் . உவகை பொங்கும் ஆரோக்கியம் கொப்பளிக்கும் . பூரண

சுக உடலுக்கு அது வழிவகுக்கும் .
எதிர்மறை எண்ணங்களும் , மன இறுக்கமும் நமது உடலில் மிக மோசமான சீர்கேடு அடைய வைப்பதாகவும் , நமது மூளையின் இயக்கத்தை அது பாதிப்பதாகவும் மருத்துவ விஞ்ஞானம் கண்டு பிடித்துள்ளது .
ஏனெனில் நமது நல்ல எண்ணங்கள் **( +ve Thinking )** தொடர்ந்து நமது உடலை மறு தொகுப்புச் செய்து கொண்டே இருக்கின்றன! தொடர்ந்து மறுசீரமைப்பில் ஈடுபட்டுள்ளன. மறு உருவாக்கத்திற்காக அவை தொடர்ந்து போராடுகின்றன.
உங்களின் எதிர்மறை எண்ணங்கள் அந்த புனிதமான மறுசீரமைப்பு பணிக்கு இடையூறாகிறது.நீங்களே உங்களுக்கு இடையூறாக இருக்காதீர்கள் .
அறிவியல் நிரூபித்துள்ளபடி ஒரு சில வருடங்களுக்குள் நமது மொத்த உடல் முற்றிலும் மாற்றி அமைக்கப்படுகிறது என்றால் சீர்கேடும் வியாதியும் எப்படி தொடர்ந்து வருடக்கணக்காக நம்முடைய உடலில் வாசம் புரிய முடியும் ? நமது எண்ணத்தாலும் நோயை கண்டு கொண்டு அதன் மீது நாம் காட்டும் அக்கறையாலும் நமது உடலில் குணம் பெறுகிறது
وَفِىْۤ اَنْفُسِكُمْ‌ اَفَلَا تُبْصِرُوْنَ
உங்களுக்கு உள்ளாகவும் (பல அத்தாட்சிகள் இருக்கின்றன. அவைகளை) நீங்கள் ஆழ்ந்து கவனித்துப் பார்க்க வேண்டாமா?
(அல்குர்ஆன் : 51:21)

ஆரோக்கியமாக இருப்பதாகவே எண்ணிக் கொண்டு தினமும் ஆசனமிட்டோ, உட்கார்ந்த நிலையிலோ "ஸுப்புஹுன் குத்தூஸுன் ரப்பில் மலாயிகத்தி வரூஹ் " என்ற இறை நாமத்தை ....
'ஸுப்புஹுன் ' ( சற்று முகத்தை உயர்த்தி )
'குத்தூஸுன் ' ( சற்று முகத்தை தாழ்த்தி) 'ரப்பில் ' ( முகத்தை வலது புஜத்தை நோக்கி)
'மலாயிகத்தி' (முகத்தை இடது புஜத்தை நோக்கி)
'வரூஹ்' (முகத்தை நெஞ்சினுள் கல்பை நோக்கி )
இருபது , முப்பது தடவை ஓதிக் கொள்ளுங்கள் .இரு உள்ளங்கையையும் சேர்த்து வைத்து அதில் ஊதி உடம்பு பூரா தேய்த்து விடுங்கள் .
வியாதியிலிருந்து விடுதலையாகி , ஆரோக்கியம் உங்களை ஆரத் தழுவிக் கொள்ளும் என்பதாக குனங்குடி மஸ்தான் சாகிப் வலியுல்லாஹ் அவர்களின் தம்பி மகன் எங்களூர் மேலப்பாளையத்தைச் சேர்ந்த குனங்குடி தாசன் அவர்கள் சொல்லிக் கொடுத்தார்கள் .

ரஹ்மத் ராஜகுமாரன்

எண்ணம் போல் வாழ்வு

மனமே மனிதமே - 5



நம் வாழ்க்கையை தீர்மானிப்பது நம் செயல்களை விட நம் எண்ணங்கள்தான்.

ஓர் அறிஞன் சொன்னான்:

“எண்ணங்களைப் பற்றி கவனமாக இருங்கள்.அவைகள் வார்த்தைகளாக மாறுகின்றன !

வார்த்தைகளில் கவனமாக இருங்கள். அவைதான் செயல்களாக மாறுகின்றன !

செயல்களில் கவனமாக இருங்கள் அவை தான் பழக்கமாக மாறுகின்றன !

பழக்கங்களில் கவனமாக இருங்கள். அவைதான் ஒழுக்கமாக மாறுகின்றன !

ஒழுக்கத்தில் கவனமாக இருங்கள். அவைதான் உங்கள் வாழ்க்கையை உருவாக்குகின்றன !

ஆம்! ஷைத்தான் வழி தவறியதும் அவனுடைய கீழ்த்தனமான எண்ணத்தால் தானே !

ஒருவனின் உயர்வும் , தாழ்வும் அவனின் எண்ணத்தால்தான் அமைகிறது என்று இஸ்லாம் உரக்கச் சொல்கிறது.

அல்லாஹ் கூறுகின்றான்:

“ஒவ்வொருவரும் தத்தமது எண்ணங்களின்{வழிமுறைப்}படி செயலாற்றுகின்றனர்.” {குர்ஆன்:17:84}

இந்த வசனத்தை படிக்கும் போதுதான் உளவியல் தத்துவத்தில் நான் படித்தது என் ஞாபகத்திற்கு வருகிறது .

தனக்கு ஏற்ற கச்சிதமான வாழ்க்கை துணையை கவர்ந்திழுக்க விரும்பிய ஒரு பெண்ணின் கதை இது.

அவள் எல்லா விஷயங்களையும்

சரியாகவே செய்தாள். முகம் தெரியாத தனக்கு வரப் போகிறவர் எப்படி இருக்க வேண்டும் என்பது குறித்து கூட அவளிடம் தெளிவு இருந்தது . வரப்போகிறவரது குணாதிசயங்களின் விபரமான பட்டியல் ஒன்றையும் அவள் தெளிவாக தயாரித்து வைத்தாள். அவரைப் பற்றி மனதில் உருவகப்படுத்தி கொள்ளவும் செய்தாள் .

இவையெல்லாம் இருந்தும் மாப்பிள்ளை மட்டும் கிடைக்கவில்லை . ஏன் ?

ஒரு நாள் அவள் வீடு திரும்பி தனது காரை நிறுத்தி விட்டு அதிலிருந்து இறங்கிய போது, அவளுக்கு ஒரு பொறி தட்டியது. தன்னுடைய செயல்களுக்கும் விருப்பங்களுக்கும் இடையே முரண்பாடு நிலவுவதை அவள் கவனித்தாள் .

அவளது வீட்டில் 2 கார்களை நிறுத்த இடமிருந்தும் அவள் தனது காரை நட்ட நடுவில் நிறுத்தி இருந்தாள். அப்படியானால் 'அவர் ' தனது காரை எங்கு நிறுத்துவார் ? தான் கேட்டது தனக்கு கிடைக்கும் என்பதில் எனக்கு

நம்பிக்கை இல்லை என்று இந்த பிரபஞ்சத்திற்கு தெரிவிப்பது போல் அல்லவா அவளது இந்த நடவடிக்கைகள் அமைந்திருக்கின்றன. அதனால் அவள்

அவ்விடத்தை சுத்தப்படுத்தி இன்னொரு கார் நிறுத்த மறுபுறம் இடம் விட்டு தனது காரை ஓரமாக நிறுத்தினாள். அவள் மனதால் 'அவர் ' கார் நிற்பதை உருவகப்படுத்திக் கொண்டாள்.

அவள் உடனே தனது படுக்கை அறைக்கு சென்று தனது உடை அலமாரியை திறந்து பார்த்தால் அது துணி கடலாக இருந்தது . அவளுடைய எண்ணத்தின் காதல் நாயகனின் உடைகளுக்கு அங்கு இடமிருக்கவில்லை .அவள் தனது ஆடைகளில் சிலவற்றை எடுத்து விட்டு அங்கு கொஞ்சம் இடத்தை காலி செய்து வைத்தாள் .

அவள் வழக்கமாக தனது கட்டிலில் நடுவில்தான் படுப்பாள் பின் அவள் அதை மாற்றி , வரப்போகிறவருக்கு இடம் விட்டு படுக்கையில் ஓரமாகப் படுத்தாள்.

ஒரு விருந்தின் போது தான் சாப்பிடும் இடத்தில் கூட ' அவருக்காக ' இடம் விட்டிருந்தாள் .

அவ்வளவுதான் அந்த விட்டிருந்த இருக்கையில் அன்று அமர்ந்திருந்தது வேறுயாருமல்ல , அவளது கனவு நாயகன்தான் .

தனது வாழ்க்கைத் துணைவர் வந்துவிட்டது போல் நடந்து கொண்டு அதுதொடர்பான சக்திமிக்க நடவடிக்கைகளில் ஈடுபட்டவுடன் 'அவன்' அவளது வாழ்க்கையில் தோன்றினான். இன்று அவர்கள் இருவரும் மணமுடித்து சந்தோசமாக வாழ்கின்றனர் .

மதீனத்துல் முனவ்வராவில் நபிகளார் அடக்கமாகி இருக்கும் இடத்திற்கு வலது புறமாக ஒரு கபருக்கு இடம் விடப்பட்டிருக்கிறது !

அது வருங்காலத்தில் வரப்போகும் நபி ஈஸா (அலை) அவர்களுடைய மக்பூரா அமைவதற்கு ! எண்ணம் போல் வாழ்வு மட்டுமல்ல , மரணமும் கூட !

நம் வாழ்க்கையை தீர்மானிப்பது நம் செயல்களை விட நம் எண்ணங்கள்தான்.

ரஹ்மத் ராஜகுமாரன்

எதிர்ப்புக்கு வலு சேர்க்காதீர்

மனமே மனிதமே - 6



நாம் ஏராளமான விஷயங்களை எதிர்த்துப் போராடுவதில் திருப்தி அடைகிறோம். புற்று நோய் ஒழிப்பு திட்டம் , வறுமை ஒழிப்பு திட்டம் , போரை எதிர்த்து பேரணி , போதைப் பொருட்களுக்கு எதிரான சட்டம் , பயங்கரவாதத்

தடுப்புச் சட்டம் , வன்முறைக்கு எதிரான கருத்தரங்கு... இப்படி பல நாம் விரும்பாத எல்லாவற்றிற்கும் எதிராகப் போராடுவதை வழக்கமாகக் கொண்டுள்ளோம் .

இந்த போராட்டங்கள் உண்மையில் இன்னும் அதிகமாகப் போராடுவதற்கு

அது வழிவகுக்கிறது .

உண்மையில் போர் எதிர்ப்பு இயக்கங்கள் அதிகமான போரையே உருவாக்குகின்றன . போதை மருந்து எதிர்ப்பு இயக்கங்கள் அதிகமான போதை மருந்துகளை உருவாகின்றன . ஏனெனில் நாம் எதை வேண்டாம் என்று நினைக்கிறோமோ அதில்தான் கவனம் செலுத்தி அதை ஊதி பெருதாக்கி வருகிறோம் .

நீங்கள் போரை எதிர்ப்பவர் ஆக இருந்தால் , அமைதி விரும்பியாக மாறுங்கள் . பட்டினியை எதிர்ப்பாளராக இருந்தால் , அபரிமிதத்தின் ஆதரவாளராக மாறுங்கள். உங்களுக்கு ஒரு அரசியல்வாதியை பிடிக்கவில்லை எனில் அவருக்கு எதிரானவரை ஆதரியுங்கள்.

பாகிஸ்தான் பிரதமர் இம்ரான்கான்

பாக். கிரிக்கெட் வீரராக இருந்த போது இம்ரான் கானின் தாயார் புற்றுநோயால் இறந்து போனார் .

1994ம் ஆண்டு தனது தாயாரின் நினைவாக லாகூரில் புற்றுநோய் மருத்துவமனை கட்டி மக்கள் சேவையை தொடங்கினார். இதுவே பாகிஸ்தானில் கட்டப்பட்ட முதல் புற்றுநோய் மருத்துவமனையாக அமைந்தது. இந்த நடவடிக்கைதான் உண்மையில் புற்றுநோய்க்கு எதிர்ப்பு அணி .

பெரும்பாலான சமயங்களில் மக்கள் யாரை எதிர்க்கிறார்களோ அவர்கள் வெற்றி பெற்று விடுவதற்குக் காரணம் ஆதரிப்பவர் , எதிர்ப்பவர் ஆகிய எல்லோருடைய ஆற்றலும் கவனமும் அவர்கள் மீது குவிக்கப்படுவதால்தான்.

இதுகுறித்து அன்னை தெரசாவின் கருத்துக்கள் அற்புதமானவை .

அவர் ஒரு முறை, " போர் எதிர்ப்பு ஊர்வலம் எதிலும் நான் ஒருபோதும் கலந்து கொள்ள மாட்டேன் . அமைதிப் பேரணி இருந்தால் கூப்பிடுங்கள் " என்று கூறினார் .

அன்னை தெரசா இந்த ரகசியத்தை அறிந்திருந்தார் அதை புரிந்து வைத்திருந்தார். அவர் உலகிற்கு எவ்வளவு பெரிய சொத்தை அளித்துள்ளார் என்பதை பாருங்கள் .

நம் நாட்டில், பல தொழிலாளர்கள், சம்பளம் உயர்வு காரணமாகவோ அல்லது வேலை பளுவின் காரணமாகவோ, 'ஸ்டிரைக்' என்ற பெயரில் உண்ணாவிரதம் இருந்து உடலையும், நேரத்தையும் வீணாக்கி, வேலை நிறுத்தத்தில் ஈடுபடுகின்றனர்.

ஆனால், ஜப்பான் நாட்டில் உள்ள தொழிலாளர்கள், வேறு விதமான முறையில், 'ஸ்டிரைக்' செய்கின்றனர். அதாவது, வேலை நிறுத்தம் செய்யாமல், வேலைகளை முழுமை அடையா வண்ணம் தங்கள் பணிகளை தொடர்ந்து செய்கின்றனர்.

உதாரணமாக - செப்பல் நிறுவன ஊழியர்கள் என்றால், ஸ்டிரைக்கின் போது, வலது கால் காலணிகளை மட்டுமே தயாரிப்பர். இவ்வாறு செய்வதன் மூலம், நிறுவனத்தால், காலணிகளை விற்பனை செய்ய முடியாது. பேச்சுவார்த்தை நடத்தி, தொழிலாளர்களின் கோரிக்கைகள் நிறைவேற்றப்பட்டால் மட்டுமே, இடது கால் காலணிகளை தயாரிக்க துவங்குவர். அதன் பின், விற்பனைக்கு அனுப்புவர்.

இதனால், தொழிலாளர்களின் கோரிக்கைகளும் பூர்த்தியடையும்; தொழில் அதிபர்களுக்கும் எந்த பாதிப்பும் ஏற்படாது. இதுதானே உண்மையான எதிர்ப்பு அணி. இந்த செயல்பாட்டால் எதிரணி வலுபெற முடியாது .

இதுதான் நமது வாழ்க்கையில் ஏற்படும் எல்லா பிரச்சனைகளுக்கு தீர்வு காணப்படும் சூட்சம ரகசியம் .

மனதின் குணம்

மனமே மனிதமே - 7



ஒரு மனிதனுக்கு அதிசய சக்திகள் வேண்டும் என்ற ஆசை வந்தது . அவர் பல இடங்களுக்குச் சென்றார். இறுதியில் இமயமலையில் ஒரு ஆசிரமத்தை அடைந்தார். இவரது ஆசையை கேட்டதும் அங்கிருந்த குரு இவர் மனதை மாற்ற முயன்றார்.

"அதிசய சக்திகளை வைத்து நீ என்ன செய்யப் போகிறாய் ? தண்ணீர் மீது நடக்க கற்றுக் கொண்டால் அதனால் உனக்கு என்ன பயன் ? மூன்று நாட்களுக்குப் பின் படகு இருந்தால் தேவலாம் என்று தோன்றும் . அதனால் இதுபோன்ற தேவையற்ற விஷயங்களை தேடி வாழ்வை வீணடித்து கொள்ளாதே ! அதற்குப் பதிலாக நான் உனக்கு தியானம் கற்று தருகிறேன். அதைக் கற்றுக் கொள் " என்றார் .
ஆனால் அம்மனிதர் மசியவில்லை இதேபோல் அந்த குரு பல வாதங்களை முன்வைத்தார் . ஆனால் அம்மனிதர் தான் பிடித்த பிடியில் குரங்கு மாதிரி உறுதியாக நின்றார் .

வேறு வழியின்றி அந்த குருவும் , " சரி நீ இவ்வளவு உறுதியாக இருப்பதனால் நாளை காலை 4 மணிக்கு அந்த ஆற்றிலே மூழ்கி எழுந்து விட்டு நேராக என்னிடம் வா. அதிசய சக்திகள் பெறுவதற்கான ரகசியத்தை நான் உனக்குச் சொல்லுகிறேன் " என்றார் .

அந்த மனிதரும் அவ்வாறே செய்து குருவிடம் வந்தார்.
"அசதோமா சத்கமய " - (அஞ்ஞானத்தில் இருந்து என்னை உண்மைக்கு அழைத்துச் செல் " )
இந்த மந்திரத்தை சொல்லிக் கொடுத்துவிட்டு குரு சொன்னார் . "அடுத்து 40 நாட்களுக்கு இந்த மந்திரத்தை ஒவ்வொரு நாளும் மூன்று முறை உச்சரி அப்போது நீ விரும்பும் எல்லாவகையான அதிசய சக்திகளும் உனக்கு கிடைக்கும் ஆனால் ஒன்று இந்த மந்திரத்தை உச்சரிக்கும் போது குரங்குகள் பற்றி மட்டும் நினைக்காதே !
அம்மனிதருக்கு ஒரே ஆச்சரியம் இவ்வளவு எளிமையான பயிற்சியா... இருந்தாலும் அதை வெளிக்காட்டாமல் , குருவிடம் , " அவ்வளவுதானா அப்படி என்றால் நான் கிளம்பலாமா ? " என்று கேட்டார் .

அதற்கு குரு "தாராளமாக செல் ஆனால் 40 நாட்களில் மீண்டும் இங்கு வா " என்று சொல்லி அவரை அனுப்பி வைத்தார் .

இமயமலையின் அடிவாரம் வந்து கங்கை ஆற்றில் குளித்து விட்டு , தான் கற்று வந்த பயிற்சியை ஆரம்பித்தார் .
"அசதோமா..." என்று சொல்லி முடிக்கவில்லை, அதற்குள் அவர் மனதில் குரங்கு தோன்றியது. ஒவ்வொரு முறையும் குரங்கைப் பற்றி எண்ணம் வரும்போது அவர் ஆற்றில் மூழ்கி குளித்து மீண்டும் பயிற்சியை ஆரம்பித்தார்.
ஆனால் ஒவ்வொரு முறையும் மந்திரத்தை உச்சரிக்கும்போது முதல் வார்த்தை சொல்லி முடிப்பதற்குள் மனதில் குரங்குகள் வந்துவிடும் அதுவும் கூட்டம் கூட்டமாக !
இப்படியே ஒரு வாரம் தீவிர சாதனைக்கு பிறகு அவருக்கு மந்திரம் தேவைப்படவில்லை . அவர் நின்றாலும், அமர்ந்தாலும் , நடந்தாலும் , படுத்தாலும், கண் திறந்தாலும் , மூடினாலும் எப்போதும் குரங்கு மயமானது .

குரங்குகளின் தொல்லைகள் அவரால் ஒன்றும் செய்ய முடியாமல் போனது. அதற்கு மேலும் பொறுக்க முடியாமல் மீண்டும் குருவை தேடி போனார் .

அங்கு குருவை பார்த்ததும் , "எனக்கு உங்கள் அதிசய சக்தி எல்லாம் ஒன்றும் வேண்டாம் இந்த குரங்களிடம் இருந்து என்னை விடுவியுங்கள் அதுபோதும் " என்றார் ,
எதைப் பற்றி நினைக்க வேண்டாம் என்று நீங்கள் நினைக்கிறீர்களோ சரியாய் அதைத்தான் உங்கள் மனது முதலில் நினைக்கும் . அதுதான் உங்கள் மனதின் குணம் .
وَيٰۤاٰدَمُ اسْكُنْ اَنْتَ وَزَوْجُكَ الْجَـنَّةَ فَكُلَا مِنْ حَيْثُ شِئْتُمَا وَلَا تَقْرَبَا هٰذِهِ الشَّجَرَةَ فَتَكُوْنَا مِنَ الظّٰلِمِيْنَ
(பின்னர், இறைவன் ஆதமை நோக்கி) "ஆதமே! நீங்கள் உங்களுடைய மனைவியுடன் இச்சோலையில் வசித்திருங்கள். நீங்கள் இருவரும் விரும்பிய இடத்திலெல்லாம் (சென்று விரும்பியவற்றையெல்லாம்) புசியுங்கள். எனினும், இந்த மரத்தின் சமீபத்தில் கூட நீங்கள் செல்லாதீர்கள். (அவ்வாறு சென்றால்) அதனால் உங்களுக்கு நீங்களே தீங்கிழைத்துக் கொண்டவர்களாக ஆகிவிடுவீர்கள்" (என்று கூறினான்.)
(அல்குர்ஆன் : 7:19)

(எனினும்) அவ்விருவருக்கும் மறைந்திருந்த அவர்களுடைய மானத்தை அவர்களுக்கு வெளிப்படுத்துவதற்காக (இப்லீஸாகிய) ஷைத்தான் (தவறான எண்ணத்தை) அவர்கள் மனதில் ஊசலாடச் செய்து அவர்களை நோக்கி "(அதன் கனியைப் புசித்தால்) நீங்கள் இருவரும் மலக்குகளாகவோ அல்லது மரணமற்றவர்களாகவோ ஆகிவிடுவீர்கள் என்பதற்காகவேயன்றி (வேறெதற்காகவும்) உங்கள் இறைவன் இம்மரத்தை உங்களுக்குத் தடுக்கவில்லை" என்று கூறியதுடன்,
(அல்குர்ஆன் : 7:20)

"நிச்சயமாக நான் உங்களுக்கு நன்மையையே கருதுகிறேன்" என்று அவ்விருவரிடமும் சத்தியமும் செய்து,
(அல்குர்ஆன் : 7:21)

அவர்களை மயக்கி, (அம்மரத்தின் கனியைப் புசிப்பதற்காக) அதன் பக்கம் அவர்களைச் செல்ல வைத்தான். அவ்விருவரும் அம்மரத்(தின் பழத்)தைச் சுவைக்கவே, அவ்விருவரின் மர்ம உறுப்புகளும் அவர்களுக்குத் தெரிந்து, அச்சோலையின் இலையைக் கொண்டு தங்களை மூடிக்கொள்ள அவர்கள் முயற்சித்தனர். அது சமயம் இறைவன் "அம்மரத்தை விட்டும் நான் உங்களைத் தடுத்திருக்கவில்லையா? நிச்சயமாக ஷைத்தான் உங்களிருவருக்கும் பகிரங்கமான எதிரி என்றும் நான் உங்களுக்குக் கூறவில்லையா?" என்று அவ்விருவரையும் அழைத்துக் கூறினான்.
(அல்குர்ஆன் : 7:22)

(அதற்கு அவர்கள்) "எங்கள் இறைவனே! எங்களுக்கு நாங்களே தீங்கிழைத்துக் கொண்டோம். நீ எங்களை மன்னித்து எங்களுக்கு அருள் புரியாவிட்டால் நிச்சயமாக நாங்கள் நஷ்டமடைந்தவர்களாகி விடுவோம்" என்று (பிரார்த்தித்துக்) கூறினர்.
(அல்குர்ஆன் : 7:23)

சொர்க்கத்தில் கோடான கோடி கனி மரங்கள் அனுபவிக்க இருந்தும் , அந்த ஒரே ஒரு கோதுமை கனி மரத்தை மட்டும் நெருங்காதீர்கள் . இதுதான் இறைவன் அவர்களுக்கு வைத்த டுவிஸ்ட் .
சுவனத்தில் ஒரு கோதுமைகனி மரத்தையும் , அவர்களுக்குள் மனதையும் , அம்மனதை கெடுப்பதற்கு ஷைத்தானையும் படைத்தவன் அந்த இறைவன் ஒரே ஒருவன்தான் .
ர.ரா

திருக்குர்ஆனில் எழுத்துப்பிழைகளா ?

மனமே மனிதமே - 8




உகங்ளால் முயுடிமா ?

உகங்ளால் இப்பகக்த்தை பக்டிக முந்டிதால் உகங்ளை பாட்ராடியே ஆக வேடுண்ம் நூறுற்க்கு 55 சவிகித மகக்ளால் மடுட்மே இப்பட்டி பக்டிக முயுடிம்

நீகங்ள் எபப்டி இதை பக்டிகிர்றீகள் என்று உகங்ளால் நம்ப முயடிவிலைல்யா ?

ஆசச்ரிமாயன ஆறற்ல் கொடண்து மதனினின் மூளை ஒரு ஆய்ராச்யிசில் கேபிம்ட்ரிஜ் பல்லைகக்ககழம் இந்த உமைண்யை கடுண்பித்டிது உளள்து.

எத்ழுக்துகள் எந்த வசைரியில் உளள்து எபன்து முகிக்யமல்ல முதல் எத்ழுதும் கசிடையாக உள்ள எத்ழுதும் சயாறின இத்டதில் உள்ள்தா எபன்தை மடுட்ம் பாத்ர்தால் போதும் எனாதல் எறான்ல்....

மதனினின் மூளை முதல் எத்ழுதையும் கடைசி எத்ழுதையும் மடுட்மே பக்டிகும் பாகிக்யுள்ள எத்ழுதுக்கள் தானாக உள்ங்வாகபப்டும் .

திருக்குர்ஆனை ஓதும்போது நீங்கள் கவனித்திருக்கலாம் எழுத்துக்கள் இடம் மாறிய பிழைகளும் இல்லை . எழுத்துப் பிழையும் இல்லை . இருந்தாலும் திருக்குர்ஆனை தொழுகையில் மனப்பாடமாக ஓதி ஓதி அதைப் பார்த்து ஓதும்போது எழுத்துப்பிழைகள் தெரியாது என்பதை மேலே சொன்ன இந்த உதாரணத்தை யூதர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

ஆனால் யூதர்களை விட ஒரு படி மேலே போய் தவ்ஹீது வாதிகள் புனிதக்குர்ஆனில் எழுத்துப்பிழைகள் உண்டு என்று வாதம் செய்ததை இங்கே சுட்டிக் காட்டுகிறேன். (வலைதளத்தில் உள்ளதை Copy Text செய்து கொடுத்துள்ளேன் )

புனிதக்குர்ஆனில் எழுத்துப்பிழைகளா?

தூத்துக்குடி விவாதம்- பாகம் - 1

بسم الله الرحمن الرحيم

போலி தவ்ஹீத்வாதிகளின் முகத்திரை கிழித்த தூத்துக்குடி விவாதம்.

கடந்த 29,30-09-2012 சனி, ஞாயிறு ஆகிய இரு நாட்களாக தூத்துக்குடியில் புனிதக்குர்ஆனில் எழுத்துப்பிழைகளா? என்ற தலைப்பில் தூத்துக்குடி மாநகர ஜமாஅத்துல் உலமா சபை சார்பாக மவ்லவி ஏ.

முஹம்மது முஸ்தஃபா மஸ்லஹி

தலைமையில் மவ்லானா எம். ஷைகு

அப்துல்லஹ் ஜமாலி ஹழரத் அவர்கள்

உட்பட ஐவர் குழுவும், த.த.ஜ. சார்பாக

சகோ.பி.ஜே. தலைமையில் ஐவர்

குழுவும் விவாதித்தனர்.

தூத்துக்குடி மாநகர ஜ.உ. சபை

நிலைப்பாடு

புனிதக்குர்ஆன் ஓசையிலும், எழுத்து வடிவிலும் இறைவனால் முழுமையாகப்

பாதுகாக்கப்படுகிறது. அதில் எவ்வித

எழுத்துப்பிழையும் இல்லை.

எழுத்துப்பிழை உண்டு என்று கூறுவது குர்ஆனையும் அதை எழுதிய

எழுத்தர்களான ஸஹாபாக்களையும்

அவமதிப்பதோடு அது யூத

நஸாராக்களின் நச்சுக்கருத்தாகும்

என்பது தூ.டி மாநகர ஜ.உ. சபையின்

நிலைப்பாடாகும்.

போலி தவ்ஹீத்வாதி (த.த.ஜ) களின்

நிலைப்பாடு

திருக்குர்ஆன் ஓசையில் மட்டும்தான்

பிழையின்றி பாதுகாக்கப்படுகிறது.

எனவே குர்ஆனில் எழுத்துப்பிழைகள்

உண்டு என்பது போலி

தவ்ஹீத்வாதிகளின் நிலைப்பாடாகும்.

ஆணவமும், அவமானமும்

வெறும் பத்து நிமிடங்களில் குர்ஆனில்

எழுத்துப்பிழைகளுண்டு என்பதை

நிரூபித்து விடுவோம் என விவாத

ஒப்பந்தத்தில் த.த.ஜ. வினர் ஆணவம்

பேசினர். ஆனால் இரண்டு

நாட்களாகியும் பிழைகளை

நிரூபிக்கமுடியாமல் திணறி

மூக்கறுபட்டு அவமானப்பட்டுப்போயினர் த.த.ஜ. வினர்.

பி.ஜே.யின் அறியாமை – 1

இவ்விவாதத்தில் த.த.ஜ. வினர் முதல்

பிழையாக குர்ஆனிலுள்ள நுஞ்ஜி 21:88) نُنْجِي) என்பதை கூறினர். அதில் இரண்டாவது நூன் -(ن)ஐ விட்டுவிட்டு "நுஜி(
)" என

எழுதியுள்ளனர். பிழையாக விடுபட்ட

நூன் -(ن)ஐ அடையாளம் காட்டுவதற்கு ஒரு

சிறிய நூன் -(ن)ஐ போட்டுள்ளனர் என வாதித்தனர்.

தூ.டி.ஜ.உ. சபை சார்பில் அளிக்கப்பட்ட

பதில்

நுஞ்ஜி 21:88) نُنْجِي) என்பதில்

இரண்டாவது நூன் -(ن)ஐ விட்டு எழுதியது பிழையில்லை.

மாறாக ஸஹாபாக்கள் அவர்களின்

காலத்து எழுத்து முறையிலுள்ள ஒரு

விதியைப்பேணி அவ்வாறு

எழுதியுள்ளனர்.

அவ்விதிவென்னவெனில் ஒரே

இனத்தைச்சார்ந்த இரு எழுத்துக்கள்

அடுத்தடுத்து வந்து அதில் இரண்டாவது எழுத்து "சுக்கூன்" பெற்றிருந்தால் அந்த இரண்டாவது எழுத்தை விட்டு எழுதுவது ஆரம்பகாலத்து எழுத்து விதியாகும்.

ஆனால் வாசிக்கும் போது அதை

உச்சரிப்பார்கள். உதாரணமாக

குர்ஆனிலுள்ள 'யுஹ்யீ (يُحْيِي) மற்றும்

'தாவூது (دَاوُود) என்பதை எடுத்துக்கூறினோம்.

'யுஹ்யீ (يُحْيِي) என்பதில் ஒரே இனத்தைச்சார்ந்த இரண்டு "யே ((ي அடுத்தடுத்து

வந்து அதில் இரண்டாவது

"யே ((ي சுக்கூன் பெற்றிருப்பதால் அதை ஸஹாபாக்கள் விட்டு எழுதியுள்ளனர்.

குர்ஆனிலுள்ள அனைத்து யுஹ்யீ (يُحْيِي) களும் இவ்வாறுதான் எழுதப்பட்டிருக்கும்எனினும் சட்ட அடிப்படையில் விடப்பட்ட

அந்த எழுத்தை உச்சரிக்க வேண்டும்

என்பதற்காகவும், ஆரம்பகால எழுத்து

விதியை நாம் அறியாததாலும் விடப்பட்ட "யே ((ي வை அறிவிப்பதற்காக

எழுதப்பட்டிருக்கும் "யே ((يக்கு அருகில் அரபுநாட்டு குர்ஆன் பிரதியில் (￼) ஒரு சிறிய "யே ((يயும் இந்திய நாட்டு குர்ஆன் பிரதியில் யே ((يக்கு கீழ் கடாஜேரும் (￼) போடப்பட்டிருக்கும்.

அவ்வாறே 'தாவூது (دَاوُۥدُ) என்பதில் ஒரே இனத்தைச்சார்ந்த இரண்டு "வாவ் (و)

அடுத்தடுத்து வந்து அதில் இரண்டாவது "வாவ் (و) சுக்கூன் பெற்றிருப்பதால் அதை ஸஹாபாக்கள் விட்டு எழுதியுள்ளனர்.

குர்ஆனிலுள்ள அனைத்து 'தாவூது (دَاوُۥدُ)உம் இவ்வாறுதான் எழுதப்பட்டிருக்கும்.

எனினும் சட்ட அடிப்படையில் விடப்பட்ட

அந்த "வாவ் (و)வை உச்சரிக்க வேண்டுமென்பதற்காகவும், ஆரம்பகாலத்து எழுத்து விதியை நாம் அறியாததாலும்

விடப்பட்ட "வாவ் (و)வை

அறிவிப்பதற்காக எழுதப்பட்ட

"வாவ் (و)வுக்கு மேல் அரபுநாட்டு குர்ஆன் பிரதியில் ஒரு சிறிய "வாவ் (و)வும் (￼), இந்திய நாட்டு குர்ஆன் பிரதியில் உல்டா பேஷும் (￼) போடப்பட்டிருக்கும்.

அது போலத்தான் நுஞ்ஜி (نُۨجِي)

என்பதில் ஒரே இனத்தைச்சார்ந்த

இரண்டு நூன் (ن) அடுத்தடுத்து வந்து

அதில் இரண்டாவது நூன் (ن) சுக்கூன் பெற்றிருப்பதால் அதை ஸஹாபாக்கள் விட்டு எழுதியுள்ளனர். எனினும் சட்ட

அடிப்படையில் விடப்பட்ட அவ்வெழுத்தை உச்சரிக்க வேண்டுமென்பதற்காகவும், ஆரம்பகாலத்து எழுத்து விதியை நாம்

அறியாததாலும், விடப்பட்ட அந்த

நூன் (ن)ஐ அறிவிப்பதற்காக எழுதப்பட்ட நூன் (ن)க்கு மேல் அரபுநாட்டு குர்ஆன்

பிரதியிலும், இந்தியநாட்டு குர்ஆன்

பிரதியிலும் ஒரு சிறிய நூன் (ن)

போடப்பட்டிருக்கும். எனவே நுஞ்ஜி (نُۨجِي) என்பது ஆரம்பகாலத்து எழுத்து

விதிப்படி சரியாகத்தான்

எழுதப்பட்டிருக்கிறது என்று நாம்

கூறினோம். மேலும் இதை சவூதி

அரசாங்கமும் சவூதி குர்ஆன் பிரதியின் இறுதியில் கீழ்கண்டவாறு

குறிப்பிட்டுள்ளனர் என்று கூறினோம்.

والحروف الصغيرة تدل على أعيان الحروف المتروكة فى خط العثمانية مع وجوب النطق بها

(எழுதப்பட்ட எழுத்துக்கு மேலுள்ள) சிறிய எழுத்துக்கள் உஸ்மான்(ரலி)

அவர்களுடைய குர்ஆன்

மூலப்பிரதிகளில் (ஆரம்பகாலத்து சட்ட அடிப்படையில்) விடப்பட்ட எழுத்துக்களை அறிவிக்கும்.

மேலும் அந்த சிறிய எழுத்தை

( ஹஃப்ஸ்(ரஹ்) உடைய கிராஅத்தின்

பிரகாரம் ) மொழிவது அவசியமாகும்

என்று சவூதி அரசாங்கம்

அச்சடித்துள்ளது.

எனவே நுஞ்ஜி (￼ )” என்பது சரியாகத்தான் எழுத்தப்பட்டிருக்கிறது என்பதை

ஆதாரங்களுடன் நாம் நிரூபித்த

பொழுது திகைத்துப்போன பி.ஜே.

குழுவினர் மறுபடியும் அவர்களது

அறியாமையை போட்டுடைத்தனர்.

பி.ஜே.யின் அறியாமை - 2

அந்த அறியாமை என்னவெனில்

குர்ஆனில் இடம்பெற்ற நன்ஸக் (نَنْسَخْ),

நுன்ஸிஹா (نُنْسِهَا)

ஆகியவற்றில் இரண்டு நூன் (ن)

சந்தித்து அதில் இரண்டாவது நூன் (ن)

சுக்கூன் பெற்றிருந்தும் அதை

எழுதப்பட்டிருக்கிறதே? இங்கு நீங்கள்

கூறும் விதிப்பிரகாரம் இரண்டாவது

நூன் (ن) ஐ விட்டு நஸக் (نَسَخْ) என்றும்,

நுஸிஹா (نُسِهَا) என்றும் தானே

எழுதப்பட்டிருக்கவேண்டும் ? என்று

கேள்வி கேட்டு அவர்களின் அறியாமையை வெளிப்படுத்தினர்.

தா.டி.ஜ.உ. சபை சார்பில் அளிக்கப்பட்ட .பதில்

குர்ஆன் ஏழு முறைகளில்

அருளப்பட்டிருக்கிறது என்று நபி (ஸல்) அவர்கள் கூறிய ஆதாரப்- பூர்வமான ஹதீஸ் புகாரியில் பல இடங்களில் பதிவு செய்யப்பட்டிருக்கிறது.

அதனடிப்படையில் நுஞ்ஜி (نُنْجِي)

என்பதில் இரு விதமாக ஓதும் முறை

(கிராஅத்) இருக்கிறது.

ஒன்று : நுஞ்ஜி (نُنْجِي)

இரண்டு : நுஜ்ஜி (نُجِّي)

ஆனால் நன்ஸக் (نَنْسَخْ),

நுன்ஸிஹா (نُنْسِهَا) என்பதில் ஒரே ஒரு

கிராஅத் மட்டும்தான் இருக்கிறது.

எனவே நுஞ்ஜி (نُنْجِي) என்பதில் ஆரம்பகாலத்து எழுத்து முறையை பேணி

எழுதும் போது நுஞ்ஜி (نُنْجِي) என்ற

கிராஅத்திற்கும் நுஜ்ஜி (نُجِّي)

கிராஅத்திற்கும் எந்த பாதிப்பும் வராது. ஆனால் நன்ஸக் (نَنْسَخْ),

நுன்ஸிஹா (نُنْسِهَا) என்பதில்

ஆரம்பகாலத்து விதியைப் பேணி

இரண்டாவது நூன் (ن)ஐ விட்டு

எழுதினால் நஸக் (نَسَخْ) என்றும்,

நுஸிஹா (نُسِهَا) என்றும் கிராஅத்

இருப்பதாக தவறாக விளங்கிவிடக் கூடாது என்பதற்காக நிர்பந்தத்தினால் இங்கே ஆரம்பகாலத்து எழுத்து விதியை பேணாமல் குர்ஆனின் ஓதும் முறையை (கிராஅத்தை) பேணி இரண்டாவது நூன் (ن)ஐ எழுதியுள்ளனர்.

எனவே ஸஹாபாக்கள் அதிக கவனத்துடன்தான் குர்ஆனை

எழுதியுள்ளனர். எழுத்து விதியை

பேணும் இடங்களில் அவ்விதியையும்,

கிராஅத்தை பேணும்

இடங்களில் கிராஅத்தையும் பேணி மிகக்கவனமாக சரியாகத்தான்

எழுதியுள்ளனர் என்று நாம் பதில்

கூறியவுடன் த.த.ஜ.வினர் விழி பிதுங்கி பதிலில்லாமல் குர்ஆனை இழிவுபடுத்த ஆரம்பித்தனர்.

ரஹ்மத் ராஜகுமாரன்

சூரா அல் அன்ஆம்



இஸ்லாமிய இறை நம்பிக்கை என்பது 70க்கும் மேற்பட்ட கிளைகள் கொண்டது. அதில் திருக்குர்ஆன் வாசிப்பதும் ஒன்றாகும்

திருக்குர்ஆனின் சூராக்கள் எல்லாமே பாக்கியமானதாக சிறப்பானதாக இருந்தாலும், 165 வசனங்கள் கொண்ட சூரா அல்அன்ஆம் (கால்நடைகள்) என்கிற 6-வது அத்தியாயத்தை கடந்த 4 வருடங்களாக பயணங்களின் போதும் , ஓய்வின் போதும் நான் விரும்பி விரும்பி படிக்கும் சூரா இது .

இறைமறுப்பாளர்கள் குர்ஆனைப் பற்றியும் , நபியைப் பற்றியும் செய்த விமர்சனம் , அதற்கான பதில் , ஓரிறைக்கொள்கை , மறுமை, மறைவானவை பற்றிய அறிவு ,
நபி இப்ராஹீம் (அலை ) அவர்கள் மேற்கொண்ட பிரச்சாரம் , மத சகிப்புத் தன்மை உள்ளிட்ட பல கருத்துக்கள் இந்த சூராவில் நிறைந்துள்ளன

முதல் வசனத்திலேயே 'இருள்கள்' என்று பன்மையிலும் ' ஒளி ' என்று ஒருமையிலும் சொல்லி இருப்பதிலிருந்து ஆரம்பிக்கும் சிந்தனை சூரா நெடுக ஆழமான ஆய்வை அகலப்படுத்திக் கொண்டே போகிறது .
அதில் ஒரு வசனம் மெஞ்ஞான விஞ்ஞான உச்சத்தைத் தொட்டுப் பேசும்

اَوَمَنْ كَانَ مَيْتًا فَاَحْيَيْنٰهُ وَجَعَلْنَا لَهٗ نُوْرًا يَّمْشِىْ بِهٖ فِى النَّاسِ كَمَنْ مَّثَلُهٗ فِى الظُّلُمٰتِ لَـيْسَ بِخَارِجٍ مِّنْهَا كَذٰلِكَ زُيِّنَ لِلْكٰفِرِيْنَ مَا كَانُوْا يَعْمَلُوْنَ
(வீழ்ச்சி அடைந்து) மரணித்தவர்களாக இருந்தவர்களில் எவரை நாம் உயிர்ப்பித்து மனிதர்களுக்கிடையில் நடமாடுவதற்குரிய ஒளியையும் கொடுத்திருக்கின்றோமோ அவர், இருளில் சிக்கி அதிலிருந்து வெளியேற முடியாமலிருப்பவனுக்குச் சமமாவானா? இவ்வாறே நிராகரிப்பவர்களுக்கு அவர்களுடைய (தீய) செயல்கள் அழகாக்கப்பட்டு விட்டன.
(அல்குர்ஆன் : 6:122)

அது என்னமோ அந்த சூராவை படித்துக் கொண்டிருக்கும் போதே ஏதோ ஒன்றை எடுத்துச் சொல்லணும்னு சொல்லணும்னு இல்ஹாமில் அடிக்கடி தோன்றுகிறது , அது என்னான்னுதான் எனக்கு இதுவரையிலும் பிடிபடவில்லை .

இந்த சூரா அதிகமான விஞ்ஞான ஆழிய கருத்துக்களையும் , மெஞ்ஞானத்தின் பல கருவூலங்களை தன்னிடத்தில் கொண்டதாகவும் இருக்கிறது .
நீங்களும் படித்துப் பார்த்து உங்கள் கருத்துக்களை சொல்லுங்களேன்.
ஒரு சமயம் உங்கள் கருத்தில் என் தேடலின் முகவரி இருக்கலாம் என நினைக்கிறேன் .
ர.ரா

மூவகை உலகு

மனமே மனிதமே - 9



1, நமக்கு வெளியே உள்ள பௌதிகமான புற உலகு – உதாரணமாக இப்பிரபஞ்சம் முழுமையும், அதன் அனைத்து செயல்களும்.

2, நமது அக உலகு என்பது எண்ணங்கள் உலாவுகிற, எண்ணங்களால் அறியப்படுகிற நமது மனம்.
"மனம் எதை உருவாக்குகிறதோ அதை அதனால் அடைய முடியும் "
_ கிளமென்ட் ஸ்டோன் (1902 - 2002 )

3, பூரண உலகு , அக உலகான மனதை தாண்டி (மனதின் செயல் கடந்து) துலங்கும் பூரணம். ( நமக்கு மனதை கடப்பதால் பூரணம் துலக்கமாகி அறியப்படுகிறது ) . இப்பூரணம் எங்கும் எப்போதும் இருக்கிறது .
நமது அக உலகு (அதாவது மனம்) வெளியிலுள்ள புற உலக சக்திகளாலும், ( ஒளி, தட்ப வெட்பம், காந்த புலன்கள், புவி ஈர்ப்பு. அண்ட வெளி ஈர்ப்பு இன்ன பிற சக்திகளாலும்) நமக்குள் இயங்குகிற பூரண தன்மையாலும் இயக்கப்படுகிறது. இதில் பூரணத்தை 'முக்தி' என்றும் விலாயத் என்றும் அழைப்பதுண்டு
உங்களுக்கு வேண்டியது யாவும்
அக உலகில் இருந்தே வருபவை என்று சொன்னால் நீங்கள் நம்ப வேண்டும். இறைவனிடம் மனமுருகி நீங்கள் கேட்பது அக உலகில் . அது உங்கள் செயல்பாட்டிற்குள் வருவது புற உலகில் .
உதாரணமாக உணவை எடுத்துக் கொள்வோம் . நீங்கள் உண்ணும் உணவை கவனியுங்கள் .

وَجَعَلْنَا لَـكُمْ فِيْهَا مَعَايِشَ وَمَنْ لَّسْتُمْ لَهٗ بِرٰزِقِيْنَ
உங்களுக்கும், நீங்கள் உணவு கொடுத்து வளர்க்காததுமான (ஆகாயத்திலும் பூமியிலும் வசிக்கக்கூடிய) உயிரினங்களுக்கும் வாழ்க்கைக்கு வேண்டிய பொருள்களையும் நாமே அதில் அமைத்தோம். (குர்ஆன் : 15:20)

فَلْيَنْظُرِ الْاِنْسَانُ اِلٰى طَعَامِهٖۤ
மனிதன் தன்னுடைய உணவை (அது எங்கிருந்து எவ்வாறு வருகின்றது என்பதைச்) சிறிது கவனித்துப் பார்க்கவும். (அல்குர்ஆன் : 80:24)

சிந்தித்தால் அக உலகு பற்றி புரியும் .
புற உலகானது விளைவுகளாலான ஓர் உலகு . இவ்வுலகில் எல்லாமே காரண காரியங்களால் அடித்தளமிடப்பட்டுள்ளது
எது நடந்தபோதும் அதற்குரிய காரணம் என்ன ? அதனால் நடந்த காரியம் என்ன ? என்று சிந்திப்பது புற உலகுக்குரியது .
கீழ்கண்ட வசனத்தில் காரணத்தையும் காரியத்தையும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது .
"அவனே பூமியை நீங்கள் வசிக்கும் இடமாகவும், வானத்தை ஒரு முகடாகவும் அமைத்து, மேகத்திலிருந்து மழையைப் பொழிவித்து, அதனைக் கொண்டு (நீங்கள்) புசிக்கக்கூடிய கனி வர்க்கங்களையும் உங்களுக்கு

வெளியாக்குகின்றான். ஆகவே (இவைகளையெல்லாம்) நீங்கள் தெளிவாக அறிந்துகொண்டே அல்லாஹ்வுக்கு எதனையும் இணையாக்காதீர்கள். (குர்ஆன் : 2:22)

புற உலகு வெறும் எண்ணங்களின் விளைவு . அந்த எண்ணங்களைக் கொண்டே உங்கள் வாழ்வு அமைகிறது .
பூரண உலகு , அக உலகான மனதை தாண்டி (மனதின் செயல் கடந்து) துலங்கும் பூரணம்.
பூரணம் என்னும் முக்தி நிலை அடைந்தவர்களுக்கும் , பூரண நிலையில் உள்ளவர்களின் வேண்டுதலுக்காகவும் புற உலகின் காரண காரியங்களையெல்லாம் மீறி இறைவன் புறத்திலிருந்து உணவு வழங்கப்படுகிறது

" ஜகரிய்யா அப்பிள்ளை (மரியம்) இருந்த மாடத்திற்குள் நுழையும்போதெல்லாம், அவளிடத்தில் (ஏதேனும்) உணவுப் பொருள் இருப்பதைக் கண்டு "மர்யமே! இது உனக்கு ஏது? (எங்கிருந்து வந்தது?)" என்று கேட்பார். அதற்கவள் "இது அல்லாஹ் விடமிருந்துதான் (வருகின்றது.) ஏனென்றால், நிச்சயமாக அல்லாஹ் தான் விரும்பியவர்களுக்கு அளவின்றியே உணவளிக்கின்றான்" என்று கூறுவாள். (குர்ஆன் : 3:37)

" இஸ்ராயீலின் சந்ததிகளே! நிச்சயமாக நாம் உங்களை உங்களுடைய எதிரிகளிடமிருந்து காப்பாற்றி "தூர்" என்னும் மலையின் வலது பாக(ம் வந்தால் உங்களுக்குத் தவ்றாத்)த்தை(த் தருவதாக) வாக்களித்து (உணவு கிடைக்காத பாலைவனத்தில்) உங்களுக்கு "மன்னு சல்வா"வையும் இறக்கி வைத்தோம் " (குர்ஆன் : 20:80)
பூரணத்துவம் அடைந்தவர்கள் மரணித்த பின்பும் அவர்களுக்காக இறைவன் புறத்திலிருந்து உணவும் அளிக்கப்படுகிறது .

وَلَا تَحْسَبَنَّ الَّذِيْنَ قُتِلُوْا فِىْ سَبِيْلِ اللّٰهِ اَمْوَاتًا ‌ؕ بَلْ اَحْيَآءٌ عِنْدَ رَبِّهِمْ يُرْزَقُوْنَۙ
(நம்பிக்கையாளர்களே!) அல்லாஹ்வின் பாதையில் (போர் செய்து) வெட்டப்பட்டோரை இறந்துவிட்டவர்களென நீங்கள் ஒருபோதும் எண்ண வேண்டாம். அவர்கள் தம் இறைவனிடத்தில் நிச்சயமாக உயிரோடு இருக்கின்றார்கள். (அன்றி) அவர்களுக்கு உணவும் அளிக்கப்படுகிறது. (குர்ஆன் : 3:169)
உணவு மாதிரி மற்ற விஷயங்களையும் மூவகை உலகோடு ஒப்பிட்டுப் பாருங்கள் ஆச்சரியப்பட்டு போவீர்கள்
ர.ரா

நான் , பிரபஞ்சம் , கடவுள்

மனமே மனிதமே - 10



'நான்' இருக்கிறேன். நான் காணும் இந்தப் பிரபஞ்சம் இருக்கிறது. இது எவ்வாறு தோன்றியது?

என்னையும் இந்தப் பிரபஞ்சத்தையும் படைத்தது யார்? அல்லது எது? இது இரண்டையும் கடந்த சக்தி ஏதேனும் உள்ளதா?

இந்தப் பிரபஞ்சத்தில் இருக்கும் ஒவ்வொன்றும் உருவாகி, இருந்து, பின் மறையும் தன்மை கொண்டதாக இருக்கிறது. நானும் பிறப்பு, இருப்பு, இறப்பு என்னும் இலக்கணத்துக்கு உட்பட்ட ஓர் உயிராக இருக்கிறேன்.

அனைத்தையும் உருவாக்கி, இயக்கிக்கொண்டு, தான் அழியாமல், ஆதியும் , அந்தமுமாக இருக்கும் ஏதாவது வஸ்து இருக்கிறதா? அதுதான் தெய்வமா? நான்-பிரபஞ்சம்-தெய்வம் இந்த மூன்றிற்கும் உள்ள தொடர்பு என்ன?

பிரபஞ்சம் என்பது ஒன்றுமே இல்லாத சூன்யமா ? ஆமாம். நாம் வாழும் பிரபஞ்சம் மனத்தின் உணர்வால் நாமே சிருஷ்டித்துக் கொள்ளும் காட்சி ஜோடனையாக மட்டும் இருந்துவிடுமேயானால் , ஒவ்வொரு தனிப்பட்ட நபரின் மனத்திலும் வெவ்வேறு வகையான பிரபஞ்ச சிருஷ்டிகள் ஏற்பட்டு விடுமே !

அப்போது ஒவ்வொரு தனிமனிதனுக்கும் ஒவ்வொரு பிரபஞ்சமா ? இந்த விபரீத மனத்தத்துவம் பிரபஞ்ச உண்மைகளைப் பற்றி அறியும் ஆராய்ச்சிகளனைத்தையும் சூழப்பக் குட்டையில் கொண்டு போயல்லவோ கரைத்துவிடும் ?

ஆனால்-ஒவ்வொரு மனிதனின் மன உணர்விலும் நுட்பமானதோர் ஒழுங்கு காணப்படுகின்றது. மன உணர்வுகளில் ஏற்படும் அந்த ஒழுங்கின் அர்த்தம் என்ன ? பிரபஞ்சத்தைப் பற்றி அடிப்படை உண்மை என்பதைத் தெரிவிக்கும் நுட்ப உணர்ச்சியாக அது இருக்குமோ ?

புலன்களால் பொருள்களை உணரும் போது ஏற்படும் அபிப்பிராய பேதங்களைனைத்தும் மேல்தளத்தில் உண்டாகின்றன . அவ்வுணர்வுகளின் அடித்தளத்தில் பொருள்களினுடைய உண்மைத் தன்மையின் தெளிவற்ற உருவத்தையாவது ஆராயும் மனம் அறியாமலிருக்க முடியாது.

" நிச்சயமாக அல்லாஹ்தான் வானங்களையும் பூமியையும் மிக்க மேலான அமைப்பில் படைத்திருக்கிறான் என்பதை (மனிதனே!) நீ கவனிக்கவில்லையா?"

(அல்குர்ஆன் : 14:19)

....என்று இறைவன் ஒவ்வொரு மனிதனிடமும் கேட்பது அவனின் மனத்தை நோக்கிதான் .

அடுத்து ‘நான்’ என்பதன் தன்மை என்ன என்று பார்ப்போம்.

உடலுணர்வில் கவனத்தைப் பதித்து, தொடர்ந்து உள்ளே ஓடிக்கொண்டேயிருக்கும் நினைவு வரிசையைச் சில கணங்கள் விடுத்து, சுவாசத்தில் கவனத்தை மையப்படுத்தினால் உள்ளே ஆழமான அமைதி நிறையும். அந்த அமைதியை உணர்வது யார்?

உள்ளே இருந்து வரும் பதில்: ‘நான்’.

யார் இந்த நான்? நினைவுப் பதிவுகளை விடுத்தால் தான் என்று தன்னை உணரும் ‘ஆள்’ இல்லாமல் போய்விடுகிறான். அந்த ஆளாக இருக்கும் நான் என் சரித்திரம்; வெறும் நினைவு வரிசை. எண்ணங்களுடன் அந்த ஆள் அடங்கிவிடுகிறான்.

அப்படியானால் ஆழமான அமைதியை உணர்வது யார்? அந்த ‘நான்’ எது? அது ‘நான்’ என்னும் உணர்வு. அதில் நான் ஒரு ஆள் என்னும் தன்மை கிடையாது. அந்த நான் உடலையோ மனத்தையோ சார்ந்திராதது. சொல்லப்போனால், உடலும் மனமும் அதைச் சார்ந்திருந்து இயங்குகின்றன. அந்த ‘நான்’ உயிரின் தன்னுணர்வு. அது பிரபஞ்சப் பேருயிரின் தன்மை வாய்ந்தது.

இதைத்தான் ‘கடவுள் மனிதனைத் தன் சாயலில் படைத்தார்’ என்கிறது விவிலியத்தின் பழைய ஏற்பாடு.

'ஹலக்கல் இன்ஸான அலா சூரத்திஹி '

(மனிதனை அவன் தன் ( எண்ணத்தில் உண்டான ) உருவில் படைத்தான் என்கிறது ஹதீது குத்ஸி

பழைய ஏற்பாட்டில் இன்னொரு இடத்தில் மோசேயிடம் கடவுள், ‘நான்தான் அந்த நான்’ என்கிறார்.

اِنَّنِیۡۤ اَنَا اللّٰهُ لَاۤ اِلٰهَ اِلَّاۤ اَنَا فَاعۡبُدۡنِیۡ ۙ وَاَقِمِ الصَّلٰوةَ لِذِكۡرِىۡ

நிச்சயமாக நான்தான் அல்லாஹ். என்னைத் தவிர வணக்கத்திற்குரிய வேறு இறைவன் இல்லை. என்னையே நீங்கள் வணங்குங்கள். என்னை தியானித்துக்கொண்டே இருக்கும் பொருட்டு தொழுகையைக் கடைப்பிடியுங்கள்." (அல்குர்ஆன் : 20:14)

இந்த உண்மையை 'நானே வழியும் சத்தியமும் ஜீவனுமாய் இருக்கிறேன்,' என்கிறது புதிய ஏற்பாடு.

இந்து மதத்தின் நான்கு மகா வாக்கியங்கள் என்று சொல்லப்படும் அடிப்படைத் தத்துவங்கள் இதுபற்றி என்ன சொல்கின்றன? 'அஹம் பிரம்மா அஸ்மி' - பிரம்மம் 'நான்'-ஆக இருக்கிறது. பிரக்ஞானம் பிரம்மா - பிரக்ஞை - அறிவுணர்வு - பிரம்மமாக இருக்கிறது. அஹம் ஆத்ம பிரம்மா - பிரம்மமே என் ஆத்மாவாக ('நான்' உணர்வாக) இருக்கிறது.

இதிலிருந்து என்ன தெரிகிறது? 'நான்' என்பதும் 'தெய்வம்' என்பதும் ஒன்றே என்றுதான். தெய்வம்தான் 'நான்' உணர்வாக என்னுள் பரிமளிக்கிறது என்கிறது இந்து மதம் .

பிரபஞ்சம்? தெய்வம்தான் பிரபஞ்சமாகத் தன்னை வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறது என்றும் சொல்லியிருக்கிறார்கள்.

இந்தப் பிரபஞ்சமும் அதில் உள்ள உயிர்களும் பிரம்மமே என்கிறது அத்வைத வேதாந்தம். ஆக, நான் - பிரபஞ்சம் - தெய்வம் மூன்றுமே ஒன்றுதான் என்றாகிறது.

அகில உலகத்தையுமே இறைவன் மனிதனுள் வைத்தாக அலீ (ரலி) அவர்கள் " மனிதனே நீ சிறிய சடலம் என்றா நினைக்கிறாய் ? உனக்குள்ளே பெரிய உலகமே அமைந்து கிடைக்கின்றதே " எனும் கருத்தை உள்ளடக்கி , "அதஹ்ஸிபு அன்னக ஜிஸ்முன் ஸகீருன் வஃபீக்கன்தவல்

ஆலமுல் கபீரு " என்று கூறியுள்ளார்கள்

மேலும் இஸ்லாம் " அல் இன்ஸானு சிர்ரீ வ அன சிர்ருஹு (மனிதன் என் இரகசியம் ; நான் மனிதனின் இரகசியம்)

இஸ்லாமிய மதம் இதுகுறித்து என்ன சொல்கிறது? 'நப்ஃஸ் - ரூஹ்' என்ற இரண்டு சொற்களுமே 'நான்' என்பதைத்தான் குறிக்கின்றன.

'ரூஹ்' என்பது புனிதமான ஆத்மா (Spirit) என்ற பொருளில் கொள்ளப்படுகிறது. 'நப்ஃஸ்' என்பது ஆசாபாசங்கள் கலந்துவிட்ட மனிதனின் சுயத்தைக் குறிக்கிறது. அடிப்படையில் இரண்டுமே ஒன்றுதான் என்கிறது இஸ்லாம். 'நப்ஃஸ்' தூய்மை அடையும்போது 'ரூஹ்'-ஆக ஆகிறது என்பதே இதன் பொருள் என்பதாக சகோதர சமுதாயத்தவர்கள் ரூஹ் பற்றி சொற்பமாக இப்படித்தான் விளங்கி இருக்கிறார்கள் .

"கல்புல் முஃமினி அர்ஷுல்லாஹி "

(இறை நம்பிக்கையாளனின் இதயம் அல்லாஹ்வின் அரியாசனமாகும் )

- ஹதீஸ்

ரஹ்மத் ராஜகுமாரன்

**Sahlan Rabbanee**

மனிதன் அஞ்ஞானத்தின் காரணமாக தனது சரீரத்தையும் அதனை இயக்கும் ஜீவனையும் "நான்" என நம்புகிறான்.

மனிதன் பிறப்பதற்கு முன்னர் அவனது சரீரம் இப்போதிருக்கும் தோற்றத்தில் இருக்கவில்லை.

மனிதன் இறந்த பின்னரும் இந்த சரீரம் நிலைத்திருப்பதில்லை.

கனவு நிலையிலும் உறக்க நிலையிலும் இந்த சரீரம் மனிதனுக்கு தெரிவதில்லை.

விழிப்பில் மட்டும் இந்த சரீரம் மனிதனுக்கு தெரிகிறது.

அப்படியானால் விழிப்பில் மட்டும் தெரியும் இந்த சரீரத்தை மனிதன் “நான்” என்று நம்புவது சரியா?

**Rahmath Rajakumaran**

**அருமையான** சிந்தனை

மரணத்திற்கு முன் மரணித்துக் கொள்ளுங்கள் – ஹதீஸ்

மனமே மனிதமே 11



" உங்களுக்கு மரணம் வருவதற்கு முன்பாகவே, நாம் உங்களுக்குக் கொடுத்தவைகளிலிருந்து தானம் செய்யுங்கள். (அவ்வாறு செய்யாதவன் மரணிக்கும் சமயத்தில்,) "என் இறைவனே! ஒரு சொற்ப காலத்திற்கு என்னை விட்டுவைக்க வேண்டாமா? (அவ்வாறு விட்டால்,) நான் தானமும் செய்வேன்; (நன்மைகளைச் செய்து) நல்லோர்களிலும் ஆகிவிடுவேன்" என்று கூறுவான். (குர்ஆன் : 63:10)

(எனினும்) யாதொரு ஆத்மாவுடைய (மரணத்தின்) தவணை வரும் பட்சத்தில் அதனை அல்லாஹ் பிற்படுத்தவே மாட்டான். நீங்கள் செய்பவைகளை அல்லாஹ் நன்கறிந்தே இருக்கின்றான்.
(குர்ஆன் : 63:11)

திடீரென ஏற்படும் அதிர்ச்சியால் ஒருவர் பயப்படும் போது, கார்டிசோல் (Cortisol), அட்ரலின் (Adrenaline) மற்றும் இதர பயம் தொடர்பான ஹார்மோன்களின் சுரப்பு அதிகரித்து, மீண்டும் இயல்பு நிலைக்குத் திரும்பலாம் . ஆனால் தொடர்ந்து ஒருவர் பயத்துடனே வாழ்கிறார் என்றால், அவருக்கு இந்த ஹார்மோன்களின் சுரப்பின் அளவு அதிகமாகவே இருக்கும் என்பதாக மருத்துவ விஞ்ஞானம் கூறுகிறது .
மரணம் இருவகைப்படும்

1) உடலைவிட்டு உயிர் நீங்கி விடுதல். இது இயற்கை ( ஹகீகிய்யி ) மரணம் எனப்படும் .
2 ) உலக சம்பவங்களிலிருந்து நப்ஸ் (மனம் ) பிரிந்து விடுதல் ; இது பாவனை ( இறாதிய்யி ) மரணம் எனப்படும்.
மரணம் உடலுக்கே அன்றி ஆன்மாவுக்கு இல்லை. ஆதலின் அல்லாஹ்வின் கட்டளைக்கும் , நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் சொல், செயலுக்கும் இணங்க உடலையும், ரூஹையும்
நற்கிரியைகளில் பழகுதல் வேண்டும்
இவ்வாறு பழக்குவதால் , மனிதன் மரணத் தருவாயிலும் கூட பரிசுத்த (முஃமின்) விசுவாசியாக , மரணக்கிறான் .
அதாவது , மனிதனுக்கு ( ஜனாபத் ) கட்டாயமாகக் குளிப்பது 6 காரியங்களில் ஏற்படும் . அவை 1 ஸ்கலிதம் 2 சேர்க்கை
3) மதம் மாறுதல்
4) மாத விடாய் பேறு
5) மரணம்
6) தன்னுணர்வு மாறுதல்

இவற்றுள் மரண நிலையில் இந்திரியம் வெளியாகவோ , போதம் கெடவோ செய்யுமாயின் , அப்போதும் முழுக்கு கடமையாகிவிடும் .

ஆகவே ஒருவன் தனது ஜீவியத்தில் தன் மனம், வாக்கு , காயம் இவற்றை இறைவனால் விலக்கப்பட்டவைக்கு இடங்கொடாமல் பேணித் தனது சுவாசத்தை நல்வழியில் செலுத்திக் கட்டுப்படுத்தி வருவானாயின், மரணவேளையில் அவனுக்கு இந்திரியம் வெளியாகாது ; தன்னுணர்வும் மாறாது; அதனால் அது சமயம் அவன் முழுக்காளியாகமாட்டான் .

இந்நிலை ஏற்படுவதற்கு தன்னை அறிய வேண்டும் . அல்லாஹுவை அறிவதற்குத் திறவுகோல் , மனிதன் தன்னுடைய நப்ஸை அறிவதேயாகும் இதனை வலியுறுத்த ,
' மன் அரப நப்ஸஹு பகத் அரப ரப்பஹு'
'தன்னை அறிந்தவன் தன் தலைவனை அறிந்தவனாவான் ' என்பதை நோக்குவீர்களாக , - ஹதீஸ்

இறந்த ஒருவன் , உயிரோடிருக்கும்போது , அன்பும் பிரியமும் கொண்ட அவனது மனைவி, மக்கள் , செல்வம் இன்னும் இன்ப பொருட்கள் அவற்றில் நின்றும் எவ்வாறு விடுதலை பெறுகிறானோ ? அவ்வாறே நீயும் , உனது ஜீவிய காலத்தில் உடலும் உயிரும் ஒன்றாக இருக்கும் போது உலகப் பற்றிலிருந்து விடுதலை பெறுதல் வேண்டும். அதாவது மேற்கண்ட குர்ஆன் வசனம் (63 :10 ) இதையே வற்புறுத்துகிறது .

இன்னும் மௌத்துடைய வேளையில் நன்மையான வணக்கங்களின் மேல் தேட்டமும் நாட்டமும் உண்டாவது போல் நீயும் உன் வாழ்நாள் முழுவதும் தியானத்தில் நாட்டமும் தேட்டமும் கொள்ளுதல் வேண்டும்.
ஆண்டவன்(ஹக்கு) வேறு, படைப்பு (கல்கு) வேறு என்று வேற்றுமை பாராட்டாது எல்லாம் அவனே என்றும் , அவன் பக்கமே சார்ந்து மனத்தின் இச்சைகளுக்கு வசப்படாமல் அவற்றிற்கு விரோதமாய் ' ரியாளத் ' மனோ அப்பியாசங்களாலும் , நபி பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் 'ஷரீஅத்' படியும் கட்டாயம் நடந்து வரவேண்டும்

அவ்விதம் நடந்து வருபவனுக்கு அல்லாஹுவால் பூரண வெற்றி கிடைக்கிறது. அந்த வெற்றியால் இருதயம், சுத்தியடைந்து (நூரானி) ஏகஜோதியாய் பிரகாசித்து தன்னை அறிந்து கொள்வதுடன், தன் ரப்பாகிய அல்லாஹு ஜல்ல ஷஃனுஹு வதஆலாவையும் , அறிந்து கொள்கிறான் .
" மரணத்தின் உண்மைகளை நன்கு விளங்கி நடவாமல் , விதாண்டாவாதம் பேசித் திரிபவர்கள் மடையர்களாவர்கள்
என்கிறது ஹதீஸ்
ரஹ்மத் ராஜகுமாரன்.

( இத்துடன் 'மனமே மனிதமே ' என்ற
இத்தொடர் பதிவு நிறைவு பெறுகிறது. உங்களின் மேலான கருத்துக்களையும் தவறாது பதியுங்கள் )

இறைநேசரின் மதிநுட்பம்

மரணத்தின் சிந்தனை 1



நிச்சயமாக நாம் லுக்மானுக்கு தத்துவ ஞானத்தைக் கொடுத்து அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்தும்படி கூறினோம் குர்ஆன் ( 31: 12)

ஹஜ்ரத் லுக்மான் (அலை) அவர்கள்

நபி இப்ராஹீம் (அலை ) அவர்களின் சந்ததியில் தோன்றியவர்கள் அல்லாஹ்வால் அகமிய ஞானங்களை நன்கொடையாகப் பெற்ற மேதாவி.

ஆயிரம் வருடங்கள் வரை உலகில் வாழ்ந்திருந்ததாக கூறப்படுகிறது . இவர்கள் பல நபிமார்களின் போதனைகளை வகைப்படுத்தி பின்னுள்ள மக்களுக்கு எடுத்துக் காட்டிய மஹான் என பல நூல்களில் கூறப்பட்டிருக்கிறது .

லுக்மான் (அலை) அவர்கள் தமது சிறு பிராயத்தில் ஒரு வியாபாரியின் கீழ் வேலைபார்த்து வந்தார்கள் ஒரு சமயம் எஜமான் தன் வேலைக்காரர்களிடம் தோட்டத்தில் போய் பழங்கள் பறித்து வரும்படி கட்டளையிட்டான் .

லுக்மான் (அலை ) அவர்கள் மற்றவர்களைப் போல் பெருமை, கோள், பொய் இவைகள் போன்ற கெட்ட குணங்கள் இல்லாது சாந்தகுணம் உடையவர் இருந்தமையால் இவர்களை குறைவாக மதித்து மிக கீழ் பதவியில் வைத்திருந்தான் .

லுக்மான் (அலை) உட்பட வேலைக்காரர்கள் தோட்டத்தில் புகுந்து பழங்களை பறித்தார்கள் . லுக்மான் அவர்களைத் தவிர ஏனைய வேலை ஆட்கள் எல்லோரும் ஒன்றுகூடி பறிக்கப்பட்ட கனிகளில் போதிய அளவு தின்று தோலையும் விதையையும் ஓரிடத்தில் குவித்து வைத்து விட்டு , எஜமானனிடம் சென்று , லுக்மானே அவற்றைத் தின்றதாக புகார் செய்தனர் .

எஜமான் மிகக் கோபத்தோடு தோட்டத்தில் புகுந்து அவர்களை அழைத்து கேட்ட போது அவர்கள் தான் அந்த பழங்களில் ஒன்றேனும் தின்றது கிடையாது என்றும் மற்ற வேலையாட்கள் தின்றுவிட்டு தம் மீது பழி சுமத்துகிறார்கள் என்றும் மறுமொழி பகர்ந்தார்கள் .

புத்திசாலியான எஜமான் அவர்கள் யாருடைய வார்த்தைகள் உண்மை இருக்கும் என்று சிந்தித்துக் கொண்டிருக்கும் போது லுக்மான் அவர்கள் எஜமானனை நோக்கி, "தாங்கள் உண்மையை தெரிந்து கொள்ள வேண்டுமாயின் எங்கள் ஒவ்வொருவருக்கும் ஒரே அளவு வெந்நீரை குடிக்கச் சொல்லி பின்னர் ஒரு குறிப்பிட்ட தூரம் வரை ஓட செய்யுங்கள் .அப்போது உண்மை வெளியாகும் என்று வேண்டினார்கள் .

எஜமான் ஆச்சரியமுற்று , அவ்வாறு சூடான தண்ணீரை ஒரே அளவு கொடுத்து ஓடச் செய்த போது எல்லோரும் வயிறு குமட்டி வாந்தி எடுத்தனர் .பழங்களை புசித்தர்கள் வாந்தியில் பழங்களின் அம்சங்கள் காணப்பட்டன . ஹஜ்ரத் லுக்மான் அவர்களின் வாந்தியில் சுத்த நீரே காணப்பட்டது .

உண்மையை தெரிந்து கொண்ட எஜமான் குற்றவாளிகளுக்கு தகுந்த தண்டனை கொடுத்தான் லுக்மான் அவர்களை கண்ணியத்தோடு அவர்களின் பதவியை உயர்த்தினான் அவர்களைக் கொண்டு இது போன்ற அநேக நுண்ணறிவுகளைக் கற்றுக்கொண்டான் இதுவே "பூராயம் " எனப்படும் .

மஹான் லுக்மான் (அலை ) அவர்கள் தமது அருமை புதல்வர்கள் மாதான் , அன்அம் , அஷ்கம் இந்த மூவருக்கும் பல புத்திமதிகள் உபதேசங்களும் போதித்தார்கள் அவற்றுள் முக்கியமானவை

"லுக்மான் தனது மகனுக்கு நல்லுபதேசம் செய்யக் கருதிய சமயத்தில் அவரை நோக்கி "என் அருமை மைந்தனே! நீ அல்லாஹ்வுக்கு (ஒன்றையுமே) இணையாக்காதே! ஏனென்றால், இணைவைப்பது நிச்சயமாக மிகப்பெரும் அநியாயமாகும்" என்று கூறினார்.

(பின்னும் லுக்மான் தனது மகனை நோக்கி) "என் அருமை மகனே! (நன்மையோ தீமையோ) அது ஒரு கடுகின் விதை அளவில் இருந்தாலும் சரி, அது (கரும்) பாறைகளுக்குள்ளோ அல்லது வானத்திலோ, பூமியின் ஆழத்திலோ (மறைந்து) இருந்தபோதிலும் (உங்களிடம் கணக்குக் கேட்கும்போது) நிச்சயமாக அல்லாஹ் அதையும் கொண்டு வந்து விடுவான். ஏனென்றால், நிச்சயமாக அல்லாஹ் வெகு நுட்பமான அறிவுடையவனும் (அனைத்தையும்) நன்கு தெரிந்து வைத்திருப்பவனாகவும் இருக்கிறான்.

(அல்குர்ஆன் : 31: 13 -16)

"நண்பர்களே ! நமது ஆயுள் முழுவதும் நமக்கு உதவக்கூடிய நல்லுபதேசங்கள் மேற்கூறிய வசனங்களில் தெளிவாக அமைந்திருக்கின்றன . நமது ஆவி நாளுக்கு நாள் குறைந்து குறைந்து முடிவில் மரணத்தை எட்டி விடுகிறது நன்கு சிந்தித்து மரணத்தின் தன்மையை நம் கண்முன் நிறுத்திக் கொள்வோமாக .

ரஹ்மத் ராஜகுமாரன்

## நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் பிரேதத்திலிருந்து பெற்ற ஞானம்

## மரணத்தின் சிந்தனை - 2



ஒரு சமயம் நபி இப்ராஹீம் அலை அவர்கள் கடற்கரையோரமாக செல்லும்போது அங்கு ஓரிடத்தில் ஒரு பிரேதம் அலைகளால் கரையில் தள்ளப்படுவது அதனை ஓநாய் காகம் கழுகு பிய்த்துத் தின்பதும் மறு அலை வந்து அதனை கடலில் இழுத்துச் செல்லும் போது அதனை அங்கு உள்ள மீன்கள் புசிப்பதுமாக இவ்வாறு பலமுறை பிரேதம் வந்து போய் கடைசியில் அது சிதறிப்போயிற்று இதனை கண்ட நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் ஆச்சரியப்பட்டு ,

"என் இறைவனே! இறந்தவர்களை நீ எவ்வாறு உயிர்ப்பிக்கின்றாய். (அதை) நீ எனக்குக் காண்பி" எனக் கூறியபோது, அவன் (இதை) "நீங்கள் நம்பவில்லையா?" என்று கேட்டான். (அதற்கு) அவர் "நான் நம்பியே இருக்கின்றேன். ஆயினும், (அதனை என் கண்ணால் கண்டு) என்னுடைய உள்ளம் திருப்தியடைவதற்காக (அதனைக் காண்பி)" எனக் கூறினார். (அதற்கவன்) "நான்கு பறவைகளைப் பிடித்து நீங்கள் அவைகளைப் பழக்கி, பின்னர் (அவைகளைத் துண்டு துண்டாக ஆக்கி) அவற்றில் ஒவ்வொரு பாகத்தை ஒவ்வொரு மலையின் மீதும்

வைத்துவிட்டு (நடுவில் இருந்துகொண்டு) அவைகளை நீங்கள் கூப்பிடுங்கள். அவை உங்களிடம் பறந்துவந்து சேரும் (எனக் கூறி, அவ்வாறு செய்து காண்பித்து) ( 2 : 260)

அல்லாஹ்வின் கட்டளைப்படி நபி இப்ராஹீம் அலை அவர்கள் மயில் காகம் கழுகு சேவல் இந்த நான்கு பறவைகளையும் பிடித்து முதலில் கழுத்தை அறுத்து பின்னர் இறகுகளை பிடுங்கி அவயங்களை துண்டு துண்டாக ஆக்கி எல்லாவற்றையும் ஒன்றாக கலந்து அவற்றின் தலைகளை மாத்திரம் அண்மையில் வைத்துக்கொண்டு அந்த துண்டுகளை 4 மலைகளின் உச்சியில் சமமாக வைத்து விட்டு இறங்கி வந்து அந்த மலைகளில் இருக்கும் மாமிசத் துண்டுகளை பார்த்து அவரது உத்தரவுப்படி வாருங்கள் என்று அந்தப் பறவைகளின் பெயர்களை சொல்லி கூப்பிட்டார்கள்.

அப்போது ஆச்சரியப்படும்படியாக அவைகளின் இறகு எலும்பு சதை துண்டுகள் எல்லாம் தங்களுடைய மற்ற துண்டுகளோடு பொருந்தி ஆகாயத்தில் பட்சிகளாகப் பறந்து நபி அவர்களின் முன் வரவும் , தங்களிடமிருந்த தலையை அவைகளுக்கு காண்பிக்க , தன் தலையை பொருத்தி முன்போல் பறவைகள் ஆயின அப்பால் இறைவன்..

"நிச்சயமாக அல்லாஹ் மிகைத்தவனும், மிக்க நுண்ணறிவுடையவனுமாக இருக்கின்றான் என்பதையும் நீங்கள் உறுதியாக அறிந்து கொள்ளுங்கள்" என்றான். (அல்குர்ஆன் : 2:260)

நாம் அருந்தும் உணவுகளில் மிகுதமும் நமக்கு ஆகுமாக்கப்பட்ட கால்நடைகள் பறவையினங்கள் இவர்களில் மாமிசங்களை உட்கொண்டு , பின்பு கழித்து விடுகிறோம் .
பல ரூபத்தில் அழிந்துபட்ட இவைகளையும் அல்லாஹ் இறுதி நாளில் உயிர்பிக்க செய்கிறான் என்பதை குர்ஆன் வலியுறுத்துகிறது.
وَمَا مِنْ دَآبَّةٍ فِى الْاَرْضِ وَلَا طٰٓـئِرٍ يَّطِيْرُ بِجَنَاحَيْهِ اِلَّاۤ اُمَمٌ اَمْثَالُـكُمْ‌ مَا فَرَّطْنَا فِى الْـكِتٰبِ مِنْ شَىْءٍ‌ ثُمَّ اِلٰى رَبِّهِمْ يُحْشَرُوْنَ
பூமியில் ஊர்ந்து திரியக் கூடியவைகளும், தன்னுடைய இரு இறக்கைகளால் (ஆகாயத்தில்) பறக்கக் கூடியவைகளும் உங்களைப் போன்ற (உயிருள்ள) படைப்புகளே (சமுதாயங்களே) அன்றி வேறில்லை. (இவைகளில்) ஒன்றையுமே (நம்முடைய பதிவுப்) புத்தகத்தில் (லவ்ஹுல் மஹ்ஃபூளில்) குறிப்பிடாது நாம் விட்டுவிடவில்லை. பின்னர் (ஒரு நாளில்) இவைகளும் தங்கள் இறைவனிடம் கொண்டு வரப்படும்.
(அல்குர்ஆன் : 6:38)

இவ்வாறுதான் இறந்து அடக்கப்பட்டவர்கள், எரிக்கப்பட்டவர்கள், கடலில் மீன்களுக்கும், காட்டில் விலங்குகளுக்கும் இரையானவர்கள் அனைவரையும் அல்லாஹ் மரணித்த பின்னர் மீண்டும் உயிர் கொடுத்து எழுப்புவான்.
நாம் செய்த நன்மைகளுக்குப் பரிசு தருவான். பாவங்களுக்குத் தண்டனை தருவான். இது இஸ்லாத்தின் அடிப்படையான நம்பிக்கையாகும்.
ர.ரா

நூறு வருடங்கள் மரணமானதில் பெற்ற ஞானம்

மரணத்தின் சிந்தனை - 3




ஒரே சூலில் இரட்டைக் குழந்தைகள்.. ஒரு குழந்தை மற்ற குழந்தை விட ஒரு சில நிமிடங்களுக்கு முன் பிறந்தது. அவர்கள் இருவரும் ஒரே நாளில் இறப் பெய்தனர் .ஆனால் .. அவர்களில் ஒருவருக்கு வயது 50 .மற்றவருக்கு வயது 150 .இது எவ்வாறு சாத்தியம் ?
1905 ஆம் ஆண்டு சூரிச் **(Zurich)** பல்கலைக்கழகத்தில் விஞ்ஞான அறிஞர் ஆல்பர்ட் ஐன்ஸ்டைன் சிறப்பு சார்பியல் தத்துவத்தை சமர்ப்பித்தார்.
- காலம் என்று தனிப்பட்டுஒன்றும் கிடையாது !
- சம்பவங்கள் இல்லையேல் காலமே கிடையாது !
மேற்கண்ட தத்துவத்தின் சாரம்சம் "தவ்ராத்" என்னும் பழைய ஏற்பாடு வேதம், இஞ்ஜீல் என்னும் பைபிள்-விவிலியம்புதிய ஏற்பாடு மற்றும் அல்குர்ஆன் ஆகியவற்றில், சில சம்பவங்கள் குறித்து பேசும்போது சம்பவங்கள் இல்லாத நிகழ்வுகளுக்கு காலமே இல்லாது இருப்பது குறித்து நம்மை வற்றாத ஆச்சரியத்தில் திளைக்கச்செய்கிறது.

கணிதப்பாடத்தில் நீங்கள் படித்திருப்பீர்கள். **"Empty Set"** என்னும் வெறுமை, அது போன்றே வேதத்தின் சில நிகழ்வுகள் காலமே இல்லாத வெறுமையாக காட்சி அளிக்கிறது.
ஒரு வரலாற்று சம்பவத்தைப் பார்ப்போம். அதன் முடிவில் மேற்கண்ட கேள்விக்குறிய பதிலைத் தேடுவோம்.
"புஸ்து நஸ்ர்" என்பவனுக்கு தவ்ராத் வேதம் எங்கு ஓதக் கேட்டாலோ அல்லது அதை மனப்பாடம் செய்தவரைக் கண்டாலோ முதல் வேலை அவர்களைக் கொன்றொழித்து விட்டு தான் மறுவேலை! இது என்ன சைக்கோ...? தெரியவில்லை.

அவனுக்கு ஒரு செய்தி கிடைத்தது. பைத்துல் முகத்தஸ் (ஜெருஸ்ஸலம்) செல்லும் வழியில் ஒரு நகரம்; அங்குள்ளோர் பனீ இஸ்ராயீல்கள் அனைவரும் தவ்ராத் வேதத்தைக் கற்றவர்கள் என்று!
உடனே அவனின் படையெடுப்பால் அந்த சின்ன நகரம் சின்னாபின்னமாக்கப்பட்டு அதன் முகடெல்லாம் உடைந்து பாழடைந்து போனது.

அவ்வழியே நபி உஜைர் (Uzyre) அலைஹிஸ்ஸலாம் (வயது 30) செல்லும்போது அந்நகரை எப்படி இறைவன் மீண்டும் உருவாக்குவான்? என்ற சிந்தனையிலேயே ஒரு மர நிழலில் அமர்ந்து சில அத்திப்பழங்களையும், திராட்சைப் பழச்சாறையும் சிறிது குடித்ததும், அல்லாஹ் அவரை நூறு ஆண்டுகள் வரை மரணித்திருக்கச்

செய்து, பின்னர் அவரை உயிர்ப்பித்தான். தன் அருகில் இருந்த அவருடைய உணவும், அவருடைய பானமும் கெட்டுப் போகவில்லை.
ஆனால், கழுதை இறந்து அதன் எலும்புகள் மட்டும் கிடக்கக்கண்டார். இறந்த உயிரை தன்னால் உயிர்ப்பிக்க இயலும் என்பதை அவருக்கு உணர்த்த விரும்பிய இறைவன், அக்கழுதையை உயிர்ப்பெற்று எழச் செய்தான்.
இப்போது உயிர்ப்பெற்றெழுந்த உஜைர் (Uzyre) நபிக்கு வயது அதே 30 தான்!

நபி உஜைர் (Uzyre) அலைஹிஸ்ஸலாம் அவர்களுடன் ஒரே நேரத்தில் பிறந்தவர் அவரது சகோதரர் அஜீஸ் (Azeez) ஆவார். ஒரே சூலில் பிறந்த இரட்டையர். ஆனாலும் இப்போது அஜீஸ் அவர்களுக்கு வயது 130 ஆக இருந்தது. இதனால் 30 வயதுடைய தன் சகோதரர் நபி உஜைர் என்பதை அவர் ஏற்றுக்கொள்ளவில்லை.

மேலும் என் தம்பி உஜைருக்கு தவ்ராத் வேதத்தை மனப்பாடமாக ஓதக் கூடியவர் எங்கே தவ்ராத்தை மனப்பாடமாக ஓதும் என்று அண்ணன் அஜீஸ் கேட்க , உஜைர் மனப்பாடமாக ஓத சுற்றியுள்ளவர் அதை எழுதிக் கொள்ள மறைந்து போன தவ்ராத் மீண்டும் உதயமானது ! உடனே பனீ இஸ்ராயீல்கள் " இப்னுல்லாஹ் இப்னுல்லாஹ்" - "அல்லாஹ்வின் மைந்தன் - அல்லாஹ்வின் மைந்தன்" என்றழைக்கலாயினர்
உஜைர் நபி மட்டும் அல்ல , தவ்ராத் வேதத்தை மீண்டும் புதுப்பிக்க இறைவன் செய்த ஏற்பாடுதான் இது.
உஜைர் நபி மரணிக்கச் செய்து 70 வருடங்களில் புஸ்து நஸ்ர் என்ற கொடுங்கோல் அரசனும் , அவனுடைய கூட்டத்தாரும் மாண்டு போயினர் .பின் பனீ இஸ்ரவேலர்கள் பைத்துல் முகத்திஸை முன் இருந்ததைப் பார்க்கினும் நல்ல வளப்படுத்தினர் .

பின்பு நபி உஜைரின் நபித்துவத்தின் அங்க முத்திரையான **"நுபுவ்வத்"** உடலில் மச்சமாக இருப்பதை இனம் காணப்பட்டு தன் தம்பி உஜைர் தான் என்பதை அவர் அண்ணன் அஜீஸ் ஏற்றுக்கொண்டார்.

அதற்குப்பின் நபி உஜைர் (Uzyre) அலைஹிஸ்ஸலாம் தனது சகோதரர் அஜீஸுடன் இவ்வுலகில் இருபது வருடம் வாழ்ந்தார். ஒரே நாளில் சகோதரர்கள் இருவரும் இறப்பெய்தினர். இறக்கும்போது உஜைர் நபிக்கு வயது 50 ஆக இருந்தது. அவருடைய சகோதரருக்கு இறக்கும்போது வயது 150 ஆக இருந்தது. உஜைர் நபி மரணித்திருந்த நூறு வருடங்களில் உலக சம்பவங்கள் எதுவும் அவருக்கு இல்லை. எனவே, அவருக்கு காலமும் இயங்கவில்லை.

اَوْ كَالَّذِىْ مَرَّ عَلٰى قَرْيَةٍ وَّ هِىَ خَاوِيَةٌ عَلٰى عُرُوْشِهَا  قَالَ اَنّٰى يُحْىٖ هٰذِهِ اللّٰهُ بَعْدَ مَوْتِهَا  فَاَمَاتَهُ اللّٰهُ مِائَةَ عَامٍ ثُمَّ بَعَثَهٗ  قَالَ كَمْ لَبِثْتَ قَالَ لَبِثْتُ يَوْمًا اَوْ بَعْضَ يَوْمٍ قَالَ بَلْ لَّبِثْتَ مِائَةَ عَامٍ فَانْظُرْ اِلٰى طَعَامِكَ وَشَرَابِكَ لَمْ يَتَسَنَّهْ وَانْظُرْ اِلٰى حِمَارِكَ وَلِنَجْعَلَكَ اٰيَةً لِّلنَّاسِ وَانْظُرْ اِلَى الْعِظَامِ كَيْفَ نُنْشِزُهَا ثُمَّ نَكْسُوْهَا لَحْمًا  فَلَمَّا تَبَيَّنَ لَهٗ ۙ قَالَ اَعْلَمُ اَنَّ اللّٰهَ عَلٰى كُلِّ شَىْءٍ قَدِيْرٌ
(நபியே!) அல்லது ஒரு கிராமத்தின் மீது சென்றவரைப் போல் (நீங்கள் பார்த்திருக்கின்றீரா? அவர்) அ(க்கிராமத்)திலுள்ள (வீடுகளின்) முகடுகளெல்லாம் இடிந்து (பாழாய்க்) கிடக்க(க் கண்டு) "இவ்வூர் (மக்கள் இவ்வாறு அழிந்து) இறந்தபின் அல்லாஹ் இதனை எவ்வாறு உயிர்ப்பிப்பான்?" என்று கூறினார்.
ஆகவே, (அவருடைய சந்தேகத்தை நிவர்த்தி செய்வதற்காக) அல்லாஹ் அவரை நூறு ஆண்டுகள் வரையில் மரணித்திருக்கச் செய்து பின்னர் அவரை உயிர்ப்பித்து...
(அவரை நோக்கி "இந்நிலையில்) நீங்கள் எவ்வளவு காலம் இருந்தீர்கள்" எனக் கேட்க "ஒருநாள் அல்லது ஒரு நாளின் சிறிது பாகம் இருந்தேன்" எனக் கூறினார்.

(அதற்கு அவன்) "அல்ல! நீங்கள் நூறு ஆண்டுகள் (இந்நிலையில்) இருந்தீர்கள். (இதோ!) உங்களுடைய உணவையும், உங்களுடைய பானத்தையும் பாருங்கள். (அவை இதுவரை) கெட்டுப்போகவில்லை. (ஆனால்) உங்களுடைய கழுதையைப் பாருங்கள். (அது செத்து மக்கி எலும்பாகக் கிடக்கின்றது.) இன்னும் உங்களை(ப் போல் சந்தேகிக்கும்) மனிதர் களுக்கு ஓர் அத்தாட்சியாக ஆக்குவதற்காக (கழுதையின்) எலும்பு களையும் நீங்கள் பாருங்கள். எவ்வாறு அவைகளைக் கூடாகச் சேர்த்து அதன் மீது மாமிசத்தை அமைக்கின்றோம் என்று கூறி (எலும்பின் மீது மாமிசம் அவர் கண் முன்னே தானாகவே இணைந்து அவ்வாறே உயிர்ப்பித்துக் காட்டி)னான்.
(இவை அனைத்தும்) அவர் முன் தெளிவாக நடைபெற்றபோது (அவர்) "நிச்சயமாக அல்லாஹ் அனைத்தின் மீதும் மிக பேராற்றலுடையவன் என்பதை நான் உறுதியாக அறிந்துகொண்டேன்" என்று கூறினார்.
(அல்குர்ஆன் : 2:259)

ٱلَّذِى خَلَقَ ٱلْمَوْتَ وَٱلْحَيٰوةَ لِيَبْلُوَكُمْ اَيُّكُمْ اَحْسَنُ عَمَلًا وَهُوَ ٱلْعَزِيْزُ ٱلْغَفُوْرُۙ

உங்களில் மிகத்தூய்மையான அமல் செய்பவர்கள் யார் என்று சோதிப்பதற்காகவே, அவன் மரணத்தையும், வாழ்க்கையையும் படைத்திருக்கின்றான். அவன் (அனைவரையும்) மிகைத்தவன்; மிக மன்னிப்புடையவன்.
(அல்குர்ஆன் : 67:2)
ரஹ்மத் ராஜகுமாரன்

பொங்கலோ பொங்கல் ! "

முதன் முதல் உலகில் குர்பானி எப்போது ஆரம்பித்தது ?




ஆதம் (அலை) ஹவ்வா (அலை) தம்பதிகளுக்கு ஒவ்வொரு சூலிலும் ஒரு ஆண் ஒரு பெண் குழந்தைகள் பிறக்கும் .
முதல் பிரசவ ஆணுக்கும் இரண்டாம் பிரசவ பெண்ணுக்கும் திருமணம்
முதல் பிரசவ பெண்ணுக்கும் இரண்டாம் பிரசவ ஆணுக்கும் திருமணம் .இது இறைச் சட்டம் காரணம் வேறு மக்கள் எவரும் இல்லை . இப்போது இச்சட்டம் உலகில் எங்குமே இல்லை.

முதல் சூலில் காபிலும் இக்லீமா என்ற பேரழகியும் இரண்டாம் சூலில் ஹாபிலும் லுபூதா என்ற குறைவான அழகியும் பிறந்தார்கள்
காபில் இறைச் சட்டத்தை மீறி தன்னுடன் பிறந்த பேரழகி இக்லீமாவை மணப்பேன் என்று கூற .ஆதம் (அலை) அவர்கள் இறைவனின் சம்மதம் பெற குர்பானி கொடுக்கச் சொல்லி "யாருடைய குர்பானியை இறைவன் ஏற்றுக் கொள்கிறோனோ அவருக்கே பேரழகி
இக்லீமா " என்கிறார்கள்.
காபில் விவசாயி . வேளாண் விவசாயப் பொருட்களை குர்பானி கொடுத்தார் அவர் நல்ல கதிர்களையும் , பழங்களையும் தனக்கும் உம்மி தொலிகளுடன் கூடிய கதிர்களையும் பழுதான பழங்களையும் இறை குர்பானிக்கு வைத்தார்.
ஹாபில் ஆடு மேய்ப்பாளர் .நல்ல கொழுத்த ஆட்டையும் பாலடை கட்டி, வெண்ணெய் போன்றவற்றை இறை அச்சத்துடன் குர்பானிக்கு வைத்தார் .
வானில் இருந்து புகையில்லாத வெள்ளை நெருப்பு பறந்து வந்து ஹாபில் உடைய குர்பானியை கரித்துக் கொண்டு போனது .எனவே ஹாபில் குர்பானி இறைவனால் ஏற்றுக்கொள்ளப்பட்டது இக்லீமாவை திருமணம் செய்தார்.

அன்றைய காலக்கட்டத்தில் வான் நெருப்புக்கு குர்பானி பொருட்களை படைத்தல் என்பது இறைவன் ஏற்றுக் கொண்டதற்கு அங்கிகாரமாக எடுத்துக் கொள்ளப்பட்டதால் , இன்றும் சகோதர சமுதாயத்தாரிடம் நெருப்புக்கு நெய் , இறந்தவர்களுக்கு கருமாரியின் போது புத்தாடைகளை நெருப்புக்கு படைத்தல் அவர்களுக்குப் போய் சேரும் என்கிற ஐதீகம் உள்ளது .

நபி ஆதம் (அலை) மக்கள் தங்களுடைய உழைப்பின் பொருளை ஒரு பெண்ணுக்காக கொடுப்பதிலிருந்து திருமணத்தின் போது பெண்ணுக்கு "மஹர் " என்னும் மண கொடை முடிவு செய்யப்பட்டது அன்றிலிருந்துதான்.
'விவசாய பொருட்களையும் குர்பானிக்கு பயன்படுத்தலாம் ' என்ற கோட்பாட்டின் கீழ் தமிழர் பொங்கல் தினத்தின் போது பச்சரிசியில் பொங்கல் விளைந்த கரும்பு புதைந்த மஞ்சள் என்று இறைவனுக்கு படைத்து " பொங்கலோ பொங்கல் " என்று சப்தமிட்டு வழிபடுகின்றனர். இதுவும் தமிழர்களைப் பொறுத்தவரை குர்பானிதான்.

ஆடு ,மாடு ,ஒட்டகம் போன்றவற்றை குர்பானி கொடுக்கும் போது "அல்லாஹ் அக்பர் அல்லாஹ் அக்பர் " என்ற தக்பீர் முழக்கத்துடன் உலகம் தழுவிய இஸ்லாம் திருப்பலி எனும் குர்பானி கொடுக்கப்படுகிறது .
"ஆகவே அவ்விருவரும் (இறைவனின் விருப்பத்திற்கு ) முற்றிலும் வழிப்பட்டு , (இப்ராஹீம் தன் மகன் இஸ்மாயிலை அறுத்துப் பலியிட ) முகங்குப்புறக் கிடத்தினார் " குர்ஆன் (37 : 103 )
" ஆகவே மகத்தானதொரு பலியை அவருக்கு பகரமாக்கினோம் "
குர்ஆன் (37 : 107 )

என்று கூறிய இறைவன் அன்றொரு நாள் ஹாபில் இடமிருந்து குர்பானியாக பெறப்பட்ட அந்த கொழுத்த செம்மறியாட்டை ,இஸ்மாயில் (அலை) அவர்களுக்கு பகரமாக இறக்கி அறுக்கச் செய்தான். பகரம் கணக்கு சரியானது .

இதுவே எனக்கும் உங்களுக்குமான குர்பானி சட்ட கடமையாகியது.
அக்காலத்தில் அரபியர்கள் பலி பிராணிகளை கஃபாவில் வைத்து அறுத்து அதன் இரத்தத்தை கஃபாவில் தெளித்தும் . அதன் இறைச்சியை கஃபாவை சுற்றியும் வீசி எறிவார்கள் இது இறைவனுக்குப் போய் சேரும் என்று நம்பினர் உடனே இறைவன் ,
"குர்பானி மாமிசமோ அல்லது அதன் இரத்தமோ அல்லாஹ்வை அடையது விடுவது இல்லை. உங்களுடைய இறை அச்சம்தான் அவனை அடையும் "
குர்ஆன் ( 22 : 37 ) என்கிற இறை வசனம் இறங்கியது .

இந்து மதப்படி பலியிடப்படும் ஆடு மாடு போன்றவை ஆண் பாலினமாக இருக்க வேண்டும் . கோழியாக இருந்தாலும் ஆண் பாலினமான சேவலாக இருக்க வேண்டும் . பலியிடும் போது அதன் மீது மஞ்சள் நீர் தெளிக்கப்படும் போது அது மூன்று முறை தலையை குலுக்கும் போது அது தன்னை பலியிட சம்மதம் தெரிவித்து விட்டாகக் கருதி அதைப் பலி கொடுக்கின்றனர் .

" குர்பானி ஒட்டகத்தை அல்லாஹ்வின் அடையாளச் சின்னங்களில் ஒன்றாக நாம் ஆக்கியிருக்கிறோம்................ ( அதன் இடப்பக்க முன் காலைக்கட்டி மற்ற மூன்று கால்களில் ) நிற்க வைத்தவாறே அல்லாஹ்வின் பெயரைக் கூறி அறுங்கள் ....... நீங்கள் நன்றி செலுத்தும் பொருட்டு இவ்வாறு அதனை உங்களுக்கு வசப்படுத்தி தந்தோம் "
திருக்குர்ஆன் : (22 : 36 )

("ஸவாப்ப" - நின்றவைகளாக இருக்கிற நிலையில் என்ற வார்த்தையில் இருந்து தெரிகிறது )
அசுவமேத (குதிரை) யாகம் என்பது ஒரு பெரிய வேள்வியாகும். நெருப்புக்கு படைத்தல் மூலம் இறைவனை அது சென்றடையும் என்ற நம்பிக்கை . இது ஹிந்து அரசர்கள் செய்த ஒரு திருப் பலி ஆகும் .
ஒரு நாட்டின் அரசன் தனது அரச குதிரையை தனது வெற்றிக் கொடியை அதன் முதுகுப்பகுதியில் கட்டி நாடு முழுவதும் திரிய விடுவான்.

அந்தக் குதிரையுடன் அவனோ அல்லது அவனது அரச பிரதிநிதியோ பெரும்படையுடன் உடன் செல்வார்கள். அதைப் பிடித்து மடக்கும் வேற்று அரசன் மேல் படையெடுப்பு நடத்தி அவனை வெற்றிகொண்ட பின் குதிரை மேலும் தொடர்ந்து செல்லும்,

மற்ற மன்னர்களெல்லாம் அவனது ஆட்சியை ஏற்றுக் கொண்ட பிறகு “சக்கரவர்த்தி” என்று தன்னைப் பிரகடனப்படுத்திக் கொள்வான்.
பின்னர் அந்தக் குதிரையைக் கொன்று அதன் கொழுப்பை விட்டு நெருப்பில் யாகம் செய்வான். யாகத்தீயில் குதிரையை சுட்டு அதன் மாமிசத்தை மற்றவர்களுக்கு விருந்து படைப்பான்.
அயோத்தி அரசன் தசரதன் அசுவமேத யாகம் ஒன்றை நடத்தினான். இந்த யாகத்தை நடத்துவதற்காக ருசிய சிருங்கர் அழைத்து வரப்பட்டார். அவர் நடத்தி முடித்த அசுவமேத யாகத்திற்குப் பின் தசரத மகாச்சக்கரவர்த்தி என அழைக்கப்பட்டான்.

குருச்சேத்திரப் போருக்குப் பின் தருமன் “சக்கரவர்த்தி” பட்டத்திற்காக அசுவமேத யாகம் நடத்தினார். அந்தக் குதிரையைத் தொடர்ந்து அருச்சுனன் பெரும் படையுடன் சென்று வெற்றி பெற்று யாகம் நடத்தி சக்கரவர்த்தியானான்.

பிக்கார்ட்ஸ் என்கிற பிரிட்டிஷ் விஞ்ஞானி : "மாமிசம் காய்கறிகள் இரண்டையும் உண்ணும் வகைச் சேர்ந்தவனே மனிதன் . அசைவ உணவை தவிர்த்தல் நல்லதல்ல . காரணம் மனிதனின் குடற்பகுதியில் ஏராளமான பாக்ட்ரியாக்கள் படைக்கப்பட்டுள்ளன. இறைச்சி உட்கொள்ளும் போது அதனை எளிதாக செரிமானம் செய்து சக்தி ஆற்றலாக மாற்றவே பாக்ட்ரியாக்கள் உள்ளன .
அசைவ உணவை உட்கொள்ளாத உடல் எளிதாக நோய் தொற்றிக் கொள்ளும் தளமாக மாறி விடுகிறது என்கிறார் விஞ்ஞானி ,
அட, மனிதனுக்கு இரண்டு கோரைப் பல் இருப்பதே வெந்த அசைவ உணவை மென்று உட்கொள்ளத்தான் என்பதாக பரிணாம வளர்ச்சி ஆய்வார்கள் கூறிப்பிடுகின்றனர் . (மீள்பதிவு)
ரஹ்மத் ராஜகுமாரன்

வரும் விதி வந்தே தீரும்

மரணத்தின் சிந்தனை 4

அந்தக் காலத்தில் மலக்குல் மவ்த்து இஸ்ராயீல் (அலை ) மனிதர்களிடம் மனித உருவத்தில் நேராக சென்று உயிர் வாங்கும் சட்டம் இருந்து வந்தது.

நபி சுலைமான் (அலை ) அவர்கள் காலத்தில் அவர்கள் தர்பாரில் நடந்த ஒரு சம்பவத்தை ஜலாலுத்தீன் ரூமி (ரஹ்) அவர்கள், தமது மஸ்னவி ஷரீபில் எடுத்துக் காட்டி உள்ளார்கள்.

ஒருநாள் காலை நபி சுலைமான்(அலை) அவர்கள் தர்பாரில் ஒரு சாது ஓடி வந்து சேர்ந்தார் .அவர் முகம் கவலையால் மஞ்சளாகவும் உதடுகள் நடுக்கத்தால் நீல நிறமாகவும் இருந்தன . சுலைமான் (அலை) அவர்களை பார்த்து

"சாதுவே உமக்கு என்ன நேரிட்டது ? இவ்வாறு ஓடி வர காரணம் என்ன ? என்று கேட்டார்கள் .

அதற்கு அவர் எமதூதர் இஸ்ராயீல் (அலை ) கோப ஆவேசத்தோடும் , பயங்கர தோற்றத்தோடும் என்னைக் கூர்ந்து நோக்கினார் என்றார் .

"சரி, இப்போது உமக்கு நான் என்ன செய்ய வேண்டும் ? "

" என்னை இங்கிருந்து ஹிந்துஸ்தானம் கொண்டு போகும்படி காற்றுக்கு நீங்கள் உத்தரவு கொடுங்கள் . இந்த தொண்டன் அந்த இடத்திற்குப் போனால் உயிர் தப்பித்துக் கொள்வேன் " என மன்றாடினார் .

உடனே நபி சுலைமான் (அலை) அவர்கள் அவர் மீது இறங்கி, காற்றுக்கு கட்டளையிடவும் , காற்று அந்த மனிதரை ஆகாய மார்க்கமாக மிக விரைவில் ஹிந்துஸ்தானில் 'சோமநாத்' என்னும் ஊரில் கொண்டு போய்ச் சேர்த்தது .

அடுத்த நாள் நீதி விசாரணை சமயத்தில் நபி சுலைமான் (அலை ) அவர்கள் இஸ்ராயீல் (அலை ) அவர்களை நோக்கி,

" இறை சேவகரே ! அந்த சாதுவை எதற்காக கோப ஆவேசத்தோடு நீர் உற்றுப்பார்த்தீர் .ஒருவேளை அவர் வீட்டைவிட்டு நாடோடியாக போகவேண்டும் என்று நீர் இந்த வேடிக்கையை செய்தீர் போலும் ! "என்று கூறவும் .

அதற்கு இஸ்ராயீல் ( அலை ) "அகிலத்தின் அதிபதியே ! நபியே ! அவர் தன் புத்தி விகற்பத்தால் என்னைக் கோபாவேசமாக இருந்ததாக எண்ணி இருக்கலாம் . ஏனெனில் என் இறைவன் அந்த மனிதனின் உயிரை இன்று ஹிந்துஸ்தானில் சோமநாத் என்னும் இடத்தில் கைப்பற்றும் படி ஏவினான். ஆனால் அவர் இந்த இடத்தில் இருப்பதை கண்டு , அதிக வியப்புற்று , அவரை உயிரைக் கைப்பற்றும் யோசனையில் கலக்கமுற்றேன். இந்த மனிதருக்கு நூறு இறக்கைகள் இருந்தாலும் ஹிந்துஸ்தானம் செல்வதற்கு காலம் நேரம் சாத்தியமாகாதே ! என்று அதிசயத்தேன். முடிவில் இறைவன் கட்டளைப்படி நான் ஹிந்துஸ்தான் சென்று , அவர் அங்கு அந்த 'சோமநாத் 'என்ற இடத்தில் கண்டுபிடித்து அவர் உயிரை குறித்த நேரத்தில் கைப்பற்றினேன் " என்று கூறினார்கள்

فَمَاۤ اَغْنٰى عَنْهُمْ مَّا كَانُوْا يَكْسِبُوْنَ

அவர்கள் (தங்களை பாதுகாத்துக் கொள்ள) செய்திருந்தவைகளில் ஒன்றுமே அவர்களுக்குப் பலனளிக்கவில்லை. (குர்ஆன் : 15:84)

ரஹ்மத் ராஜகுமாரன் .

நாகூர் ஷாஹுல் ஹமீது வலி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கி.பி. 16ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்கள் ஆவார்கள். இவர்களது காலம் கி.பி 1532-1600 என அறிஞர்கள் கருதுகின்றனர்.

நாகூர் நாயகத்தின் நல்லுபதேசங்கள்



1) தேவையான பொருளொன்றை வாங்க கடைவீதிக்குச் சென்று ஒரு கடைக்குள் நுழைகிறோம். வேண்டிய பொருள் அங்கே இருக்கிறது. அது குறித்து நாம் யாரிடம் பேசுவோம்? கடைக்காரரிடம்தான் பேசுவோம். அந்தப் பொருளிடம் பேசமாட்டோம். அப்படியிருக்க, எல்லாவற்றையும் படைத்துப் பாதுகாத்து வருகின்ற அல்லாஹ்வை நெருங்க முடியாமல் அவனது அற்பப் படைப்புகளிடமே உதவி கோருவதும் ஆதரவு வைப்பதும், புகல் கேட்பதும் எப்படிச் சரியாகும்?

2) நம்மை மிகவும் நெருங்கியிருக்கிற அல்லாஹ்வை முட்டாள்தனமான செயலாலும் எண்ணத்தாலும் நாம்தான் தூரமாக்கிக் கொள்கிறோம். ஞானத்தாலும் அன்பாலும் அவனை நெருங்கிச் செல்கிற புத்திசாலிகளை அணைத்துக்கொள்ள அவன் காத்திருக்கிறான்.

3) பிரபஞ்சத்தின் அதிபதியே நம்மை ஆலிங்கனம் செய்து கொண்டுவிட்டபின், அவனது படைப்புகள் நமக்கு ஏன் தலைவணங்கி நிற்காது?

4 ) இஸ்லாத்திற்கு இரண்டு பக்கங்கள் உண்டு. ஒன்று அகம், மற்றது புறம். அகத்தைச் சுத்தமாக வைத்துக் கொண்டு புறத்தை அழுக்கடையச் செய்தீர்களானால், நீங்கள் இஸ்லாத்தைப் பேணியவர்களாகமாட்டீர்கள். புறத்தை கவனித்துக்கொண்டு அகத்தை மறந்தாலும் அப்படியே.

5) இரண்டு பக்கங்களைக் கொண்ட இஸ்லாம் என்ற உடலுக்கு தொழுகையே உயிர். எக்காரணம் கொண்டும் தொழுகையை அலட்சியம் செய்ய வேண்டாம்.

6) அதிகமாக உறங்க வேண்டாம். மந்த நிலையை ஏற்படுமாறு அதிகமாக உண்ண வேண்டாம். தொடர்ந்து நோன்பு நோற்று வருவது தீய எண்ணங்களில் இருந்து நம்மைக் காப்பாற்றும்.

7) அறிஞர்களையும் பெரியவர்களையும் மதிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும்.

8) முற்றிலும் அல்லாஹ்வுக்கு வழிபடுகிறவனுக்கு மற்ற வஸ்துக்கள் வழிபட விரும்பும்.

9 ) நஃப்ஸ் (கீழான இச்சைகள் / மனது ) கட்டுப்பட்டுவிட்டால் மற்ற யாவும் எளிதாகிவிடும்.

10 ) நான் உங்கள் ஆன்மாவில் இருக்கிறேன். ஆனாலும் நீங்கள் என்னைக் கவனிப்பதில்லை என்றும் கூறுகிறான். உங்கள் அகத்தை தன் இருப்பிடமாக இறைவன் வைத்திருக்கிறான் என்பது உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கிறதா? ஆனாலும் இது சத்தியமானதாகும். எனவேதான் யார் தன்னை அறிந்து கொண்டாரோ, அவர் தன் நாயனை அறிந்து கொண்டார் என்று நபிகள் நாயகமும் கூறினார்கள்.

11) ஒரு மனிதன் தன் கண்களை மூடிக்கொண்டு, காதுகளை அடைத்துக் கொண்டு, ஆட்டம் அசைவின்றி படுத்திருந்தாலும்கூட தானிருப்பதை உணர்கிறான். இவ்வாறு எது உணரப்படுகிறதோ அதுவே மனிதனுடைய அகமாக இருக்கிறது. அகத்தில்தான் 'ரூஹ்' எனப்படும் ஆன்மா இருக்கிறது.

12) ஒவ்வொரு விஷயத்திலும் சிலருக்கு இறைவன் நிபுணத்துவத்தைக் கொடுத்திருக்கின்றான். இறைவனைப் பற்றிய ஞானத்தை அடைய வேண்டுமானால் அவனுடைய பாதையில் ஏற்கனவே சென்றுள்ள மெய்யடியார்களைத் தேடியடைவதுதான் உங்களுக்குச் சரியான பாதையாகும்.

13) பாதுஷாக்களும், மன்னர்களும் மதத்தின் பெயரால் மனித இரத்தத்தைச் சிந்தாதீர்கள். உங்களுடைய அதிகார ஆசைகளுக்கு ஆண்டவனின் பெயரைச் சூட்டாதீர்கள்.

14 ) சமூகத்திலும் மார்க்கத்திலும் குழப்பத்தை உண்டாக்கும் கூட்டத்தினரோடு சேரவேண்டாம். மார்க்க சட்டதிட்டங்களும், ஆன்மிகப் பாதையும் ஒன்றோடொன்று முரண்பட்டதோ, வேறு வேறானதோ அல்ல.

15 ) நல்லடியார்களின் சமாதிகளை தரிசனம் செய்வதால் உங்களின் சகல காரியங்களும் நேர் பெறும் என்பதில் சந்தேகம் வேண்டாம்.

16) மனிதனுக்குள்ளே இருக்கும் ரகசியம்தான் இறைவன்.

17 ) உங்களுடைய குருநாதரின் தோற்றத்தில்தான் உங்களுக்கு சத்தியம் வெளியாகும்.

18) ஞானமானது உங்கள் நீண்ட அங்கியிலோ, ஜபமாலையிலோ இல்லை.

19) மனிதன் தனக்கு நன்றி செலுத்துவதை இறைவன் எதிர்பார்க்கிறான். ஆனால் மனிதனால் இறைவனுக்கு எப்படி நன்றி செலுத்த முடியும்? தொடக்கத்தில் இறைவனின் ரகசியமாக மனிதன் இருந்தான். இன்றோ இறைவன் மனிதனின் ரகசியமாக உள்ளான். நம்மில் அவனை பகிரங்கப் படுத்துவதே நாம் அவனுக்குச் செய்யும் நன்றியாகும்.

20) உண்மையையும் பொய்யையும் பிரித்தறிவிக்கும் பொருட்டு இறைவன் என்னை இந்தியாவில் தோன்றச் செய்துள்ளான்.

ரஹ்மத் ராஜகுமாரன்

இரண்டு உபதேசிகள்

மரணத்தின் சிந்தனை – 5



அல்லாஹ் மனிதர்களுக்கு இரண்டு உபதேசிகளை வழங்கியிருக்கின்றான்

**1) பேசுகின்ற உபதேசி**
**2) மௌன உபதேசி**

இவை என்றும் எப்போதும் நம்மோடு பின்னிப் பிணைந்திருக்கின்றன இரண்டு பெரும் உபதேசிகள். வேறு எந்த உபதேசங்களும் அவசியப்படாத அளவுக்கு இவ்விரு உபதேசிகளும் நமது வாழ்வை சீரமைக்கப் போதுமானவை.
பேசுகின்ற உபதேசிதான் புனித அல்குர்ஆன். இது நம்மோடு பேசிப் பேசி நமக்கு எப்போதும் உபதேசம் செய்து கொண்டேயிருக்கிறது.

பேசாமலேயே நமக்கு உபதேசம் செய்கின்ற அடுத்த மௌன உபதேசிதான் மரணம்.
மனிதன் மரணத்தை நினைத்துப் பார்க்கின்ற அளவுக்கு அவன் அதன் மூலம் நல்லுணர்ச்சி பெறுவான். மனிதனுக்கு மரணம் ஒன்றே போதுமான உபதேசியாக இருக்கிறது.

ஒரு தடவை நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள், "எவ்வாறு இரும்பு துருப்பிடிக்கிறதோ அதேபோல உள்ளங்களும் துருப்பிடிக்கின்றன" என்று சொன்னபோது....
"உள்ளத்திலே படியக்கூடிய துருவைப் போக்க என்ன செய்யலாம் அல்லாஹ்வின் தூதரே?" என ஸஹாபாக்கள் கேட்டார்கள்.
அதற்கு நபியவர்கள் "இரண்டு வழிகள் இருக்கின்றன.
ஒன்று அல்குர்ஆனை ஓதுவது (திலாவதுல் குர்ஆன்).
இரண்டாவது மரணத்தை நினைவுபடுத்துவது (திக்ருல் மௌத்)" எனக் கூறினார்கள்.
உள்ளத்தில் படியும் துருவைப் போக்க, உள்ளத்தைத் தூய்மைப்படுத்தி, பக்குவப்படுத்தி,
பண்படுத்தி மனிதன் எந்த இலக்கை நோக்கிப் பயணிக்க வேண்டுமோ அந்த இலக்கை நோக்கி அவனை வழிநடத்த இந்த இரண்டு உபதேசிகளும் போதுமானவை என்ற கருத்தை நபியவர்கள் இங்கு வலியுறுத்தியிருக்கிறார்கள்.

மற்றொரு தடவை நபி ( ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ) அவர்கள் சொன்னார்கள்.
"மனிதனுக்கு மௌத்தே போதுமான உபதேசியாகும்."
மனிதன் மரணத்தை நினைத்துப் பார்ப்பது அவனுக்குப் போதுமான
பக்குவத்தை, பேணுதலைக் கொடுக்கும் என்ற கருத்தை நபியவர்கள் இங்கும் வலியுறுத்திச் சொல்கிறார்கள்.
நமது வாழ்க்கைப் புத்தகத்தின் முடிவுரையை நாம் அடிக்கடி நினைவு கூறவேண்டும். நமது ஆயுளின் நிறைவை நினைத்துப் பார்ப்பது உள்ளத்தைப் பக்குவப்படுத்துகின்ற மிக முக்கியமான ஒரு தர்பிய்யத். அது ஒரு பெரும் ஆன்மிகப் பயிற்சி என்பதனை நாம் நினைவிற் கொண்டு மரண
சிந்தனையை நம்மில் குடியமர்த்திக் கொள்ள வேண்டும்.
(உள்ளம் அமைதி பெற ... பதிலிருந்து )
ர.ரா

மரணத்தறுவாயில் நபிமார்கள்

மரணத்தின் சிந்தனை - 6



“மனிதனே நீ யார் தெரியுமா? நீ சில நாட்களின் தொகுதி. ஒவ்வொரு நாளும் உன்னைக் கடந்து செல்லச் செல்ல உன்னிலே ஒரு பகுதி அழிந்து அழிந்து உனக்குரிய நாட்கள் நிறைவு பெறுகின்றபோது நீயும் சென்று விடுவாய்.”
உலகில் பிறக்கும் ஒவ்வொரு மனிதனுக்கும் அல்லாஹ் சில நாட்களை வரையறுத்து வைத்திருக்கிறான். அவை முற்றுப் பெறுகின்றபோது அவரது உலக வாழ்வு முற்றுப்பெறுகிறது. எனவே, ஒவ்வொரு நாளும் முடிவடைகின்ற போது எனது ஆயுளின் ஒவ்வொரு பகுதி கழிந்து கொண்டிருக்கிறது என்ற உணர்வு ஒவ்வொருவருக்கும் வர வேண்டும்.

மரணத்தின் பிடியிலிருந்து எவரும் தப்பியதாக சரித்திரம் கிடையாது. உலகில் நீண்ட ஆயுளைப் பெற்ற இறைதூதர்களில் ஒருவர்தான் நபி நூஹ் (அலை) அவர்கள் இவ்வுலகில் சுமார் 1000 வருடங்கள் வாழ்ந்தவர். அன்னாரின் உயிரைக் கைப்பற்றுவதற்காக வந்த மலகுல் மௌத் அவரை நெருங்கி,
“நீண்ட ஆயுளைப் பெற்று வாழ்ந்த மனிதரே! உலக வாழ்க்கையை நீர் எப்படிப் பார்க்கிறீர்கள்” எனக் கேட்டார்.
அதற்கு அவர், “நான் இந்த உலகத்தை இரண்டு வாயில்கள் உள்ள ஒரு குடிசைப் போல் காண்கிறேன். ஒரு வாயிலால் உள்ளே நுழைந்து அடுத்த வாயிலால் வெளியேறுவதைப் போன்று இருக்கிறது” எனப் பதிலளித்தார்.
ஆயிரம் வருடங்கள் வாழ்ந்த நபி இந்த உலக வாழ்க்கையை எப்படிப் பார்க்கிறார் என்பதை சிந்தித்துப் பாருங்கள்.
இவ்வளவுதான் உலக வாழ்க்கை.
உலகில் தோன்றிய அத்தனை நபிமார்களும் மரணத்தை சுவைத்தார்கள் மரணத்தின் கசப்பை உணர்ந்தார்கள். நபி யூஸுப் (அலை) அவர்கள் தனது வாழ்வின் ஆரம்பக் கட்டத்தில் கடுமையாக சோதிக்கப்பட்டார்கள். அப்போதும் அவர்கள் மரணத்தையே நினைத்துப் பார்த்தார்கள். பின்னர் அவர்களுக்கு ஆட்சி, அதிகாரம் கிடைத்தது. அந்த நிலையிலும் அவர்கள் மரணத்தையே நினைத்துப் பார்த்தார்கள்.
வாழ்க்கையின் துவக்கத்தையும் முடிவையும் ஆரம்பத்தையும் இறுதியையும் புரிந்து கொள்ளாத மனிதனைப் போல அறிவிலி உலகில் வேறு யாரும் இருக்க முடியாது.
நபி யூஸுப் (அலை) அவர்கள் ஆட்சியாளராக இருந்தபோது அவர் பிரார்த்தித்த துஆவை அல்குர்ஆன் இப்படிச் சொல்கிறது:
“யா அல்லாஹ் நிச்சயமாக நீ எனக்கு அரசாட்சியைத் தந்து கனவுகளின் விளக்கங்களையும் எனக்குக் கற்றுத் தந்தாய் வானங்களையும் பூமியையும் படைத்தவனே இம் மையிலும் மறுமையிலும் நீயே என் பாதுகாவலன். முஸ்லிமாக (உனக்கு முற்றிலும் வழிப்பட்டவனாக இருக்கும் நிலையில்) என்னை நீ கைப்பற்றிக் கொள்வாயாக! இன்னும் நல்லடியார் கூட்டத்தில் என்னைச் சேர்த்து விடுவாயாக!”
குர்ஆன் ( 12 :101)
இதுதான் அவர்களுடைய பிரார்த்தனையாக இருந்தது. ஒவ்வொரு முஃமினுடைய பிரார்த்தனையாகவும் இதுவாகத்தான் இருக்க வேண்டும்.

ஒவ்வொரு முஃமினுடைய கவலையாக, சிந்தனையாக மரணம் இருக்க வேண்டும். மரணத்தை மையமாக வைத்தே அவனுடைய அனைத்து நகர்வுகளும் அமைய வேண்டும். நபி ( ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களது ஆயுளும் 63 வயதோடு முடிகிறது.

"நபியே! நீங்களும் மரணிக்கக் கூடியவரே அவர்களும் மரணிக்கக் கூடியவர்களே" என்று அல்குர்ஆன் நபியவர்களை விளித்துப் பேசியிருக்கிறது.
அல்லாஹ்வின் இறுதித் தூதர் முஹம்மத் நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களும் மௌத்தின் கசப்பை அனுபவித்தார்கள் ஸகராத் வேதனையை அனுபவித்தார்கள். ஸகராத் வேதனையைத் தாங்கிக் கொள்ள முடியாத நிலையில் கண்மணியான ரஸூல் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் ஒரு பாத்திரத்தில் தண்ணீரை வரவழைத்து அதில் கையை விட்டு தண்ணீரை எடுத்து தனது முகத்திலும் மேனியிலும் தடவிக் கொண்டார்கள். இதனைப் பார்த்த பாத்திமா ( ரழியல்லாஹு அன்ஹா ) அவர்கள் கவலை மேலீட்டால் "ரஹ்மதுன் லில் ஆலமீன் ஆகிய எனது தந்தைக்கு இப்படி யொரு வேதனையா? " என்று ஆதங்கப்பட்டபோது , நபியவர்கள் மரணப் படுக்கையில் இருந்தவாறே,
"எனதருமை மகளே ! கவலைப் படாதீர்கள். இன்றோடு உமது தந்தையின் எல்லாக் கஷ்டங்களும் துன்பங்களும் நீங்கிவிட்டன. இதுதான் நான் கஷ்டப்படுகின்ற கடைசித் தருணமாக இருக்க முடியும்" என்று தனது மகள் பாத்திமாவுக்கு ஆறுதல் சொன்னார்கள். (இப்னுமாஜா)
ர.ரா

மரணத்தறுவாயில் மாமன்னர்கள்

மரணத்தின் சிந்தனை - 7



கலீபா ஹாரூன் அர்ரஷீத் அவர்கள் மிகப் பெரும் ஆட்சியாளர்களுள் ஒருவர். பெரும் சாம்ராஜ்யத்தின் சொந்தக்காரர். இஸ்லாமிய சாம்ராஜ்யத் தின் தலைவராக விளங்கிய அவர் நோயுற்று மரணப்படுக்கையில் இருக்கின்ற சமயத்தில் தனது மகனைப் பார்த்து அல்குர்ஆன் இந்த வசனங்களை ஓதுகிறார்.
"எவனுடைய செயல்கள் எழுதப்பட்ட ஏடு அவனுடைய இடது கையில் கொடுக்கப்பெறுவானோ அவன், "என்னுடைய ஏடு எனக்குக் கொடுக்கப்படாதிருக்க வேண்டாமா?
என்னுடைய கணக்கையே இன்னதென்று நான் அறியாதிருக்க வேண்டாமா?
நான் இறந்தபொழுதே என்னுடைய காரியம் முடிவு பெற்றிருக்க வேண்டாமா?
என்னுடைய பொருள் எனக்கு ஒன்றும் பயனளிக்க வில்லையே!
என்னுடைய அரசாட்சியும் அழிந்துவிட்டதே!" என்று புலம்புவான்.
(அல்குர்ஆன் : 69:25 -29)

கலீபா ஹாரூன் அர்ரஷீத் அவர்களின் மகன் மஃமூன். அவரும் ஒரு பிரபலமான கலீபா. அவர் மரணத் தறுவாயில் "நிலையான ஆட்சியைப் பெற்றிருக்கக் கூடிய ரப்பே ! ரஹ்மானே !! ஆட்சியை இழந்துவிட்ட இந்த அடியானுக்கு நீ ரஹ்மத் செய்வாயாக!" என பிரார்த்தித்ததாக வரலாறு கூறுகிறது.

மற்றுமொரு பிரபலமான ஆட்சியாளர் அப்துல் மலிக் பின் மர்வான். இவர் மரணப் படுக்கையிலே இருக்கும் சந்தர்ப்பத்தில் எழுந்து தனது வீட்டு மொட்டை மாடிக்குச் சென்று வெளியே பார்க்கிறார். அப்போது துணி துவைத்து வாழ்வை ஓட்டிவரும் ஒரு சலவைத் தொழிலாளியைக் காண்கிறார்.

அப்போது அவர்,"நான் அந்த சலவைத் தொழிலாளியைப் போல இருந்திருக்கக் கூடாதா! நாளாந்தம் துணியைத் துவைத்து எளிமையாகவும் ஹலாலாகவும் சம்பாதித்து வாழ்க்கை நடத்தியிருக்கக் கூடாதா! பெரும் ஆட்சி, அதிகாரங்கள் எல்லாம் எனது கைக்கு வராமல் இருந்திருக்க வேண்டுமே! இதற்கெல்லாம் நான் எப்படி மறுமையில் பதில் சொல்வேன்!" என்று அவர் ஆதங்கப்பட்டார்.

இதனைக் கேள்வியுற்ற இமாம் அபூ ஹாதிம் (ரஹ்) அவர்கள், "அல்ஹம்துலில்லாஹ். ஆட்சியாளர் அப்துல் மலிக் மர்வான் அவர்கள் தனது கடைசிக் காலத்தில் எங்களைப் போன்று வாழ்ந்திருக்க வேண்டுமே என்று நினைக்கிறார்கள். நாம் எமது மரணத் தறுவாயில் நிச்சயமாக அவர்கள் இருந்த நிலையில் நாம் இருந்திருக்க வேண்டுமே என்று கைசேதப்பட மாட்டோம். இந்த நிலையை எமக்கு அமைத்துத் தந்த அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்" என்று சொன்னதையும் வரலாறு பதிந்து வைத்திருக்கிறது.
ர.ரா

விதியும் மதியும்

மரணத்தின் சிந்தனைகள் 8



"ஹகீம் அபலாத்தூன் " முற்காலத்தில் வாழ்ந்திருந்த இவர், ஒரு நல்ல வான சாஸ்திரியாகவும் , நட்சத்திரக் கலைகளில் நிபுணராகவும் இருந்தார் . இவர் இறந்தவரை உயிர்ப்பிக்கும் முயற்சியில் ஈடுபட்டு ஆன்மாவின் அந்தரங்கத்தை அறிந்து கொள்ளும் அளவிற்கு பெரும் அறிஞர் எனச் சொல்லப்படுகிறது.

தனது ஆராய்ச்சியின் மூலம் தனக்கு மரணம் ஏற்படும் சமயத்தையும் கூட தெரிந்திருந்த இவர் , அதை தடுப்பதற்கு பல ஏற்பாடுகளும் செய்து கொண்டிருந்தார். சமயம் வந்தது இஸ்ராயீல் (அலை) அவர் முன் தோன்றுகிறார். அவருடைய பரிசோதனை முயற்சிகள் எதுவுமே பயன் அளிக்காமல் மரணத்தில் சிக்கிக் கொண்டார்.

இவரைப் போன்று ஜாலிநூஸ் என்பவரும் ஒருவராவார். அவரும் இறுதியில் மரணத்தை தழுவினார் .

நபி இல்யாஸ் (அலை) அவர்களிடம் மலக்குல் மவ்த் (அலை) வந்து ,

" உங்கள் உயிரை பிடிக்கும்படி அல்லாஹ் என்னை ஏவி உள்ளான் "

இதனை கேட்ட இல்யாஸ் நபி அவர்கள் அதிர்ச்சியுடன் ஏங்கி ஏங்கி அழுதனர் .

"அல்லாஹ்வின் நபியே ! இந்த அழுகை துனியாவின் பேரிலா ? அல்லது மரணத்தில் பேரிலா ? என்று கேட்டதற்கு ,

"இவைகளைப் பற்றிய அழவில்லை , எனக்குப் பின்னர் அநேக சாலிஹான நல்லடியார்கள் அல்லாஹுவை இபாதத்து ( வணக்கம் ) செய்து கொண்டும் , திக்ரு செய்து கொண்டும் இருப்பார்கள் . நான் இப்போது இறந்து விட்டால் , அந்த நற்செய்கைகள் செய்வதற்கு எனக்கு வாய்ப்பு (நஸீபு) இல்லாமல் ஆகிவிடும் என்பதை நினைத்துதான் அழுகிறேன்"என்றார்கள்

அப்போதும் அல்லாஹ் அறிவித்தான் : "மலக்குல் மவ்த்தே ! நம்முடைய நபி இல்யாஸ் என்னை மிகுதமாக வணங்குவதற்கும் , துதி செய்வதற்கும் ஆதரவு வைத்ததனால் அவருடைய உயிரை பிடிக்க வேண்டாம் . அவரை இறுதி கியாமத் நாள் வரையிலும் ஹயத்துடையவராக ஆக்கிவிட்டோம் " என அறிவித்தான் .

நபி இல்யாஸ் (அலை) , இத்ரீஸ் (அலை) கிள்ரு (அலை) , ஈஸா (அலை) இந்த நால்வரும் கியாமத் நாள் வரை உயிருடன் இருந்து அப்பால் மரணிப்பார்கள் - (துர்றத்)

விதி இரு வகைப்படும்

1) முஹ்கம் (நிச்சயத் தீர்ப்பு )

2) முப்றம் (செய்கையின் பொறுப்பில் நிகழும் தீர்ப்பு )

2-வது தீர்ப்பு மதிநுட்பத்தால் நற்செய்கைகளை சமயத்துக்கு ஏற்றவாறு செய்தல் ,இல்லாதவர்களுக்கு உணவு உடை கொடுத்தல் , செய்த குற்றம் உணர்ந்து மன்னிப்பு தேடல் பெற்றோர் மற்றும் பெரியவர்கள் துவா பேற்றினை பெறுதல் முதலியவைகளால் விதியை வெல்லுதல் இயலும் என்பதாக குர்ஆனில்...

يَمْحُوْا اللّٰهُ مَا يَشَآءُ وَيُثْبِتُ ‌ۖ‌ وَعِنْدَهٗۤ اُمُّ الْكِتٰبِ

எனினும், அவன் (அதில்) நாடியதை அழித்து விடுவான்; (அவன் நாடியதை) உறுதியாக்கிவிடுவான். (அனைத்திற்கும்) அசல் பதிவு அவனிடத்தில் இருக்கிறது. (அதன்படி எல்லா காரியங்களும் தவறாது நடைபெறும்.) (அல்குர்ஆன் : 13:39)

அல்லாஹ் எந்த வகை படைப்பையும் அவை பூலோகத்தில் தோன்றுவதற்கு முன்னமேயே , ஏதோ ஒருவித படைப்புடனே படைத்து விடுகிறான் .

அவ்வாறே ஒரு பீடையையும் அவற்றுடன் சேர்த்தே படைக்கிறான். பின்னர் யாருக்கு வேண்டி அப்பீடை படைக்கப்பட்டதோ , அவர் மீது அதைச் சாட்டுகின்றான் . ஆனால் அவரிடமிருந்து நன்மொழி , நற்செய்கை ( ஈகை ) முதலியன மேலோங்கும் போது , அது , அந்த பீடையை புறந்தள்ளி திருப்பி விடுகிறது . சிலவேளை மரணம் வரும் சமயம் , நன்மைகள் எதிரேச் சென்று , அந்த மரணத்தைக் கூட திருப்பி விடுகிறது . இதனையே நபி (ஸல்) அவர்கள்

"லாயுரத்துல் கலாஉ இல்லத் துஆஉ வலாயஸீது பில்உம்றி இல்லல் பிர்று "

"விதியை பிராத்தனை (துஆவை)யேயொழிய வேறு ஒன்றும் தடுக்காது ; வாழ்நாளை நீடிக்கச் செய்வது ஈகை உபகாரங்களை யொழிய

வேறு ஒன்றுமில்லை " என்று கூறியுள்ளார்கள்

இதிலிருந்து :- அல்லாஹ்வுக்கு உகந்த நற்செயல்கள் புரிவதேயன்றி, வேறு எந்த உபாயத்தாலும் விதியை வெல்ல முடியாது என்பதே தெளிவு .

ர.ரா

மரணத்தின் வேதனை

மரணத்தின் சிந்தனைகள்- 9



"மரணத்தின் வேதனை மனிதர்களுக்குத் தெரிந்து இருப்பது போன்று விலங்கினங்களுக்குத் தெரிந்திருக்குமாயின், அவை மரணத்தை நினைத்து நினைத்து மெலிந்து, தசையும் , கொழுப்பும் கரைந்துருகி, வெறும் தோலும் எலும்புமாகக் காட்சியளிக்கும் "
இன்னும் "மரணத்தருவாயில் உண்டாகும் வேதனையானது உயிரோடு இருக்கும் மனிதனை கூரிய வாளால் எழுபது தடவை வெட்டுவதைக் காணக் கடினமாக இருக்கும் – **ஹதீஸ்**

அம்ர் இப்னு ஆஸ் ரலியல்லாஹு அவர்களின் புதல்வர் கூறியிருப்பதாவது: " மனிதனுக்கு பேசவும் யோசிக்க புத்தியும் உண்டாயிருக்க மரணம் வரும்போது அதன் வேதனை இன்னவிதம் என்று ஒரு சிறிதளவேனும் எடுத்துச் சொல்ல அவனால் முடிவதில்லை . எனது தந்தையார் மரணத்தருவாயில் உஷாராக இருந்ததைக் கண்ட நான் தந்தையே உங்களுடைய வேதனை சிறிது எடுத்துக் கூறுங்கள் " என்று வேண்டி நின்றபோது அவர்கள் :
" மகனே ! வார்த்தைகளால் விளக்கிக் காட்ட முடியாத நிலை , எனினும் சிறிது சொல்கிறேன் கேள்; அல்லாஹ்வின் பேரில் ஆணையாகச் சொல்கிறேன் ; என் வேதனைகளில் ' ரள்வா ' என்ற பிரமாண்டமான மலை சுமத்தப்பட்டு இருப்பது போலும் , எனது உயிர் ஊசித் துவாரத்திற்குள் நுழைந்து இழுக்கப்படுவது போலும் , பூமியும் வானமும் ஒன்றோடொன்று உராய அவற்றுக்கிடையில் அகப்பட்டு நெருக்கப்படுவது போலும் , நான் இப்போது அவஸ்தைப் படுகிறேன்"என்று உரைத்தார்கள் .

மரணம் அணுகும்போது, உலக சுகங்கள் யாவற்றையும் விட்டுப் பிரியப் போகும் கவலை ஒரு பக்கம் ;
மனிதர்களுக்கு இழைத்த அக்கிரமங்களும், அநீதங்களும் , அடாச் செயல்களும் , முறைகேடுகளும் ஒன்றாக திரண்டு அப்போது மனத்தை நோவிக்கும் சிந்தனை ஒரு பக்கம் ;

எமதூதர் சமீபித்து கொண்டிருக்கும் விரைவின் வேகத்தால் கலங்கும் இருதயத்தின் கலக்கம் ஒருபக்கம் ;
சைத்தான் ஆகிய இப்லீஸ் லஃனதுல்லா(ஹ்)வால் ஏற்படும் சூழ்ச்சியின் ஏமாற்றம் மற்றொரு பக்கம் ;
அவயவங்கள் தத்தம் சக்தியில் நின்றும் தளர்ந்து , பார்க்கவோ, கேட்கவோ , பேசவோ உணர்வற்று இருப்பது ஒரு பக்கம் ;
இவ்வாறான துன்பங்களால் ஏக்கமுற்று தடுமாறிச் சமாளிக்க முடியாத நிலைமையில் தத்தளிக்கும் போது ,
தாகம் மற்றொரு பக்கம் , அவனது நாக்கை இழுத்து சுருட்டி கொண்டுவிடுகிறது.
அப்போது ஏழு கடல் நீரையும் அமிர்தமாக்கி அவனுக்கு ஊட்டப்படினும் அவனது மரணத்தின் கசப்பு சிறிதளவேனும் குறையாது .
அவன் தனது ஆசாபாசங்கள் யாவும் ஈடேற முடியாமல் அப்போது நிர்க்கதியாகிவிடுவான் . அவனது பரிதவிப்பு , கூப்பாடு யாவும் பயனற்று முடிவில் மரண வாளுக்கு இறையாகி விடுகிறான் . இவ்வாறு இமாம் ஷாபி ரஹ் அவர்கள் **' இர்ஷாத் '** என்னும் நூலில் விவரித்துள்ளார்

وَ جَآءَتْ سَكْرَةُ الْمَوْتِ بِالْحَـقِّ ذٰلِكَ مَا كُنْتَ مِنْهُ تَحِيْدُ
மரணத்தின் கஷ்டம் மெய்யாகவே வந்துவிடும் பட்சத்தில் (அவனை நோக்கி) "நீ தப்பிவிடக் கருதியது இதுதான்" (என்று கூறப்படும்.)
(அல்குர்ஆன் : 50:19)
ர.ரா

மரணத்தின் சிந்தனைகள் - 10

( மீள் பதிவு )



மண்ணறைவாசிகள் கேட்கிறார்கள் பார்க்கிறார்கள், பதில் சொல்கிறார்கள்

(மரணத்திற்கும் அப்பால் உள்ள மாயம் 9)

இறைநேசர்களுடைய மண்ணறை ஒருவர் ஸியாரத்துச் செய்தால் அவரை அந்த இறைநேசர் நன்கு அறிவார். அவர் ஸலாம் சொன்னால் அந்த மண்ணறை இறைநேசர் அதற்குப் பதில் சொல்வார் . இறைநேசரின் மண்ணறைக்கு அருகாமையில் ஒருவர் சம்மனங் கொட்டி உட்கார்ந்து திக்ரு செய்தால் , அந்த இறைநேசரும் சம்மனங் கொட்டி உட்கார்ந்து சேர்ந்து திக்ரும் செய்கிறார் .

ஒர் இறைநேசர் இறந்ததும் அன்னார் பேரில் அன்பியா , அவுலியாக்களுடைய அர்வாஹுகள் மைய்யத் தொழுகை தொழும் என்பதாக இமாம் அப்துல் வஹ்ஹாபு ஷஃறானீ எழுதிய தபகாத்துல் குப்தா பாகம் 2 -ல் 65 பக்கம்

பொதுவாக எல்லா மையித்துகளும் தன்னை குளிப்பாட்டுபவர்களையும் , சுமந்து செல்பவர்களையும் , மண்ணறைக்கு அருகில் நிற்பவர்களையும் பார்க்கிறது , அவர்களது பேச்சுக்களை கேட்கிறது என்பதாக பதாவா குப்றாவில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

"மையித்து உனது பாதரட்சையின் சப்தத்தையும் கூட கேட்கின்றது " என்பதாக புகாரி , முஸ்லீம் , அபூதாவூது , நஸயீ ஆகிய கிரந்தங்களில் சொல்லப்பட்டிருக்கிறது .

உடனே நவீனத்துவவாதிகள் கீழ்க்கண்ட குர்ஆன் வசனங்களை காட்டி ஹதீஸ் உண்மையா ? குர்ஆன் உண்மையா? என்று விபரம் கேட்கிறார்கள் .

اِنَّكَ لَا تُسْمِعُ الْمَوْتٰى وَلَا تُسْمِعُ الصُّمَّ الدُّعَآءَ اِذَا وَلَّوْا مُدْبِرِيْنَ

(நபியே!) மரணித்தவர்களுக்குக் கேட்கும்படிச் செய்ய நிச்சயமாக உங்களால் முடியாது. (அவ்வாறே உங்களுக்குப்) புறங்காட்டிச் செல்லும் செவிடர்களுக்கு நீங்கள் அழைக்கும் (உங்களுடைய) சப்தத்தைக் கேட்கும்படிச் செய்யவும் முடியாது. (குர்ஆன் : 27:80)

செத்த மையத்துக்கள் செவி ஏற்பதாக நவீன விஞ்ஞானத்தால் தக்க ஏற்பாடு செய்வதாக வைத்துக் கொண்டாலும், நீங்கள் மையத்துக்களிடம் பேசினால் அவற்றைக் கேட்டு மையத்துகள் பதில் சொன்னால், செத்த மையம் சாகவில்லை என்ற ஒரு நிலை வரும் அல்லவா ? இதனால் மரணம் பொய்ப்பித்துப் போகும்.

இறைவன் செத்துப் போன மையத்துக்களை அவன் நாடினால் செவியேற்க செய்ய முடியும் .

உதாரணமாக சூர் ஊதப்படும் போது சமாதிகளிலிருந்து வெளிப்பாடுவார்கள் என்று குர்ஆன் (20 : 102 )

(27 : 87) கூறுகிறது என்றால் மையத்துகளுக்கு காது நன்கு கேட்கிறதல்லவா ...?

அடுத்து இறைவன் நாடினால் ....

وَمَا يَسْتَوِى الْاَحْيَآءُ وَلَا الْاَمْوَاتُ اِنَّ اللّٰهَ يُسْمِعُ مَنْ يَّشَآءُ وَمَآ اَنْتَ بِمُسْمِعٍ مَّنْ فِى الْقُبُوْرِ

உயிருள்ளவர்களும் மரணித்தவர்களும் சமமாக மாட்டார்கள். நிச்சயமாக அல்லாஹ் தான் விரும்பியவர்களைச் செவியுறும்படிச் செய்கின்றான். (நபியே!) சமாதிகளில் உள்ளவர்களை செவியுறும்படிச் செய்ய உங்களால் முடியாது. (அல்குர்ஆன் : 35:22)

நீங்கள் நன்கு கவனிக்க வேண்டும்

அல்குர்ஆன் 😦27:80) , (35:22) ஆகிய இரு வசனங்களிலும் மரணித்தவர்களை செவியேற்க செய்யும்படி' உங்களால் ' முடியாது. ஆனால் இறைவனால் முடியும்

இந்த வசனத்தின்படி பத்ரு யுத்தத்தில் இறந்த இறை மறுப்பார்களின் பிணங்களிடம் நபிகளார் பேசினார்கள் என்பதாக முந்தைய பதிவுகளில் சொல்லி இருக்கிறேன் . கவனிக்கவும் .

இதற்கும் ஒரு படி மேலாக ஷைகுல் அக்பர் முஹ்யித்தீன் இப்னு அரபி (ரஹ்)

அவர்கள் வபாத்தான பிறகு அவர்களே தங்களது வீட்டிற்கு வந்தார்கள். தங்களது

வெள்ளாட்டியைக் கண்டு அவளது சுக செய்திகளையும் , நிலைமைகளையும் விசாரித்தார்கள். எல்லா விஷயங்களையும் அவள் விஸ்தாரமாக எடுத்துக் கூறினாள். அவர்கள் அவளிடமிருந்து விஷயங்களைக் கேட்டுத் தெரிந்து சென்றார்கள் என்பதாக புஸூஸுல் ஹிக்கம் உடைய ஷரஹில் இமாம் ஷைகு ஜுந்தி (ரஹ்) அவர்கள் கூறுவதாக ஸஆத்துத் தாரைன் 402 பக்கத்தில் எழுதப்பட்டுள்ளது .

நபி (ஸல்) அவர்களை, மவுத்தாகிப் போன தத்தம் சஹாபாக்களின் அர்வாஹுகள் சகிதம் சந்தித்து ,எல்லா உலகங்களையும் சுயேச்சையாகச் சுற்றி வருவதை இறை நேசர்கள் கண்கூடாகக் கண்டிருக்கிறார்கள் என்பதாக இமாம் கஸ்ஸாலி (ரஹ்) ஆதாரத்துடன் **தப்ஸீர் ரூஹுல் பயான் பாகம் 10 ,பக்கம் 99 .**

அபூபக்கர் (ரலி) அவர்கள் வபாத்தாகும் போது , " என்னுடைய ஜனாஸாவை நாயகம் (ஸல்) அவர்களுடைய

முபாரக்கான அறையின் முன்னால் வையுங்கள் . கதவு திறக்கப்பட்டு , அபூபக்கரை உள்ளே கொண்டு வாருங்கள் என்று உத்தரவு வந்தால் மட்டுமே அவ்வறையினுள் என்னை அடக்கம் செய்யுங்கள். இன்றேல் பொதுக் கபுருஸ்தானத்தில் அடக்கி விடுங்கள்" .

- என்று வஸிய்யத்துச் செய்திருந்தார்கள்

அவ்வாறே செய்யப்பட்டது . பூட்டப்பட்ட அறை வாயிலின் முன்பு ஜனாஸா வைக்கப்பட்டபோது, வாயில் கதவு தானாகவே திறந்து கொண்டது மட்டுமல்லாமல் , " தோழரைத் தோழரிடம் அனுப்பி வையுங்கள் " என்ற உத்தரவும் நபி (ஸல்) அவர்களின் ரவுளா ஷரீபிலிருந்து வெளிவந்தது.

- இவ்வரலாற்றை இமாம் பகருத்தீன் ராஜீ (ரஹ்) அவர்கள் தப்ஸீர் கபீர் , 5-வது பாகம் ,685 வது பக்கம் , தப்ரீஹுல் அத்கியா பீ - அஹ்வாலில் அன்பியா பாகம் 2 - பக்கம் 376 எழுதப்பட்டுள்ளது.

ர.ரா

மரணத்தின் சிந்தனைகள் 11



திருக்குர்ஆனில் மலக்குமார்களைப் பற்றியும் ,அவர்களின் கூட்டங்களைப் பற்றியும் குறிப்புகள் காணப்படுகின்றன

1) முகர்ரபூன்

2) ஹாபூன்

3 ) ஹம்லத்துல் அர்ஷ்

4 ) கர்றூபிய்யூன்

5) 6) கிராமுன் , காதிபீன்

7) ரகீபுனு அதீது

8) 9) முன்கர் , வ நகீர்

10) மாலிக்

11) ரிள்வான்

12) ஹப்ளத் (ஹாபிளீன் )

இவைத் தவிர இன்னும் எத்தனை ஆயிரம் கோடி மலக்குகள் இருக்கிறார்கள் என்பதை இறைவனே மிக்க அறிந்தவன் .

இவர்கள் யாவரையும் முதன்மை பெற்றவர்கள் வரிசைப் பிரகாரம்

1) ஜிப்ரீல் 2) மீக்காயீல் 3 ) இஸ்ராயீல்

4) இஸ்ராஃபீல் (அலைஹி வஸ்ஸலாம்)

அன்றி 5) முன்கர் 6) நகீர் 7) ரகீப் 8) அதீத் 9) மாலிக் 10) ரிள்வான் (அலைஹிவஸ்ஸலாம் ) ஆக இந்த பத்து பேரின் பெயர்களை அவரவர்களின் 'தரஜா வரிசைப்படி மனப்பாடம் செய்து கொள்வது கடமையாகும் .

இவர்கள் அல்லாஹ்வின் கட்டளைக்கு மாறாக நடக்கவும் , பாவமான காரியங்களை செய்யவும்மாட்டார்கள்.

மனிதன் முதலிய ஜீவராசிகளை பாதுகாத்தல் , மனிதன் செய்யும் நன்மை தீமைகளை எழுதி வைத்தல் , நபிமார்களுக்கு இறைவனின் கட்டளைகளை அறிவித்தல் முதலிய காரியங்களையும்,

இன்னும் மனிதன் மற்ற ஜீவராசிகள் மரணிக்கும் போது அந்தந்த உயிர்களை கைப்பற்றுவதும் , மழை , புயல் காற்று குளிர் , உஷ்ணம் முதலியவற்றை நிகழச் செய்வது, கர்ப்பத்தில் சிசுவை காத்து அதனை வெளிப்படுத்துதல் ஆகிய எல்லா அலுவல்களையும் அல்லாஹ்வின் அனுமதிப்படியே இவர்கள் செய்துவருகின்றனர் .

சுவர்க்கம் , நரகம் இவைகளுக்கு அதிபதியாக ஆக்கப்பட்டிருப்பவர்களும் , மனிதன் மரித்த பிறகும் , கப்ருகளில் தோன்றி அன்னாரிடம் கேள்வி கணக்கு கேட்பவர்களும், எல்லா பொருட்களையும் பாதுகாப்பவர்களும் , உலக முடிவுக்காக சூர் என்னும் எக்காளம் ஊதுபவர்களும் இவர்களே அவர்கள் . ஆகவே அமரர்களைக் கொண்டு விசுவாசிப்பது, ஈமானின் அம்சங்களில் ஒன்றாகும் .

قُلْ يَتَوَفّٰٮكُمْ مَّلَكُ الْمَوْتِ الَّذِىْ وُكِّلَ بِكُمْ ثُمَّ اِلٰى رَبِّكُمْ تُرْجَعُوْنَ

ஆகவே, (நபியே!) நீங்கள் கூறுங்கள்: "உங்கள் மீது (உங்கள் இறைவனால்) சாட்டப்பட்டிருக்கும் "மலக்குல் மவ்த்து" (என்ற மலக்குத்)தான் உங்களுடைய உயிரைக் கைப்பற்றுகின்றார். பின்னர், உங்கள் இறைவனிடமே நீங்கள் கொண்டு வரப்படுவீர்கள்." (அல்குர்ஆன் : 32:11)

மலக்குல் மவ்த் (அலை)அவர்களின் தோற்றம் காண்பதற்கு மிக பயங்கரமாகவும் , கொடூரமாகவும் மனத்துக்கு அச்சத்தையும் , நடுக்கத்தையும் , மருட்சியையும் கொடுக்கும் .பாவியாக இருப்பவர்களுடைய உயிரைக் கைப்பற்ற வரும்போது , எத்தனை பெரிய பலசாலிகளாக இருப்பினும் உயிரைக் கைப்பற்ற வரும்போது, இஸ்ராயீலின் வடிவத்தைக் காண்பதற்கு சக்தி பெற மாட்டார் .

ஒரு அடியான் விஷயத்தில் இறைவனுக்கு திருப்தி உண்டாகுமாயின் , அவன் இஸ்ராயீலிடம் " எனது அடியானிடம் போய் அவனது உயிரை கைப்பற்றுவீராக ! அவன்மேல் எனக்கு மிகவும் உகப்பு உண்டாகியிருக்கிறது . அவனது வணக்கம் எனக்கு போதுமானதாகும், நான் அவனை இதுவரையில் சோதித்து உள்ளேன் . எனக்குப் பிரியமான பதவியில் அவன் இருக்கிறான் " எனக் கூறுவான் .

உடனே இஸ்ராயீல் (அலை) வெண்மையான பிரகாசமான அமரர்கள் சகிதம் நறுமணங்கள் கமழ கிருபா கடாச்சாரத்துடன் அவனிடம் சென்று , வாழ்த்துக் கூறி அவனது உயிரை மிக இலகுவான முறையில் கைப்பற்றுவார் .

நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் இஸ்ராயீலை நோக்கி , "ஒருவன் கிழக்கிலும் , மற்றொருவன் மேற்கிலும், சிலர் கொள்ளை நோயிலும் , படை களத்திலும் , பலர் பூகம்பம் , வெள்ளம் , புயல் போன்ற இயற்கை பேரிடர்களிலும் உயிர்நீத்தல் ஏற்பட்டால் , ஏககாலத்தில் ஆங்காங்கு உள்ள உயிர்களை நீர் எப்படி கைப்பற்றுவீர் ? " என்று வினவியபோது ,

இஸ்ராயீல் (அலை ) அவர்கள் "உயிர்கள் எங்கு இருப்பினும் சரியே நான் போகாத் தகாத வேளையிலும் அவற்றை நன்கு ஞாபகம் செய்து , கொஞ்சம் கூர்ந்து நோக்குவேன்.அவ்வளவுதான் உடனே அவை எனது வலைக்குள் வந்து சிக்கிக் கொள்ளும் " என்றார்.

ஸய்திப்னு அஸ்லம் (ரஹ்) அவர்கள் அறிவிப்பதாவது " மலக்குல் மௌத் இஸ்ராயீல் (அலை) அவர்கள் தினமும் ஐந்து வேளை எல்லா இடங்களுக்கும் சென்று ஆதமுடைய மக்களின் முகத்தைப் பார்ப்பார் . அந்தப் பார்வையால்தான் சில சமயம் மரண நேரம் நெருங்கிய மனிதன் அவரைக் கண்டு திகிலடைந்து போகிறான் .

இன்னும் அவர் மனிதனை அவனது தொழுகை நேரங்களில் வந்து பார்வையிடுகிறார் . அவன் தொழுகையின் விதிகளை பேணி நடப்பதாகவும், தமக்குரிய மற்ற கடமைகளை சரிவர செய்த வண்ணம் இருக்கக் கண்டால் , அவன் மரணிக்கும் போது அவனிடம் மிக்க வாஞ்சையோடு அணுகுவார் . மரணப்படுக்கை என்னும் சஹராத்தில் அவனோடு வாதாடி கொண்டிருக்கும் சைத்தானை விரட்டிவிட்டு , அவனுக்கு "லா இலாஹ இல்லல்லாஹு முஹம்மதுர் ரசூலுல்லாஹி " என்ற மூல மொழியை அவனுக்கு ஞாபகம் ஊட்டி வைப்பார் .

ரஹ்மத் ராஜகுமாரன் .

(இப் பதிவுடன் மரணத்தின் சிந்தனைகள் தொடர் பதிவுகள் நிறைவு பெறுகிறது ) **20-01-2021**

வாழ்க்கை தத்துவங்கள் 1



மெய்யான ஞானி

சந்தைக் கடை சாக்கடையில் ஒரு நாய் செத்து கிடந்தது. அங்கு கடந்து சென்றவர்களுக்கு அது வெறுப்பைத் தந்தது

... "ச்சே ..எவ்வளவு அருவருப்பாய் இருக்கிறது" என்றார் ஒருவர்

" என்னமாய் நாறுகிறது " என்றார் மற்றொருவர் .

"பிதுங்கித் தெரியும் விலா எலும்புகளை பாருங்கள் குமட்டிக்கொண்டு வருகிறது " என்றார் மூன்றாமவர்

" பூட்ஸ் தயாரிக்கும் அளவுக்குக்கூட அதன் உடலில் தோல் இல்லை " என்றார் நான்காமர் .

"மோசமான முடிவு அதற்கு ஏற்பட்டது குறித்து எதுவும் வியப்படைய தேவை இல்லை " என்றார் ஐந்தாம் நபர்

அத்தனை கூட்டு குரலையும் ஊடுருவி கொண்டு ஒரு மென்மையான குரல் எழுந்தது "முத்துக்களை விடவும் அதன் பற்கள் வெண்மையாக

இருக்கிறது"

- அந்த ஜனங்கள் நிச்சயம் அது ஈஸாவால்தான் இந்த வார்த்தையை சொல்லி இருக்க முடியும் என்றார்கள். செத்த நாயைப் பற்றி இத்தனை நல்ல வார்த்தை வேறு யாரால் சொல்ல முடியும் ?

அங்கே ஈஸாவாகிய ஏசு நின்று கொண்டிருந்தார் .

இதுவே இயேசுவின் குணாதிசயம் ஆகும். அவர் இந்த உலகை எல்லாவற்றையும் முழுமையாக நேசித்தார் . எதுவும் அவருக்கு அசிங்கமாக அருவருப்பாக தெரியவில்லை. எல்லாம் ஒளிப் பிரகாசத்துடன் காட்சியளித்தன .

வாழ்க்கை மீது நீங்கள் எதை முன்னிலைப்படுத்துகிறீர்களோ அதுவே உங்கள் வாழ்க்கையாக அமைகிறது. உங்கள் வாழ்க்கை உங்களைப் பிரதிபலித்துக் காட்டுகிறது . உங்கள் மனதில் அசிங்கம் இருந்தால் எல்லா இடங்களிலும் அதைத்தான் காண்பீர்கள். உங்கள் மனம் சூதுவாது இல்லாமல் இருந்தால் வாழ்க்கை அழகானதாக இருக்கக் காண்பீர்கள் .

உண்மையான ஞானியால் உலகில் எந்த ஒரு பாவியையும் காண முடியாது . நீங்கள் ஞானிகள் என்று கூறுபவர்கள் எல்லாம் பெயரளவுக்குத்தான் ஞானிகள் துறவிகள் . அவர்களை பொருத்தவரை இந்த உலகம் பாவிகள் நிறைந்ததாக இருக்கிறது என்பதை கண்டனம் தெரிவிப்பதற்காகவே அந்த துறவிகள் உயிர் வாழ்கிறார்கள் .

அவர்கள் கண்டனம் செய்யும் அளவுக்கு ஜனங்களில் மனதில் தாங்கள் 'பாவிகள் பாவிகள் ' என்ற உணர்வை அதிகரிக்க செய்கிறார்கள் . உங்களைத் தாழ்த்திச் சொல்லும் அளவுக்கு அவர்கள் அகந்தை சந்தோஷம் கொள்கிறார்கள்.

ஒரு நிஜமான துறவி எப்போதும் பாவியை சந்திப்பதே இல்லை. இதே நினைவில் கொள்ளுங்கள் அவர் தேடிப் பார்த்தாலும் பாவியை கண்டுபிடிக்க முடியாது . இதுவே உண்மையான

துறவிக்கான விளக்கமாகும் .

வாழ்வில் எங்கும் அசிங்கத்தை ஒருவர் காண்பது இல்லையோ..அவருக்கு முழு வாழ்வும் மாறுதல் அடைந்து விடுகிறது. அது நம்ப முடியாத அளவு பேரழகுடன் திகழ்கிறது . அது முழுமையான அழகுடன் இருக்கிறது .

அந்த அழகிற்கு வடிவம் இல்லை. பெயரும் இல்லை .தெய்வீகம் என்பது ஒரு தரிசனம் உங்களுக்கு ரசனை குறித்த விழிப்புணர்வும் , நுண்ணுணர்வும் இருந்தால் மட்டுமே அந்த தரிசன உணர்வை பெறமுடியும் .

செத்த நாயிடம் ஏதோ ஒரு இணையற்ற அழகை இயேசுவால் மட்டும்தான் காணமுடிந்தது . அதன் பற்கள் முத்துக்களை விடவும் வெண்மையாக இருக்கின்றன என்று அவர் கூறும்போது , அந்த வெண்மையில் தெய்வீகம் வெளிப்பட்டது . அந்த வெண்மையில் தரிசன உணர்வை அவர் பெற்றார் . இதுவே ஒரு உண்மையான ஞானியின் அடையாளமாகும்.- ஓஸோ

ர.ரா

ஒருமையும், இருமையும்

வாழ்க்கை தத்துவங்கள் – 2



'படைப்பு ' என்பது உருவமற்ற நிலைக்கும் , உருவ மயமான நிலைக்கும் இடையே நடக்கும் ஒரு விதமான பிராக்ஞை .

எப்பொழுது உருவம் வருகிறதோ அப்போதே இருமையும் பிறக்கிறது . வெளிச்சம் இருட்டு , ஆண் பெண் , பிறப்பு இறப்பு ...இப்படியே இருமை பட்டியல் நீண்டு கொண்டே போகும்.

படைப்பின் அடிப்படை ஒருமை நிலைதான் . எனினும் படைப்பிற்கு வர்ணமும், நயமும் , நெய்தல் அழகும் சேர்ப்பது இருமை .

இன்று பற்பல ரூபங்களில் நிகழ்ந்திருக்கும் படைப்பு அனைத்துமே இருமையில் இருந்துதான் வேரூன்றி இருக்கிறது . இரண்டு என்று ஆனால்தான் 'பற்பல ' என்ற பன்மையும் உண்டானது .
ஒன்றே ஒன்று மட்டும் இருந்தால் அங்கு படைப்பு நிகழ வாய்ப்பில்லை . இரண்டு வந்தது வாழ்வெனும் நாடகம் தொடங்கியது !

இறைவன் " நான் புதையல் போல் மறைந்து இருந்தேன் என்னை அறிவிக்க விரும்பினேன் எனவே மற்றவர்கள் அறிந்து கொள்வதற்காக படைப்புகளைப் படைத்தேன் !" ஹதீஸ் குத்ஸி .
இருமை பிறந்ததும் , காமமும் பிறக்கிறது. எதிரெதிர் தன்மையில் உள்ள இரண்டு ஒன்றாக முயற்சிப்பதை தான் நாம் காமம் என்கிறோம் .

நாம் உடலுறவு என்று குறிப்பிடுவதும் இருமையின் அந்த இரு பாகங்களான ஆணும் - பெண்ணும் ஒன்றாகிவிட எடுக்கும் முயற்சிதான் காமம் எனப்படும்.
இந்த இருமை சந்திக்கும்போது , அதே செயல்முறையில் தனக்கு வேண்டியதையும் சாதித்துக் கொள்ள இயற்கை முயல்கிறது . அதுதான் இனப்பெருக்கமும் , உயிரின விருத்தியும்
இருமையின் எல்லா ரூபங்களும் , ஒன்றோடு ஒன்று இணைந்து ஒன்றாகிவிடத் தவிக்கிறது . ஏனெனில் முன்பு ஒன்றாக இருந்ததுதான் இப்போது இரண்டு ஆனது அதனால்தான் இவை இரண்டுக்கும் மீண்டும் ஒன்றாக விட வேண்டும் என்ற ஏக்கம் தொடர்ந்து கொண்டே இருக்கும் .

هُوَ الَّذِىْ خَلَقَكُمْ مِّنْ نَّفْسٍ وَّاحِدَةٍ وَّجَعَلَ مِنْهَا زَوْجَهَا لِيَسْكُنَ اِلَيْهَا فَلَمَّا تَغَشّٰىهَا حَمَلَتْ حَمْلًا خَفِيْفًا فَمَرَّتْ بِهٖ فَلَمَّاۤ اَثْقَلَتْ دَّعَوَا اللّٰهَ رَبَّهُمَا لَـئِنْ اٰتَيْتَـنَا صَالِحًا لَّـنَكُوْنَنَّ مِنَ الشّٰكِرِيْنَ
ஒரே மனிதரிலிருந்து உங்களை படைத்தவன் அவன்தான்; அவருடன் (சுகமாகக்) கூடி வசிப்பதற்காக அவருடைய மனைவியை அவரிலிருந்தே உற்பத்தி செய்தான். அவளை அவர் (தன் தேகத்தைக் கொண்டு) மூடிக் கொண்டபோது அவள் இலேசான கர்ப்பமானாள். பின்னர் அதனை(ச் சுமந்து) கொண்டு திரிந்தாள். அவள் சுமை பளுவாகவே "எங்கள் இறைவனே! நீ எங்களுக்கு நல்லதொரு சந்ததியை அளித்தால் நிச்சயமாக நாங்கள் உனக்கு நன்றி செலுத்திக் கொண்டிருப்போம்" என்று அவ்விருவரும் பிரார்த்தித்துக் கொண்டிருந்தார்கள். ( குர்ஆன் : 7:189)

ஒருமையிலிருந்து இருமை என்பதை இப்படியும் கூட சொல்லலாம்....
" இறைவன் என்னுடைய பேரொளியையைத்தான் முதலில் படைத்தான் . அப்பேரொளியில் இருந்தே சகலத்தையும் படைத்தான் " - .நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்
ர.ரா

இலக்கின்றி எறியப்படும் அம்பு

வாழ்க்கை தத்துவங்கள் -3

நீங்கள் யாராக வேண்டுமானாலும் இருங்கள் . ஆனால் சரியான செயல்களை சரியாக செய்யாவிட்டால் வாழ்க்கை உங்களுக்கு வேண்டியவாறு நிகழாது . பலன் தராது.

உங்களைப் பொறுத்தவரை நீங்கள் மிக நல்ல மனிதராக இருக்கலாம் . ஆனால் அதற்காக உங்கள் தோட்டத்திற்கு நீர் பாய்ச்சாமல் அங்கிருக்கும் செடி கொடிகள் பூ பூக்காது .

ஆற்றிலேயே நீங்கள் இருந்தாலும் , அள்ளி குடிக்காமல் தண்ணீர் தானாக வாய்க்குள் போகாது .
எவ்வளவுதான் கூர்மையாக இருந்தாலும் அம்பு இலக்கின்றி எறியப்பட்டால் அது பலன் தராது .
இப்பிரபஞ்சத்தை பொருத்தவரை நல்லது கெட்டது என்று எதுவுமே இல்லை இது நல்லது அது கெட்டது என்பதெல்லாம் மனிதர்கள் மற்றும் சமுதாயத்தின் கோட்பாடுகள். சமுதாயம் அமுல்படுத்தும் போது அவற்றை நாம் ஏற்கலாம் .

ஆனால் பிரபஞ்சத்திற்கு அந்த நல்லத்தனம் ஒரு பொருட்டே அல்ல . இப்பிரபஞ்சம் யாரையும் நல்லவர் - கெட்டவர் என்று பிரித்துப் பார்ப்பதில்லை . அதைப் பொருத்தவரை எல்லோரும் ஒன்றுதான். நல்லோருக்கும் பெய்யும் மழை எல்லோருக்கும் என்பதுபோல அதன் செயல்பாடுகள் இருக்கும் .
இதற்கு ஓர் உதாரணத்தைச் சொல்றேன்.

அமெரிக்காவின் வடக்கு பகுதியில் இருக்கும் மிச்சிகன் மாநிலத்தில் குளிர்காலம் மிகக் கடுமையாக இருக்கும் . அக்குளிரில் ஏரிகளின் மேற்பரப்பு பனிக்கட்டியாக உறைந்துவிடும். அந்த நேரங்களில் மக்கள் அங்கு " ஐஸ் ஃபிஷிங் "கில் ஈடுபடுவார்கள். ஐஸ் ஃபிஷிங் என்றால் ஏரின் மேற்பரப்பில் இருக்கும் பனிக்கட்டியில் துளை போட்டு மீன் பிடிப்பது .
இப்படிப்பட்ட குளிர்காலத்தில் ஒரு முதியவர் காலை பத்து மணி வாக்கில் பனிக்கட்டியில் சிறு துளையிட்டு மீன் பிடிக்க தூண்டில் போட்டு அமர்ந்து கொண்டார் .
அங்கெல்லாம் மீன் பிடித்தல் என்பது வெறும் மீன் பிடிப்பது பற்றியல்ல . அது ஒரு பொறுமையின் சிகர சாதனை . இது அவருக்கும் தெரியும் . அதனால் அவர் பொறுமையாக காத்திருந்தார் .
நேரம் மிக மெல்ல மெல்ல ஊர்ந்து இப்படியே மாலை 4 மணி ஆனது. ஆனால் அவரது மீன் கூடை காலியாகவே இருந்தது .

அந்த நேரத்தில் சத்தமான ராக் மியூசிக் அதிர ஸ்டீரியோவுடன் ஒரு இளைஞன் அவர் பக்கத்தில் வந்து அமர்ந்தான். பனிக்கட்டியில் துளைப் போட்டு அவனும் மீன்பிடிக்க தயாரானான் . ராக் இசை மிக சத்தமாக அலறிக் கொண்டிருந்தது .

அந்த முதியவர் அவனை வேண்டா வெறுப்போடு சர்வ அலட்சியமாக பார்த்தார் . " நான் காலையில் இருந்தே சப்தமே போடாமல் மணிக்கணக்காக , பொறுமையாக அமர்ந்திருக்கிறேன் எனக்கே இதுவரை ஒரு மீன் கூட சிக்கவில்லை . இந்த முட்டாள் பையன் இப்படி காதை கிழிக்கும் இசையோடு பெரியதாக மீன்பிடிக்க வந்துவிட்டான் அதுவும் மாலை நாலு மணிக்கு ! இந்த இளைஞனைப் போன்ற முட்டாள் யாருமே இல்லை " என்று தனக்குள் நினைத்துக் கொண்டார் .

ஆனால் என்ன ஆச்சரியம் ! வந்த பத்து நிமிடத்தில் இந்த இளைஞன் பெரியதொரு ஒரு மீனைப் பிடித்து விட்டான் . அந்த பெரியவரால் அதை நம்ப முடியவில்லை " சரி..சரி.. இது ஏதோ காகம் உட்கார பனம்பழம் விழுந்த கதையாக நடந்திருக்கும் " என்று தன்னைத்தானே தேற்றிக் கொண்டார் .
ஆனால் அடுத்த பத்து நிமிடத்தில் அந்த இளைஞன் இன்னும் ஒரு பெரிய மீனை உடனேயே பிடித்து விட்டான் . அதற்கு மேல் அவரால் அவனை புறக்கணிக்க முடியவில்லை . அதிசயம் தாளாமல் அவனையே பார்த்துக் கொண்டிருந்தார். அப்போது மீண்டும் ஒரு பெரிய மீனை அவன் பிடித்தான் .
தன் அகம்பாவத்தை ஒதுக்கி வைத்துவிட்டு, அந்த முதியவர் அந்த இளைஞனிடம் சென்று , " உன் ரகசியம்தான் என்ன ? காலையிலிருந்து இங்கேயேதான் நான் அமர்ந்திருக்கிறேன். ஆனால் இதுவரை ஒரு மீன் கூட பிடிக்க வில்லை அதற்குள் நீ நான்கு பெரிய மீன்களை பிடித்து விட்டாயே இது எப்படி நடந்தது ? "
அந்த இளைஞன் தன் ஸ்டீரியோவின் சப்தத்தை குறைத்து விட்டு மீண்டும்
" ரூ ரா ரா ரா ரா ரம் " என்றான் .
முதியவருக்கு ஒன்றுமே புரியவில்லை
"நீ சொல்வது எனக்கு ஒரு வார்த்தை கூட புரியவில்லை " என்றார் .
அவன் தன் வாயிலிருந்து ஏதோ ஒன்றை கையில் துப்பி , அதை அவரிடம் காட்டியபடி " தூண்டிலில் மாட்டும் புழுக்களை வெதுவெதுப்பாக வைத்திருக்க வேண்டும் " என்றான்

சரியான செயல்களை சரியாக செய்யவில்லை என்றால் சரியானவையாக எதுவும் உங்களுக்கு சரியாக நடக்காது . சரியான செயல்கள் என்றால் நீங்கள் எதை சரி என்று நினைக்கிறீர்களோ அது அல்ல; எது சரியாக வேலை செய்யுமோ அது .

நீங்கள் நல்லவர் என்பது சமுதாயத்திற்கு தான் முக்கியமே தவிர சரியான செயலுக்கு அல்ல . ஆனால் வெறும் மனத்தளவில் எண்ணங்களின் கண்ணோட்டத்தில் ' சரியாக செய்திருப்போம் ' என்று எண்ணி வாழ்வதை மட்டும் விட்டு விடுங்கள் .

மனம் எண்ணங்களை தாண்டி , இப்பிரபஞ்சம் என்று ஒன்று உள்ளது . ஒவ்வொரு காரியங்களுக்கும் தக்க காரணம் இருந்தாக வேண்டும். அந்த காரியங்கள் மிகச் சரியான செய்கையால் மட்டுமே நிறைவேறும்.

இந்த பிரபஞ்ச மடியில் வாழும் ஓர் உயிராக உங்கள் கண்ணோட்டத்தை விரிவுபடுத்தி கொள்ளுங்கள் . அதன் பின் உங்கள் விதி உங்கள் கையில் உங்கள் விருப்பப்படி எல்லாம் சரியாக நிகழும்.

இது வெறும் வார்த்தை இல்லை. இது ஒரு வாக்குறுதி .

لَهٗ دَعْوَةُ الْحَـقِّ‌ وَالَّذِيْنَ يَدْعُوْنَ مِنْ دُوْنِهٖ لَا يَسْتَجِيْبُوْنَ لَهُمْ بِشَىْءٍ اِلَّا كَبَاسِطِ كَفَّيْهِ اِلَى الْمَآءِ لِيَبْلُغَ فَاهُ وَمَا هُوَ بِبَالِـغِهٖ‌ وَمَا دُعَآءُ الْكٰفِرِيْنَ اِلَّا فِىْ ضَلٰلٍ

அவனை அழைப்பதுதான் சரியானதாகும். அவனைத் தவிர இவர்கள் அழைக்கக் கூடிய வேறு கடவுள்களால் இவர்களின் அழைப்புக்கு எவ்வித பதிலும் அளிக்க முடியாது.

அவர்களை அழைப்பது எப்படி இருக்கிறது என்றால், ஒருவன் தண்ணீரை நோக்கித் தன் இரு கைகளை நீட்டி, “தண்ணீரே, எனது வாயினுள் வந்து விடு!” என்று கோருவதைப் போன்று உள்ளது. உண்மையில் தண்ணீர் வாயினுள் தானாகவே செல்லக் கூடியதாய் இல்லை.

இவ்வாறே இறைமறுப்பாளர்களின் இறைஞ்சுதல் இலக்கின்றி எறியப்படும் அம்பாகும். (அல்குர்ஆன் : 13:14)

ரஹ்மத் ராஜகுமாரன்

அழகும் ,ஆபத்தும்

வாழ்க்கை தத்துவங்கள் 4



கவர்ச்சிகரமான ஆணோ, பெண்ணோ அவர்கள் கவர்ச்சியால் வசீகரமாக உங்களை ஈரக்கிறார்கள் . அவர்களின் பிடியில் நீங்கள் அகப்பட்டுக் கொண்டால் முதலில் உங்களுக்கு பயம் ஏற்படும் . பின் நீங்கள் அவர்களுக்கு அடிமையாகவே மாறி விடுவீர்கள் .

அவர்கள் அழகானவர்கள் . நீங்கள் அவர்களை சார்ந்திருக்க விரும்பலாம் ; அவர்களை சார்ந்திருப்பது என்றால் உங்கள் சுதந்திரத்தை அவர்களிடம் இழப்பதாக அர்த்தம் . ஒத்துக் கொள்கிறீர்களா ?

அவர்களைச் சார்ந்து இருக்கும்போது அதன் பிறகு நீங்கள் நீங்களாக இருக்க முடியாது . காரணம் அவர்கள் கவர்ச்சியானவர்கள் . எப்போதும் அவர்களைப் பற்றியே சிந்தனை. அவர்களை விட்டு விலக உங்களால் முடியவே முடியாது. நீங்கள் அவர்களைப் பிடித்துத் தொங்கிக் கொண்டு இருக்கிறீர்கள்.

உங்கள் சுபாவம் குறித்து உங்களுக்குத் தெரியும் . அவர்கள் எவ்வளவு கவர்ச்சியாக இருக்கிறார்களோ அந்த அளவுக்கு அவர்களைப் பிடித்துக் கொண்டு நீங்கள் தொங்கிக் கொண்டிருக்கிறீர்கள் . நீங்கள் மேலும் மேலும் சார்ந்திருக்க முயல்கிறீர்கள். அதுவே பயத்திற்கு காரணம்.

உலகின் அழகான பெண்ணை விரும்பும் ஒருவர் அவள் தனக்கு மட்டுமே விசுவாசமாக நடந்து கொள்ள வேண்டும். தனக்காக அவள் தன்னை அர்ப்பணித்துக் கொள்ள வேண்டும் என்று ஆசைப்படுகிறார்கள். அது மிகவும் சிரமமான காரியம் . நடக்க முடியாத ஒன்றை கேட்கும் செயல் .

ஒரு பெண் அழகாக உங்களுக்குத் தோன்றினால், நீங்கள் அழகாக இல்லை என்பது அது காட்டுகிறது . நீங்கள் பயப்படவும் செய்கிறீர்கள் . உங்களுக்கு அந்தப் பெண் அழகாகத் தோன்றினால் மறுபக்கம் என நடக்கிறது ? நீங்கள் மிகவும் அழகாக இல்லை அதனால் அவள் உங்களை விட்டு விலகி விடலாம் என்று பயப்படுகிறீர்கள். அந்தப் பயத்திலேயே பொய்யான அன்பை போலியாக செலுத்த வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறீர்கள் .
யாரும் பிறரைச் சார்ந்து இருக்க விரும்புவது கிடையாது .சுதந்திரம் என்பது உன்னதமான மதிப்புமிக்கது சுதந்திரத்தை காட்டிலும் அன்பு பெரிய விஷயமல்ல ; சுதந்திரம் உன்னதமான மதிப்புள்ளது அன்பு அதற்கு அடுத்தபடியானதான்.

அன்புக்கும் , சுதந்திரத்திற்கும் இடைவிடாத சச்சரவு நடந்துகொண்டிருக்கிறது . அன்பு உன்னதமான மதிப்பை எட்ட முயல்கிறது அதனால் முடிவதில்லை எனவே சுதந்திரத்தை அது அழித்துவிட முயல்கிறது . அப்புறம் அதன் உன்னத இடத்தை பிடித்து விடலாகுமே ?
சுதந்திரத்தின் மீது ஆசை உள்ளவர்கள் அன்பை கண்டு பயம் கொள்கிறார்கள்.

நகரில் இருந்த மிக அசிங்கமான பெண்ணை முல்லா நஸ்ருதீன் மணந்துகொண்டார் . யாரும் அதை நம்பவில்லை . ஜனங்கள் அவரிடம் "நஸ்ருதீன் உங்களுக்கு என்ன ஆயிற்று ? " என்று கேட்டார்கள் .
அதற்கு அவர் " அது தர்க்க ரீதியான உளவியல் விஷயம் அடங்கி இருக்கிறது . இந்த ஒரு பெண்ணிடமிருந்துதான் நான் எந்நேரமும் தப்பித்துவிட முடியும். உண்மையில் தப்பிப்பது மிக சிரமமான காரியமல்ல.

நகரில் உள்ள பெண்களில் இவள் மட்டும்தான் நம்பலாம். அழகான பெண்கள் நம்பிக்கைக்குரியவர்கள் அல்லர் .எளிதாக அவர்கள் காதல் வயப்பட்டு விடலாம் . ஏனென்றால் பல பேர் அவளால் கவரப்படுகிறார்கள் .
இந்தப் பெண்ணை நான் நம்பலாம். எனக்கு எப்போதுமே விசுவாசமாக இருப்பாள். அவளைப் பற்றி நான் கவலைப்பட , பயப்பட தேவையில்லை. நான் பல மாதங்கள் வெளியூரில் தங்கி இருக்கலாம் .நான் எவ்வித அச்சமும் கொள்ளத் தேவையில்லை எனது பெண்மணி என்னுடையவளாகவே இருப்பாள் " என்றார் .
கவர்ச்சிகரமானவர்கள் பயம் மூட்டுபவர்களாக இருப்பதை நீங்கள் அறிவீர்களா ? அது ஏன் ?
நீங்கள் விழிப்புணர்வும் , புரிதலும் இல்லாது போனால் அந்த பயம் உங்களுக்கு நிலைத்து நின்று விடும்.
கவர்ச்சி, பயம் என்ற இரண்டும் அழகு விஷயத்தின் இரண்டு அம்சங்கள். எப்போதும் உங்களை கவரும் ஒரு மனிதரிடம் உங்களுக்கு பயம் இருந்து கொண்டே இருக்கும். பயம் என்றால் நீங்கள் இரண்டாம் தரமான இடத்தில் இருப்பதாக ஆகிறது .

பெண் ஒரு ஆணை விரும்புகிறாள்.அந்த ஆண் உலகிலேயே மிகவும் அழகான செல்வாக்கான நபர் . அவர் தன்னிடம் மட்டுமே விருப்பம் கொள்ள வேண்டும் என்று அந்த பெண் நினைக்கிறாள் . அது நடக்க முடியாத ஒரு வேண்டுகோள் . மிகுந்த அழகும் , ஈர்ப்பும் உள்ள அந்த மனிதரிடம் பலர் ஆர்வம் கொண்டிருப்பார்கள். அவர் மீது பலர் ஆர்வம் காட்டியிருக்கலாம் .

அழகான ஆணிற்கு ஏற்பட்ட ஆபத்தும் , அந்த ஆணின் ஈர்ப்பால் பெண் அடைந்த அவமரியாதையும் . அதனால் அவள் அபாண்டத்தை அவர் மீது சுமத்துவதுப் பற்றி குர்ஆன் நபி யூசுப் _ சுலைகா வரலாற்றில் கூறுகிறது
وَرَاوَدَتْهُ الَّتِىْ هُوَ فِىْ بَيْتِهَا عَنْ نَّـفْسِهٖ وَغَلَّقَتِ الْاَبْوَابَ وَقَالَتْ هَيْتَ لَـكَ قَالَ مَعَاذَ اللّٰهِ اِنَّهٗ رَبِّىْۤ اَحْسَنَ مَثْوَاىَ اِنَّهٗ لَا يُفْلِحُ الظّٰلِمُوْنَ
அவரிருந்த வீட்டின் எஜமானி (அவரைக் காதலித்துத் தன்னை அலங்கரித்துக் கொண்டு) எல்லாக் கதவுகளையும் மூடிவிட்டு தன் விருப்பத்திற்கு இணங்குமாறு அவரை "வாரும்" என்றழைத்தாள். அதற்கவர், "(என்னை) அல்லாஹ் பாதுகாத்துக் கொள்வானாகவும்! நிச்சயமாக என் எஜமானாகிய (உன் கண)வர் என்னை மிக்க (அன்பாகவும்) கண்ணியமாகவும் வைத்திருக்கிறார். (இத்தகைய நன்மை செய்பவர்களுக்குத் துரோகம் செய்யும்) அநியாயக்காரர்கள் நலம்பெற மாட்டார்கள்" என்று கூறினார்.
(அல்குர்ஆன் : 12:23)

وَاسْتَبَقَا الْبَابَ وَقَدَّتْ قَمِيْصَهٗ مِنْ دُبُرٍ وَّاَلْفَيَا سَيِّدَهَا لَدَا الْبَابِ قَالَتْ مَا جَزَآءُ مَنْ اَرَادَ بِاَهْلِكَ سُوْٓءًا اِلَّاۤ اَنْ يُّسْجَنَ اَوْ عَذَابٌ اَلِيْمٌ

(யூஸுஃப் அவளை விட்டுத் தப்பித்துக்கொள்ளக் கருதி வெளியில் செல்ல ஓடினார். அவள் அவரைப் பிடித்துக்கொள்ளக் கருதி அவர் பின் ஓடினாள்.) இருவரும், ஒருவர் ஒருவரை முந்திக் கொள்ள கதவின் பக்கம் விரைந்து ஓடினார்கள். (யூஸுஃப் முந்திக் கொள்ளவே அவருடைய சட்டையைப் பிடித்திழுத்தாள்.) ஆகவே, அவருடைய சட்டையின் பின்புறம் கிழிந்துவிட்டது. அச்சமயம், வாசற்படியில் அவளுடைய கணவர் இருப்பதை இருவரும் கண்டனர். (ஆகவே, அவள் பயந்து, தான் தப்பித்துக்கொள்ளக் கருதி) அவரை நோக்கி "உங்களுடைய மனைவிக்குத் தீங்கிழைக்கக் கருதியவனுக்குச் சிறையில் இடுவதோ அல்லது துன்புறுத்தும் வேதனையைத் தருவதோ அன்றி வேறு தண்டனை உண்டா?" என்று கேட்டாள். (அல்குர்ஆன் : 12:25)

இதுவே ஒரு பெண் பேரழகியாக இருந்ததால் ஏற்பட்ட பிரச்சனையும் குர்ஆன் வர்ணிக்கிறது .
ஆதம் (அலை) ஹவ்வா (அலை) தம்பதிகளுக்கு ஒவ்வொரு சூலிலும் ஒரு ஆண் , ஒரு பெண் குழந்தைகள் பிறக்கும் .

முதல் பிரசவ ஆணுக்கும் இரண்டாம் பிரசவ பெண்ணுக்கும் திருமணம்
முதல் பிரசவ பெண்ணுக்கும் இரண்டாம் பிரசவ ஆணுக்கும் திருமணம் .இது இறைச் சட்டம் காரணம் வேறு மக்கள் எவரும் இல்லை . இப்போது இச்சட்டம் உலகில் எங்குமே இல்லை.
முதல் சூலில் காபிலும் + இக்லீமா என்ற பேரழகியும் இரண்டாம் சூலில் ஹாபிலும் + லுபூதா என்ற குறைவான அழகியும் பிறந்தார்கள் .
காபில் இறைச் சட்டத்தை மீறி தன்னுடன் பிறந்த பேரழகி இக்லீமாவை மணப்பேன் என்று கூற பிரச்சனை காபில் , ஹாபீலை கொலை செய்கிறான்.
உலகின் முதல் மரணம் கொலை . அதுவும் ஒரு பெண்ணுக்காக நடந்த கொலை .
ஆக குர்ஆன் கூறிய அழகான ஆண் , அழகான பெண் இரண்டு அழகிலும் ஆபத்துதான் மிஞ்சியது .
கவர்ச்சிகரமான மனிதர்களிடம் பயப்பட பல்வேறு காரணங்கள் உள்ளன என்பதை உளவியல் ரீதியாக சொல்லப்படுகிறது .
அழகின் மிக அருகில் ஆபத்தும் இருக்கிறது . ரோஜாவோடுதான் முள்ளும் இருக்கிறது .
ரஹ்மத் ராஜகுமாரன்

தீவிர சிந்தனையால் மறக்கப்படும் வாழ்க்கை

வாழ்க்கைத் தத்துவங்கள் - 5










17ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ரீனி 23-01-2021

**டிஸ்கார்டிஸ் (Rene Descartes )** என்னும் பிரெஞ்சு தத்துவ ஞானி " நான் சிந்திக்கிறேன் அதனால் இருக்கிறேன் " என்று ஒரு சித்தாந்தத்தை முன் வைத்தார் . இது மிகப்பெரிய தாக்கத்தை ஏற்படுத்தி பிரபலமானது . இதை அடிப்படையாகக் கொண்டே மேற்கத்திய அனேக தத்துவங்கள் உருவாகின .

நீங்கள் இருப்பதால்தான் உங்களால் எண்ணம் என்ற ஒன்றை உருவாக்க முடிகிறது. ஆனால் இன்று உங்கள் எண்ணங்கள் அதீத முக்கியத்துவம் பெற்றுவிட்டன. உங்கள் கவனம் வாழ்வில் இருந்து விலகி எண்ணத்தில் லயிக்க ஆரம்பித்து விட்டது . நீங்கள் உயிர் வாழ முடிவது எண்ணங்கள் இருப்பதால்தான் என்று நீங்கள் நம்பும் அளவிற்கு இது வளர்ந்து விட்டது .

நீங்கள் இருக்கிறீர்கள் . நீங்கள் இருப்பதால், நீங்கள் சிந்திக்கவும் செய்யலாம் .சிந்திக்காமலும் இருக்கலாம் . அது உங்கள் தேர்வு

உங்கள் வாழ்வின் மிக அழகான தருணங்கள் எவை என்று யோசித்துப் பாருங்கள் ஆனந்தம் , பேரானந்தம் , பரவசம் , முழுமையான நிம்மதி போன்றவற்றை நீங்கள் உணர்ந்த தருணங்கள் எவை எவை என்று சொல்லுங்கள் ? அவை எல்லாம் நீங்கள் எதைப் பற்றியுமே சிந்திக்காமல் சும்மா இருந்த நொடிகள்தான் . அந்த நொடிகளில் நீங்கள் இருந்தீர்கள் அவ்வளவுதான் . உங்கள் எண்ணங்கள் சிந்திக்காவிட்டாலும் இப்பிரபஞ்சம் , படைப்பு எல்லாமே இருந்தது. இருக்கிறது .

உண்மையில் இந்த எண்ணங்கள் என்றால் என்ன ? எண்ணங்கள் என்பது நீங்கள் சேகரித்து மறுபயன்பாடு செய்யும் தகவல்கள் . இதுவரை உங்கள் மனம் சேகரிக்காத எதையேனும் நீங்கள் சிந்திக்க முடியுமா ? மனித மனம் எப்போதும் பழைய தகவல்களை மீண்டும் மீண்டும் மறுபயன்பாடு செய்கிறது .

வாழ்க்கை செயல் முறையோடு ஒப்பிட்டால் , உங்கள் சிந்தனை செயல்முறை மிக மிக சிறிய நிகழ்வு .

ஆனால் இன்று உங்கள் வாழ்வை விட அது மிகவும் முக்கியம் ஆகிவிட்டது . இது உடனடியாக மாற வேண்டும் வாழ்க்கை செயல்முறைக்குரிய முக்கியத்துவத்தை நாம் அதற்கு வழங்கிய ஆகவேண்டும் . இது மிகவும் அவசியமான அவசரத்தேவை . நம் வாழ்வே செயலைச் சார்ந்துதான் இருக்கிறது .

"நவீன தர்க்க அறிவின் தந்தை " என்று அழைக்கப்படும் கிரேக்க மாமேதையான அரிஸ்டாட்டில் ஒருமுறை கடற்கரையில் உலாவி கொண்டிருந்தார்.

அங்கு பிரமாதமானதொரு சூரிய அஸ்தமனம் நிகழ்ந்து கொண்டிருந்தது .மக்கள் அதனை ரசித்துக் கொண்டிருந்தனர் . ஆனால் அவருக்கு இது போன்ற அற்ப நிகழ்வுகளை பார்க்க நேரம் ஏது ? இப்படைப்பின் மாபெரும் பிரச்சினை ஒன்றைப் பற்றி அவர் சிந்தித்துக் கொண்டிருந்தார் .

தர்க்கரீதியாக சிந்திக்கும் மனதுக்கு , இப்படைப்பு எப்போதுமே சிக்கலான பிரச்சனைதான். அதற்கான தீர்வைதான் அரிஸ்டாட்டில் மும்முரமாக சிந்தித்துக் கொண்டிருந்தார் . இந்த தீவிர சிந்தனையில் ஆழ்ந்து அவர் குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண்டிருந்தார் .

அதே கடற்கரையில் மற்றொரு மனிதர் மிகத்தீவிரமாக வேற ஒரு செயலில் ஈடுபட்டு இருந்தார். அவரின் செயல் தீவிரம் சிறிது நேரத்தில் அரிஸ்டாட்டிலின் கவனத்தை ஈர்த்து விட்டது . பொதுவாக தம் சிந்தனையில் ஆழ்ந்து இருப்பவர்கள் தங்களைச் சுற்றியிருக்கும் உலகை கவனிக்க மாட்டார்கள் . ஆனாலும் அரிஸ்டாட்டில் ஆழ்ந்த சிந்தனையை விட்டு விட்டு அவரிடம் ,

"நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள் ? " என்று கேட்டார். அதற்கு அந்த மனிதர் ,
"தயவு செய்து என்னை தொந்தரவு செய்யாதீர்கள். நான் மிக முக்கியமான ஒன்றை செய்து கொண்டிருக்கிறேன்" என்று சொல்லிவிட்டு மீண்டும் தன் வேலையில் முழு உத்வேகத்துடன் ஈடுபட்டார்.
இது அரிஸ்டாடிலின் ஆர்வத்தை தூண்டியது. மீண்டும் கேட்டார். "சரி ஆனால் நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள் என்று சொல்லுங்களேன் "
அதற்கு அந்த மனிதர், "என்னை தொந்தரவு செய்யாதீர்கள். நான் மிக மிக முக்கியமான வேலையில் ஈடுபட்டு இருக்கிறேன் " என்றார்.
" அப்படி என்ன முக்கியமான வேலை ? என்று அழுத்திக் கேட்டார் அரிஸ்டாடில். இப்போது அம்மனிதர் தான் தோண்டியிருந்த சிறு குழியை காண்பித்து ,
"கடல்நீர் முழுவதையும் இந்த குழிக்குள் இடம் மாற்ற நான் முயன்று கொண்டிருக்கிறேன் " என்றார் அவர் கையில் ஒரு டேபிள்ஸ்பூன் மட்டும் இருந்தது .
இதை பார்த்ததும் அரிஸ்டாட்டில் வாய்விட்டு சிரித்தார் .
" என்ன பைத்தியக்காரத்தனம் இது உண்மையிலேயே உங்கள் புத்தி மழுங்கி விட்டது இந்த கடல் நீர் எவ்வளவு பெரியது என்று தெரியுமா ? உங்களுக்கு அந்த கடல் நீர் முழுவதையும் இந்த சிறு குழிக்குள் எப்படி இடம் மாற்ற முடியும் அதுவும் ஒரு டேபிள் ஸ்பூன் கொண்டு குறைந்தபட்சம் ஒரு வாளியை வைத்து இருந்தாலாவது பரவாயில்லை அதுவுமில்லை. தயவு செய்து இந்த முயற்சியை கைவிட்டு விடுங்கள் இது சுத்த முட்டாள்தனம் " என்றார்

அம்மனிதர் நிமிர்ந்து அரிஸ்டாட்டிலைப் பார்த்தார் . அந்த டேபிள் ஸ்பூனைக் கீழே எறிந்தார் . பின்பு சொன்னார் " என் வேலை முடிந்துவிட்டது " என்று !

அதற்கு அரிஸ்டாட்டில் " என்ன சொல்கிறீர்கள் ? உங்கள் வேலை எப்படி முடிந்தது ? கடல்நீர் முழுவதையும் இடம் மாற்றுவது ஒரு புறம் இருக்கட்டும். நீங்கள் தோண்டிய இந்த சிறுகுழி கூட இன்னும் நிறையவில்லையே " என்று கேட்டார் .
அதற்கு அம்மனிதர் , " நான் இக்கடல் நீர் முழுவதையும் இந்த சிறு குழியில் இடம் மாற்றம் செய்தேன். அதுவும் ஒரு சிறிய டேபிள் ஸ்பூன் கொண்டு . இது சுத்த பைத்தியக்காரத்தனம் என்று சொன்னீர்கள் . ஆனால் நீங்கள் என்ன செய்ய முயன்று கொண்டிருக்கிறீர்கள் ? இந்தப் படைப்பும் இந்த பிரபஞ்சமும் எத்தனை எத்தனை பெரியது என்று உங்களுக்கு தெரியுமா ? அதில் இதுபோல் நூறு கோடி கடல்கள் என்ன , அதற்கு மேலும் கூட உள்ளடக்க முடியும் . ஆனால் அத்தகையதை , உங்கள் மூளை என்னும் சிறு குழிக்குள் உள்ளடக்க நீங்கள் முயலவில்லையா ? அதுவும் எதைக்கொண்டு ? டேபிள் ஸ்பூன் போன்ற உங்கள் எண்ணங்களைக் கொண்டு ! தயவுசெய்து இம்முயற்சியை நீங்கள் கைவிட்டு விடுங்கள் . இது சுத்த முட்டாள்தனம் என்று கூறி நகர்ந்தார்.
அந்த மனிதர்தான் ஹெராக்ளிடஸ் (Heraclitus ) கிரேக்க நாட்டின் மற்றுமொரு பெரிய தத்துவஞானி .
வாழ்வின் ஒவ்வொரு அம்சத்திலும் தன் தர்க்க அறிவை செயல்படச் செய்து அரிஸ்டாட்டில் எப்படிப்பட்ட குறுகிய, முடமான வாழ்வை வாழ்ந்து கொண்டிருந்தார் என்பது அவருக்கு இவர் உணர்த்தினார்.
- ஜக்கி வாசுதேவ் எழுதிய 'உன்னை அறியும் விஞ்ஞானம்'

ஆனால் குர்ஆனோ படைப்புகளை ஆராய்ந்து படைத்தவனை சித்திக்கச் சொல்கிறது

اِنَّ فِىْ خَلْقِ السَّمٰوٰتِ وَالْاَرْضِ وَاخْتِلَافِ الَّيْلِ وَالنَّهَارِ وَالْفُلْكِ الَّتِىْ تَجْرِىْ فِى الْبَحْرِ بِمَا يَنْفَعُ النَّاسَ وَمَآ اَنْزَلَ اللّٰهُ مِنَ السَّمَآءِ مِنْ مَّآءٍ فَاَحْيَا بِهِ الْاَرْضَ بَعْدَ مَوْتِهَا وَبَثَّ فِيْهَا مِنْ كُلِّ دَآ بَّةٍ وَّتَصْرِيْفِ الرِّيٰحِ وَالسَّحَابِ الْمُسَخَّرِ بَيْنَ السَّمَآءِ وَالْاَرْضِ لَاٰيٰتٍ لِّقَوْمٍ يَّعْقِلُوْنَ

அவன் வானங்களையும் பூமியையும் படைத்திருப்பதிலும், இரவும் பகலும் மாறி மாறி வருவதிலும், மனிதர்களுக்குப் பயன் தருபவற்றை (ஏற்றி)க் கொண்டு கடலில் செல்லும் கப்பலிலும், வானத்திலிருந்து மழையை இறக்கி அதைக்கொண்டு (வறண்டு) இறந்த பூமியை அல்லாஹ் உயிர்ப்பி(த்துச் செழிப்பாக்கிவை)ப்பதிலும், கால்நடைகள் அனைத்தையும் பூமியில் பரவ விட்டிருப்பதிலும், காற்றை(ப் பல கோணங்களில் திருப்பி)த் திருப்பி விடுவதிலும், வானத்திற்கும் பூமிக்கும் இடையில் அமர்த்தப்பட்டிருக்கும் மேகத்திலும், (மனிதர்களுக்குள்ள பயன்களை ஆராய்ந்து) சிந்திக்கும் மக்களுக்கு (அவனுடைய அருளையும், அன்பையும் ஆற்றலையும் அறிவிக்கக்கூடிய) பல அத்தாட்சிகள் நிச்சயமாக இருக்கின்றன.
(அல்குர்ஆன் : 2:164)
ர.ரா

## உடல் எனும் உச்ச பட்ச எந்திரம்.

## வாழ்க்கை தத்துவங்கள் 6



وَاللّٰهُ اَخْرَجَكُمْ مِّنْ بُطُوْنِ اُمَّهٰتِكُمْ لَا تَعْلَمُوْنَ شَيْئًا ۙ وَّ جَعَلَ لَـكُمُ السَّمْعَ وَالْاَبْصٰرَ وَالْاَفْـِٕدَةَ ۙ لَعَلَّكُمْ تَشْكُرُوْنَ

ஒன்றையுமே நீங்கள் அறியாதவர்களாக இருந்த நிலைமையில், உங்களது தாய்மார்களின் வயிற்றிலிருந்து அல்லாஹ்தான் உங்களை வெளிப்படுத்தினான். அன்றி, உங்களுக்குச் செவிகளையும், கண்களையும், அறிவையும் கொடுத்தவனும் அவன்தான். இதற்கு நீங்கள் (அவனுக்கு) நன்றி செலுத்துவீர்களாக!

(அல்குர்ஆன் : 16:78)

இப்படி உடலின் ஒவ்வொரு உறுப்புகளையும் நமக்களித்ததையும் அவற்றிற்கெல்லாம் மேலாக இறைவன் நமக்கு பகுத்தறிவு வழங்கியதையும் சிறப்பித்துக் குறிப்பிடுகிறான் .

இவ்வுறுப்புகளை பொருட் களாக பாவிப்பது குறித்து தத்துவ இயலில் ...

பொருள் தன்மை சார்ந்த இந்த படைப்பிலேயே நம் ஒவ்வொருவருக்கும் மிக நெருக்கமானது நம் உடல்தான்.

இவ்வுலகில் இருந்து நமக்கு எத்தனையோ பரிசுகள் கிடைக்கலாம் ஆனால் நாம் முதன்முதலில் உணரும் பரிசு இந்த உடல்தான்தான் . அது மட்டுமல்ல இது ஒரு ஈடு இணை இல்லாத எந்திரம் . எந்திரங்களின் உச்சம். இவ்வுலகில் இருக்கும் மற்ற எந்திரங்கள் எல்லாமே இதில் இருந்துதான் வந்திருக்கிறது .

உங்கள் உடல் சுயமாய் செயல்படும் விதத்தில் தான் அமைக்கப்பட்டிருக்கிறது அது செயல்படுவதற்கு எவ்விதத்திலும் உங்கள் தலையீடோ , அல்லது உங்களது பங்களிப்போ அதற்குத் தேவை இல்லை.

நீங்கள் இதயத்தை துடிக்க செய்யவோ, கல்லீரலின் சிக்கலான ரசாயன செயல்பாடுகளை உந்தவோ, அல்லது சிறுநீர்ப்பையில் இருந்து சிறுநீர் வெளியேற உடல் புவியீர்ப்பு விசை துணையுடன் சிறுநீரை வெளியேற்றவோ

உங்களது பங்களிப்பு அதற்குத் தேவை இல்லை.

அவ்வளவு ஏன் , சுவாசிப்பதற்குக் கூட நீங்கள் முயற்சி எடுக்க வேண்டாம். எனவே நீங்கள் இங்கு உயிரோடு இருப்பதற்கு தேவையான அனைத்தும் தானாகவே நடந்து கொண்டிருக்கிறது அதாவது உங்கள் உடல் ஒரு முழுமையான தனித்து இயங்கக்கூடிய எந்திரம் .

எந்திரங்கள் உங்களை கவரும் என்றால் , இதைவிட சிறந்த எந்திரம் இங்கு இல்லை ! இவ்வுலகிலேயே இதுதான் மிக நுட்பமான எந்திரம் மிகச்சிறந்த இயக்கவியல் (Mechanics ) மிகச்சிறந்த மின்னணுவியல் ( Electronics ) மற்றும் மிக நுட்பமான மின்சுற்று இணைப்புகளைக் (Electrical circuitry) கொண்டது உங்களது உடல் .

உங்களுக்குள் இயங்கிக்கொண்டு கொண்டிருக்கும் புத்திசாலித்தனம் , உங்கள் தர்க்க அறிவுக்கு அப்பாற்பட்டது. இவ்வுலகிலேயே தொழில்நுட்பத்தில் மிக தலைசிறந்த படைப்பு மனிதன்தான்

உணவு என்று உள்ளே வரும் ஒன்றை , அப்படிப்பட்ட மனிதனாக ஒரு சில மணி நேரங்களிலேயே அந்த உணவை

அபாரமான சக்தி மாற்றிவிடுகிறது

இப்போது உங்களின் கவனம் இல்லாமல் நடக்கும் இந்த மாற்றத்தை விழிப்புணர்வோடு நீங்கள் நடத்திக் கொண்டால் , அந்த புத்திசாலித்தனத்தின் ஒரு துளியாவது உங்கள் தினசரி வாழ்வில் நீங்கள் கொண்டு வந்தால் உங்கள் வாழ்க்கை அதிசயம் ஒன்று நிகழும் . அது மட்டும் நடந்துவிட்டால் நீங்கள் இப்படி துயரத்தில் துவள மாட்டீர்கள்.

படைப்பின் ஆதாரம் தனக்குள் துடித்துக் கொண்டிருப்பதை உணர்ந்தால்தான் , 12ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த நம் தென்னிந்தியாவின் புகழ்பெற்ற மறைஞான பசவண்ணா மனித உடலை "நகரும் கோயில் " என்கிறார் கால்கள் அக்கோயிலின் தூண்கள் . உடல் சக்தி பீடம் மற்றும் தலை தங்க கலசம் ... உள்ளமோ தெய்வம் " என்று அவரது கவிதை நடை படைப்பில் பசவண்ணா குறிப்பிடுகின்றார்

وَلَقَدْ خَلَقْنَا الْاِنْسَانَ وَنَعْلَمُ مَا تُوَسْوِسُ بِهٖ نَفْسُهٗ ‌ۖۚ وَنَحْنُ اَقْرَبُ اِلَيْهِ مِنْ حَبْلِ الْوَرِيْدِ

நிச்சயமாக நாம்தான் மனிதனை (முதன் முதலாகவும்) படைத்தோம். அவன் மனதில் உதிக்கும் எண்ணத்தையும் நாம் அறிவோம். பிடரியிலுள்ள இரத்த நரம்பைவிட நாம் அவனுக்கு மிக சமீபமாகவே இருக்கின்றோம்.

(அல்குர்ஆன் : 50:16)

ஆக உடலை இறைவனது ஆலயமாகவும் , மனிதனது பிடரியிலுள்ள இரத்த நரம்பைவிட நாம் அவனுக்கு மிக சமீபமாகவே இருந்து அந்த உடலையே தன் இல்லமாக மாற்றிக் கொண்டதாக இறைவன் குறிப்பிடுகிறான்.

அப்பேற்பட்ட புனித உடலை சூது வாதுடனும் , மது மாதுடனும் கீழ்த்தரங்கெட்ட பழக்கத்தை அதற்குள் செலுத்தி அப்புனிதத்தை நீங்களே கொடுத்துக் கொள்ளலாமோ ?

ரஹ்மத் ராஜகுமாரன் .

சுத்திகரிப்பு நாள்

வாழ்க்கை தத்துவங்கள் - 7




உடலின் இயற்கையான சுழற்சியைக் கவனித்தால் "மண்டலம் " என்று ஒன்று இருப்பதை நீங்கள் உணர்வீர்கள் .இந்த மண்டலம் நிலவின் சுழற்சியை அடிப்படையாகக் கொண்டது .
ஒரு மண்டலம் என்பது 40 - 48 நாட்களுக்குள் உடலில் ஏற்படும் சுழற்சி . இந்த ஒவ்வொரு சுழற்சியிலும் உடலுக்கு உணவு தேவைப்படாத மூன்று நாட்கள் இருக்கும் .

உங்கள் உடல் எப்படி வேலை செய்கிறது என்பதை நீங்கள் கவனித்தால் உடலுக்கு உணவு தேவைப்படாத நாளை நீங்கள் மிக எளிதாக கண்டு கொள்வீர்கள் . அன்றைய தினத்தில் அதிக பிரயத்தனம் படாமலேயே , நீங்கள் உணவு உண்ணாமல் இருக்க முடியும் . நாய்களுக்கும் பூனைகளுக்கும் கூட இது பற்றிய விழிப்புணர்வு உண்டு . அது போன்ற நாட்களில் அவை உணவு உண்பதை தவிர்த்து விடுகின்றன .

"உணவு வேண்டாம் " என்று உடல் சொல்லும் அந்த நாள்தான் சுத்திகரிப்பு நாள் . இந்த நாள் மனிதருக்கு மனிதர் மாறுபடலாம் .ஆனால் எந்த நாளில் தங்களுக்கு உடல் உணவின்றி இருக்கவேண்டும் என்பதை பலரும் உணராததால் இந்துப் பாரம்பரியத்தில் "ஏகாதசி " நாளை இதற்கென்று குறித்து வைத்தார்கள் .
நிலவின் சுழற்சியை வளர்பிறை தேய்பிறை என்று இரண்டாக பிரிக்கலாம் . இந்த வளர்பிறை தேய்பிறை ஒவ்வொரு பாகத்திலும் பதினோராவது நாள் ஏகாதசி எனப்படுகிறது .
அதனால் இரண்டு ஏகாதசிகளுக்கிடையே 14 நாட்கள் இடைவெளி இருக்கும் . பாரம்பரியமாகவே இந்த நாளைத்தான் உணவை தவிர்த்து விரதம் இருக்கும் நாளாக இந்துக்கள் கடைப்பிடித்து வந்தார்கள் .
இன்று இதை உடல் - சுத்திகரிப்பிற்காக என்று வைத்துக் கொண்டாலும் , இதன் உண்மையான உள் நோக்கம் உடலையும் மனதையும் தேவையான வகையில் தயார் செய்வதற்காக நோற்கப்படும் நோன்பாகும் .
உலகத்தின் எல்லா ஆன்மீக பாரம்பரியங்களும் சில குறிப்பிட்ட நாட்களில் விரதம் இருக்குமாறு வலியுறுத்தப்படுகிறது .

இந்த விரதம் நிலவின் சுழற்சியை சார்ந்து நிர்ணயிக்கப்பட்டது இது. ஏனெனில் நிலவின் சுழற்சியில் சில குறிப்பிட்ட நாட்களில் நீர், காற்று , மற்றும் சூரிய ஒளியில் இருந்து சக்தி பெறும் . உங்கள் திறன் அதிகமாக இருக்கும்.
பெண்கள் சந்திர மாதக்கணக்கின்படி 28 நாட்களில் உடலில் அசுத்தங்கள் நீங்க மூன்று நாட்கள் மாதவிடாய் ஏற்படுகிறது.

உணவு தேவைப்படாத மூன்று நாட்களில் இந்த திறன் என்பது விழிப்புணர்வோடு இருத்தல் ஆகும் . நீங்கள் செய்யும் சின்ன விஷயமும் கூட உடலோடு நீங்கள் கொண்டிருக்கும் ஆழமான அடையாளத்தை தகர்க்க உதவும் . உடலோடு நீங்கள் கொண்டிருக்கும் அடையாளம் குறைய குறைய உங்களின் மற்ற பரிமாணங்கள் இயல்பாகவே உங்கள் கவனத்திற்கு வரும் .

மாதந்தோறும் மூன்று நாட்கள் நோன்பு நோற்பதும், ரமளானில் நோன்பு நோற்பதும் காலமெல்லாம் நோன்பு நோற்பதாக அமையும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் அறிப்பாளர் அபூகதாதா (ரலி)
நூல்கள்: முஸ்லிம், அஹ்மத், அபூதாவூத்.

''நீர் மாதத்தில் மூன்று நோன்புகளை நோற்றால் அதை பிறை பதிமூன்று, பதினான்கு, பதினைந்து ஆகிய நாட்களில் நோற்குமாறு நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிப்பாளர் அபூதர் (ரலி)
நூல்கள்: திர்மிதி, நஸயீ, அஹ்மத்.

கௌதம புத்தர் ஒரு படி மேலே போய் "உங்களுக்கு மிக அதிகமாகப் பசி எடுக்கும்போது உங்கள் உணவை வேறு ஒருவருக்குக் கொடுத்தால் , நீங்கள் இன்னும் வலியவராகி விடுவீர்கள்" என்றார்
ஒரே ஒரு வேளை கூட உணவு இல்லாமல் இருக்க முடியாது என்பதுபோல் உணவின் மீது நீங்கள் அதிக பற்று கொண்டு இருந்தால், நீங்கள் உணவை தவிர்த்துவிடுங்கள் .

இதை செய்து பாருங்கள் ஒரு நாள் நீங்கள் மிகவும் பசியாக இருக்கும் போது அல்லது உங்களுக்கு மிகப் பிடித்தமான உணவுகள் சமைக்கப்படும் போது அந்த வேளை உணவை தவிர்த்து பாருங்கள் இது உங்களை நீங்கள் சித்தரவதை செய்து கொள்ள வேண்டும் என்பதற்காக சொல்லப்படவில்லை . ஆனால் உங்களுடைய மன வலிமை அதிகமாகி விடவும் நீங்கள் விழிப்புணர்வு பெறவும் இது வழி வகுக்கிறது .

உங்களுக்கு மிக அதிகமாகப் பசி எடுக்கும்போது ' உண்டால் ' போதுமே என்று உங்கள் உடல் பரபரக்கும் போது, உங்கள் உணவை வேறொருவருக்கு கொடுத்தால் , நீங்கள் இன்னும் மனவலிமை பெற்றவர்களாகி விடுவீர்கள் . இது உடல்மீதும், உணவு மீதும் நீங்கள் கொண்டிருக்கும் பற்றை அது தகர்த்துவிடும் .

அன்னை பாத்திமா (ரலி) அவர்களின் வாழ்வில் நடந்த ஒரு நிகழ்ச்சியைக் கண்டு மனம் மகிழ்ந்த அல்லாஹ், ஒரு வசனத்தை திருமறை குர்ஆனில் இறக்கி வைத்து, நபிகளார் (ஸல்) மூலம் அன்னை பாத்திமா (ரலி) அவர்களுக்கு சுபச்செய்தி சொன்னான். இந்த நிகழ்வை காண்போம்.
நபி பெருமானார் (ஸல்) அவர்கள் எப்படி தன் வாழ்க்கையை வறுமையோடு ஒன்றிணைந்து அமைத்துக் கொண்டார்களோ, அதே அடிச்சுவட்டைப் பின்பற்றி அவரது மகள் பாத்திமா (ரலி) அவர்களும் தன் வாழ்வை வறுமையோடு தோழமை கொண்டே வாழ்ந்து வந்தார்கள்.

ஒரு முறை பாத்திமா (ரலி) அவர்களின் மகன்கள் இருவரும் ஒரு கொடிய நோயால் பாதிக்கப்பட்டனர். அந்த சூழ்நிலையில் அன்னை பாத்திமா (ரலி) அவர்கள் இறைவனிடம் இவ்வாறு பிரார்த்தனை செய்தார்கள்:

'என் அருமைச் செல்வங்கள் இந்த நோயிலிருந்து வெகுவிரைவில் மீண்டு வருவார்களேயானால், நான் இதற்கு பதிலாக, இறைவனுக்கு நன்றி செலுத்த மூன்று நாட்கள் நோன்பு நோற்பேன்'.
இதனை அறிந்த அலி (ரலி) அவர்களும் பாத்திமா (ரலி) அவர்களோடு தானும் இணைந்து, நோன்பு வைக்க பிரார்த்தனை செய்து கொண்டார்கள்.
அல்லாஹ்வும் அவர்கள் பிரார்த்தனையை ஏற்றுக்கொண்டு, அருமைச் செல்வங்கள் இருவரையும் அந்த நோயிலிருந்து காப்பாற்றி சுகமளித்தான். எனவே அவர்கள் இருவரும் நேர்ச்சையை நிறைவேற்ற எண்ணம் கொண்டார்கள்.
கடும் கோடை வெயில், அலி (ரலி) அவர்கள் ஒரு ஈச்சமரத் தோப்பிற்கு நீரிறைத்து விடும் வேலையை ஒப்புக்கொண்டார்கள். மிகவும் குறைந்த தினக்கூலிக்கு வேலை செய்தார்கள். வேலை முடிந்த மாலை வேளையில் சொற்பமான கூலியை பெற்றுக் கொண்டு கடைத்தெருவிற்கு வந்தார்கள்.

அங்கே அவர்கள் கைவசம் இருந்த சொற்பத் தொகையில், நன்றாக சலிக்காத கோதுமை மாவைத்தான் அவர்களால் வாங்க முடிந்தது.
பாத்திமா (ரலி) அவர்களும் கல் திருவையில் போட்டு முடிந்த அளவிற்கு அதனை அரைத்து ரொட்டிக்கான மாவை தயார் செய்தார்கள். நோன்பு திறக்கும் நேரம் நெருங்கியது. மாவை தண்ணீர் விட்டு பிசைந்து ரொட்டிகளைத் தயார் செய்தார்கள்.
கணவன்-மனைவி இருவரும் நோன்பு திறப்பதற்காக அமர்ந்திருந்த வேளையில், அவர்கள் வீட்டு வாசலில் ஒரு அபயக்குரல்..,

“சொர்க்கத்தின் தலைவியே! அன்னை பாத்திமாவே! நான் ஒரு பரம ஏழை. பசியாறி பல நாட்கள் ஆகிவிட்டன. என்னால் நடக்க முடியாத அளவு பலவீனப்பட்டு போனேன். அன்னையே! என் பசி தீர ஏதாவது உணவளியுங்கள்” என்று வேண்டி நின்றார்.

நோன்பு திறக்கும் வேளை. இருப்பதோ குறைந்த உணவு, என்ன செய்வது? இருவருமே அந்த உணவை ஏழைக்கு வழங்கி விட முடிவு செய்தார்கள். அதன்படி ஏழைக்கு அந்த உணவை வழங்கி விட்டு, அன்றைய தினம் தண்ணீரைக் கொண்டே நோன்பை நிறைவு செய்தார்கள்.

மறுநாள் இரண்டாம் நோன்பு. அதே கடின உழைப்புக்குப் பின் அதே சொற்பமான கூலியைப் பெற்று கோதுமை மாவினை வாங்கி வந்தார் அலி (ரலி) அவர்கள். அன்றும் நோன்பு திறக்கும் நேரம் வாசலிலிருந்து ஒரு அழுகுரல். “நானோ அநாதை, ஆதரிப்பார் யாருமில்லை. பசியை போக்க வழியும் தெரியவில்லை. அருமை நபிகளாரின் அன்பு மகளே, பாத்திமாவே! எனக்கு உணவு தந்து உதவுங்கள்” என்று குரல் ஒலித்தது.

சற்றும் சிந்திக்கவில்லை. தம்பதியர் இருவரும், அன்று தயார் செய்த ரொட்டியையும் அந்த அநாதையின் பசி தீர்க்க வழங்கி விட்டு தண்ணீர் மட்டும் குடித்து நோன்பினை நிறைவு செய்தார்கள்.
மூன்றாம் நாள், அன்றும் இருவரும் நோன்பு நோற்றார்கள். நோன்பு திறக்கும் நேரத்தில் வாசலில் அதே வேண்டுகோளோடு ஒரு புதிய குரல். “நான் சற்று முன்பு தான் சிறையிலிருந்து மீண்டு வந்த சிறைக்கைதி. என்னை இங்கே யாரும் ஆதரவு கரம் நீட்டி அரவணைக்கவில்லை. மாறாக சிறைக்கைதி என்று என்னை விரட்டியடிக்கிறார்கள். திக்கற்ற நிலையில் உங்களிடம் வந்து விட்டேன். அன்னையே! எனக்கு உணவு தந்து ஆதரியுங்கள்” என்றது.

கணவன்-மனைவி இருவரும் மனம் இளகியவர்களாக, அன்றும் தங்களிடம் இருந்த உணவைக்கொடுத்தார்கள்.
பின்னர் இறைவனிடம் கையேந்தி அன்னை பாத்திமா இவ்வாறு பிரார்த்தனை செய்தார்கள்:

“எங்கள் இறைவா! எத்தனையோ பேரை எங்களை விட வறுமையில் வாழச் செய்திருக்கிறாய். அப்படிப்பட்டவர்களை விட எங்களை மேலாக்கி வைத்துள்ளாய். அது மட்டுமல்ல, ஏழைகளுக்கு எங்களால் உதவக்கூடிய வகையில் எங்களை மேன்மைப்படுத்தியும் வைத்துள்ளாய். வறுமையிலும் தர்மம் செய்யக்கூடிய மாபெரும் பாக்கியத்தை தந்த ரஹ்மானே, எல்லாப் புகழும் உனக்கே. எங்களின் இந்த நற்செயலை ஏற்றுக்கொள்வாயாக”.

இந்த பிரார்த்தனையை ஏற்றுக்கொண்ட அல்லாஹ், மிகவும் மனம் மகிழ்ந்தவனாக, அந்த நற்செயலை தான் ஏற்றுக்கொண்டதின் அடையாளமாக கீழே சொல்லப்பட்ட திருக்குர்ஆன் வசனத்தை இறக்கிவைத்தான்.
"மேலும் அல்லாஹ்வின் மீதுள்ள அன்பின் காரணமாக ஏழைகளுக்கும், அனாதைகளுக்கும், சிறைப்பட்டவர்களுக்கும் உணவளிப்பார்கள்”
(திருக்குர்ஆன் 76:7-8)

தன் தேவையைப் பிற்படுத்தி பிறரின் தேவைக்கு முன்னுரிமை வழங்கிய இந்த சம்பவத்திலிருந்து நாம் பாடம் கற்றுக்கொள்ள நிறையவே இருக்கிறது
ரஹ்மத் ராஜகுமாரன்

இரு சக்திகள்

வாழ்க்கை தத்துவங்கள் 8




தம் உடலை பொருட்களால் உருவாக்கப்பட்ட எந்திரமாக ரசாயனமாக பார்த்தால் மக்னீசியம், பாஸ்பேட் , பொட்டாசியம் , உயிரணு, ஹீமோகுலோபின் , செல் என்று நுண்ணிய பொருளாக தெரிந்தாலும் அழகான உடலாக தெரிகிறது . இதனால் இவ்வுடலை நாம் குறை ஒன்றும் கூற முடியாது .

இந்த உடல் மண்ணிலிருந்து வெளிவந்து மண்ணில் விளைந்தவைகளை தின்று, வாழ்ந்து இது மீண்டும் மண்ணிலேயே கலந்து காணாமல் போகிறது .உடல் என்பது இந்த அளவிற்கு செயல்பட்டால் போதாதா ?
உடலின் கண்ணோட்டத்தில் பார்த்தால் இது நிச்சயம் போதுமானதான் .
ஆனால் பிரச்சினை என்னவென்றால் , இந்த உடல் விமான மாதிரியோ வேறு ஏதோ ஒரு வாகனம் மாதிரியோ உங்களை எங்கும் கூட்டிச் செல்லாது .

ஆனால் ஒரு பறவைப்போல் பறந்து செல்லும் ஒரு பரிமாணமும் உள்ளடக்கியதுதான் இந்த உடல். அதை என்னவென்று சொல்வது ?
புரியவில்லையா ? இந்த உடலுக்குள் வேறு ஒரு பரிமாணம் ஒன்று உண்டு. அது பொருள் வடிவில் இல்லாத அதே சமயம் பொருட்களையெல்லாம் தாண்டிய ஒன்று . அதை உயிர் என்றும் , ரூஹ் என்றும் , ஆன்மா என்றும் கூறிக்கொள்கிறார்கள். அது எப்படி இந்த அற்புதமான எந்திரத்துக்குள் புகுந்து கொண்டு விட்டது ? எலிப்பொறிக்குள் சிக்கிய எலி மாதிரி !

இந்த கண்ணுக்குத் தெரியாத இந்த பரிணாமம்தான் இங்கு நிகழ்ந்திருக்கும் படைப்பிற்கு ஆதாரம். ஒரு மனிதனாக நமக்கு இருக்கும் அத்தனை திறனுக்கும் கூட இதுதான் அடிப்படை . " நான் " என்று சொல்வதும் இதுதான் .
படைப்பு என்பது ஒன்று ஆனால் அதற்கு ஆதாரமானது முற்றிலும் வேறென்று. இது உங்களுக்கு வியப்பாக இருக்கிறதா ?
இங்கு வாழும் ஒவ்வொரு உயிரினத்திலும் , ஒவ்வொரு செடியிலும், விதையிலும் படைப்பிற்கு ஆதாரமான சக்தி வெளிப்பட்டுக் கொண்டே இருக்கிறது .இருந்தாலும் மனிதனில் இந்த சக்தி இன்னும் பிரமாண்டமாய் வெளிப்படுகிறது. அந்த காரணத்தினால்தான் நாம் உடல் தரக்கூடிய அத்தனை அற்புதமான பரிசுகளும் ஒரு அளவிற்கு மேல் நமக்கு அர்த்தம் அற்றதாகவும் , துச்சமானதாகவும் தெரிகிறது .

இந்த காரணத்தினால்தான் இவ்வுலகில் மனிதனாக பிறந்த ஒவ்வொருவரும் , பொருட் தன்மை சார்ந்த ஒரு பரிணாமத்திருக்கும் , பொருட்தன்மை தாண்டிய இன்னொரு பரிணாமத்திற்குமிடையே போராடுகிறார்கள் .
நீங்கள் பொருள் தன்மையின் கட்டாயத்தில் செயல்பட்டுக் கொண்டிருந்தாலும், பொருட் தன்மையை தாண்டியும் நீங்கள் இருக்க முடியும் என்ற விழிப்புணர்வு உங்களுக்குள் இருக்கிறது என்பதை அறிவீர்களா ?
பொருளற்ற இந்த ஒரு பரிமாணத்திற்கு பல பரிமாணங்கள் உண்டு .அவைகள் மனம் என்றும் , நினைவு என்றும் ,கனவு என்றும் மாறி மாறி இந்த உடல் என்ற கூட்டிற்குள் திரும்ப திரும்ப வரும் ஒரு பறவையைப் போல் செயல்படுகிறது .

அடிப்படையில் பார்த்தால் இந்த இரண்டு விதமான சக்தி உங்களுக்குள் செயல்பட்டுக் கொண்டே இருக்கிறது . இவை இரண்டும் ஒன்றுக்கொன்று முரணாகச் செயல்படுகிறது என்றே பலரும் நினைக்கின்றனர் . ஆனால் நிஜம் அதுவல்ல இவற்றுள் ஒரு சக்தி உங்களுக்குள் சுய பாதுகாப்பை உந்துகிறது.கணப்பொழுதும் தவறாமல் சுவாசிக்க , இரத்தத்தை உந்தி தள்ள இதுபோன்ற பணிகளை சிறப்பாக செய்கிறது . இதுதான் உங்களை சுற்றி ஒரு பாதுகாப்பு சுவர்களை எழுப்ப வேண்டும் என்று உங்களை கட்டாயப்படுத்துகிறது .

மற்றொரு சக்தி , எல்லை இல்லாமல் விரிய வேண்டும் என்ற ஏக்கமாக உங்களுக்குள் செயல்படுகிறது !
உங்களை எல்லைக்குள் பாதுகாப்பாய் வைக்க ஒரு சக்தியும் , இவைகளை எல்லாம் தகர்த்து நீங்கள் விரிய வேண்டும் என்று மற்றொரு சக்தியும் செயல்பட்டுக் கொண்டே இருக்கின்றன.
இவை இரண்டும் எதிரெதிராக இருப்பது போல் தோன்றினாலும் அவை எதிர் எதிர் சக்திகள் அல்ல . அவை உங்கள் வாழ்வின் இருவேறு அம்சங்களில் செயல்பட்டுக் கொண்டிருக்கும் சக்திகள்
ஒன்று இப்பூமியில் உங்களை ஸ்திரமாக நிலைநாட்டிக் கொள்ள உதவுகிறது . மற்றொன்று இதையெல்லாம் தாண்டி செல்ல உங்களுக்கு உதவுகிறது .

இந்த இரு சக்திகளையும் பிரித்தறிந்து அவற்றை விழிப்புணர்வுடன் கையாள நீங்கள் கற்றுக்கொள்ள வேண்டும். அப்படிச் செய்யும் போது இவை இரண்டுக்கும் இடையே போராட்டம் இருக்காது . சுய பாதுகாப்பு என்பது உங்கள் உடலோடு நின்றுவிட வேண்டும் . உடலைத் தாண்டி உங்கள் வாழ்வில் பிற அம்சங்களில் அது நுழையக்கூடாது.
நீங்கள் உடலோடு அடையாளம் கொள்ளும்போது படிப்படியாக இந்த சுய பாதுகாப்பு உங்கள் வாழ்வின் எல்லா நிலையிலும் நுழைந்துவிடுகிறது.

இது நடக்கும்போது தான் இந்த இரு சக்திகளும் இணைந்து செயல்படுவதற்கு பதிலாக , ஒன்றுக்கொன்று எதிராக செயல்படுவது போன்ற நிலை உருவாகிறது .
இந்த இரு சக்திகள் குறித்து குர்ஆனில் அல்லாஹ் ....

اَللّٰهُ يَتَوَفَّى الْاَنْفُسَ حِيْنَ مَوْتِهَا وَالَّتِىْ لَمْ تَمُتْ فِىْ مَنَامِهَا فَيُمْسِكُ الَّتِىْ قَضٰى عَلَيْهَا الْمَوْتَ وَ يُرْسِلُ الْاُخْرٰٓى اِلٰٓى اَجَلٍ مُّسَمًّى اِنَّ فِىْ ذٰ لِكَ لَاٰيٰتٍ لِّقَوْمٍ يَّتَفَكَّرُوْنَ
மனிதர்கள் இறக்கும்பொழுதும், இறக்காமல் நித்திரையில் இருக்கும்பொழுதும் அல்லாஹ்வே அவர்களுடைய உயிரைக் கைப்பற்றுகிறான்.
பின்னர், எவர்கள் மீது மரணம் விதிக்கப்பட்டதோ அவர்களுடைய உயிரை(த் தன்னிடமே) நிறுத்திக் கொள்கிறான். மற்றவர்க(ளின் உயிர்க)ளை, குறிப்பிடப்பட்ட காலம் வரையில் வாழ அவன் அவர்களிடமே அனுப்பி விடுகின்றான்.
சிந்திக்கக் கூடிய மக்களுக்கு, நிச்சயமாக இதில் பல படிப்பினைகள் இருக்கின்றன. (அல்குர்ஆன் : 39:42)

" ஸர்வேந்த்ரிய குணாபாஸம்
ஸர்வேந்த்ரிய விவர்ஜிதம் அஸக்தம்
ஸர்வபிருச்சைவ நிர்க்குணம் குணபோக்த்ரு ச " - பகவத் கீதை 13-14.
பொருள்:
எல்லாப் புலன்களுடைய செய்கையினால் விளங்குவது.
(ஆனால்) ஒரு புலனும் இல்லாதது. (ஒன்றையும்) பற்றாதது.
ஆனால் எல்லாவற்றையும் தாங்குவது. குணங்களில்லாதது
ஆனால் குணங்களை அனுபவிப்பது
இதுதான் ஆத்மா .
ஆத்மாவிற்குள் என்ன உள்ளது?
ஆத்மா இலேசானது!
ஆத்மா அலறக்கூடியது!
ஆத்மா துன்பப்படக்கூடியது!
ஆத்மா இன்பப்படக்கூடியது!
ஆத்மாவுக்கு உடை இல்லை!ஆத்மாவுக்கு பயம் உள்ளது!
ஆத்மாவுக்கு சுகம் உள்ளது!
ஆத்மாவுக்கு உறுப்புகள் இல்லை!ஆத்மாவுக்கு நிர்வாணம் இல்லை!ஆத்மாவுக்கு சோதனைகள் உள்ளது!
எனவே ஆத்மாவை பாழ்படுத்தி விடாதீர்கள் .
ரஹ்மத் ராஜகுமாரன் .

முயற்சி

வாழ்க்கை தத்துவங்கள் - 9




முயற்சி உடையார் இகழ்ச்சி அடையார் என்கிறார் ஔவை .
ஒரு முட்டைக்குள் உறங்கும் கோழிக்குஞ்சு வெளியில் வர வெப்பத்தை வேண்டுமானால் தாய் கோழித் தரலாம். ஆனால் ஓட்டை உடைத்துக் கொண்டு வெளியில் வர குஞ்சுதான் முயற்சி எடுக்க வேண்டும்.
அதுபோல வாழ்க்கைக்கு வழி பிறர் காட்டலாம் . அதில் வெற்றி பெறுவது நமது முயற்சியை பொறுத்தேதான் அமையும் .

உயரம் குறைந்தவன் போலீஸ் வேலைக்கு வேண்டுமானால் போக முடியாமல் போகலாம் ; ஆனால் போலீஸை வேலை வாங்குகிற கலெக்டர் வேலைக்கு போக முடியும் .
கொஞ்சம் நிறம் குறைந்தவள் உலக அழகியாக முடியாமல் போகலாம். அவர்களை தேர்வு செய்யும் குழுவின் தலைவியாக ஆக முடியும் . எனவே வெற்றிபெற நம்பிக்கையும் முயற்சியும் தேவை.
அமெரிக்காவின் பிரபல கோடீஸ்வரர் ராக் ஃபெல்லர் முதுமையிலும் கடுமையாக உழைத்தார் . விமான பயணத்தின் போது ஓர் இளைஞர் அவரிடம், " ஐயா தாங்களுக்கு இருக்கும் சொத்திற்கு நீங்கள் உட்கார்ந்து சாப்பிடலாமே " என்று ....

அதற்கு அவர், "இப்பொழுது பறக்கும் விமானத்தின் எஞ்சினை நிறுத்தினால் விபத்து ஏற்படும் . அதுபோலதான் வாழ்க்கையும் போராடிக் கொண்டே இருந்தால்தான் வெற்றி பெற்றுக் கொண்டே இருக்கலாம் " என விளக்கம் அளித்தார் .

'கடும் உழைப்பே வெற்றி தரும்'என்பதாக மு.மேத்தா அவர்கள்
நட ... நாளை மட்டுமல்ல இன்றும் நம்முடையதான் நட ..
வெற்றி தேவதை உன்னுடைய விலாசத்தை விசாரிக்க தொடங்கும்வரை நட ...
பாதங்கள் நடக்க தயாராக இருந்தால் பாதைகள் மறுப்பு சொல்ல போவதில்லை ...
நெய்யாய் திரியாய் நீயே மாறினால் தோல்வியும் உனக்கு ஒரு தூண்டுகோலாகும் நட ...
என்னும் கவிதை மூலம் காட்டுகிறார்
போராடும் குணம் கருவிலேயே தொடங்கிவிடுகிறது என்கிறார்கள் .
கர்ப்பையில் செலுத்தப்படும் 30 கோடி உயிரணுக்களில் அத்தனைவற்றையும் புறந்தள்ளி நீங்கள் ஒருவர் மட்டுமே சினைமுட்டையை துளைத்து , குழந்தையாக உருவெடுக்கும் போதே போராட்டம் தொடங்கிவிடுகிறது .
எனவே வாழ்க்கையில் போராடும் குணம் உடையவர்கள் வெற்றி பெறமுடியும் சோதனையும் , வேதனையும் இல்லாமல் சாதனை பிறப்பதில்லை .

வாழ்க்கையில் இன்பம் மட்டுமன்றி துன்பமும் நமது தோழனே என எண்ணுங்கள் .

"ஒரு மனிதனால் ஒன்று முடியும் என்றால் அது எல்லா மனிதனாலும் ஏன் முடியாது ? " என்று கேட்கிறார் விவேகானந்தர் .
கஷ்டத்தின் இறுதியில் இஷ்டப்பட்டு கிடைப்பதுதான் வெற்றியும் , மாலையும் அது ஒன்றும் சும்மா இருந்து கிடைப்பதில்லை .

فَإِنَّ مَعَ الْعُسْرِ يُسْرًا ۙ
ஆதலின் நிச்சயமாகத் துன்பத்துடன் இன்பம் இருக்கிறது.
(அல்குர்ஆன் : 94:5)

اِنَّ مَعَ الْعُسْرِ يُسْرًا
நிச்சயமாக துன்பத்துடன் இன்பம் இருக்கிறது.
(அல்குர்ஆன் : 94:6)

என்ற இரு வசனத்தை இரண்டு முறை இறைவன் கூறியிருப்பதுக் கூட "முயற்சி செய் , முயற்சி செய் " என்று கூறுவது போல் இருக்கிறதல்லவா ?
ரஹ்மத் ராஜகுமாரன்

மாத்தி யோசி

வாழ்க்கை தத்துவங்கள் – 10



கல்லூரி வளாகத்தில் இருந்த மாமரம் காயத்து குலுங்கியது . ஆசை ஆசையாக மாங்காய் கிடைக்கும் என்று ஆவேசமாக கல்வீசினான் கல்லூரி மாணவன். காவல்காரர் கையில் சிக்கி கல்லூரி தலைவர் முன் தண்டனைக்காக நிறுத்தப்பட்டான்.
"ஏன் கல் வீசினாய் ? " என்றார் தலைவர்
"இந்த வயதில் மாங்காய் தின்னாமல் எந்த வயதில் தின்பது ? மாங்காயைப் பார்த்தால் திருடியாவது தின்னத் தோன்றுகிறது " என்றான் அந்த குறும்புக்கார மாணவன் .
கல்லூரி நிர்வாகி கண்களில் அன்பு பொங்க அவனைப் பார்த்துவிட்டு , தமது செயலாளரிடம் உத்தரவிட்டார் .
"கல்லூரி வளாகம் முழுவதும் மாங்கன்றுகளை நட்டு விடுங்கள் . மாணவர்கள் ஆசைதீரப் பறித்துத் தின்னட்டும் ! "
தண்டனைக்கு பதில் பெரும் பரிசு தரும் மனம் யாருக்கு வரும் ? வள்ளல் அழகப்ப செட்டியார் மட்டும்தான் வரும்.
அரண்மனைத் தோட்டத்தில் இதேபோல் மாங்காய் அடிக்க கல் வீசினான் ஒரு சிறுவன் .
கல் அரசர் நெற்றியில் பட்டு மாங்காய் மாதிரி புடைத்து விட்டது . சிறுவனை பிடித்து வரச் சொல்லி , "என்ன குற்றம் என்ன தண்டனை வரையறை செய்யுங்கள் " என்று அமைச்சர்களுக்கு உத்தரவிட்டார் அரசர் .
"திருட்டு குற்றம் " என்றார் ஒரு அமைச்சர்.
"கல் அரசர் மீது பட்டதால் கொலை முயற்சி " என்று வழக்கை மாற்றச் சொன்னார் மற்றவர்.

"அடிபட்டவர் ஓர் அரசர் என்பதால் ஆட்சிக் கவிழ்ப்பு முயற்சி என்று உள்ளே வைக்கலாம் '' என்றார் இன்னொருவர் .

அங்கிருந்த ஜென் குருவிடம் ஆலோசனை கேட்டார் அரசர் .
"அரசே...! உங்கள் நெற்றியில் வீக்கம் எவ்வளவோ... அவ்வளவு தங்கம் கொடுங்கள் " என்றார் ஜென் குரு .
அதிர்ச்சி அடைந்த அரசர் " ஏன் தங்கம் தர வேண்டும் ? என்றதும் ,
" இதோ பாருங்கள் அரசே ! அந்தக் கல் சரியாக மாமரத்தில் பட்டிருந்தால் , மாமரம் தேன் போன்ற பழம் தந்து அந்த சிறுவன் அவனை மகிழ வைத்திருக்கும் . அறிவற்ற மாமரமே தன்னை கல் கொண்டு அடித்தவனுக்கு பரிசளித்துப் பாராட்டும்போது , அரசன் அதைவிட அதிகமாக பரிசளித்தால்தான்

கௌரவம் " என்றார் ஜென் குரு .
திருமணம் ஆன ஒரு பெண் ஒரு பெரியவரிடம் வந்து,
"பெரியவரே!... கல்யாணமாகி இரண்டு வருஷம்தான் ஆகுது. ஆனால் எனக்கும் என் கணவனுக்கும் அடிக்கடி வாய்ச் சண்டை வருது. வாழ்க்கை நரகமாயிருக்கு. நீங்கதான் யோசனை சொல்லணும்" என்றாள் .
அந்த பெரியவர் அவளைப் பார்த்து புன்னகை புரிந்தார்.
அவளிடம் மருந்துள்ள ஒரு பாட்டிலை நீட்டி,
"இதிலே இனிப்பு மருந்து உள்ளது. உன் கணவர் உன்னிடம் கோபமாகப் பேசும்போது , நீ இந்த மருந்தை உன் வாயில் ஊற்றிக் கொண்டு விழுங்கிவிடாமல் சிறிது நேரம் இரு. அவர் கத்தி முடித்ததும் மருந்தை விழுங்கி விடு. எல்லாம் சரியாகிவிடும்" என்றார் சாந்தமாக.

அந்தப் பெண் நம்பிக்கையில்லாமல் அந்த மருந்தை வாங்கிச் சென்றாள்.
இரண்டு மாதங்கள் கழித்து மீண்டும் வந்தாள்.
"பெரியவரே !... இரண்டு மாதங்களாகஎனக்கும் என் கணவருக்கும் சண்டையே வரவில்லை. நீங்கள் கொடுத்த மருந்து நன்றாக வேலை செய்கிறது. மருந்து தீர்ந்துவிட்டது. இன்னும் கொஞ்சம் மருந்து கொடுங்கள்" என்றாள்.
பெரியவர் சிரித்தார். "இது மருந்தல்ல... சர்க்கரைத் தண்ணீர். தேவையானால் நீயே தயார் செய்து நான் சொல்லியபடி பயன்படுத்திக் கொள்' என்றார்.

இதிலிருந்து என்ன புரிகிறது: வாய் மூடி இருந்தால் , எந்த பிரச்சனையும் வராது. மனைவி நாவை அடக்கினால் , கணவன் வாயை அடக்கிவிடுவான் . அனைத்து பிரச்சனைக்கும் காரணம் இந்த எலும்பு இல்லாத நாவுதான்!
ரொம்ப வயசாகி, சாகப்போற நேரத்துல குரு ஞானி , தன்னோட சீடர்களுக்கு வாழ்க்கை தத்துவம் ஒன்றை புரியவைக்க நினைத்தார். எல்லாரையும் அழைத்து உக்கார வைத்து, அவங்களுக்கு தன்னோட பொக்கை வாயை திறந்து காண்பித்தார்.

அவ்வளவுதான், 'வாழ்க்கைத் தத்துவம் இதுதான்'னு சொல்லி போகச் சொல்லிட்டார்.
சீடர்களுக்கு ஒன்றும் புரியவில்லை, ஒரே ஒரு சீடன் மட்டும் வாய்க்குள் அப்படியென்ன வாழ்க்கைத் தத்துவம் இருந்துதிட போகுதுன்னு குழம்பினவன், மெதுவாக குருவையே எழுப்பி கேட்டான்.
குரு கேட்டார்.. 'என் வாய்குள்ள என்ன இருந்தது?'
'நாக்கும் உள்நாக்கும் இருந்தது!'
'பல் இருந்ததா?'
'இல்லை.'

'அதுதான் வாழ்க்கை.. வன்மையானது அழியும், மென்மையானது வாழும்.'
பிரச்சனைக்குரிய தீர்வை மாத்தி யோசிக்கவும் வேண்டும் . அதே சமயம் எப்பொழுதும் மனிதன் மென்மையாக நடந்து கொள்ளவும் வேண்டும் !
இதுதான் வாழ்க்கை தத்துவம் .

குறிப்பு :- வாழ்க்கை தத்துவம் தொடர் இத்துடன் நிறைவு பெறுகிறது .
**ரஹ்மத் ராஜகுமாரன்**

என் வழி எல்லோருக்குமான வழி அல்ல!




எங்கள் ஊர் மேலப்பாளையத்தில் 1950 வாக்கில் நடந்த ஒரு சம்பவம் .
அன்றைய காலப்பொழுதில் எங்கள் ஊரில் நிறைய பண்ணையார்கள் பர்மா , ரங்கோன் , கொழும்பு போன்ற போன்ற நாடுகளில் ஜவுளி வியாபாரமும் , ஊரில் விவசாயம் , கால்நடை பண்ணைகள் போன்றவற்றையும் நடத்தி வந்தார்கள் .

ஒரு சமயம் எங்கள் ஊரில் மா.சே பண்ணையார் 6 கி.மீ தூரம் உள்ள வீராவரம் (வீர ராகவ புரம் பழைய பெயர் - திருநெல்வேலி புதுப் பெயர்) இரட்டை மாட்டு கோச் வண்டியில் பயணப்பட்டு போய்க்கொண்டிருந்தார்.
வழியில் .... எங்கள் ஊரின் மிகப் பெரிய ஆலிம் "மைதீன் குட்டி ஆலிம்சா " அவர்கள் ஒரு வெள்ளை துண்டை போர்த்தியவாறும் , கால் மிதியடியுடனும் , கையில் ஒரு குடையைப் பிடித்தவாறும் நடந்து அவரும் வீராவரம் போய்க் கொண்டிருந்தார்.

இதைக் கண்ணுற்ற பண்ணையார்
' இந்த கொடுமையான வெயிலில் ஆலிம்சா அவர்கள் நடந்து போய்க்கொண்டு இருக்கிறாரே... அவரும் வீராபுரம் போய்க் கொண்டுதான் இருப்பார் போலும்.' எனவே வண்டிக்காரரிடம் வண்டியை நிறுத்தி , ஆலிம்சா அவர்களை தன் மாட்டு கோச்சு வண்டியில் வரும்படி வற்புறுத்தினார் .
மைதீன் குட்டி ஆலிம்சா அவர்கள் மாட்டு வண்டியில் ஏறுவதற்கு மறுத்தவர்களாக நடந்தே வீராவரம் போய் சேர்ந்தார் .

பண்ணையாருக்கு ரொம்பவும் வருத்தமாக போய்விட்டது . ஆலிம்ஷா அவர்கள் வண்டியில் ஏறி இருந்தால் ஏதாவது ஷரியத் சம்பந்தப்பட்ட விஷயங்களை கேட்டுக்கொண்டே பயணம் போயிருக்கலாமே. மறுத்து விட்டாரே...! "என்று வண்டி ஒட்டுபவரான கட்டை காசியாரிடம் ஆதங்கப்பட்டார் .
உடனே வண்டி ஓட்டும் கட்டை காசியார். "முதலாளி ...! ஆலிம்சா ஷரியத்தை மிகவும் பேணுபவர். ஆலிம்ஷா நீங்கள் செய்யக்கூடிய வியாபாரம் மற்றும் பண்ணை தொழிலில் மார்க்கத்திற்கு புறம்பான விலக்கப்பட்ட காரியத்தை நீங்கள் செய்து கொண்டிருக்கலாம் என்று எண்ணி இருக்கலாம் . எனவே ஆலிம்ஷா வண்டியில் ஏற மறுத்து இருக்கலாம் " என்றார்.

" என்னே ! இந்த ஆலிம்சா சொல்படியே தான தர்மங்களில் மிகைதிருக்கக்கூடிய ஜகாத் , ஸதக்காகளை நியமமாக செய்து வருபவன் . நானா மார்க்கத்துக்கு முரணான ஹராமான தொழிலை செய்து கொண்டிருப்பேன் ? இரவு ஊர் ஜமாத்தைக் கூட்டி ஆலிம்ஷாவை வரவழைத்து விபரம் கேட்க வேண்டும் " என்றார் பண்ணையார் மா.சே .
இரவு ஊர் ஜமாத் கூட்டம் கூடியது. ஆலிம்ஷா அவர்களையும் வரவழைக்கப்பட்டது .
ஆலிம்ஷா வந்ததும் , "எதற்கு இந்த ஊர்க்கூட்டம் ? பண்ணையார் அவர்கள் எது விஷயமாக இருந்தாலும் என்னை அவர்கள் வீட்டுக்கு கூப்பிட்டு இருந்தால் , நானே அவர்களின் வீட்டிற்கு போய் விளக்கம் சொல்லி இருப்பேனே " என்று வருத்தப்பட்டு சொன்னார் .
ஜமாத் தலைவர் ஆலிம்ஷாவிடம் , "இன்று காலையில் நீங்கள் வீராபுரம் போகும்போது பண்ணையார் தனது மாட்டு கோச் வண்டியில் ஏன் ஏற மறுத்தீர்கள் ? அவர் செய்யக்கூடிய வியாபாரம் மற்றும் பண்ணைத் தொழிலில் மார்க்கத்திற்கு முரணான ஹராமான ஏதாவது செய்திருப்பதாக நீங்கள் எண்ணுகிறீர்களா ? என்று கேட்டார் .

உடனே மைதீன் குட்டி ஆலிம்சா அவர்கள் : "நீங்கள் தப்பாக புரிந்து கொண்டீர்கள். பண்ணையார் ஹலாலான தொழிலேதான் செய்துகொண்டிருக்கிறார் . அவர் தன்னுடைய மாட்டு கோச்சு வண்டியில் என்னை கண்ணியமாக மரியாதையாக என்னை அழைத்தது குறித்து மிக்க சந்தோஷப்பட்டேன் .

பின்பு ஏன் மாட்டு வண்டியில் ஏற மறுத்தீர்கள் ?
அண்ணலம் பெருமானார் நபி முஸ்தபா ஸல்லல்லாஹு அலா முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் குதிரையில் பயணப் பட்டிருக்கிறார்கள், மற்றும் கோவேறு கழுதையிலும் பயணப்பட்டிருக்கிறார்கள் ஆனால் மாட்டை வாகனமாக பயன்படுத்தியதாக அவர்களின் எந்த வரலாற்றுக் குறிப்பிலும் நான் காணவில்லை . அதே சமயம் நீங்கள் மாட்டை வாகனமாக பயன்படுத்துவதில் மார்க்கம் எந்த தடையும் விதிக்கவில்லை .இந்த தடை ஆலிமான எனக்கு நானே பேணுதலுக்காக விதித்துக் கொண்டதே தவிர உங்களுக்கு அல்ல " என்றார்கள் .

உடனே மொத்த ஊர் ஜமாஅத்தும் ஆலிம் அவர்களின் பேணுதலான ஷரியத் கட்டுப்பாட்டை மெச்சினார்கள் .
இதே மாதிரி இன்னொரு சம்பவம்

நூறாண்டு காலம் வாழ்ந்த காஞ்சி மகா பெரியவர் காரில் போனதில்லை. விமானம் ஏறியது இல்லை. தொலைபேசியில் பேசியதும் இல்லை. அவர் காலத்தில் மடம் மிகமிகப் பழமையான பாரம்பரியமான மரபுகளை பாதுகாத்தது .
இது சிலருக்குப் பிடிக்கவில்லை. காலத்துக்கு ஏற்ற பல மாற்றங்களை கொண்டுவரும்படி பெரியவரை தொல்லைப்படுத்தினர். ஆனால் எவ்வித மாறுதலையும் பெரியவர் அறிவிக்கவில்லை.
"காலத்துக்கு ஏற்ற புதிய வகையான மாடல்களை அதாவது மரபு மீறல்களை ஏன் செய்யக்கூடாது ? " என்று ஒரு பெரிய மனிதர் நேரடியாகவே பெரியவரிடம் கேட்டார்.

அதற்கு " இந்த மடத்தை நானா நிர்மாணம் பண்ணினேன் ? நம்ம மூதாதையர்கள் உருவாக்கின மடம் . இதில் சில நியதிகள் நியமனங்கள் மரபுகளை வகுத்து வைத்திருக்கிறார்கள். இதை என்னண்டை ஒப்படைச்சப்ப , '' உன் இஷ்டத்துக்கு என்ன வேணுமானாலும் பண்ணுன்னு சொல்லிக் கொடுக்கலை . இங்க இருக்கிற தர்மத்தை அனுஷ்டானத்தைப் பாதுகாப்பாக காப்பாத்தி , நீ அடுத்த ஒரு
தர்மகர்த்தா கிட்ட ஒப்படைச்சுடு . இது உனக்கு அமானிதமான ஒரு அடைக்கலப் பொருள் " என்று சொல்லித்தான் கொடுத்தார்கள் . அடைக்கலப் பொருளில் நம் இஷ்டத்திற்கு மாற்றம் செய்தால் அது அடைக்கலப் பொருளுக்கு மோசடி செய்த குற்றம் அல்லவா ?"

மேலும் அவர் தொடர்ந்து, " ஜகத்குரு சங்கராச்சாரியார் பரம்பரை என்கிறது ஒரு சங்கிலி தொடர் . அதுல நான் முதல் வளையமும் இல்லை. கடைசி வளையமும் இல்லை . நடுவுல உள்ள ஒரு வளையம் . நடுவுல இருக்கிற வளையும் அதுக்கு முந்தின வளையம் மாதிரியேதான் இருக்கணுமே ஒழிய , அது இஷ்டத்துக்குப் பெரிசாகவோ சிறிசாகவோ இருக்க முடியாது . இருக்கவும் கூடாது. தன் முந்தின வளையம் போலவே இருக்க வேண்டியது அடுத்த வளையத்தோட கடமை. அதுக்குத்தான் சங்கிலின்னே பேரு . ...அதனால , இந்த மடத்தோட மரபுகள்ல எந்த மாற்றமும் பண்ற அதிகாரம் எனக்கில்ல மேலும் துளிக் கூட இஷ்டமும் இல்லை ! " என்றார்.

**ரஹ்மத் ராஜகுமாரன்**

இல்லாமையிலிருந்து எல்லாம்.

அறிவியலிலிருந்து ஆன்மிகம் வரை 1




اَوَلَمْ يَرَ الَّذِيْنَ كَفَرُوْۤا اَنَّ السَّمٰوٰتِ وَالْاَرْضَ كَانَتَا رَتْقًا فَفَتَقْنٰهُمَا وَجَعَلْنَا مِنَ الْمَآءِ كُلَّ شَىْءٍ حَىٍّ اَفَلَا يُؤْمِنُوْنَ

(ஆரம்பத்தில்) வானம் (என்றும்) பூமி (என்றும் தனித்தனியாக) இல்லாமல் இருந்ததை நாமே பிரித்தமைத்தமைத்தோம் என்பதையும் , உயிருள்ள ஒவ்வொன்றையும் நீரிலிருந்தே படைத்தோம் என்பதையும் இந்நிராகரிப்பவர்கள் கவனிக்க வேண்டாமா ? (இதை) அவர்கள் நம்பிக்கை கொள்ள மாட்டார்களா?
(அல்குர்ஆன் : 21:30)

பிரபஞ்சத்தின் துவக்கத்தை பற்றி சொல்வது ஓர் அற்புதச் செயல் போலத்தான் தோன்றுகிறது. ஒருகணத்தில் உருவானது என்கிறார்கள் . அதை புரிந்துகொள்ள நம் சம்பிரதாயச் சிந்தனை முறையே மாற்றிக் கொள்ள வேண்டி இருக்கிறது !

13.7 பில்லியன் வருடங்களாக அதாவது 1370 கோடி வருடங்களுக்கு முன்பாக ஒரு மஹா வெடிப்பு **( Big Bank)** வெடித்தது என்பதை ஒரு மனிதனாக உங்களால் கற்பனைப் பண்ணி பார்க்கவே முடியாது. இலக்கங்களாக எழுதினாலும் அதன் தாக்கம் புரியாது . அதனால் அதை ஒரு உதாரணத்தின் மூலம் சுலபமாக புரிய வைக்க விஞ்ஞானிகள் முயல்கிறார்கள்.
அண்டம் இப்போதும் விரிவடைகிறது என்று சொன்னால்,எப்படி தெரியும் என்ற கேள்வி உங்களுக்கு எழும் அல்லவா ?
சொல்றேன் . பூமியிலிருந்து நவீன தொலைநோக்கிக் கருவிகள் மூலம் அண்டத்தின் எல்லைவரை பார்க்கும்போது அங்கேயுள்ள காலக்ஸிகள் (Galaxy) நம்மை விட்டு விலகிச் செல்வதை அறியமுடிகிறது.

உதாரணமாக பலூனில் பேனாவின் மூலம் சுற்றிவர புள்ளிகளை இட்டு பின்னர் அந்த பலூனை படிப்படியாக பெரிதாக ஊதும் போது , அதில் உள்ள புள்ளிகள் எப்படி ஒன்றைவிட்டு ஒன்று விலகிச் செல்லுமோ அப்படி அண்டத்தின் எல்லைகளில் இருக்கும் கேலக்ஸிகளும் விலகிச் செல்கின்றன .

(எவருடைய உதவியும் இன்றி) நம்முடைய சக்தியைக் கொண்டே வானத்தை அமைத்தோம் . நிச்சயமாக நாம் (அதனை அவர்களின் அறிவிற்கெல்லாம் எட்டாதவாறு) மிக்க விசாலமாக்கியும் வருகின்றோம். குர்ஆன் (51: 47)
ஒரு பேச்சுக்கு 13.7 பில்லியன் வருடங்களே 'ஒரு வருடம்' என்று கற்பனையாக எடுத்துக் கொள்ளுங்கள். இந்தக் கட்டுரையை நீங்கள் 2021 ஆம் ஆண்டு பிப்ரவரி 1ஆம் தேதி படித்துக் கொண்டிருக்கிறீர்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள் . அதாவது சரியாக ஒரு வருடத்திற்கு முன்னர் 2020ஆம் ஆண்டு பிப்ரவரி 1ஆம் தேதி பிக் பேங்க் என்னும் அந்த பெருவெடிப்பு நடந்திருக்கும் .

நமது சூரியன் 2021 ஆம் வருடம் பிப்ரவரி மாதம் 1 ஆம் தேதியில்தான் உருவாகியிருக்கும். பூமியில் உயிரினம் தோன்றியது இன்று காலைதான். அதாவது 2021 ஆம் வருடம் பிப்ரவரி மாதம் 1 ஆம் தேதியில காலை 7 மணிக்கு . இன்று இன்று காலை 11 மணிக்கு மனிதன் பூமியில் தோன்றினான் . இரண்டு செகண்டுக்கு சற்றுமுன்னர் மோசேயுடன் கடவுள் பேசினார் . ஒரு செகண்டுக்கு முன்னர் இயேசு பூமியில் பிறந்தார். அரை செக்கண்டிற்கு முன்னர் அண்ணலெம் பெருமானர் (ஸல்) அவர்கள் மிஹ்ராஜில் இறைவனிடம் உரையாடி ஐங்காலத் தொழுகையை வாங்கிச் சென்றார்கள் . இத்தனையும் 13.7 பில்லியன் வருடங்களே 'ஒரு வருடம்' என்று கற்பனையாக எடுத்துக் கொள்ளும் போது நடக்கிறது .

இப்போது நான் சொன்ன இந்த கால அளவீடுகளில் நீங்கள் புரிந்து கொண்டால் , இதையும் கொஞ்சம் சிந்தித்துப் பாருங்கள் ! ஒரு வருடத்திற்கு முன்னர் பெருவெடிப்பில் அண்டம் தோன்றியது என்று வைத்துக் கொண்டால், கடவுள் மனிதனுடன் தொடர்பு கொண்டது இரண்டு செகண்டுகளுக்கு முன்னர்தான் . அதாவது 13.7 பில்லியன் வருடங்களுக்கு முன்னர் தோன்றிய அண்டத்தில் சில ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்தான் கடவுள் மனிதனுடன் பேசியிருக்கிறார் எவ்வளவு பெரிய இடைவெளி என்று யோசித்துப் பாருங்கள் . அது மட்டுமல்லாமல் பிரபஞ்சம் ஒரு புள்ளியாக சுருங்கி இருந்த போதும், அதற்கு முன்னரும் கடவுள் எங்கிருந்தார்? என்ன செய்து கொண்டிருந்தார் ? என்ற கேள்விகளும் அறிவியலில் கேட்கப்படுகிறது .

இது என்ன முட்டாள்தனமான கேள்விகள் கடவுள் எங்கிருந்தார் ? என்ன செய்து கொண்டிருந்தார் ? என்று கேட்பது எவ்வளவு பைத்தியக்காரத்தனம் கடவுள் எங்கும் இருப்பவரல்லவா ? என்றுதான் நாம் சிந்திப்போம் . ஆனால் அண்டம் புள்ளியாக ஒடுங்கியிருந்த நிலையில் அந்த " எங்கும் " என்ற சொல்லுக்கே அர்த்தம் இல்லை என்கிறது இதை அறிவியல் .

இடம் , காலம் , தூரம், வேகம், வெளிச்சம் என எதுவுமே இல்லாத சூனியம் அது . அங்கு "எங்கும் " என்பதும் இல்லை "எதுவும் " என்பதும் இல்லை . இதை சரியாக நீங்கள் புரிந்து கொண்டால்தான் மிக முக்கியமான மேலே உள்ள கேள்விகளை விளக்க முடியும்.
அண்டம் **(universe)** என்பது நம்மால் கற்பனையே பண்ண முடியாத அளவுக்கு பெரியது . பூமியிலும் , பூமிக்கு வெளியிலும் இரண்டு இடங்களுக்கு இடையில் இருக்கும் தூரத்தை நம்மால் கணித்துச் சொல்ல முடிகிறது . நாம் நடப்பதாக இருந்தாலும், பிரயாணம் செய்வதாக இருந்தாலும் இந்த இடை தூரத்தினூடாகத்தான் இயங்க முடியும். உங்கள் காலை தூக்கி ஒரு அடி எடுத்து வைப்பதற்கு ஒரு இடமாவது இருந்தால்தான் , உங்களால் ஒரு அந்த ஒரு அடி தூரத்தை கடக்க முடியும் . இந்த இடைவெளி அதாவது இடையில் இருக்கும் வெளி பூமியில் இருந்தால் அதை "தூரம் " என்கிறோம் . அதுவே பூமிக்கு வெளியே இருந்தால் "வெளி " என்கிறோம்.

இப்போது கற்பனையாக நாம் நிற்கும் பூமி படிப்படியாக சுருங்கி ஒரு புள்ளியாகி விடுகிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். பூமி புள்ளியாகி விட்டதா ?
அந்தப் புள்ளியிலேயே நிற்கும் நீங்கள் எங்கு எப்படி நகர முடியும் ? நீங்கள் நகர்வதற்கு 'இடம்' என்பதே இல்லாமல் போய்விடுமல்லவா ?
அதைத்தொடர்ந்து, கோடான கோடி நட்சத்திரங்களைக் கொண்ட பேரண்டம் படிப்படியாக சுருங்குகிறது என்று வைத்துக்கொள்ளுங்கள் . அண்டம் மொத்தமாக சுருங்கி ஒரு புள்ளியாகிறது. ஆனால் நீங்கள் மட்டும் முழுமையாக இருக்கிறீர்கள் . அப்படியாயின் நீங்கள் நடப்பதற்கும் நகர்வதற்கும் இடமே அங்கு இல்லாமல் போய்விடுமல்லவா ?
அங்கு இருப்பது நீங்களும் ஒன்றுமே இல்லாத வெறும் சூனியமும்தான் . உங்களால் எங்கும் நடக்க முடியாது; நடப்பதற்குத்தான் இடமில்லையே . பார்க்கமுடியாது; பார்ப்பதற்குத்தான் பொருளில்லையே. பேச முடியாது ; பேச்சை கடத்தும் சாதனம்தான் ஏதுமில்லையே . எதையும் சிந்திக்க முடியாது ; சிந்திப்பதற்குத்தான் எதுவும் கிடையாதே ; காரணம் சிந்தனை என்பதே நம்மைச் சுற்றி உள்ள பொருள்கள் , சம்பவங்கள் சார்ந்ததுதானே ! அவை எதுவுமே இல்லை என்றால் சிந்தனைக்கும் இடம் இல்லை .
கீழ் , மேல் , இடம் , வலம் என்ற திசைகள் கூட இல்லை . அப்படிப்பட்ட நிலையில் நீங்கள் அங்கு என்ன செய்வீர்கள் ? அப்படியே உங்களை கோடி ஆண்டுகள் விட்டு விட்டால் நீங்கள் என்ன செய்வீர்கள் ?
இதுபோல அண்டம் தோன்றுவதற்கு முன்னர் , அது ஒரு புள்ளியாக ஒடுங்கி , இருந்தல்லவா ? கடவுள் எப்போதும் உள்ளவர் அல்லவா ? எனவே அண்ட வெடுப்பின்போதும் , அதற்கு முன்னரும் கடவுள் எங்கிருந்தார் ? என்ன செய்தார் ? என்ற கேள்விகள் எழுவது நியாயமாக இருக்கிறதா ? அறிவியலுடன் இறையியல் மோதும் முக்கிய இடமாக இது இருக்கிறது .இங்கு கடவுளுக்கான ஒரு விளக்கத்தைக் கொடுக்க வேண்டிய சூழ்நிலையும் உருவாகிறது .

"லா இலாஹ இல்லல்லாஹ் "
இல்லை ; வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர யாருமே இல்லை (எதுவுமில்லை)
இதையெல்லாம் சிந்திக்கும் மனிதனை இன்ன பொருள் என்று கூறுவதற்கு இல்லாத நிலையில் இறைவன் படைத்தான் .

هَلْ اَتٰى عَلَى الْاِنْسَانِ حِيْنٌ مِّنَ الدَّهْرِ لَمْ يَكُنْ شَيْـــًٔـا مَّذْكُوْرًا

ஒவ்வொரு மனிதனுக்கும் (அவன் வெளிவருவதற்கு) முன்னர் ஒரு காலம் செல்லவில்லையா? அதில் அவன், இன்ன பொருள் என்றும் கூறுவதற்கில்லாத நிலைமையிலிருந்தான். (குர்ஆன் : 76:1)

இந்த அண்டத்தைப் படைக்கவா காரணம் காரியம் அவனுக்கு வேண்டும் ?

بَدِيْعُ السَّمٰوٰتِ وَالْاَرْضِ وَ اِذَا قَضٰٓى اَمْرًا فَاِنَّمَا يَقُوْلُ لَهٗ كُنْ فَيَكُوْنُ

(அன்றி) அவனே வானங்களையும் பூமியையும் முன்மாதிரியின்றியே படைத்தவன். அவன் எதைப் படைக்கக் கருதினாலும் அதனை "ஆகுக!" எனக் கூறிய மாத்திரத்தில் உடனே அது ஆகிவிடுகிறது. (அல்குர்ஆன் : 2:117)

ஐன்ஸ்டைன் இது பற்றி கூறும் போது ,
"நம் வாழ்விலேயே மிக மிக அழகான அனுபவம் வியப்புதான். உண்மையான கலை அனுபவம் உண்மையான அறிவியல் இரண்டிற்குமேயுள்ள ஆதாரமான உணர்ச்சி இது . இதை அறியாதவர் , வியக்க இயலாதவர், ஆச்சரியப்பட முடியாதவர், இறந்தவருக்கு ஈடானவர். கொஞ்சம் பயம் கலந்த சந்தேகமும் , வியப்பும்தான் மனித உணர்ச்சிகளுக்கு பிறப்பிடம் .

நம்மால் இதுவரை அறியப்படாத , அறிய முடியாத ஏதோ ஒன்று இருக்கிறது . அது நம் மிகத் தீவிரமான தர்க்கங்களுக்கும், மிக நுட்பமான அறிவுக்கும் எட்டாத ஒரு ஜொலிக்கும் அழகு . நம்மின் ஆதியாரம்ப குணங்களினால் மட்டுமே அணுகக் கூடிய அந்த அனுபவம்தான் , உண்மையான மனித உணர்ச்சி என்பேன் . எனக்கு இது போதும் வாழ்வின் சாசுவத்தின் அறிமுகம் போதும் ; புறவுலகின் ஆச்சரியகரமான அமைப்பை பற்றி எனக்கு கிடைத்த சொற்ப காட்சி , கடைக்கண் பார்வை அது போதும் . இயற்கையின் காரணத்தை அறிந்து கொள்ள ஏற்பட்ட விருப்பம் அது மட்டுமே போதும் " என்கிறார் .
ரஹ்மத் ராஜகுமாரன்.

அணுவுக்குள்ளும் அதிர்வுகள் எனும் இறை துதிகள் .

அறிவியலிலிருந்து ஆன்மிகம் வரை - 2




அப்துஸ் ஸலாம். இவர்தான் 1979-ல் பௌதிகத்துக்கான நோபல் பரிசு பெற்ற ஒரே ஒரு பாகிஸ்தானியர் .
ஸலாம் ஆராய்ச்சி தொடங்கிய போது ஆல்பர்ட் ஐன்ஸ்டைனின் பொது சார்பியல் தத்துவத்தின் மூலம் பிரபஞ்சத்தில்
4 சக்திகள் தனிப்பட்டு இயங்குவதாக தென்பட்டது

**1. புவி ஈர்ப்பு சக்தி.**
**2. மின்காந்த சக்தி .**
**3அணுக்கருவிற்குள் இருக்கும் வலுவான அணுக்கரு சக்தி ,**
**4. அணுக் கருவிற்குள் இருக்கும் மெலிதான அணுக்கரு சக்தி.**

இந்த
4. சக்திகளைக் கொண்டுதான் பிரபஞ்ச இயக்கங்கள் அனைத்தையும் புரிய வைக்க முடிந்தது.
ஏன் நான்கு ..? இந்த நான்கையும் இணைத்து ஒன்று என்று சொல்ல முடியாதா ? என்று ஐன்ஸ்டன் கேட்டு 4 கையும் இணைத்து **(unified Field theory)** என்ற ஒன்றாக்க , தன் வாழ்நாளின் கடைசி வரை முயற்சித்து ஐன்ஸ்டைன் தோற்றுப் போய் மரணித்தும் விட்டார்.

அப்துஸ் ஸலாம் அவர்கள் "புவி ஈர்ப்பு விசையைத் தற்போதைக்கு விட்டு விட்டு மின் காந்த விசையையும், மெலிதான அணுக்கரு விசையையும் எடுத்து இணைத்து வெற்றி பெற்றார்.
அப்துஸ் ஸலாமிடம், "மின் காந்த விசையையும் , அணுக்கருவுக்குள் உள்ள விசையையும் எப்படி உங்களால் ஒரு சேர சிந்திக்க முடிந்தது ? என்று கேட்டபோது .
وَمِنْ كُلِّ شَىْءٍ خَلَقْنَا زَوْجَيْنِ لَعَلَّكُمْ تَذَكَّرُوْنَ
ஒவ்வொரு வஸ்துக்களையும் (ஆண், பெண் கொண்ட) ஜோடி ஜோடியாகவே நாம் படைத்திருக்கின்றோம். (இதனைக் கொண்டு) நீங்கள் நல்லுணர்ச்சி பெறுவீர்களாக! (குர்ஆன் : 51:49)
என்ற குர்ஆன் வசனத்தை மேற்கோள் காட்டினார் .

மேற்கண்ட நான்கு சக்திகளையும் இணைப்பதற்கு மிகப்பெரிய தடையாக இருப்பது ஈர்ப்புவிசை மட்டும்தான். ஈர்ப்பு விசையின் வலிமை , வலிமையற்ற தன்மைகள் பற்றிய சந்தேகம் விஞ்ஞானிகளுக்கு எழுந்தது .
ஒருவகையில் பார்த்தால் இந்த அண்டத்தில் உள்ள எல்லாமே ஈர்ப்பு விசையினால் ஒன்றறொன்று கவர்ந்தபடியே இருக்கின்றன . மிகவும் வலிமையான சக்தியாக அது இருக்க வேண்டிய நிலையில் ஏன் வலிமையற்றதாகக் காணப்படுகிறது ?

அண்டத்தில் உள்ள வெற்றிடம் எங்கும் இந்த ஈர்ப்பு விசை பரவியிருக்கிறது .150 மில்லியன் கிலோமீட்டர் தூரத்தில் இருக்கும் பூமியைத் தனது ஈர்ப்பு விசையினாலேயே இழுத்து வைத்துக் கொண்டிருக்கிறது சூரியன்.
சூரியனுக்கும் பூமிக்கும் இடையில் இருப்பது எல்லாமே மிகப்பெரிய வெற்றிடம் .இந்த வெற்றிடத்தினூடாக எப்படி பூமியை சூரியன் இழுக்கிறது ? எதைக் கொண்டு இழுக்கிறது ? இழுக்க பயன்படுத்துவது எதுவானாலும் அது பூமியிலிருந்து சூரியன் வரை 150 மில்லியன் கிலோ மீட்டருக்கு அண்டவெளி எங்கும் நிறைந்து இருக்க வேண்டும் அல்லவா ?
அணுக்கருவில் இருக்கும் நியூட்ரான் புரோட்டான் இரண்டையும் பிரித்து பார்த்தபோது அவற்றினுள் ஒரேவிதமான குவார்க்குகள் இருந்தன நவீன இயற்பியலில் குவார்க்குகளுக்குள் என்ன இருக்கும்.. என்று சிந்தித்தபோது கிடைத்த முடிவுகள் ஆச்சரியமானவை. குவார்க்குகளுக்குள்ளும் கிராவிட்டான் என்ற மிகமிகச்சிறிய அதிர்வலைகளால் அதிர்ந்து கொண்டிருக்கின்றன என்பது புரிந்தது .
கிடைத்தது . அதைத்தான் கிராவிட்டான்கள் **(Graviton)** என்று விஞ்ஞானிகள் அழைக்கிறார்கள் .

இந்த கிராவிட்டானின் ஏதோ ஒரு செயற்பாட்டினால்தான் விசைகளை ஒன்றாக்கும் சமன்பாடு சாத்தியமாகவில்லை என்பதும் புரிந்தது
கிராவிட்டானின் இயக்கம் வயலினில் அல்லது கிடாரில் இருக்கும் அதிர்விழையில் (strings) ஏற்படுத்தும் அதிர்வுகளின் செயல்பாடு என்று கண்டுபிடிக்கப்பட்டது .

இந்த கிராவிட்டான்கள் இடம் விட்டு இடம் நகர்வதாலேயே வலிமையற்ற தன்மையை ஏற்படுத்துகிறது என்ற முடிவுக்கும் விஞ்ஞானிகள் வரமுடிந்தது.
இடம் விட்டு இடம் நகர்தலில் கூட தாளகதியில் கிராவிட்டான்கள் நகருகிறது . சூஃபியக்களின் ஸமா நடனம் போல.
இந்த அதிர்விழைகளின் அதிர்வுகள் எல்லாம் ஏதோ ஒரு சந்தேகத்தின் அடிப்படையில் எடுக்கப்படவில்லை . முழுமையான கணித கணிப்பீடுகளை வைத்தே இந்த முடிவுகள் எடுக்கப்பட்டன. கணித முடிவுகள் என்றுமே மாறாதவை.
அதாவது அணுவைக் கடைசி வரை பிரித்து இறுதியில் அதனுள் என்ன இருக்கிறது என்று பார்த்தால் அங்கு ஒன்றுமே இல்லை . அங்கு இருப்பது எல்லாம் நுண்ணிய இழைகளின் அதிர்வுகள் அதனால் ஏற்படும் ஒருவிதமான இசை மட்டும் அங்கு காணப்படுகிறது .
இந்து மதத்தில் தாள லயத்துடன் சிவனால் ஆடப்படும் நடனம்தான் இந்த பிரபஞ்சம் ." நாத விந்து கலாதி நமோ நம " என்கிறார் அருணகிரிநாதர் .

அணுவுக்குள் இருக்கும் உப அணுத்துகள் கூட இந்த அதிர்விழைகளாகத்தான் துடித்துக் கொண்டிருக்கின்றன. அண்டம் முழுவதும் பரவியிருக்கும் கிராவிட்டான்களும் அதிர்விழைகளாகவே துடித்துக் கொண்டிருக்கின்றன அணு முதல் அண்டம் வரை இந்த அதிர்விழைகளின் இசை ராஜ்ஜியம் நடந்து கொண்டிருக்கிறது .

ஆனால் இஸ்லாம் அணு முதல் அண்டம் வரை துதி எனும் அதிர்வலைகள் இருந்து கொண்டேயிருக்கின்றன என்கிறது.

تُسَبِّحُ لَهُ السَّمٰوٰتُ السَّبْعُ وَالْاَرْضُ وَمَنْ فِيْهِنَّ وَاِنْ مِّنْ شَىْءٍ اِلَّا يُسَبِّحُ بِحَمْدِهٖ وَلٰـكِنْ لَّا تَفْقَهُوْنَ تَسْبِيْحَهُمْ اِنَّهٗ كَانَ حَلِيْمًا غَفُوْرًا
ஏழு வானங்களும் பூமியும் இவற்றிலுள்ள அனைத்தும் அவனைப் புகழ்ந்து கொண்டே இருக்கின்றன. (இவற்றில்) ஒன்றுமே அவனைத் துதி செய்து புகழாதிருக்கவில்லை. எனினும், அவை துதி செய்து புகழ்வதை நீங்கள் அறிந்து கொள்வதில்லை. நிச்சயமாக அவன் பொறுமையுடையவனும், மன்னிப்புடையவனாகவும் இருக்கின்றான். (குர்ஆன் : 17:44)
ரஹ்மத் ராஜகுமாரன்

பற்பல பரிமாணங்கள்

அறிவியலிலிருந்து ஆன்மிகம் வரை- 3




ஐன்ஸ்டைன் வெளியிட்ட இன்னுமொரு கோட்பாடுதான்
"தியரி ஆஃப் எவ்ரிதிங் " **(Theory of Everything)** என்பதாகும். அதாவது '' பெரிதாக விரிவடைந்திருக்கும் அண்டத்திற்கும், சிறியதாக இருக்கும் அணுவுக்கும் அடிப்படையாக இருக்கும் விசைகள் **(Forces)** அனைத்தும் ஒரே கணிதச் சமன்பாட்டில் அடங்கும் '' என்று அந்த விதி சொன்னது.
இந்த கோட்பாட்டில் முடிவு கிடைத்தாலும், அந்த முடிவில் ஒரு குழப்பம் இருந்தது. காரணம் இந்த சமன்பாட்டை தேடிப் போனது, கிடைத்ததோ ஐந்து சமன்பாடுகள். ஒரு கிணறு வெட்ட , ஐந்து பூதங்கள் கிளம்பிய கதையாகி விட்டது
1**) எம் தியரி (M Theory) , 2) பற்பல பரிமாணங்கள் (Multi dimensions), 3) மெம்ப்ரான் (Membrane) , 4) பாரலல் யூனிவேர்ஸ் , 5) மல்டிவேர்ஸ் (Multiverse) எனப் பிரமிப்பூட்டும் ஆச்சரியக் கோட்பாடுகள் .**

இந்த 5 சமன்பாடுகள் உண்மைபோல இருப்பவை.தப்பே இல்லாதவை . இங்கு தான் குழப்பம் ஏற்பட்டது. இந்த இடத்தில் ஏதோ தவறு இருக்கின்றது என்பதை நவீன இயற்பியலாளர்கள் புரிந்து கொண்டனர் . அந்த தவறும் என்னவென்று கண்டுபிடிக்கப்பட்டது .

எட்வர்ட் விட்டன் **( Edward witten)** என்பவர் 1990-ல் இந்த 5 சமன்பாடுகளையும் ஒன்று சேர்த்து "எம் தியரி " உருவாக்கினார்.

அதாவது இதுவரை நாம் மூன்று பரிமாணங்கள் **(Dimensions)** (நீளம், அகலம் , உயரம் ) உள்ளதாக நினைத்துக் கொண்டிருக்கிறோம். அதனுடன் ஐன்ஸ்டைன் கூறிய ஸ்பேஸ் டைம் **(spacetime)** என்ற காலத்தை நான்காவது பரிமாணமாக எடுத்துக் கொள்ளலாம் .அத்தோடு பரிமாணங்களின் எண்ணிக்கை நின்றுவிடவில்லை .இவை தவிர்த்து ஆறு பரிமாணங்கள் உள்ளன . அதாவது மேலே சொன்ன 5 கோட்பாடுகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பரிமாணத்துக்கு உரியவை.

நாம் வாழும் பூமியிலும் அண்டத்திலும் முன் பின் , இடம் வலம், மேல் கீழ் என்ற மூன்று பரிமாணங்கள் இருக்கின்றன என்பதை மட்டுமே நம்மால் கற்பனை செய்ய முடிகிறது. அதற்கு மேல் நான்காவதாக காலத்தை நம்மால் புரிந்து கொள்ள கடினமாக இருக்கும் போது , பரிமாணங்கள் மொத்தம் பத்து இருக்கின்றன என்றும்

"மிகைஈர்ப்புவிசை" **(Supergravitation)** என்ற ஒரு பரிமாணமாக ஏற்றுக் கொள்ளப்பட்டு , ஆக மொத்தம் இது 11 பரிமாணங்கள் உண்டு என்ற முடிவுக்கு நவீன விஞ்ஞானம் வந்துள்ளது .

அண்டத்தில் இருக்கும் அனைத்து பரிமாணங்களும், ஒரு நுண்ணிய தோல் போன்ற அமைப்பினால் பிரிக்கப்பட்டு ஒவ்வொன்றும் மிக மிக அருகில் காணப்படுகின்றன . இந்த மெல்லிய நுண்ணிய தோல் போன்ற அமைப்பைத்தான்
'பரான் ' அல்லது 'மெம்ப்ரான் **' (Membrane)** என்றழைக்கப்படுகிறது . இந்த மெம்பிரான் என்பதிலிருந்துதான்
**M Theory** தோன்றியது என்கிறார்கள் .

பரிமாணங்கள் எல்லாமே ஒன்றுக்கொன்று மிக அருகிலேயே காணப்படுகின்றன என்பதை வார்த்தைகளால் சொல்லும்போது, உங்களால் கற்பனைப் பண்ணிப் பார்க்க முடியாது. அதனால் இப்படிச் சிந்தித்துப் பாருங்கள், ஒரு புள்ளியை ஊடறுத்து முன் பின்னாகச் செல்லும் நேர்கோடு , ஒரு பரிமாணம் எனப்படுகிறது .
அந்த நேர்கோட்டில் முன் பின்னாக மட்டும் ஒரு உயிரினம் இயங்கிக் கொண்டிருந்தால் , அது ஒரு பரிமாணத்தில் அது இயங்கிறது என்று எடுத்துக் கொள்ளளலாம்.
அந்த ஒரு பரிமாண நேர்கோட்டிற்கு வலமாகவோ, இடமாகவோ ஒரு மில்லிமீட்டர் அளவிலாவது அந்த உயிரினம் நகர்ந்தால் அது இரண்டாம் பரிமாணத்தில் இயங்குகிறது என்றாகிவிடும். இப்படியே ஒவ்வொரு பரிமாணங்களும் பிரிக்கப்பட்டிருக்கின்றன

அண்டத்தில் பல பரிமாணங்களைப் பெற்றிருப்பதாலும் , அவற்றின் சிறப்பு என்னவென்றால், ஒவ்வொரு பரிமாணங்களும் தனித்துவமானவை. ஒன்றை ஒன்று சிதைப்பவை அல்ல. அதாவது ஒரு பரிமாணத்தின் செல்வாக்கானது இன்னொரு பரிமாணத்தில் செல்லாது. இதேபோல் பரிமாண வெளிகளும் தனித்துவமானவை. ஒன்றையொன்றை ஊறுபடுத்தாதவை . வேறு வேறானவை.

முப்பரிமாணத்தைக் கொண்டு வாழும் நாம், நாம் இருக்கும் அதே இடங்களில், நமது தெருக்கள் நீளும் அதே திசையில் இன்னொரு பரிமாணத்திற்கு சொந்தமான வீடுகள் , அவர்களுடைய தெருக்கள், காடுகள் ,ஏன் மனிதர்களை ஒத்த உயிர்னங்கள் கூட வாழ்கின்றன .

அந்த பரிமாணத்தின் வீடுகளோ, தெருக்களோ , காடுகளோ, நம் வீட்டையோ தெருவையோ, காடுகளையோ சேதப்படுத்தவில்லை . அத்துடன் அது இருப்பதும் உங்களுக்கும், எனக்கும் தெரிவதில்லை .
இப்படி பரிமாணங்கள் பரிமாணங்களாக பிரிக்கப்பட்டு, அந்தந்த பரிமாணத்தில் தனித்தனி உயிரினங்களோ , தாவரவர்க்கங்களோ, மனிதர்களோ வாழ்வதாக குர்ஆனிலும் , நபிமொழியிலும் குறிப்பிடப்பட்டிருக்கிறது என்பதுதான் விண்ணை முட்டும் வியப்புக்குரியது !

وَبَيْنَهُمَا حِجَابٌ وَعَلَى الْاَعْرَافِ رِجَالٌ يَّعْرِفُوْنَ كُلًّا بِسِيْمٰهُمْ وَنَادَوْا اَصْحٰبَ الْجَـنَّةِ اَنْ سَلٰمٌ عَلَيْكُمْ لَمْ يَدْخُلُوْهَا وَهُمْ يَطْمَعُوْنَ
(நரகவாசிகளும் சுவர்க்கவாசிகளும் ஆகிய) இவ்விருவருக்குமிடையில் ஒரு மதில் இருக்கும். அந்த மதிலின் சிகரத்தில் சில மனிதர்கள் இருப்பார்கள்.

(நரகவாசி சுவர்க்கவாசியாகிய) ஒவ்வொருவரையும் அவர்களின் (முகக்) குறியைக் கொண்டே இவர்கள் அறிந்து கொள்வார்கள்.
இவர்கள் சுவர்க்கவாசிகளை நோக்கி "(இறைவனுடைய) சாந்தியும்,சமாதானமும் உங்கள் மீது உண்டாவதாகுக!" என்று சப்தமிட்டுக் கூறுவார்கள். (சிகரத்தில் இருக்கும்) இவர்கள் (இதுவரையிலும்) சுவர்க்கத்தில் நுழையவில்லை. எனினும், அவர்கள் (அதில் நுழைவதை) மிக ஆவலுடன் ஆசைப்பட்டுக் கொண்டிருப்பார்கள். (அல்குர்ஆன் : 7:46)

சுவர்க்கமும் , நரகமும் வேறுவேறு பரிமாணங்களாக இருக்கலாம் .

عِنْدَ سِدْرَةِ الْمُنْتَهٰى
ஸித்ரத்துல் முன்தஹா என்னும் (வானெல்லையிலுள்ள) இலந்தை மரத்தருகே. (அல்குர்ஆன் : 53:14)

عِنْدَهَا جَنَّةُ الْمَاْوٰى
அதன் சமீபத்தில்தான் ஜன்னத்துல் மஃவா என்னும் சுவர்க்கம் இருக்கிறது. (அல்குர்ஆன் : 53:15)

ஸித்ரத்துல் முன்தஹாவும் , ஜன்னத்துல் மஃவா சுவர்க்கமும் அடுத்தடுத்த பரிமாணத்தில் இருக்கலாம்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
(விண்ணுலகப் பயணத்தின்போது) என்னிடம் கோவேறு கழுதையைவிடச் சிறியதும், கழுதையைவிடப் பெரியதுமான வெள்ளை நிறத்திலமைந்த நீளமான புராக் எனும் (மின்னல் வேக) வாகனம் ஒன்று கொண்டுவரப்பட்டது. அது பார்வை எட்டுகிற தூரத்திற்குத் தனது கால் குளம்பை எடுத்து (எட்டு) வைக்கும். அதிலேறி நான் பைத்துல் மக்திஸ் (ஜெரூசலேம்) இறை ஆலயம் வரை சென்றேன்.

பிறகு இறைத்தூதர்கள் தமது வாகனத்தைக் கட்டி வைக்கும் வளையத்தில் எனது வாகனத்தைக் கட்டிவைத்துவிட்டு அந்த இறையாலயத்திற்குள் நுழைந்து இரண்டு ரக்அத்கள் தொழுதேன். பிறகு நான் அங்கிருந்து புறப்பட்ட போது (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் (என்னிடம்) ஒரு பாத்திரத்தில் மதுவும் மற்றொரு பாத்திரத்தில் பாலும் கொண்டுவந்தார். (அதில் விரும்பியதைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளுமாறு கூறினார்.) நான் பால் பாத்திரத்தைத் தேர்ந்தெடுத்துக் கொண்டேன். அப்போது ஜிப்ரீல், "இயற்கையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டீர்" என்று கூறினார்.

பிறகு ஜிப்ரீல் என்னை அழைத்துக்கொண்டு முதல் வானத்திற்கு உயர்ந்தார். (அதன் கதவைத்) திறக்கும்படி கூறினார். அப்போது "நீங்கள் யார்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர், "ஜிப்ரீல்" என்று பதிலளித்தார். "உங்களுடன் (வந்திருப்பவர்) யார்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர், "முஹம்மத்" என்று பதிலளித்தார். "(அவரை அழைத்து வரச்சொல்லி) அவரிடம் ஆள் அனுப்பப்பட்டிருந்ததா?" என்று கேட்கப்பட்டது. அவர், "(அவரை அழைத்து வரச்சொல்லி என்னை) அவரிடம் அனுப்பி வைக்கப்பட்டிருந்தது" என்றார். அப்போது எங்களுக்காக (கதவு) திறக்கப்பட்டது. நான் அங்கு (ஆதி மனிதர்) ஆதம் (அலை) அவர்களைக் கண்டேன். அவர்கள் என்னை வாழ்த்தி வரவேற்று, எனது நன்மைக்காகப் பிரார்த்தித்தார்கள். .

பிறகு ஜிப்ரீல் என்னை அழைத்துக் கொண்டு இரண்டாம் வானத்திற்கு உயர்ந்தார். (அதன் கதவைத்) திறக்கும்படி சொன்னார். அப்போது "நீங்கள் யார்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர், "ஜிப்ரீல்" என்று பதிலளித்தார். "உங்களுடன் (இருப்பவர்) யார்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர், "முஹம்மத்" என்று பதிலளித்தார். "(அவரை அழைத்துவரும்படி) அவரிடம் ஆளனுப்பப் பட்டிருந்ததா?" என்று கேட்கப்பட்டது. அவர், "(ஆம், அவரை அழைத்து வரும்படி என்னை) அவரிடம் அனுப்பிவைக்கப் பட்டிருந்தது" என்று பதிலளித்தார். அப்போது எங்களுக்காக (கதவு) திறக்கப்பட்டது. அங்கு சகோதரிகளின் புதல்வர்களான ஈசா பின் மர்யம் (அலை), யஹ்யா பின் ஸகரிய்யா

(அலை) ஆகியோரை நான் கண்டேன்.அவர்கள் இருவரும் என்னை வரவேற்று, எனது நன்மைக்காகப் பிரார்த்தித்தனர்.
பிறகு ஜிப்ரீல் என்னை அழைத்துக்கொண்டு மூன்றாம் வானத்திற்கு உயர்ந்தார். (அதன் கதவைத்) திறக்கும்படி கூறினார். அப்போது "நீங்கள் யார்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர், "ஜிப்ரீல்" என்று பதிலளித்தார். "உம்முடன் (இருப்பவர்) யார்?" என்று கேட்கப்பட்டது. அவர், "முஹம்மத்" என்று பதிலளித்தார். "(அவரை அழைத்துவரும்படி) அவரிடம் ஆளனுப்பப்பட்டிருந்ததா?" என்று கேட்கப்பட்டது. அவர், "(ஆம், அவரை அழைத்துவரும்படி என்னை) அவரிடம் அனுப்பிவைக்கப்பட்டிருந்தது" என்று பதிலளித்தார். உடனே எங்களுக்காக (கதவு) திறக்கப்பட்டது. அங்கு நான் யூசுஃப் (அலை) அவர்களைக் கண்டேன். (மொத்த) அழகில் பாதி அவர்களுக்கு வழங்கப்பெற்றிருந்தது. அன்னாரும் என்னை வரவேற்று எனது நன்மைக்காகப் பிரார்த்தித்தார்கள்.
பிறகு ஜிப்ரீல் என்னை அழைத்துக்கொண்டு நான்காம் வானத்திற்கு உயர்ந்தார். (அந்த வானத்தின் கதவைத்) திறக்கும்படி கூறினார். அப்போது "யார் அது?" என்று கேட்கப்பட்டது. அவர், "ஜிப்ரீல்" என்று பதிலளித்தார். "உம்முடன் (இருப்பவர்) யார்?" என்று கேட்கப்பட்டது. அவர் "முஹம்மத்" என்று பதிலளித்தார். "(அவரை அழைத்துவரும்படி) அவரிடம் ஆளனுப்பப்பட்டிருந்ததா?" என்று கேட்கப்பட்டது. அவர், "(ஆம் அவரை அழைத்துவரும்படி என்னை) அவரிடம் அனுப்பிவைக்கப்பட்டிருந்தது" என்று பதிலளித்தார். அப்போது எங்களுக்காக (கதவு) திறக்கப்பட்டது. அங்கு நான் இத்ரீஸ் (அலை) அவர்களைக் கண்டேன். அவர்கள் (என்னை) வரவேற்று எனது நன்மைக்காகப் பிரார்த்தித்தார்கள். (இத்ரீஸ் (அலை) அவர்கள் தொடர்பாக) அல்லாஹ், "மேலும்,

நாம் அவரை ஓர் உயரிய இடத்தில் உயர்த்தினோம்" (19:57) என்று கூறுகின்றான்.-
பிறகு ஜிப்ரீல் என்னை அழைத்துக்கொண்டு ஐந்தாம் வானத்தில் ஏறினார். (அந்த வானத்தின் கதவைத்) திறக்கும்படி கூறினார். அப்போது, "யார் அது?" என்று கேட்கப்பட்டது. அவர், "ஜிப்ரீல்" என்று பதிலளித்தார். "உம்முடன் (இருப்பவர்) யார்?" என்று கேட்கப்பட்டது. அவர், "முஹம்மத்" என்று பதிலளித்தார். "(அவரை அழைத்துவருமாறு) ஆளனுப்பப்பட்டிருந்ததா?" என்று கேட்கப்பட்டது. அவர், "(ஆம், அவரை அழைத்துவருமாறு என்னை) அவரிடம் அனுப்பி வைக்கப்பட்டிருந்தது" என்று பதிலளித்தார். அப்போது எங்களுக்காக (கதவு) திறக்கப்பட்டது. அங்கு நான் ஹாரூன் (அலை) அவர்களைக் கண்டேன். அவர்கள் (என்னை) வரவேற்று எனது நன்மைக்காகப் பிரார்த்தித்தார்கள்.

.

பிறகு ஜிப்ரீல் என்னை அழைத்துக்கொண்டு ஆறாம் வானத்தில் ஏறினார். (அந்த வானத்தின் கதவைத்) திறக்கும்படி கூறினார். "யார் அது?" என்று கேட்கப்பட்டது. அவர், "ஜிப்ரீல்" என்று பதிலளித்தார். "உம்முடன் (இருப்பவர்) யார்?" என்று கேட்கப்பட்டது. அவர் "முஹம்மத்" என்று பதிலளித்தார் "(அவரை அழைத்து வரும்படி) அவரிடம் ஆளனுப்பப்பட்டிருந்ததா?" என்று கேட்கப்பட்டது. அவர், "(ஆம், அவரை அழைத்துவரும்படி என்னை) அவரிடம் அனுப்பிவைக்கப்பட்டிருந்தது" என்று பதிலளித்தார். அப்போது எங்களுக்காக (கதவு) திறக்கப்பட்டது. அங்கு நான் மூசா (அலை) அவர்களைக் கண்டேன். அவர்கள் (என்னை) வரவேற்று, எனது நன்மைக்காகப் பிரார்த்தித்தார்கள்.
பிறகு ஜிப்ரீல் என்னை அழைத்துக்கொண்டு ஏழாவது வானத்தில் ஏறினார். (அந்த வானத்தின் கதவைத்) திறக்கும்படி கூறினார். "யார் அது?" என்று கேட்கப்பட்டது. அவர், "ஜிப்ரீல்" என்று பதிலளித்தார். "உம்முடன் (இருப்பவர்) யார்?" என்று கேட்கப்பட்டது. அவர், "முஹம்மத்" என்று பதிலளித்தார். "(அவரை அழைத்து வரும்படி) அவரிடம் ஆளனுப்பப்பட்டிருந்ததா?" என்று கேட்கப்பட்டது. அவர், "(ஆம், அவரை அழைத்துவரும்படி என்னை) அவரிடம் அனுப்பிவைக்கப்பட்டிருந்தது" என்று பதிலளித்தார். அப்போது எங்களுக்காக (கதவு) திறக்கப்பட்டது.

அங்கு நான் இப்ராஹீம் (அலை) அவர்களைக் கண்டேன். அவர்கள் அல்பைத்துல் மஃமூர் (எனும் வானவர்கள் அதிகம் சஞ்சரிக்கும்) இறையில்லத்தில் தமது முதுகைச் சாய்த்து அமர்ந்துகொண்டிருந்தார்கள்.
அ(ந்த இறையில்லத்)தில் ஒவ்வொரு நாளும் எழுபதாயிரம் வானவர்கள் (இறைவனை வணங்கச்) செல்வார்கள். அவர்கள் மறுபடியும் அங்கு நுழைவதில்லை. (புதியவர்களே அடுத்து நுழைவார்கள்.)
பிறகு (வான் எல்லையிலுள்ள இலந்தை மரமான) "சித்ரத்துல் முன்தஹா" எனும் இடத்திற்கு என்னை ஜிப்ரீல் அழைத்துச்சென்றார். அதன் இலைகள் யானைகளின் காதுகளைப் போன்றிருந்தன. அதன் பழங்கள் கூஜாக்களைப் போன்றிருந்தன. அல்லாஹ்வின் கட்டளையால் இனம் புரியாத (நிறங்கள்) அதைச் சூழ்ந்து கொண்டபோது (அதன் அமைப்போ முற்றிலும்) மாறிவிட்டது. அல்லாஹ்வின் படைப்புகளில் எவராலும் அதன் அழகை விவரித்துக் கூற முடியாது.

அப்போது அல்லாஹ் அறிவிக்க வேண்டியச் சிலவற்றை எனக்கு அறிவித்தான். என்மீது இரவிலும் பகலிலும் (நாள் ஒன்றுக்கு) ஐம்பது தொழுகைகளைக் கடமையாக்கினான்.

பிறகு நான் மூசா (அலை) அவர்களிடம் இறங்கிவந்தேன். அப்போது அவர்கள், "உங்கள் சமுதாயத்தாருக்கு உம்முடைய இறைவன் என்ன கடமையாக்கினான்?" என்று கேட்டார்கள்.
"ஐம்பது (வேளைத்) தொழுகைகளை(க் கடமையாக்கினான்)" என்று நான் பதிலளித்தேன். "உங்கள் இறைவனிடம் திரும்பிச்சென்று (உங்கள் சமுதாயத்தாருக்காக தொழுகையின் எண்ணிக்கையைக்) குறைக்கும்படி கேளுங்கள். ஏனெனில், உங்கள் சமுதாயத்தார் இதைத் தாங்கமாட்டார்கள். நான் (என்னுடைய) பனூ இஸ்ராயீல் மக்களிடம் பழகி அனுபவப் பட்டிருக்கிறேன்" என்று கூறினார்கள்.

நான் என் இறைவனிடம் திரும்பிச்சென்று, "என் இறைவா! என் சமுதாயத்தார்மீது (ஐம்பது வேளைத் தொழுகைகளின் எண்ணிக்கையைக்) குறைப்பாயாக!" என்று கேட்டேன். இறைவன் (ஐம்பதிலிருந்து) ஐந்தை எனக்குக் குறைத்தான். நான் மூசா (அலை) அவர்களிடம் திரும்பிவந்து,
"(ஐம்பதிலிருந்து) ஐந்தை எனக்குக் குறைத்தான்" என்று கூறினேன். அப்போது அவர்கள், "உங்கள் சமுதாயத்தார் இதையும் தாங்கமாட்டார்கள். எனவே, உங்கள் இறைவனிடம் திரும்பிச்சென்று இன்னும் குறைக்கும்படி கேளுங்கள்" என்றார்கள்.

இவ்வாறே நான், என் இறைவனுக்கும் மூசா (அலை) அவர்களுக்குமிடையே திரும்பிச் சென்றுகொண்டிருந்தேன்.
இறுதியாக, "முஹம்மதே! இவை இரவிலும் பகலிலும் (நிறைவேற்ற வேண்டிய) ஐவேளைத் தொழுகைகள் ஆகும். ஒவ்வொரு தொழுகைக்கும் பத்து (நற்பலன்) உண்டு. (நற்பலனில்) இவை ஐம்பது வேளைத் தொழுகை(க்கு ஈடு) ஆகும். ஒருவர், ஒரு நன்மை செய்ய வேண்டும் என (மனத்தில்) எண்ணிவிட்டாலே, அதைச் செயல்படுத்தாவிட்டாலும் அவருக்காக ஒரு நன்மை பதிவு செய்யப்படும். அதை அவர் செய்து முடித்துவிட்டால் அவருக்காகப் பத்து நன்மைகள் பதிவு செய்யப்படும். ஒருவர் ஒரு தீமையைச் செய்ய எண்ணி, (அல்லாஹ்வுக்கு அஞ்சி) அதைச் செய்யாமல் இருந்துவிட்டால் (குற்றம்) எதுவும் பதியப்படுவதில்லை. (எண்ணியபடி) அதை அவர் செய்து முடித்துவிட்டால் ஒரு குற்றமாகவே அது பதிவு செய்யப்படுகிறது" என்று கூறினான்.

பின்னர் நான் அங்கிருந்து புறப்பட்டு மூசா (அலை) அவர்களிடம் வந்துசேர்ந்தேன். அ(ல்லாஹ் கூறிய)தை அவர்களிடம் நான் தெரிவித்தேன். அப்போது அவர்கள், "உங்கள் இறைவனிடம் திரும்பிச் சென்று இன்னும்

குறைக்கும்படி கேளுங்கள்" என்று கூறினார்கள். உடனே நான், "(பல முறை) என் இறைவனிடம் திரும்பிச் சென்றுவிட்டேன். (இன்னும்) அவனிடம் (குறைத்துக் கேட்க) நான் வெட்கப்படுகிறேன்" என்று கூறிவிட்டேன்.
இதை அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
ஸஹீஹ் முஸ்லிம் : 259.
மேற்கூறிய ஹதீஸில் ஏழு வானங்களும் தனித்தனி பரிமாணங்களாக இருக்கலாம்.
ரஹ்மத் ராஜகுமாரன் .

பரிமாணம் விட்டு பரிமாணங்களில் பயணிப்பவர்கள்.

அறிவியலிலிருந்து ஆன்மிகம் வரை - 4



அண்டத்தில் நீளம், அகலம், உயரம் என்கிற முப்பரிமாணத்தில் நீங்களும் , நானும் இயங்குகிறோம் . இந்த அண்டத்தில் முப்பரிமாணம் மாதிரி மொத்தம் 11 பரிமாணங்கள் இருப்பதாக இதற்கு முந்தைய கட்டுரையில் பார்த்தோம். இப்படி 11 பரிமாணங்கள் இருக்கும் பட்சத்தில், அந்த ஒவ்வொரு பரிமாணத்திலும் ஏன் வெவ்வேறு வகையான உயிரினங்கள் வாழ்ந்து கொண்டிருக்க முடியாது ? நிச்சயமாக வாழ்ந்து கொண்டிருக்கிறது. நம்புவதற்கு கஷ்டமாக இருக்கிறதா ? உதாரணத்துடன் சொல்றேன்.

இரு பரிமாணத்தில் இயங்கும் ஓர் எறும்புக்கு முப்பரிமாணத்தில் இயங்கும் கழுகு என்றொரு பறவை இருக்கிறது என்று சொன்னால் அதனால் அதை நம்பவே முடியாது. காரணம் ,கழுகு மூன்றாவது பரிமாணமான உயரத்திலேயே எப்போதும் பறந்து கொண்டிருக்கும்.

எப்போது அது இரையை தேடி பூமியின் தரைக்கு வருகிறதோ அங்கு இரண்டு பரிமாணத்தில் அதாவது நீளம் , அகலத்தில் இயங்கும் உயிரினங்களை பிடிக்கும் போது , மூன்று பரிமாணத்தில் இயங்கும் கழுகைப் பற்றி எறும்புக்கு தெரிய வந்து அதை நம்பும்.
அதுபோல , நான்காவது , ஐந்தாவது , ஆறாவது என இப்படியே .... பதினோராவது பரிமாணங்களில் எண்ணற்ற உயிரினங்கள் வாழ்கின்றன என்று சொல்லும்போது, நாம் நம்ப மாட்டோம். அதிகம் ஏன் ..? அதை நம்மால் கற்பனை கூடச் செய்ய முடியாது.

ஆனால் நம்முடைய முப்பரிமாணத்தை விட கூடுதலான பரிமாணங்களில் இயங்கக்கூடிய உயிரினங்கள், மனிதர்கள் போன்ற தோற்றமுடைய இனங்கள் வாழ்ந்து வருகின்றன என்று சொன்னால் நீங்கள் நம்ப வேண்டும்.

மேலும் நம்முடைய முப்பரிமாணத்தில் அவர்கள் வந்து மனிதர்களை சந்தித்து உரையாடியும் இருக்கிறார்கள் என்றால் அதையும் நீங்கள் நம்ப வேண்டும் .

நம்முடைய முப்பரிமாணத்தை விட கூடுதலான பரிமாணங்களை உடையவர்கள் நம்மை விட மிகப் பெரிய திறமை பெற்றவர்களாகவும் , அதிக பலசாலிகளாகவும் இருக்கலாம் .

மலக்கு ஜிப்ரயீல் (அலை) அவர்களை அல்லாஹ் திருமறையில் அறிமுகப்படுத்தும் போது ..

عَلَّمَهٗ شَدِيْدُ الْقُوٰىۙ

மிக்க வல்லமையுடைவர் (ஜிப்ரீல்) அவருக்குக் கற்றுக் கொடுத்தார்.

ذُوْ مِرَّةٍ فَاسْتَوٰىۙ

(அவர்) மிக்க உறுதியானவர்; பின்னர் அவர் (தம் இயற்கை உருவில்) நம் தூதர் முன் தோன்றினார்.

وَهُوَ بِالْاُفُقِ الْاَعْلٰى

அவர் உன்னதமான அடி வானத்தில் இருக்கும் நிலையில்-

ثُمَّ دَنَا فَتَدَلّٰىۙ

பின்னர், அவர் நெருங்கி, இன்னும், அருகே வந்தார்.

فَكَانَ قَابَ قَوْسَيْنِ اَوْ اَدْنٰى

(வளைந்த) வில்லின் இரு முனைகளைப் போல், அல்லது அதினும் நெருக்கமாக வந்தார். (அல்குர்ஆன் : 53 : 5 _ 9)

இதே மாதிரி கியாமத் நாளின் போது வரவிருக்க தஜ்ஜால் பற்றியும் ஹதீஸ்களில் குறிப்பிடப்படுகிறது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

(இறுதி நாள் நெருங்கும்போது) மஸீஹுத் தஜ்ஜால் கிழக்குத் திசையிலிருந்து மதீனாவைக் குறிவைத்து வந்து, "உஹுத்"மலைக்குப் பின்னால் இறங்குவான்.

பின்னர் வானவர்கள் அவனது முகத்தை ஷாம் திசை (வடக்கு) நோக்கித் திருப்பிவிடுவார்கள். அங்குதான் அவன் மடிவான்.

இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

ஸஹீஹ் முஸ்லிம் : 2673.

நபி(ஸல்) அவர்கள் காலத்தில் ஜிப்ரயீல் (அலை) அவர்களை சுயரூபத்திலேயே நபியவர்கள் கண்டிருக்கிறார்கள் . அதே மாதிரி தஜ்ஜாலும் வெளிப்பட்டிருக்கிறான் . இதே தஜ்ஜால் கியாமத் நாளின் போது மீண்டும் வெளிபடுவான் என்றால் இவன் எந்த பரிமாணத்தில் இப்போது மறைத்து வைக்கப்பட்டிருக்கிறான் என்பதை அல்லாஹ்வே அறிவான் .

ரஹ்மத் ராஜகுமாரன்

பரிமாணத்தின் வாசல்கள்.

அறிவியிலிலிருந்து ஆன்மிகம் வரை 5




பரிமாணங்கள் எல்லாமே ஒன்றுக்கொன்று மிக அருகிலேயே காணப்படுகின்றன என்பதை வார்த்தைகளால் சொல்லும் போது , உங்களால் கற்பனை பண்ணிப் பார்க்க முடியாது.
அதனால் இப்படி சிந்தித்துப் பாருங்கள். ஒரு புள்ளியை ஊடறுத்துச் முன்பின்னாக செல்லும் நேர்கோடு , அதை ஒரு பரிணாமம் எனப்படுகிறது . அந்த நேர்கோட்டில் முன்பின்னாக மட்டுமே ஓர் உயிரினம் இயங்கிக் கொண்டிருந்தால், அது ஒரு பரிணாமத்தில் இயங்குகிறது என்று எடுத்துக் கொள்ளலாம்.
அந்த முதல் பரிமாணம் நேர்கோட்டில் வலமாகவோ இடமாகவோ ஒரு மில்லி மீட்டர் அளவிலாவது அங்குள்ள உயிரினம் நகர்ந்தால், அது இரண்டாம் பரிமாணம் என்றாகிவிடும்.

அதாவது முதலாவது பரிமாணத்தின் இடது பக்கத்திலோ அல்லது வலது பக்கத்திலோ ஒரு மில்லி மீட்டருக்கும் குறைவான இடத்திலேயே இரண்டாவது பரிமாணம் ஆரம்பமாகிவிடுகிறது . அதே போல் இந்த இரண்டு பரிமாணங்களுக்கு மேலாகவோ கீழாகவோ ஒரு மில்லி மீட்டருக்கும் குறைவான உயரத்தில் மூன்றாவது பரிமாணம் ஆரம்பமாகிவிடுகிறது .

இந்த மூன்று பரிமாணங்களும் மிகச் சிறிய இடைவெளியுடன் அருகருகே இருக்கின்றன. இது உங்களுக்கு புரிகிறதா ? அதாவது முதல் மூன்று பரிமாணங்களும் மிக மிக மெல்லிய கோடு ஒன்றினால் பிரிக்கப்பட்டிருக்கின்றன.

அதுபோலவே நான்காவது பரிமாணமும் , ஐந்தாவது பரிமாணமும் மெல்லிய அமைப்பினால் பிரிக்கப்பட்டிருக்கின்றன. இப்படியே 11 பரிமாணங்களும் ஒன்றுக்கொன்று மிக அருகிலேயே காணப்படுகின்றன. எல்லாமே நானோ மீட்டர் அளவு இடைவெளியில் பிரிக்கப்பட்டு காணப்படுகின்றன .
இதை ஒரு நிகழ்வு மூலம் புரிய வைக்கிறேன்.

ஏகத்துவத்தை ஸமூது மக்களிடம் நபி ஸாலிஹ் (அலை) அவர்கள் எடுத்து சொன்ன போது **ஜுன்தாஹ் மன்னன்** ஸாலிஹ் நபியிடம் , "ஸாலிஹே ..! அதோ தெரிகிறதே வானளாவ உயர்ந்து நிற்கின்ற " அல்காத்திபா " என்கிற மலை சிகர பாறையிலிருந்து , சூல்கொண்ட நிறைமாத ஒட்டகம் ஒன்று அம்மலையைப் பிளந்து, தமக்காக வெளிவரவேண்டும் .
அந்த ஒட்டகத்திற்கு கருநிற நெற்றியும் வெண்ணிற உடலும், நீளமான முடியும் இருக்க வேண்டும். வெளிவந்ததும் கன்று ஒன்றை அது ஈன வேண்டும் . குட்டியும் முற்றிலுமாக தாயைப் போன்றே இருக்க வேண்டும் " என்று கூறினான்.

அதுகேட்டு ஸாலிஹ் நபி அதிர்ச்சியுற்றார்கள் ."எங்ஙனம் உயிரற்ற ஒரு மலைப்பாறை உயிருள்ள ஓர் ஒட்டகத்தை எப்படி வெளிக்கொண்டு வரும் ?
அதற்கு இறைவன் : " ஸாலிஹே ! ஒன்றும் யோசிக்காதீர்கள். உம் மூலம் ஒரு மாபெரும் அற்புதத்தை உலகம் என்றும் மறக்காத வண்ணம் வெளியாக்குவோம் . இதன்மூலம் உங்களுடைய தூதுவத்தை மெய்ப்பிக்கவே நாம்

ஏற்கனவே நான்காயிரம் ஆண்டுகளுக்கு முன்பே அம்மலைக்குள் அவர்கள் கேட்கும் ஓர் ஒட்டகத்தை படைத்து இதுவரையிலும் பரிபாலித்து வருகிறோம் "என்று இறைவன் கூறினான் . **(பரிணாமம் மலைக்குள்ளேயும் ஊடுருவுகிறதா ? )**

அச்செய்தி ஸாலிஹ் நபி அவர்களை மகிழ்வித்தது . பின் அம்மக்களிடம் , "அல்லாஹ் உங்களது கோரிக்கையை நிறைவேற்றினால் , நீங்கள் என் மீது நம்பிக்கை கொள்ள வேண்டும் .என்னைப் பின்பற்றி நடக்க வேண்டும்" என்று உறுதிமொழிகளைப் பெற்றார் .

**ஸமூது** மக்களின் முக்கியமான தொழில் ஒட்டகம் மேய்ப்பதும் அதன் பயன்பாட்டை வியாபாரமாக்குவதும் , அடுத்த தொழில் மலைப் பாறைகளை குடைந்து இல்லங்கள் அமைப்பதும் அதை வியாபாரமாக்குவதும் எனவே இந்த இரண்டு விஷயங்களையும் ஒன்று சேர்த்து ஒட்டகத்தை மலைப்பாறை ஈன வேண்டும் என்றார்கள்.
பின்னர் நபியவர்கள் இறைவனை வேண்ட , அந்த குறிப்பிட்ட அல்காத்திபா மலைப்பாறை மெதுவாக துளும்ப தொடங்கியது. அது பெண்கள் பேறுகாலத்தில் முழங்குவது போன்று முனங்கல் சப்தமிட்டது . அதன்பின் மலைப்பாறையில் ஒரு கீறல் ஏற்பட்டு அது சிறிது சிறிதாக பிளந்து, மலைப்பாறைகள் தெறிக்க தெறிக்க அதிலிருந்து மிக பிரம்மாண்டமான ஓர் ஒட்டகம் வெளியே வந்தது .

உலகில் இந்த ஒட்டகம் போன்று எந்த ஒட்டகமும் இல்லை. காரணம் மலை ஈன்ற ஒட்டகம் மலைப்பூட்டும் மஹா ஒட்டகமாகத்தானே இருக்கும் ? அடுத்த கணம் அது ஒரு குட்டியை ஈன்றது. அதுவும் தாயை போன்றே இருந்தது. இது அதிசயத்திற்கெல்லாம் அதிசயமாக இருந்தது.

ஒட்டகம் தன் குட்டியுடன் திறந்தவெளியில் மேய்ந்தது, மக்களின் கிணற்றில் நீர் அருந்தியது. அதே நேரத்தில் மற்ற ஒட்டகங்கள் அதன் பிரமாண்டமான தோற்றத்தை கண்டு அஞ்சி மிரண்டு ஓடியது . இறைவனின் ஒட்டகம் கிணற்று நீரை முழுவதுமாக குடித்தது. அவர்கள் கேட்ட மாதிரி அவர்களின் தேவைக்கு மேலாக பாலைக் கொடுத்து . அவர்கள் அதனை விற்று செல்வந்தர்கள் ஆனார்கள் .

இறைவனின் ஒட்டகம் நீர் அருந்தும் அன்றைக்கு மட்டும் ஒட்டகங்கள் நீர் அருந்தக்கூடாது. மற்ற ஒட்டகங்கள் நீர் அருந்தும் அன்றைக்கு இறைவனின் ஒட்டகம் நீர் அருந்தக்கூடாது என்ற நியதி உருவாக்கப்பட்டது .
எந்த ஒட்டடகத்திற்கும் பொதுவான ஒரு இயல்பு ஒட்டகம் ஒரு தடவை நீர் அருந்தினால் , பல நாட்கள் நீர் அருந்த அதற்கு தேவை இருக்காது. இதனால் ஸமூது மக்களின் ஒட்டகங்கள் ஏதும் நீர் அருந்தாமல் கஷ்டப்படவில்லை என்பதை நீங்கள் விளங்கிக் கொள்ளவேண்டும்.

ரபியுல் ஆகிர் 16-வது நாள் புதன்கிழமை உலக வரலாற்றிலேயே மிகவும் துக்ககரமான நாளாக இருந்தது.ஸமூது மக்களில் குதார் என்பவனும் மஸ்தஹூும் என்பவனும் கூட மிக மோசமான ஏழு பேர்களையும் சேர்த்துக்கொண்டனர் . இவர்கள் மது அருந்திவிட்டு , ஒட்டகம் நீர் அருந்தி விட்டு திரும்பும் வழியில் குதார் ஒரு பாறையின் அடிப்பகுதியிலும் மஸ்தஹ் அதற்கு எதிர்புற பாறையிலும் ஒளிந்து கொண்டனர்.
ஒட்டகம் மஸ்தஹ் அருகில் வந்ததும் , அவன் அம்பு எய்து அதன் கால் தசையில் உள்ள நரம்பை துண்டித்தான். உடனே குதார் தனது வாளால் ஒட்டகத்தை பலமாகத் தாக்கி , அதன் பின்னங்கால் தொடையில் உள்ள தசை நார்களை வெளியே எடுத்தான் . உடனே அது தரையில் மிகவும் சத்தமாக ஓலமிட்டு தன் குட்டியை எச்சரிக்கும் விதமாக கீழே விழுந்தது.

ஸாலிஹ் நபி அவர்கள் இச்செய்தியை கேள்விப்பட்டதும், ஓடிவந்து ஒட்டகத்தை பார்த்து , உள்ளம் பதறி அழுதார்கள். "ஒட்டகத்தின் கன்றினையாவது கொண்டு வாருங்கள். அதை முன்னிறுத்தி நாம் இறைவனிடம் இறைஞ்சுவோம் அதன் பொருட்டு நீங்கள் மன்னிக்கப்படலாம்" என்று கூறினார்கள்
ஆனால் அதன் குட்டி, தாய் எந்த உயரமான மலை **அல்காத்திபா**

பாறையிலிருந்து வெளியே வந்ததோ , அதே பாறையில் போய் மூன்று முறை பேரொலி ஒலி எழுப்பிவிட்டு , பாறையின் கீறிலில் நுழைந்து மறைந்தது.
இது வெளிவரும் அப்போது அதை "தாப்பத்துல் அர்ளு" என்று அழைப்பார்கள். அது ஒட்டக கன்றாக இல்லாமல் வேறொரு வினோத மிருகமாய் வெளிப்படும் .
நபி ஈஸா (அலை) அவர்களும் , முஸ்லிம்களும் பைத்துல்லாஹ்வை தவாஃபு செய்து கொண்டிருக்கும் பொழுது , அவர்களுக்கு கீழே பூமி ஆடும். விளக்குகள் ஆடுவது போல ஆடும் .

ஸஃபா மலை ஸஈ செய்யும் இடத்தைச் சார்ந்த பகுதியில் பூமி பிளந்து அதிலிருந்து இந்த மிருகம் வெளியேறும் இது முழுமையாக வெளியேற மூன்று நாட்களாகும் .

இதற்கு இரண்டு சிறகுகளும் , காளை மாட்டு தலையும் , மனித முகமும், பன்றிக் கண்ணும் , யானைக் காதும், மாட்டுக் கொம்பும், ஒட்டகக் கழுத்தும் , சிங்க நெஞ்சும், பூனை இடுப்பும் , தும்பை ஆட்டு வாலும் , ஒட்டகக் காலும் , வேங்கை நிறமும் கொண்டதாக இருக்கும் .

அதன் வலது கையில் நபி மூஸா (அலை) அவர்களின் ' அஸா 'என்ற தண்டமும் , இடது கையில் நபி சுலைமான் (அலை) அவர்களின் 'காத்தம்' என்னும் முத்திரையும் இருக்கும்.
மூமின்களை அவர்களது நெற்றியில்
அத்தண்டத்தால் அது அடிக்கும் அவ்வடியின் அடையாளத்தால் ஒரு புள்ளி போல் விழும். அது கொஞ்சம் கொஞ்சமாக பெரியதாகி முகம் பிரகாசிக்கும் . அந்த ததும்பும் பிரகாசத்தில் " இவர் மூமின் " என்று நெற்றியில் எழுதும் . "இவர் சுவனவாசி " என்றும் கூறும் .

இறை மறுப்பாளர்களுடைய மூக்கில் அந்த முத்திரையைக் கொண்டு முத்திரை இடும் . அது மச்சம் உண்டாகி , படர்ந்து பெரியதாகி முகத்தைக் கருப்பாக்கி விடும். " இவன் காஃபிர் " என்று அவனுடைய இரு கண்களுக்குமிடையில் எழுதும் . "இவன் நரகவாசி " என்றும் கூறும்
**ஹயாத்துல் ஹைவான்** என்ற கிதாபில் கூறப்பட்டுள்ளது.

நம்முடைய முப்பரிமாணத்தின் எல்லை அந்த அல்காத்திபா மலையின் கீறலின் வெளியோடு முடிவடைந்து , மலைப்பாறையினுள் வேறொரு பரிமாணத்தின் எல்லை ஆரம்பிக்கலாம் .
ஜோர்டான் நாட்டில் ஹிஜ்ர் நகரத்தில் உள்ள அல் காத்திபா மலை சிகரம் சாக்கடலுக்கும் அகாபா வளைகுடாவிற்கும் இடையில் அமைந்துள்ளது. ஆனால் இந்த ஒட்டகத்தின் கன்று உலக முடிவு நாளின்போது மக்காவிலுள்ள ஸபா - மர்வா என்ற இரு மலைப்பாறைகளுக்கு இடையில் வெளிப்படும்.
அந்த ஒட்டக கன்று மறைந்துள்ள பரிமாணத்தின் எல்லை ஜோர்டான் நாட்டிலிருந்து மக்கா ஹரம் வரை இருக்கலாம். யார் அறிவார்கள் ?

وَ اِذَا وَقَعَ الْقَوْلُ عَلَيْهِمْ اَخْرَجْنَا لَهُمْ دَآبَّةً مِّنَ الْاَرْضِ تُكَلِّمُهُمْ اَنَّ النَّاسَ كَانُوْا بِاٰيٰتِنَا لَا يُوْقِنُوْنَ
இறுதிநாள் அவர்களை நெருங்கிய சமயத்தில், அவர்களுக்காகப் பூமியிலிருந்து ஒரு கால்நடையை நாம் வெளிப் படுத்துவோம். அது எந்தெந்த மனிதர்கள் நம்முடைய வசனங்களை நம்பிக்கை கொள்ளவில்லை என்பதை அவர்களுக்குச் சொல்லிக் காண்பிக்கும். (அல்குர்ஆன் : 27:82)
**ரஹ்மத் ராஜகுமாரன்.**

யூனிவர்ஸ் (universe) ஒன்றல்ல ;
அது பற்பல மல்டிவேர்ஸ் **(Multivarse)**

அறிவியலிலிருந்து ஆன்மிகம் வரை 6




நவீன இயற்பிய?லில் பல பரிமாணங்கள் இருப்பது போல பல அண்டங்களும் உள்ளன என்று விஞ்ஞானம் நம்புகிறது . அதாவது இதுவரை ஒரே ஒரு அண்டம்தான் இருக்கிறது என்று நம்பி இருந்தோம். அதனால்தான் அண்டத்திற்கு **"uni"Verse** என்று பெயரிட்டிருந்தோம் . ஆனால் இருப்பது ஒரு யூனிவேர்ஸ் அல்ல ; மல்டிவேர்ஸ் **(Multivarse)** பல அண்டங்கள் என்கிறது நவீன இயற்பியல் .

நமது அண்டத்திற்கு எதிராக இன்னொரு எதிர் அண்டம் இருப்பதாக சொன்னால் உங்களால் நம்ப முடியவில்லையா ? நம் வசிக்கும் இந்த அண்டம் சரி , இன்னொரு அண்டமா ? அது இதுதானே..?
கவுண்டமணி : டேய், நான் உன்னை என்ன வாங்கிட்டு வர சொன்னேன்?

செந்தில்: ரெண்டு வாழப்பழம் அண்ணே
க: கடைக்கு போனியா?
செ: போனேன்
க: கடைக்காரன் எத்தனை பழம் கொடுத்தான்?
செ:ரெண்டு கொடுத்தான்
க: ரெண்டு கொடுத்தானா?
செ: கொடுத்தான்
க: சரி..அந்த ரெண்டுல ஒண்ணு இங்கே இருக்கு..இன்னொரு பழம் எங்கே?
செ: அதுதாண்ணே இது.

மல்டிவேர்ஸ் என்று சொல்லும்போது பத்து அண்டங்கள், நூறு அண்டங்கள் அல்லது ஆயிரம் அண்டங்கள் இருக்கின்றன என்று நவீன இயற்பியல் சொல்லவில்லை , ஒரு சமுத்திரத்தில் எத்தனை நீர்த்துளிகள் இருக்கலாமோ அத்தனை அண்டங்கள் இருக்கின்றன என்கிறது! இதையெல்லாம் சிந்திக்க ஆரம்பித்தால் படைத்தோனின் வல்லமையை என்னவென்று சொல்வது ?

நவீன இயற்பியலில் குறிப்பாக சொல்லப்பட்ட இன்னும் ஒரு விஷயம் உண்டு. அதுதான் பாரல்லல் யூனிவேர்ஸ் **(parallel universe)** பூமியில் உள்ள அனைத்து துகள்களுக்கும் சமமானதும் , நேரெதிரானதுமான வேறு துகள்கள் இருந்தே தீரும் என்கிறது அறிவியல் . அதுவே பூமி சமநிலையில் வைத்திருப்பதற்கு காரணமும் ஆகிறது. இந்த சமச்சீர் தன்மை மிகவும் அவசியமானது.

உங்களை எடுத்துக் கொள்ளுங்கள் , வலது / இடது என இரண்டு சம பகுதிகளாகவும் , நேரெதிராகவும் , சமச்சீராகப் பிரிக்கப்பட்டு இருக்கிறீர்கள். வலது கைக்கு இடது கையும், வலது காதுக்கு இடது காதும் என ஒவ்வொன்றும் சமச்சீராக அடுக்கப்பட்டது போல நீங்கள் காணப்படுகிறீர்கள் , நேர் என்று இருந்தால் எதிர் என்ற ஒன்று இருந்தே தீரவேண்டும்.

இரவு X பகல், ஆண் X பெண் ,நீர் X நெருப்பு, சொர்க்கம் X நரகம் , குளிர் Xவெப்பம் என்று எல்லாமே இரட்டையாகத்தான் இருக்கும் . இருக்க வேண்டும் என்பதுபோல அண்டத்தில் துகள் ( matter) நிறைந்திருக்க அதற்கு எதிரான எதிர்த் துகளும் (Antimatter) நிறைந்திருக்கின்றன என்கிறது அறிவியல்.
அணுக்களானாலென்ன, அண்டமானாலென்னா அனைத்துமே சமச்சீராக இருக்கின்றன. இதனால்தான் விஞ்ஞானிகள் . தாங்கள் கண்டுபிடிக்கும் ஒவ்வொரு உப அணுத் துகள்களுக்கும் (Subatomic particle) சமமானதும், எதிரானதும் இன்னுமொரு உபத்துகளை தேடிக்கொண்டிருக்கிறார்கள்.
கிடைத்தா ? வியப்பான விஷயம் கிடைத்தது .

புரோட்டானுக்கு எதிரான ஆன்ட்டிப் புரோட்டனும் எலக்ட்ரானுக்கு எதிரான பாஸீட்ரானும் இயற்கை சேர்த்து வைத்த ஜோடிகள். இந்த எதிரான துகள் **(Anti mater)** நம் அண்டத்திற்கு எதிரான அண்டத்திலிருந்து வந்தவை.
இதில் நம் பிரபஞ்சத்தின் எலக்ட்ரானுக்கு எதிரான பாஸிட்ரானை சோதனைச் சாலையில் தயாரிக்கும் யுக்தியை **டிராக் (Dirac)** 1930 ல் சொன்னார் .

1932 ல் அமெரிக்க விஞ்ஞானி ஆன்டர்ஸன் பாஸிட்ரான்கள் விண்வெளி இருந்து வரும் காஸ்மிக் கதிர்களில் இருப்பதை பரிசோதனை மூலம் நிரூபித்து காட்டினார். அன்றிலிருந்து அபொருள் இன்னொரு பிரபஞ்ச வஸ்துவாக மாறியது.மேலும் இனம் புரியாத வியப்பும் ஓர் அதிர்ச்சியும் விஞ்ஞானிகளைக் பிடித்துக் கொண்டது
இதுபோல நமது அண்டத்திற்குச் சமச்சீராகவும் , எதிரானதுமான ஒரு அண்டம் மிக அருகிலேயே நமது அண்டத்தை போலவே அப்படியே நகல் எடுத்தது போல இருக்கும் என்கிறார்கள்.

இயற்கையின் நியதியில் படைப்பில் எல்லாமே ஜோடி ஜோடியாக படைப்பதுதான் அவனின் வல்லமை என்பதை குர்ஆனில் அல்லாஹ்
سُبْحٰنَ الَّذِىْ خَلَقَ الْاَزْوَاجَ كُلَّهَا مِمَّا تُنْۢبِتُ الْاَرْضُ وَمِنْ اَنْفُسِهِمْ وَمِمَّا لَا يَعْلَمُوْنَ
இவர்களையும், பூமியில் முளைக்கும் புற்பூண்டுகளையும் ஜோடி ஜோடியாகப் படைத்து, இவர்கள் (இதுவரையில்) அறியாத மற்றவைகளையும் படைப்பவன் மிகப் பரிசுத்தமானவன். (அல்குர்ஆன் : 36:36)
ரஹ்மத் ராஜகுமாரன்

உண்மை என்பது உண்மைதானா ?

அறிவியலிலிருந்து ஆன்மிகம் வரை 7



உண்மை என்றால் என்ன ? இந்த கேள்வியை பற்றி எப்போது சிந்தித்திருக்கிறீர்களா ? " அட...! இது என்ன அபத்தமானதொரு கேள்வி. நமக்கு கண்ணுக்கு காட்சியளிக்கும் அனைத்தும் உண்மைதானே ? நமக்கு முன்னால் நிகழும் ஒவ்வொன்றும் உண்மைதானே ? நான் உண்மை,நீங்கள் உண்மை , சூரியன் உண்மை. சந்திரன் உண்மை என்று நீங்கள் அடிக்கிக் கொண்டேயிருப்பீர்கள் . அது தவிர்த்து உண்மை என்பதற்கு பல விதமான அர்த்தங்களையும் நீங்கள் கற்று வைத்திருக்கலாம் . அந்த உண்மைகள் எப்போதும் உண்மைதான் என்று நீங்கள் நம்புகிறீர்கள் . ஆனால் நீங்கள் நம்பும் எதுவுமே உண்மை இல்லை என்பதுதான் உண்மையான உண்மை என்பது உங்களுக்கு தெரியுமா ? என்ன குழப்பமாக இருக்கிறதா சரி உண்மைகள் பற்றி கொஞ்சம் விரிவாக அறிவியல் சார்ந்து ஆய்வோம் .

கண்ணாடி உங்களைப் பார்த்திருக்கிறீர்களா ? தெரிவது 100 சதவீதம் நீங்கள்தானா ? கண்ணாடி உங்கள் முகத்தை இடம் வலமாக மாற்றி காண்பிக்கிறது. முகத்தின் வலது கண் உங்கள் இடது கண்ணாக இருக்கும் . நீங்கள் வலது கையை உயர்த்தும் போது கண்ணாடியில் தெரியும் உங்கள் உருவத்தில் இடதுகை உயர்த்தப்படும். எனவே கண்ணாடியில் பார்க்கும் உங்கள் முகத்தை உங்கள் உண்மையான முகம் என்று நினைப்பதே தவறு !

அடுத்து நாம் ஒரு பொருளை எப்படிப் பார்க்கிறோம் என்று தெரிந்து இருக்கிறீர்களா ? ஒரு பொருளில் இருந்து வரும் ஒளி நமது கண்ணில் உள்ள லென்ஸினூடே சென்று விழித்திரையில் பிம்பமாக விழுகின்றது . எப்படி விழுகிறது தெரியுமா ? மிகச் சிறியதாகவும் தலைகீழாகவும் விழுகிறது. விழித்திரையில் விழுந்த பின்பும் பார்வை நரம்புகள் மூலம் மூளைக்கு அனுப்பப்படுகிறது . பின்னர் நமது மூளை தான் அந்த தலைகீழ் சிறிய பிம்பத்தை நிமிர்த்தி அளவு பரிமாணங்களைக் கொடுத்து , நாம் பார்க்கும் பொருள் இதுதான் என்று அறிவிக்கிறது.

வானம் நீல நிறம் என்கிறோம். உண்மையில் வானம் நீல நிறமா ? பூமியின் காற்று வெளி மண்டலத்தின் ஊடாகத் சூரிய ஒளியின் எல்லா நிறமும் ஊடுருவி வர , நீல நிறம் மட்டும் அங்கே சிதறுகிறது. அதனால் வானம் நீலமாக தெரிகிறது. மேலே சென்றால் அங்கே வானம் நீல நிறமாக இருக்காது. ஒளியில்லாத வானம் நீலமாகக் காட்சியளிக்கும் .

உண்மை என்பது நம் புலன் அறிவுக்கும் அப்பாற்பட்டும் இருக்கிறது . அந்த உண்மையை அந்த ஞானத்தை நம்மில் யாராலும் விளங்கிக் கொள்ள முடியாது. நம் புலன்களால் அறியப்படும் உண்மை என்பது முழுமையான உண்மை அல்ல.

وَمَا تِلْكَ بِيَمِيْنِكَ يٰمُوْسٰى

“மூஸாவே! உம்முடைய வலது கையில் இருப்பது என்ன?” (என்றும் அல்லாஹ் கேட்டான்.) (அல்குர்ஆன் : 20:17)

قَالَ هِىَ عَصَاىَ اَتَوَكَّؤُا عَلَيْهَا وَاَهُشُّ بِهَا عَلٰى غَنَمِىْ وَلِىَ فِيْهَا مَاٰرِبُ اُخْرٰى

(அதற்கவர்) “இது என்னுடைய கைத்தடி; இதன் மீது நான் சாய்ந்து கொள்வேன்; இதைக் கொண்டு என் ஆடுகளுக்கு இலைகள் பறிப்பேன்; இன்னும் இதில் எனக்கு வேறு தேவைகளும் நிறைவேறுகின்றன” என்று கூறினார்.
(அல்குர்ஆன் : 20:18)
قَالَ اَلْقِهَا يٰمُوْسٰى
அதற்கு (இறைவன்) “மூஸாவே! அதை நீர் கீழே எறியும்” என்றான். (அல்குர்ஆன் : 20:19)
فَاَلْقٰهَا فَاِذَا هِىَ حَيَّةٌ تَسْعٰى
அவ்வாறே அவர் அதனைக் கீழே எறிந்தார்; அப்போது அது ஊர்ந்து செல்லும் ஒரு பாம்பாயிற்று.
(அல்குர்ஆன் : 20:20)
قَالَ خُذْهَا وَلَا تَخَفْ سَنُعِيْدُهَا سِيْرَتَهَا الْاُوْلٰى
(இறைவன்) கூறினான்: “அதைப் பிடியும்; பயப்படாதீர்; உடனே நாம் அதை அதன் பழைய நிலைக்கே மீட்டுவோம்.”
(அல்குர்ஆன் : 20:21)
இப்போது நீங்கள் சொல்லுங்கள் நபி மூஸா (அலை) அவர்கள் கையில் இருப்பது கைத்தடியா ? பாம்பா ?
ரஹ்மத் ராஜகுமாரன்

## வலிமார்களும், வான சாஸ்திரமும்



காஜா நாயகத்தின் மஜ்லீஸில் சொற்பொழிவாற்றுதற்கு நண்பரும், கலீபாவுமான உஸ்மானி யூசுப் அவர்கள் வழக்கமான அழைப்பின் பேரில் இன்று இரவு மஜ்லீஸில் சொற்பொழிவாற்றினேன். அதன் சாரம்சம்
கி.பி 588 கிபி 1192ல்_ 57 வயதில் ஹாஜா நாயகம் அவர்கள் இந்தியா வந்து சேர்ந்தார்கள் . அந்த குறுநிலத்தை பிரித்திவிராஜ் என்கிற ராஜபுத்திர அரசன் ஆண்டு கொண்டிருந்தான் . அவனுடைய அரண்மனை "தாரா கட்" என்ற உயரமான குன்றின் மீது அமைந்திருந்தது.அந்த குன்றின் அடிவாரத்தில் அரண்மனையின் ஒட்டகங்கள் அடைக்கும் தொழுவம் இருந்தது. தொழுவத்தின் அருகில் ஹாஜா நாயகம் அவர்கள் வந்து அமர்ந்தார்கள்.

அரசாங்க ஒட்டக மேய்ப்பாளர்கள் அங்கு தங்குவதற்கு அவர்களை அனுமதிக்கவில்லை . எனவே அவர்களை அந்த இடத்தை விட்டு காலி செய்ய சொன்னார்கள். ஹாஜா "ஏன் ?"என்று அவர்களிடம் கேட்க, "இது ஒட்டகம் அடைக்கப்படும் இடம் இங்கு மற்றவர்கள் தங்குவதற்கு அனுமதி இல்லை" என்றார்கள் . உடனே "அடைக்கப்பட்ட ஒட்டகம் அடக்கப்பட்ட மாதிரியே இருக்கட்டும் " என்று கூறி பக்கத்தில் உள்ள "அன்னா சாகர் "என்ற ஏரிக்கரைக்கு வந்து தங்கினார்கள்.

மறுநாள் காலையில் ஒட்டகத்தை எழுப்ப முயன்ற அதன் பணியாளர்கள் ஒட்டகம் எதுவுமே எழுந்திருக்க முடியாமல் படுத்தே கிடந்தன. உடனே நேற்று ஒரு பெரியவரை விரட்டும் போது அவர் சொன்ன பிரகாரம் ஒட்டகங்கள் எழுந்திருக்க முடியாமல் அடங்கிக் கிடக்கின்றன என்பதை அறிந்து, பணியாளர்கள் ஹாஜா அவர்களிடம் மன்னிப்பு கேட்க,ஹாஜா அவர்கள் , " ஒட்டகங்களை எவன் அடக்கி வைத்தானோ அவனே அதனை எழுப்பி விடுவான் " என்று கூற ஒட்டகங்கள் எழுந்து நின்றன .

மன்னன் பிரதிவிராஜனின் தாய் ராஜமாதா வாசவதத்ரா ஜோதிட கலையில் நிபுணத்துவம் பெற்றவள் . அவள் தன் மகன் பிரதிவிராஜனிடம் , " உன்னுடைய இந்த குறுநில ஆட்சி இன்னும் 12 வருடத்தில் முடிவுக்கு வந்து விடும் . இன்ன இன்ன அடையாளங்களோடு வரக்கூடியவரால் அது நடத்தப்படும் " என்றாள் . அவருடைய உருவத்தை மகன் வரைந்து கேட்க , ஜோதிடம் மற்றும் ஓவியக் கலையில் தேர்ச்சி பெற்ற ராஜ மாதா, ஹாஜா அவர்களின் உருவத்தை வரைந்து கொடுத்தாள்.
மேலும் தன் மகனிடம் , " மகனே ! நீயோ குறுநில மன்னன் அஜ்மீரையும் அதன் சுற்று வட்டாரத்தை மட்டுமே ஆள முடியும் . அவரோ பெறும் கீர்த்தி பெற்ற இறை நேசர் . அவர் அகண்ட பாரத்தையே உலக இறுதிநாள் வரை ஆளக்கூடியவர் " என்று ஜோதிடத்தின் மூலம் கணித்தார்.

ஹாஜாவின் ஆட்சி இந்தியா மட்டுமல்லாமல் பாகிஸ்தானிலும் தொடர்கிறது . அஜ்மீரின் ஒவ்வொரு வருடாந்திர கந்தூரியின் போது இந்திய அரசாங்கத்தில் இருந்து மக்பூரா விரிப்பு கண்ணியமான முறையில் காணிக்கையா செலுத்தப்படுகிறது ராஜ மாதா வாசவதத்தாவின் வான சாஸ்திரத்தின் கணிப்பு மிகச் சரியாக இருக்கிறது.

இந்த ஜோதிட வான சாஸ்திரம் என்ற கலை இருப்பது பற்றி இஸ்லாம் கூறுவது : "இந்த வான சாஸ்திரத்தை வானத்திலிருந்து பூமிக்கு கொண்டு வந்தவர் நபி இத்ரீஸ் அலைஹிஸ்ஸலாம் அவர்களாகும்.
ஒருநாள் இவர் வெயில் கடுமையாக இருந்தது அதன் வெப்பம் தாளாது இத்ரீஸ் அலைஹிஸ்ஸலாம் பெரிதும் துயருற்றார்கள் . "சூரியனிலிருந்து இவ்வளவு தொலைவு பூமியிலிருந்தும் இங்குள்ள மக்களுக்கு இவ்வளவு வெப்பமாக இருக்கிறது. அந்த சூரியனை சுமக்கும் அந்த வானவருக்கு அதன் வெப்பத்தை எவ்வாறு பொறுத்துக் கொள்வார் ? இறைவனை அவரின் துன்பத்தை இலகுவாய் ஆக்குவாயாக !"

அந்த உடனே சூரியனின் வெப்பம் குறைக்கப்பட்டது .அந்த வானவர் சந்தோஷப்பட்டு இத்ரீஸ் (அலை) அவர்களை காண பூமிக்கு வந்து , நபியவர்களை வானலோகத்திற்கு
அழைத்து சென்று மலக்குகள் பார்வையிடும் "ஸிர்ருல் மலக்கூத்து " _என்கிற பிரபஞ்சங்களின் இரகசிய கிதாபை படிக்க கொடுத்தும் , மேலும் சூரியனுடைய கோள்கள் சுற்றி வரும் பாதைகளில் அந்தந்த கிரகங்களோடு அவரையும் பயணிக்க செய்தார்கள்.
இப்படி சனிக்கோளுடன் சேர்ந்து 30 ஆண்டுகள் விண்ணிலே பயணித்து வந்தார்கள். ஆகையால் இவர்களால் தன்னால் நேரில் கண்ட நட்சத்திரத்திரங்களைப் பற்றியும் கிதாபு **ஸிர்ருல் மலக்கூத்து** (பிரபஞ்சங்களின் இரகசியத்தை) ஒன்றாக சேர்த்து வான சாஸ்திரத்தை இவர்கள் தொகுத்து பூமிக்கு கொடுத்தார்கள்.

**இதெல்லாம் நிஜமாலுமா ..? என்று நீங்கள் கேட்பது புரிகிறது. சொல்றேன்**
**பைலபூஸ் மன்னர் கிரேக்க அரச குமாரி கிலாயா மணக்கிறர் .சிற்றரசர் மல்க்கான்** என்பவரை அவள் தங்கை அல்காவை மணக்கிறார் .பைலபூஸ் 40 ஆண்டு காலமாக சூரிய அஸ்தமனத்திற்குப் பிறகு வானத்தைப் பார்த்து கோள்கள் நட்சத்திரங்கள் ஆகியற்றின் அமைப்புகளையும் ஆராயும் வழக்கம் அவருக்கு உண்டு.
இந்த வான சாஸ்திரத்தின் மூலம் கியாமத் நாள் வரை ஜீவித்திருக்கக் கூடிய அவதார புருஷனை பெற முடியும் என்று நம்பி அந்த குறிப்பிட்ட நட்சத்திரம் மேலோங்கும் போது மனைவியுடன் வீடு கூட வேண்டும் என்ற வான சாஸ்திரத்தின் நியதி. இதன்படி சிற்றரசர் மல்கான் தன் மனைவி அல்காவுடன் வீடு கூடி ,கிள்று நபி (அலை) அவர்களைப் பெறுகிறார்கள் .

சற்று நாழிகை கழித்து பைலபூஸ் மன்னர் தன் மனைவி கிலாயாவுடன் வீடு கூடி உலகம் சுற்றி வந்த மாமன்னர் துல்கர்னன் (அலை) அவர்களை பெறுகிறார்கள்
"ஒரு குழந்தை பிறக்கும் போது, அதன் முதல் மூச்சு, வடிவம் பெற்று அது உலகத்தில் ஓர் உயிராய் பிரவேசிக்கும் போது, இந்த பிரபஞ்சவெளியிலும் ஒரு பிரத்தியேகமான நிகழ்ச்சி நிகழ்கிறது" என்கிறது வான சாஸ்திரம்
ஏதோ ஒரு நட்சத்திரம் ஒரு குறிப்பிட்ட நிலையில் உச்சம் பெறுகிறது. இந்த நட்சத்திரம் மற்றும் கிரகங்களின் நிலை இதெல்லாம் பிறந்த உயிருக்கு தொடர்புபடுத்தி நிறைய நிறைய கணிக்கிறார்கள் .

இது விஷயமாக குர்ஆனில் தேடிய போது, ''நபி இப்ராஹீம் (அலை) அவர்கள் நட்சத்திரங்களை கூர்ந்துப்பார்த்தார் " குர்ஆன் (37 : 88) " இலா "என்ற பதம் பயன்படுத்தப்பட்டிருந்தால் "கூர்ந்து " என்று அர்த்தம் வரும். எனவே நட்சத்திரக் கலையை பயின்றார். மேற்கண்ட வசனத்தைத் தொடர்ந்து இப்ராஹிம் (அலை) அவர்கள்
" பின்னர் நட்சத்திரங்களைக் கூர்ந்து பார்த்து . நிச்சயமாக எனக்கு ஒரு நோய் ஏற்படும் போல் இருக்கின்றது " என்று கூறவே குர்ஆன் (37 : 88,89) குறிப்பிடுகிறது .
"எந்த நபியுடைய ஜென்ம நட்சத்திரம் விண்ணில் அவர் பிறப்பதற்கு முன் தோன்றாமல் இருந்ததில்லை "

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்

நபி மூஸா (அலை) அவர்கள் பிறப்பதற்கு முன்னதாக பிர்அவ்னின் அரண்மனையில் உள்ள வான சாஸ்திரிகள், "வானில் ஜென்ம நட்சத்திரம் தோன்றி விட்டது .இது ஓர் அவதாரப் புருஷன் பனி இஸ்ரவேலர்களில் பிறந்தற்குரிய அறிகுறி " என்று கணித்ததும் , ஒரு லட்சத்திறகும் அதிகமான பிறந்த ஆண் குழந்தைகளின் தலை சீவப்பட்டது . அக்கால வான இயல் வல்லுநர் கணித்ததில் தவறெதும் உண்டா ? மூஸா (அலை) பிறக்காமலா போனார்கள் ? பிறந்தார்கள் அல்லவா ? குர்ஆன் ( 20 : 39 ) ( 28 : 07 ) இது பற்றி கூறுகிறது

இது போன்றே நபி ஈஸா (அலை) அவர்கள் பிறக்கும் போது மூன்று வான இயல் வல்லுநர்கள் ஜென்ம நட்சத்திரம் வானில் தோன்றியதை கண்டு பைத்துல் முகத்தஸ் வந்து சேர்ந்து இஸ்ரவேலர்களின் அரசர் பிறந்து விட்டாரா என்று ஐரதூஸ் மன்னனிடம் கேட்க , பின் விசாரித்தில் மாட்டுத் தொழுவத்தில் மாநபி ஈஸா (அலை) அவர்கள் பிறந்தது உண்மைதானே.?
"பதினோரு நட்சத்திரங்களும் . சூரியனும், சந்திரனும் எனக்கு தலை வணங்கக் கண்டேன்" குர்ஆன் (12 : 04) என்று சிறுவர் நபி யூசுப் (அலை) கனவில் கண்ட நட்சத்திரங்கள் தன்னுடைய சகோதரர்கள் என்பதை தந்தை நபி யாகூப் (அலை) அவர்கள் அறிவிக்கவில்லையா ?
ரோமபுரி ஹெர்குலிஸ் மன்னர் "இன்றிரவு நான் நட்சத்திர மண்டலத்தை ஆராய்ந்தபோது, "விருத்தசேதனம் செய்யப்பட்டவர்களின் மன்னர் தோன்றிவிட்டதாக ஜென்ம நட்சத்திரத்தின் மூலம் அறிந்தேன்" என்று கூறி அண்ணலெம் பெருமானார் நபி முஸ்தபா (ஸல்) அவர்களின் பிறப்பை பதிவு செய்யவில்லையா ?
புகாரி பாகம் 1 - ஹதீஸ் 07
இறை நேசர் ஹாஜாவின் ஆட்சி இன்னும் நடந்து கொண்டுதானே இருக்கிறது ? இது கியாமத் நாள் வரை தொடரும். இன்ஷா அல்லாஹ் .
ரஹ்மத் ராஜகுமாரன் .

ஒரு பொருள் இரண்டு இடத்தில் இருக்க முடியுமா ?

அறிவியிலிலிருந்து ஆன்மிகம் வரை 8




அறிவியல் உலகில் எத்தனை ஆயிரம் கோட்பாடுகள் வந்தாலும், இன்றளவும் அறிவியல் உலகை ஆட்டிப்படைத்துக் கொண்டிருப்பது இரண்டு கோட்பாடுகள்தான் ஒன்று ஐன்ஸ்டைனின் சார்பு நிலை தத்துவமும் , மன்றொன்று குவாண்டம் பிசிக்ஸ் என்ற கோட்பாடும்.
இதில் சார்புநிலை தத்துவம் ஆராய்வது ,பிரமாண்டமான நட்சத்திரம் ,பிளாக் ஹோல், கிராவிட்டி ,space-time என்று பெரிதினும் பெரிது என்று பெரியதில் உண்மைகளை ஆராய்கிறது.

குவாண்டம் தத்துவம் என்பது அணுக்கள், அதற்குள் இருக்கும் உட்கரு , அதற்குள் சப்- அடாமிக் பார்ட்டிக்குகள், அதற்குள்ளும் ஒற்றை ஸ்ட்ரிங் , அதிலும் நுணுக்கமாக வெறும் எனர்ஜி ஃபார்ம் ,என்று சிறிதினும் சிறிது என்று உள்ளேயே சென்று நுணுக்கமான உண்மைகளை ஆராய்கிறது.

எவ்வளவு பெரியதாயினும் அதனையும் , எத்தனை சிறியதாயினும் அதனையும் தெளிவான தன் குறிப்புப் புத்தகத்தில் பதிவு செய்யப்படாமல் இல்லை என்கிறான் இறைவன் .

وَقَالَ الَّذِيْنَ كَفَرُوْا لَا تَاْتِيْنَا السَّاعَةُ‌ قُلْ بَلٰى وَرَبِّىْ لَـتَاْتِيَنَّكُمْۙ عٰلِمِ الْغَيْبِ‌ لَا يَعْزُبُ عَنْهُ مِثْقَالُ ذَرَّةٍ فِى السَّمٰوٰتِ وَلَا فِى الْاَرْضِ وَلَاۤ اَصْغَرُ مِنْ ذٰ لِكَ وَلَاۤ اَكْبَرُ اِلَّا فِىْ كِتٰبٍ مُّبِيْنٍۙ

(எனினும்) "மறுமை நமக்கு வராது" என்று இந்நிராகரிப் பவர்கள் கூறுகின்றனர். (நபியே!) நீங்கள் கூறுங்கள்: "அது வரும். என் இறைவன் மீது சத்தியமாக! நிச்சயமாக அது உங்களிடம் வந்தே தீரும். என் இறைவன் மறைவானவை அனைத்தையும் அறிந்தவன். அவன் அறியாது வானங்களிலோ பூமியிலோ உள்ளவற்றில் ஓர் அணுவளவும் தப்பிவிடாது. அணுவைவிட சிறியதோ அல்லது பெரியதோ (ஒவ்வொன்றும் **"லவ்ஹுல் மஹ்ஃபூள்"** என்னும்) தெளிவான குறிப்புப் புத்தகத்தில் பதிவு செய்யப்படாமல் இல்லை." (அல்குர்ஆன் : 34:3)

இந்த இரண்டு கோட்பாடுகளும் அப்படி என்னதான் விளக்குகின்றன என்று பார்த்தால் , அடிப்படையில் அவை இரண்டும் ஒரே விஷயத்தைத்தான் விளங்குகின்றன . அதாவது இந்த பிரபஞ்சத்தின் இயல்பை , அதன் இருப்பை, அதன் இயங்கும் தத்துவத்தை.. இப்படியே பிரபஞ்சத்தைப் பற்றியேதான் விளக்குகின்றன .

ஆனால் இரண்டும் தனக்கே உரிய பாணியில் தனித்து இவைகளை செய்கின்றன.தனித்தனியாக வைத்து பார்க்கும் போது அவை இரண்டும் மிகச் சிறப்பான ஆதாரங்களோடு மிகச்சரியாக ஒத்துக் கொள்ளும்படி பிரபஞ்ச இயல்பை விளக்குகின்றன .
ஆனால் என்ன விசேஷம் என்றால் இரண்டையும் ஒன்றாக வைத்துப் பார்க்கும்போது ஒரு சிக்கல் இடிக்கிறது.இவை இரண்டும் சொல்லும் உண்மைகள் ஒன்றுக்கொன்று முற்றிலும் மாறுபட்டு முரண்பட்டு காணப்படுகின்றது. அதாவது இரண்டில் ஏதாவது ஒன்றுதான் உண்மையாக இருக்க முடியும். ஒரே நேரத்தில் இரண்டும் அல்ல .

இப்படிப்பட்ட இவைகள் பொதுவான ஒரு தளத்தில் மட்டும் இரண்டும் ஒன்றாக இருக்கின்றன. அது என்னன்னு பார்த்தீங்கன்னா இரண்டுமே எளிதில் புரிவதில்லை. இரண்டுமே சரியான குழப்படி கோட்பாடுகள் கொண்டவை இரண்டுமே படிக்க படிக்க நமக்கு தலையே சுற்றுகிறது .
இவைகள் இப்படி தோற்றமளிக்க காரணம் இல்லாமலில்லை. இவைகளுக்கு இருக்கும் ஒரு தனிச்சிறப்பு என்னவென்றால், இரண்டுமே நமது அன்றாட பௌதிக அடிப்படைக்கும் , நமது இயல்பான தர்க்கரீதியான அறிவியல் புரிதலுக்கும் அப்பாற்பட்டவை.

நீங்கள் எதை ஒன்றையும் அறிவுபூர்வமாக அலசி ஆராய்ந்து தர்க்கரீதியாக புரிந்துகொள்ளக்கூடியவரா ? மன்னிக்கவும் அப்படி என்றால், இந்த கோட்பாடு ஓரளவுதான் உங்களால் விளங்கிக்கொள்ள முடியும் .
எந்த வரையறையும் கட்டுப்பாடும் இன்றி உங்களால் வளமான கற்பனை செய்ய முடியுமா ? அப்படி என்றால் இந்தக் கோட்பாடுகளை நீங்கள் நன்கு புரிந்து கொள்ளலாம்.

கற்பனை குறித்த ஐன்ஸ்டைன் சொன்ன இரண்டு வாக்கியங்கள் இங்கே குறிப்பிட்டாக வேண்டும்.
**" உலகில் அதிகமான விஷயம் தெரிந்தவன் நிஜமான அறிவாளி அல்ல ; அதிகம் கற்பனை செய்யக் கூடியவன் எவனோ அவன்தான் நிஜமான புத்திசாலி "**
குவாண்டம் தத்துவம் சொல்வதை ஒர் எளிய உதாரணத்தோடு உங்களுக்கு சொல்கிறேன்.
இப்பிரபஞ்சத்தின் ஒரு பொருள் ஒரே நேரத்தில் நேரத்தில் இரண்டு இடத்தில் இருக்க முடியாது இது ஒரு சாதாரண பௌதீக உண்மை சரிதானே ?
அதாவது குறிப்பிட்ட ஒரு இடத்தில்தான் ஒரு பொருள் ஒரு நேரத்தில் இருக்க முடியும் . ஆனால் குவாண்டம் உலகில் அப்படி இல்லை .
குவாண்டம் உலகில் எனது பேனா ஒரே நேரத்தில் என் வீட்டிலும் , அதே நேரத்தில் எனது ஆபிஸ் மேஜையிலும் இருக்க முடியும் . நம்புவதற்கு கஷ்டமாக இருக்கிறதா ? நீங்கள் நம்பித்தான் ஆக வேண்டும் .
இதை நபிமொழி வாயிலாக விளக்குகிறேன் .

நான் (விண்ணுலகப் பயணத்திற்காக) அழைத்துச்செல்லப்பட்ட இரவில் இம்ரானின் புதல்வர் மூசா (அலை) அவர்களைக் கடந்துசென்றேன். மூசா (அலை) அவர்கள் (யமனியர்களான) "ஷனூஆ" குலத்தைச் சேர்ந்த மனிதரைப் போன்று மாநிறமுடையவர்கள்; உயரமானவர்கள்; சுருள்முடியுடைவர்கள். ஸஹீஹ் முஸ்லிம் : 267.

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது: நபி (ஸல்) அவர்கள் விண்ணுலகப் பயணத்திற்காக அழைத்து செல்லப்பட்ட போது, மூசா (அலை) அவர்கள் "அல்அஸ்ரக்" பள்ளத்தாக்கைக் கடந்து சென்றார்கள்.
அப்போது, "இது எந்தப் பள்ளத்தாக்கு?" என்று கேட்டார்கள். அதற்கு மக்கள், "அல்அஸ்ரக் பள்ளத்தாக்கு" என்று பதிலளித்தார்கள்.

"மூசா (அலை) அவர்கள் உரத்த குரலில் "தல்பியா" சொல்லிக்கொண்டு இந்த மலைக் குன்றிலிருந்து இறங்கிவந்து கொண்டிருப்பதை (இப்போதும்) நான் காண்பதைப் போன்று உள்ளது" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். வந்துள்ளது. ஸஹீஹ் முஸ்லிம் : 268.

பிறகு நாங்கள் ஆறாம் வானத்தைச் சென்றடைந்தோம். அங்கு நான் மூசா (அலை) அவர்களிடம் சென்று அவர்களுக்கு சலாம் சொன்னேன். அவர்கள், "நல்ல சகோதரரும் நல்ல நபியுமான உங்கள் வரவு நல்வரவாகட்டும்" என்று (வாழ்த்துக்) கூறினார்கள். நான் அவர்களைக் கடந்து சென்றபோது அவர்கள் அழுதார்கள். "நீங்கள் ஏன் அழுகிறீர்கள்?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "இறைவா! என் சமுதாயத்தாரில் சொர்க்கம் செல்கின்றவர்களை விட அதிகமானவர்கள் எனக்குப் பிறகு உன்னால் அனுப்பப்பெற்ற இந்த இளைஞரின் சமுதாயத்தாரிலிருந்து சொர்க்கம் செல்வார்கள்" என்று பதிலளித்தார்கள். ஸஹீஹ் முஸ்லிம் : 264 .
மிஹ்ராஜ் என்கிற விண்வெளி பயணம் இரு பகுதிகளைக் கொண்டது . 'இஸ்ரா ' என்பது கிடைமட்டமான பூமியின் தரைக்கு இணையாக சுமார் 20 அடி உயரத்தில் பறத்தல் .இது மக்காவிலிருந்து பைத்துல் முஹத்தஸ் வரை .

விண்வெளி நோக்கி செங்குத்து பயணம் . இது பைத்துல் முஹத்தஸ் முதல் ஏழாவது வானம் , அர்ஷ் வரை .
மிஹ்ராஜ் என்னும் மின்னல் வேகம் ஒரே பயணத்தின்போது ,நபி மூஸா (அலை) அவர்களை இப்பூமியில் அல்அஸ்ரக் பள்ளத்தாக்கிலும், ஆறாவது வானத்திலும் ஆகிய இரண்டு இடங்களில் நபி (ஸல்) அவர்கள் பார்க்கிறார்கள் .
இப்பிரபஞ்சத்தின் ஒரு பொருள் ஒரே நேரத்தில் இரண்டு இடத்தில் இருக்க முடியாது என்பது பௌதீக உண்மை . ஆனால் குவாண்டம் கோட்பாட்டின்படி குறிப்பிட்ட ஒரு பொருள் ஒரே நேரத்தில் இரண்டு இடத்திலும் இருக்க முடியும் .
நவீன அறிவியலின் கோட்பாடு ஆன்மிகத்தில் நிரூபணமாகி இருக்கிறது .
ரஹ்மத் ராஜகுமாரன் .

கல்லே... கல்லே ... கொஞ்சம் நில்லு !

அறிவியலிலிருந்து ஆன்மீகம் வரை 9



**"யான்நோக்கும் காலை நிலன்நோக்கும் நோக்காக்கால்**
**தான்நோக்கி மெல்ல நகும் " (திருக்குறள் 1094**)
காமத்துப்பாலில் இந்த குறள் தரும் அர்த்தம் அப்படியே முழுமையாகக் குவாண்டம் நிலையில் நடைபெறும் செயல் ஒன்றுடன் ஒத்துப் போகிறது என்று நான் சொன்னால் நிச்சயம் நீங்கள் ஆச்சர்யப்படுவீர்கள் !
"நான் பார்க்கும்போது நிலத்தைப் பார்த்து , நான் பார்க்காத நேரத்தில் என்னைப் பார்த்து தனக்குள் மெல்லச் சிரிப்பாள்" என்பதுதான் இந்தக் குறளின் பொருள்.

இதில் பார்ப்பவரும் , பார்க்கப்படுவரும் காதலர்கள். இருவரும் உயிருள்ளவர்கள். ஆனால் குவாண்டம் நிலையிலுள்ள துகள்கள் கூட இப்படியான செயல்பாட்டிலேயே இயங்குகின்றன என்பது உங்களுக்கு தெரியுமா ? அதாவது குவாண்டம் நிலையில் இருக்கும் ஒரு எலக்ட்ரான், அதை கவனிக்கும்போது ஒருவிதமாகவும் , அதை கவனிக்காத போது அதற்கு எதிரான வேறொரு விதமாகவும் இயங்குகிறது. அந்த எலக்ட்ரானுக்கு நாம் அவன் கவனிப்பது ஏதோ வகையில் தெரிகிறது.

என்ன நம்ப முடியவில்லையா ?
குறளில் சொன்னது போல உயிருள்ள ஒருவரால், பார்க்கும்போது பார்க்காமல் இருக்கவும் , பார்க்காதபோது பார்க்கவும் செய்ய முடியும் . அது எப்படி உயிர் இல்லாத எலக்ட்ரான்கள் பார்க்கும்போது ஒரு விதமாகவும் பார்க்காதபோது வேறு விதமாகவும் இருக்க முடியும் ?

விஞ்ஞானிகளே ஆச்சரியத்துடன் நிமிர்ந்து உட்கார வைத்த ஒரு செயல்பாடு . இது இதனால் உயிரில்லாத அஃறிணை பொருளுக்கும் உயிர் உண்டோ என்று எண்ணத் தோன்றியது விஞ்ஞானிகளுக்கு !
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

பனூ இஸ்ராயீல் சமுதாயத்தார் பிறந்த மேனியுடன் ஒருவர் மற்றவரது மறைக்க வேண்டிய உறுப்பைப் பார்த்துக்கொண்டே குளிப்பார்கள்.
மூசா (அலை) அவர்கள் தனியாகவே குளிப்பார்கள். (அன்னாரைக் கொச்சைப்படுத்த விரும்பிய) அந்த மக்கள் "அல்லாஹ்வின் மீதாணையாக! மூசா குடலிறக்க நோயாளியாய் இருப்பதனால்தான் அவர் நம்முடன் சேர்ந்து குளிப்பதில்லை" என்று கூறினர்.

ஒரு முறை மூசா (அலை) அவர்கள் குளிக்கப் போனார்கள். அப்போது அவர்கள் தமது ஆடையை(க் களைந்து) ஒரு கல்லின் மீது வைத்தார்கள். அந்தக் கல் அவர்களது துணியுடன் ஓடியது.
மூசா (அலை) அவர்கள் அதைப் பின்தொடர்ந்து கல்லே, எனது துணி! கல்லே, எனது துணி! என்று கூறியவாறு விரைந்து ஓடினார்கள்.

இறுதியாக (பனூ இஸ்ராயீல் மக்கள் பகுதிக்கு வந்தபோது அவர்கள்) மூசா (அலை) அவர்களின் மறைக்க வேண்டிய உறுப்பைப் பார்த்துவிட்டு,
"அல்லாஹ்வின் மீதாணையாக! மூசாவிற்கு எந்தக் குறையுமில்லை என்று கூறினர்.
மூசா (அலை) அவர்கள் (நன்கு) பார்க்கப்படும்வரை (ஓடிய) அந்தக் கல் (பின்பு) நின்றுவிட்டது. உடனே மூசா (அலை) அவர்கள் தமது ஆடையை எடுத்துக்கொண்டு அந்தக் கல்லை (தமது கைத்தடியால்) அடிக்கலானார்கள்.
அல்லாஹ்வின் மீதாணையாக! மூசா (அலை) அவர்கள் (தமது கையிலிருந்த தடியால்) கல்லின் மீது அடித்த காரணத்தால் ஆறு அல்லது ஏழு தழும்புகள் அந்தக் கல்லில் பதிந்துவிட்டன.
அறிவிப்பாளர் ஹம்மாம் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: அல்லாஹ்வின் தூதர் முஹம்மத் (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் எங்களுக்குப் பல ஹதீஸ்களை அறிவித்தார்கள். இந்த ஹதீஸும் அவற்றில் ஒன்றாகும். ஸஹீஹ் முஸ்லிம் : 566.

ரஹ்மத் ராஜகுமாரன்

## நான், நீங்கள், அந்த நிலா எல்லாமே தகவல்கள்

அறிவியலிலிருந்து ஆன்மீகம் வரை 10



நவீன இயற்பியலின்படி குறிப்பாக குவாண்டம் இயற்பியலின் படி இப்படி பூமியில் இருக்கும் அனைத்தும் தகவல்களாகவே **, ( Information )** அமைக்கப்பட்டிருக்கின்றன.
நான், நீங்கள், நீங்கள் உட்கார்ந்திருக்கும் நாற்காலி, வீட்டின் அருகே இருக்கும் அந்த பள்ளிவாசல்...என எல்லாமே தகவல்களால் அடுக்கப்பட்டு உருவாக்கப்பட்டவை என்கிறது அறிவியல். இது புரிந்துகொள்ள முடியவில்லையா ?

இதை புரிந்து கொள்வதற்கு ஓர் உதாரணத்துடன் சொல்றேன்.

ஒரு வீட்டை எடுத்துக் கொள்ளுங்கள். அந்த வீடு முழுவதுமே செங்கற்களால் கட்டப்பட்டவை என்றும் வைத்துக் கொள்ளுங்கள். வீட்டின் வெளியே நின்று அதன் அமைப்பைப் பார்க்கும் போது அது விதவிதமான வடிவங்களில் நவீனமாக அமைக்கப்பட்டிருக்கும்.

அதை நிதானமாகச் சிந்தித்துப் பார்த்தால் அவை எல்லாம் பல செங்கற்களின் ஒழுங்கான அமைப்பின் மூலம் உருவானது என்பது தெரியும். சரிதானா ?
ஒவ்வொரு செங்கல்லும் செவ்வக வடிவில் காணப்பட்டாலும், அவற்றை வைத்து அடுக்கிக் கட்டப்பட்ட வீடு வளைந்து வளைந்து அழகிய வடிவத்தில் காணப்படும்.

இப்போது இந்த செங்கற்கள் ஒழுங்காக அடுக்குவதற்கு எது உதவியது என்று பார்த்தால் , அந்த வீடு கட்டுவதற்கு என்று "வரைவு '' ஒன்று இதற்கென்றே படித்து பட்டம் பெற்ற ஒருவரால் வரையப்பட்டிருக்கும்.
இந்த வரைவு கணினி மூலமாக கணித விதிகளின்படி துல்லியமாக வரையப்பட்டிருக்கும் . அந்த வரவை அடிப்படையாகக் கொண்டு அந்த வீடும் கட்டப்பட்டிருக்கும். இந்த வரைவு எடுத்துக்கொண்டால் , அந்தக் கட்டடம் அமைப்பதற்கான சகல தகவல்களையும் ( Information ) அது கொண்டிருக்கும் . அதாவது அமைக்கப்படும் அந்த வீடும் , இந்தத் தகவல்களைக் கொண்டதாகத்தான் இருக்கும் புரிகிறதா ?

எங்கிருந்தோ ஒரு வீட்டின் Blue print வரையப்படும். அந்த புளு பிரிண்ட்டின் அத்தனை தகவல்களைக் கொண்டு எங்கோ ஓர் இடத்தில் வீடு கட்டப்படும். எல்லாமே தகவல்கள்தான் .
**ஹஜரத் புஹ்லூல் தானா (ரஹ்)** அவர்கள் ஒரு நிறைவான (மஜ்தூப்) தீவிர இறை நேசராக இருந்தார்கள் கலீஃபா ஹாரூன் ரஷீத் காலத்தில் பாக்தாத்தில் இருந்து வந்தார்கள்.

ஒரு நாள் மாலை அந்தி சாயும் நேரத்தில் கலீஃபா ஹாரூன் ரஷீத் தன் மனைவி ஜுபைதா காத்தானுடன் டைகரீஸ் நதி (தஜ்லா நதி) நதிக்கரையோரம் உலாவச் சென்றார். அங்கு புஹ்லூல் தானா (ரஹ்) அவர்கள் ஈரமான ஆற்று மண்ணில் மணல் வீடுகள் கட்டிக் கொண்டு இருந்தார்கள். ஒரு குழந்தையைப் போல.

அதைப் பார்த்த ஜூபைதா "பாபா , தாங்கள் என்ன செய்து கொண்டிடுக்கிறீர்கள் ? "
"நான் சுவனத்தில் வீடு கட்டிக் கொண்டிருக்கிறேன்."
" இந்த வீடுகளைத் தாங்கள் விற்பனை செய்வீர்களா ? "
"ஆமாம் ' ஒரு வீட்டின் விலை உமது கழுத்தில் கிடக்கும் முத்துமாலை "
உடனே ஜூபைதா முத்துமாலையை கழற்றிக் பாபாவிடம் கொடுத்து விட்டார்.புஹ்லூல் மாலையை வாங்கிக் கொண்டு "செல்லுங்கள் இதுதான் உம்முடைய சுவனமாளிகை' " என்றார்கள்.
இதைப் பார்த்துக் கொண்டிருந்த கணவர் ஹாரூன் ரஷீத் தன் மனைவியிடம் "ஒரு மஜ்தூபிடம் விலை மதிப்பற்ற உன்னுடைய முத்து மாயையை கொடுத்து விட்டாயே நீ ஒரு சரியான முட்டாளாக இருக்கிறாய் " என்று சற்று கோபப்பட்டார்.

அன்று இரவு உறக்கத்தில் கலீஃபா ஹாருன் ஒரு கனவு கண்டார் . சொர்க்கத்தில் அவர் உலாவிக் கொண்டிருக்கும் போது மிக உயரமான அழகான முத்துக்களால் ஆன ஒரு மாளிகையைக் கண்டார்..
அதன் அழகில் அவர் அப்படியே சொக்கி நின்று விட்டார் அதன் வாயிலில் "ஜூபைதா காத்தூன் " என்று பொறிக்கப்பட்டிருந்தது..

ஹாரூன் , "அட நம்ம மனைவியின் மாளிகைதானே.. !"என்று உள்ளே நுழைய முயற்சிக்கும் போது ஒரு வானவர் அவரைத் தடுத்து " இது ஜூபைதா காத்தூனுடைய மாளிகை நேற்றுதான் தம்முடைய முத்துமாலையை விலையாகக் கொடுத்து வாங்கிக்கிறார். அவர் இதனுள் நுழையாதவரை வேறு யாருக்கும் நுழைய அனுமதி இல்லை" என்றார்.

ஹாரூன் ரஷீத் திடுக்கிட்டு எழுந்து **டைக்ரீஸ்** நதிக்கரைக்கு விரைந்தார். அங்கு புஹ்லூல் தானா அவர்கள் நிறைய வீடுகளைக் கட்டிக் கொண்டிருந்தார். ஹாரூன் அவரிடம் "பாபா எனக்கும் ஒரு வீடு தாருங்கள் அதற்குரிய தொகையைக் கொண்டு வந்திருக்கிறேன் என்றார்....
புஹ்லூல் புன்னகைத்தபடி "சுவனத்தில் எவர்கள் முத்து மாளிகையைக் காணவில்லையோ அவர்களுக்கே நாம் இந்த வீடுகளை விற்பனை செய்வோம். எவர்கள் சுவனத்து முத்து மாளிகையைக் கனவில் கண்டார்களோ அவர்களுக்கு நாம் ஒருபோதும் இந்த வீடுகளை விற்பதில்லை "எனக் கூறி விட்டு சென்று விட்டார்...
புஹ்லூல் தானா (ரஹ்) அவர்களால் நதிக்கரையில் கட்டப்பட்ட மணல் வீடுகள். அது சுவனத்தில் மாளிகைகளாகவே கட்டப்பட்டன .

ரஹ்மத்ராஜகுமாரன்

வானத்தில் வெடிப்புமும் இல்லை , ஓட்டையும் இல்லை !

அறிவியலிலிருந்து ஆன்மீகம் வரை 11




சமீபத்தில் அறிவியலில் பெரும் விவகாரமாகும்
விவாதமாகவும் பேசப்பட்டுக் கொண்டிருக்கும் ஒரு அறிவியல் யுத்தத்தைப் பற்றி நீங்கள் அறிந்திருப்பீர்கள்.
" அண்டத்தில் எங்குமே கருந்துளைகள் **(Black Holes)** கிடையாது" - என்று உலக இயற்பியல் வரலாற்றில் மிக முக்கியமானவரும் , நவீன இயற்பியலில் பெயர் பெற்றவரும் , கடந்த பல தசாப்தங்களாக கருந்துளைகள் பற்றி வரிந்து வரிந்து ஆராய்ந்து எழுதியவருமான ஸ்டீபன் ஹாக்கிங் **(Stephen Hawking)** அவர்கள் சொன்ன புரட்சிகரமான கருத்து இது .

இதைத்தானே குர்ஆனும் 1400 வருடங்களுக்கு முன்பே சொன்னது :

اَ فَلَمْ يَنْظُرُوْٓا اِلَى السَّمَآءِ فَوْقَهُمْ كَيْفَ بَنَيْنٰهَا وَزَ يَّنّٰهَا وَمَا لَهَا مِنْ فُرُوْجٍ-
தங்களுக்கு மேலிருக்கும் வானத்தை அவர்கள் கவனித்துப் பார்க்கவில்லையா? நாம் அதனை எவ்வாறு ஒரு கட்டுக்கோப்பாக அமைத்து, அதனை (நட்சத்திரங்களைக் கொண்டு) அலங்காரமாக்கி வைத்திருக்கின்றோம். அதில் எவ்வித வெடிப்புமில்லை. (ஓட்டை உடைசலும் இல்லை!) (குர்ஆன் : 50:6)

நாஸா உட்பட பல ஆராய்ச்சி மையங்களில் பல ஆயிரக்கணக்கான கருந்துளைகள் கண்டுபிடித்திருக்கும் இந்தச் சூழ்நிலையில் ஸ்டீபன் ஹாக்கிங் இப்படியானதொரு ஒரு கருத்தைச் சொல்லி இருக்கிறார் .
அவர் இப்படி ஒரு முடிவுக்கு வந்ததற்கு காரணம் ஒரு யுத்தம் (War) அறிவியல் யுத்தம் கத்தியின்றி இரத்தமின்றி நடைபெறும் அறிவியல் யுத்தம் அது .
ஒருபுறம் ஸ்டீபன் ஹாக்கிங்கும் , மறுபுறம் ' லெனார்ட்
சஸ்கிண்ட் **( Leonard Susskind )** என்னும் இன்னுமொரு அறிவியல் மாமேதைக்கும் இடையில் நடக்கும் அறிவியல் யுத்தம். சஸ்கிண்ட் என்பவரும்

சாதாரணமானவரல்ல.உலகப் புகழ்பெற்ற ஸ்ட்ரிங் தியரியின் **(String Theory)** கட்டமைப்பாளர்களில் ஒருவர்.
இவர்கள் இருவரும் கருத்துளையில் நடைபெறும் முக்கிய நிகழ்வு ஒன்றை பற்றிதான் முரண்படுகிறார்கள். அதனாலேயே இந்த யுத்தம் நடந்து கொண்டிருக்கிறது.

**ஸ்டீபன் ஹாக்கிங்,** "கருந்துளைக்குள் சென்று விழும் எந்தப் பொருளானாலும் அதன் மையத்தை நோக்கி இழுக்கப்பட்டு, இல்லாமல் போய்விடும்" என்கிறார் .

ஆனால் சஸ்கிண்ட் , "அண்டத்தில் எதையும் அழிக்க முடியாது. அது திடப்பொருளாக இருந்தாலென்ன,சக்தியாக இருந்தாலென்ன அவை இன்னுமொன்றாக மாற்றப்பட்டு அண்டத்திலேயே இருக்குமேயொழிய , இல்லாமல் ஒன்றும் போகாது " என்கிறார்.
இதையொட்டி சஸ்கிண்ட் சொன்ன புரட்சிகரமான இன்னுமொரு கருத்து , "கருந்துளைக்குள் சென்று விழும் பொருட்கள் கருந்துளையின் அதி உயர் வெப்ப கதிர்களால் சிதைக்கப்பட்டு , அவை தகவல்களாகக் **(information)**

கருந்துளையின் "நிகழ்வு எல்லையில் **"(Event Horizon )** பதிந்திருக்கும்" என்கிறார் . கவனிக்கவும் தகவல்களாக பதிந்திருந்திருக்கும் என்கிறார் .
இப்படி பார்க்கும்போது சஸ்கிண்ட் சொன்னதைவிட , ஹாக்கிங் சொன்னதையே ஏற்றுக் கொள்ள நீங்கள் விரும்புகிறீர்கள். ஆனால் அதிகமான அறிவியல் அறிஞர்கள் சஸ்கிண்ட் சொன்னதே ஏற்கின்றனர் .

சஸ்கிண்ட் இத்துடன் நிறுத்திவிடவில்லை .அவர் ஓர் உதாரணத்தையும் குறிப்பிடுகிறார்.' சினிமா படத்தை ஒளிபரப்பும் புரஜெக்டர் சாதனம் போல, நிகழ்வு எல்லையானது , தன்னுள் பதிந்து வைத்திருக்கும் தகவல்களை, ஹோலோகிராம் படக்காட்சிகள் போல் காலவெளி என்னும் விண்வெளியில் அந்தந்த நேரத்தில் ஒளிபரப்புகிறது . அது ஒளிபரப்பும் திரைப்படக் காட்சிகள்தான் நானும், நீங்களும், அமெரிக்க ஜனாதிபதி ஜோ பைடனும், அந்த பூனைக்குட்டியும் உட்பட பூமியில் இருக்கும் அனைத்து பொருட்களும் 'என்கிறார்.
மேலும் பூமியில் நாம் பார்க்கும் எதுவுமே உண்மையில்லை. நாம் அனைவருமே கருந்துளைகள் தெறிக்கவிட்ட மாயத்தோற்றங்கள். இந்த 'மாயை ' என்ற வார்த்தையும் அவர் வாயால் சொன்னதுதான்.

இந்த பிளாக்ஹோல்களின் **Even Horizon** வெளியிடும் தகவல்களால் **(information)** வெளிப்படும் தோற்றங்களைத்தான், நாம் நிஜமாக நடப்பதாக கற்பனை பண்ணிக்கொண்டு இருக்கிறோம் . அதாவது 'வாழ்வதாக நாம் நினைப்பதே பொய்' என்று பயத்தை கிளப்புகிறார். இதில் அவர் குறிப்பிட்ட தகவல்களை விளக்குவதற்குத்தான் உங்களுக்கு ஓர் உதாரணத்தைக் கூறுகிறேன் .

இறைவன் உலகத்தை படைப்பதற்கு முன்னாள் வெண்மையான முத்துக்களின் கோர்வையின் மூலம் ஒரு பலகையை அமைத்தான். சிவப்பு மரகதக் கற்கள் அதன் இருபுறமும் அமைக்கப்பட்டிருக்கும். அதை ஒவ்வொரு நாளும் 360 தடவை இறைவன் பார்க்கிறான்.

இறைவன் தனது எழுதுகோலுக்கு கட்டளையிட்டு, தன் விருப்பப்படி என்னென்ன நடக்க வேண்டுமோ அதையெல்லாம் எழுதி வைத்துள்ளான். இப்பலகை ஏழாவது வானத்தில் பாதுகாப்பாக உள்ளது . இதன் செய்திகள் அனைத்தும் பதிக்கப்பட்ட ஏழாவது வானத்திலிருந்து திருக்குர்ஆன் முதல் வானத்தில் இறக்கப்பட்டுள்ளது.
அந்த **லவ்ஹுல் மஹ்ஃபூள்** பலகையில் இருந்து வந்ததுதான் திருக்குர்ஆன் ஓர் இலை பழுத்து விழுவதானாலும், அதில் எழுதப்பட்டிருக்கும் .இந்த பலகையை இறைவன் தன் பாதுகாப்பில் வைத்துள்ளான் . மற்ற படைப்பினங்கள் எதுவும் இதை அறிந்து கொள்ள முடியாதவாறு அமைத்துள்ளான்
**நூல் : ஸமர்கந்தி தஃப்ஸீர் .**

فِىْ صُحُفٍ مُّكَرَّمَةٍ
(அது) சங்கையாக்கப்பட்ட ஏடுகளில் இருக்கிறது.
مَّرْفُوْعَةٍ مُّطَهَّرَةٍ ۙ
உயர்வாக்கப்பட்டது; பரிசுத்தமாக்கப்பட்டது.
بِاَيْدِىْ سَفَرَةٍ
(வானவர்களான) எழுதுபவர்களின் கைகளால்-
كِرَامٍ بَرَرَةٍ
(லவ்ஹுல் மஹ்ஃபூளிலிருந்து எழுதிய அவ்வானவர்கள்) சங்கை மிக்கவர்கள்; நல்லோர்கள். (குர்ஆன் : 80: 13 -16)
அவன் அறியாமல் ஓர் இலையும் உதிர்வதில்லை. பூமியின் (ஆழத்தில் அடர்ந்த) இருள்களில் கிடக்கும் சிறு வித்தும், பசுமையானதும், உலர்ந்ததும் (எந்தப் பொருளும்) தெளிவான (அவனுடைய) பதிவேட்டில் இல்லாமலில்லை.(குர்ஆன் : 6:59)

வானத்திலும், பூமியிலும் மறைந்துள்ளவற்றில் நின்றும் எதுவும் (லவ்ஹுல் மஹ்ஃபூள் என்னும்) தெளிவான குறிப்பேட்டில் பதிவு செய்யப்படாமல் இல்லை. (குர்ஆன் : 27:75)

அன்றியும் அல்லாஹ்தான் உங்களை (முதலில்) மண்ணால் படைத்தான்; பின்னர் ஒரு துளி இந்திரியத்திலிருந்து - பின் உங்களை (ஆண், பெண்) ஜோடியாக அவன் ஆக்கினான், அவன் அறியாமல் எந்தப் பெண்ணும் கர்ப்பம் தரிப்பதுமில்லை; பிரசவிப்பதுமில்லை. இவ்வாறே ஒருவருடைய வயது அதிகமாக்கப்படுவதும், அவருடைய வயதிலிருந்து குறைப்பதும் (லவ்ஹுல் மஹ்ஃபூள் என்னும்) ஏட்டில் இல்லாமலில்லை; நிச்சயமாக இது அல்லாஹ்வுக்கு எளிதானதேயாகும். (குர்ஆன் : 35:11)

இன்னும், உணவளிக்க அல்லாஹ் பொறுப்பேற்றுக் கொள்ளாத எந்த உயிரினமும் பூமியில் இல்லை; மேலும் அவை வாழும் இடத்தையும் (இருக்கும்) இடத்தையும், அவை (மடிந்து) அடங்கும் இடத்தையும் அவன் அறிகிறான். இவையனைத்தும் (லவ்ஹுல் மஹ்ஃபூல் என்னும்) தெளிவான புத்தகத்தில் (பதிவாகி) இருக்கின்றன.
(குர்ஆன் : 11:6)
நிச்சயமாக மரணமடைந்தவர்களை நாமே உயிர்ப்பிக்கிறோம்; அன்றியும் (நன்மை, தீமைகளில்) அவர்கள் முற்படுத்தியதையும், அவர்கள் விட்டுச் சென்றவற்றையும் நாம் எழுதுகிறோம்; எல்லாவற்றையும், நாம் ஒரு விளக்கமான ஏட்டில் பதிந்தே வைத்துள்ளோம். (குர்ஆன் : 36:12)

பூமியிலோ, அல்லது உங்களிலோ சம்பவிக்கிற எந்தச் சம்பவமும் - அதனை நாம் உண்டாக்குவதற்கு முன்னரே (லவ்ஹுல் மஹ்ஃபூள்) ஏட்டில் இல்லாமலில்லை; நிச்சயமாக அது அல்லாஹ்வுக்கு மிக எளிதானதேயாகும்.(குர்ஆன் : 57:22)

இதைத்தான் லெனார்ட் சஸ்கிண்ட் **( Leonard Susskind )** சினிமா படத்தை ஒளிபரப்பும் புரஜெக்டர் சாதனம் போல, நிகழ்வு எல்லையானது , தன்னுள் பதிந்து வைத்திருக்கும் தகவல்களை, ஹோலோகிராம் படக்காட்சிகள் போல் காலவெளி என்னும் விண்வெளியில் ஒளிபரப்புகிறது . அது ஒளிபரப்பும் திரைப்படக் காட்சிகள்தான் நானும், நீங்களும், அமெரிக்க ஜனாதிபதி ஜோ பைடனும், அந்த பூனைக்குட்டியும் உட்பட பூமியில் இருக்கும் அனைத்து பொருட்களும் 'என்கிறார்.

ரஹ்மத் ராஜகுமாரன்

டெலிபோர்டேஷன்

அறிவியலிலிருந்து ஆன்மீகம் வரை 12


டெலிபோர்டேஷன் இது புராணங்களிலும் பழைய மாயாஜால கதைகளிலும் , சினிமா படங்களிலும் அதிகம் பார்க்கலாம். அதாவது ஒரு பொருளை ஒரு இடத்திலிருந்து மறைய வைத்து வேறு ஓரிடத்தில் வரவழைப்பது .
இப்படி ஒரு மாயவித்தை சாத்தியமா ? என்றால் நமது அன்றாட அறிவியல் இந்த விஷயத்தில் திணறிக் கொண்டிருக்க , குவாண்டம் அறிவியல் இதை எப்பவோ சாத்தியப்படுத்திய காட்டிவிட்டது, ஆய்வின் மூலம் நிரூபித்துக் காட்டிவிட்டது ! என்ன ஒன்னு இதுவரை ஒரு சின்ன துகள் அளவில்தான் இது சாத்தியப்பட்டிருக்கிறது ! பரவாயில்லை...முதல்முதலில் விமானத்தில் பறந்தவர் வெறும் 100 மீட்டர் அளவுக்கு கிட்டத்தட்ட தானே பறந்தார் . அதுவும் ஒரு ஸ்கூட்டி வேகத்தை விட குறைவாக . இப்போது ஜெட் விமானம் மிக வேகமாக பறக்கவில்லையா ? அது மாதிரி டெலிபோர்டேஷன் பெரிய அளவில் சாதிக்கும் .

சரி இதை எப்படி செய்கிறார்கள் தெரியுமா ?

உதாரணத்திற்கு ஒரு கட்டிடம் எடுத்துக் கொள்ளுங்கள். அது ஆயிரக்கணக்கான செங்கல்கள் அடுக்கப்பட்ட அமைப்புதானே அல்லவா ?

இப்போது அந்த கட்டிடத்தை அப்படியே செங்கல் செங்கலாக பிரித்து வண்டியில் ஏற்றி வேறு இடம் கொண்டு போய் , முன்பு அடுக்கப்பட்டிருந்த அச்சு அசல் அதே வடிவத்தில் செங்கல் அடுக்கி வைத்தால் அல்லது பழைய கட்டிடம் மாதிரி வரைபடத்தை கொண்டு அச்சு அசலாக வேறு ஒரு கட்டிடம் கட்டினால் என்ன ஆகும் ? அந்த அதே கட்டிடம் இங்கே கிடைத்துவிடும் அல்லவா ? இதுதான் கான்செப்ட் .
அதாவது ஒரு பொருளை அணு அணுவாக பிரித்து அதை வேறொரு இடத்தில் அந்த மாதிரியே அப்படியே உண்டு பண்ணுவது.

டெலிபோர்ட் கான்செப்டை வைத்து 1998 இல் ஒரு ஆய்வு செய்தார்கள். ஒளியை சுமந்துள்ள ஒரு போட்டான் அணுவை சோதனைக்கு எடுத்துக்கொண்டு , அதன் நுண் கட்டமைப்பை மிகச்சரியாக வரைபடம் எடுத்து வைத்துக்கொண்டார்கள். அந்தத் தகவலை பக்கத்தில் வேறு ஒரு இடத்தில் கடத்தினார்கள். அதிக தூரமில்லை சுமார் ஒரு மீட்டர் தூரத்திற்கு கடத்தினார்கள் . அங்கே இதேபோல் கட்டமைப்பை கொண்ட அணுகூட்டத்தை பழைய அளவில் இருந்தது போன்றே அதே வரைபட படி ஒரு போலி போட்டானை வடிவமைத்து பார்தார்கள் .
என்ன ஆச்சரியம் ! தன்னை போல் ஒருவன் வந்த உடனே அந்த ஒரிஜினல் அணு காணாமல் போய்விட்டது ! அதாவது வேறு விதமாக சொல்ல வேண்டும் என்றால் , இது இங்கிருந்து அங்கே டெலிபோர்ட் ஆகிவிட்டது .
இந்த சோதனைகளில் வரைபட தகவலை கடத்துவதும் வேறு ஒரு அணுதான் . அதன்பின் கேபிளை வைத்து கடத்தி வெற்றி பெற்றார்கள்.

2006-இல் லேசரை வைத்து கடத்தினார்கள் அதுவும் வெற்றி அதன் பிறகு 2012 இதை இன்னும் விரிவாக கிட்டத்தட்ட 80 கிலோ மீட்டர் தூரத்துக்கு எல்லாம் கடத்திவிட்டார்கள் . சைனாக்காரர்கள் விண்வெளிக்கு அதை கடத்தி வெற்றி பெற்றதாக செய்தி வந்துள்ளது.

சிறிது நேரம் தாமதித்தார்; அதற்குள் **(ஹுது ஹுது வந்து)** கூறிற்று: "தாங்கள் அறியாத ஒரு விஷயத்தை நான் அறிந்து கொண்டேன். "ஸபா"விலிருந்து உம்மிடம் உறுதியான செய்தியைக் கொண்டு வந்திருக்கிறேன்." - அல்குர்ஆன் – 27:22
إِنِّي وَجَدتُّ امْرَأَةً تَمْلِكُهُمْ وَأُوتِيَتْ مِن كُلِّ شَيْءٍ وَلَهَا عَرْشٌ عَظِيمٌ
"நிச்சயமாக அ(த் தேசத்த)வர்களை ஒரு பெண் ஆட்சி புரிவதை நான் கண்டேன்; இன்னும்> அவளுக்கு (தேவையான) ஒவ்வொரு பொருளும் கொடுக்கப்பட்டுள்ளது; மகத்தான ஓர் அரியாசனமும் அவளுக்கு இருக்கிறது. -அல்குர்ஆன் – 27:23

قَالَ يَا أَيُّهَا الْمَلَأُ أَيُّكُمْ يَأْتِينِي بِعَرْشِهَا قَبْلَ أَن يَأْتُونِي مُسْلِمِينَ
"பிரமுகர்களே! அவர்கள் என்னிடம் வழிபட்டவர்களாக வருமுன், உங்களில் யார் அவளுடைய அரியாசனத்தை என்னிடம் கொண்டுவருபவர்?" என்று (ஸுலைமான் அவர்களிடம்) கேட்டார். -அல்குர்ஆன் – 27:38

قَالَ عِفْرِيتٌ مِّنَ الْجِنِّ أَنَا آتِيكَ بِهِ قَبْلَ أَن تَقُومَ مِن مَّقَامِكَ ۖ وَإِنِّي عَلَيْهِ لَقَوِيٌّ أَمِينٌ
ஜின்களில் (பலம் பொருந்திய ஓர்) இஃப்ரீத் கூறிற்று; நீங்கள் உங்கள் இடத்திலிருந்து எழுந்திருப்பதற்கு முன் அதை நான் உங்களிடம் கொண்டு வந்து விடுவேன்; நிச்சயமாக நான் அதற்கு சக்தியுள்ளவனாகவும், நம்பிக்கைக்கு உரியவனாகவும் இருக்கிறேன்." -அல்குர்ஆன் – 27:39

قَالَ الَّذِي عِندَهُ عِلْمٌ مِّنَ الْكِتَابِ أَنَا آتِيكَ بِهِ قَبْلَ أَن يَرْتَدَّ إِلَيْكَ طَرْفُكَ ۚ فَلَمَّا رَآهُ مُسْتَقِرًّا عِندَهُ قَالَ هَٰذَا مِن فَضْلِ رَبِّي لِيَبْلُوَنِي أَأَشْكُرُ أَمْ أَكْفُرُ ۖ وَمَن شَكَرَ فَإِنَّمَا يَشْكُرُ لِنَفْسِهِ ۖ وَمَن كَفَرَ فَإِنَّ رَبِّي غَنِيٌّ كَرِيمٌ
இறைவேதத்தின் ஞானத்தைப் பெற்றிருந்த ஒருவர் (ஆஸிப் இப்னு பர்க்கியா அவர்கள் ) : "உங்களுடைய கண்ணை மூடித்திறப்பதற்குள், அதை உங்களிடம் கொண்டு வந்து விடுகிறேன்" என்று கூறினார்; (அவர் சொன்னவாறே) அது தம்மிடம் வைக்கப்பட்டிருப்பதைக் கண்டதும்: "இது என்னுடைய இறைவனின் அருட் கொடையாகும் நான் நன்றியறிதலுடன் இருக்கின்றேனா அல்லது மாறு செய்கிறேனா என்று (இறைவன்) என்னைச் சோதிப்பதற்காகவும்; எவன் ஒருவன் (இறைவனுக்கு) நன்றி செலுத்துகின்றானோ அவன் நன்றி செலுத்துவது அவனுக்கே (நன்மை)யாவும்; மேலும், எவன் (நன்றி மறந்து) மாறு செய்கிறானோ (அது அவனுக்கே

இழப்பாகும்; ஏனெனில்) என் இறைவன், (எவரிடத்தும்) தேவைப் படாதவனாகவும், மிகவும் கண்ணியம் மிக்கவனாகவும் இருக்கின்றான்" என்று (ஸுலைமான்) கூறினார். -அல்குர்ஆன் – 27:40

قَالَ نَكِّرُوا لَهَا عَرْشَهَا نَنظُرْ أَتَهْتَدِي أَمْ تَكُونُ مِنَ الَّذِينَ لَا يَهْتَدُونَ 27:41

27:41. (இன்னும் அவர்) கூறினார்: "(அவள் கண்டு அறிந்து கொள்ள முடியாதபடி) அவளுடைய அரியாசன(த்தின் கோல)த்தை மாற்றி விடுங்கள்; அவள் அதை அறிந்து கொள்கிறாளா ? அல்லது அறிந்து கொள்ள முடியாதவர்களில் ஒருத்தியாக இருக்கிறாளா ? என்பதை நாம் கவனிப்போம்."

فَلَمَّا جَاءَتْ قِيلَ أَهَٰكَذَا عَرْشُكِ ۖ قَالَتْ كَأَنَّهُ هُوَ ۚ وَأُوتِينَا الْعِلْمَ مِن قَبْلِهَا وَكُنَّا مُسْلِمِينَ 27:42
27:42. ஆகவே> அவள் வந்த பொழுது "உன்னுடைய அரியாசனம் இது போன்றதா?" என்று கேட்கப்பட்டது. அதற்கு அவள்: "நிச்சயமாக இது அதைப் போலவே இருக்கிறது" என்று கூறினாள்;
அறிவியல் ஒரு சின்ன துகள் அளவுக்கு கடத்தி வெற்றி பெற்றிருக்கிறது. ஆனால் ஆன்மிகத்தில் ஆஸிப் இப்னு பாக்கியா என்ற இறை நேசர் அரியணையே மாற்றி அமைத்து காட்டியிருக்கிறார்கள்.

ரஹ்மத் ராஜகுமாரன்

குறிக்கப்பட்ட நேரம்

அறிவியலிலிருந்து ஆன்மீகம் வரை 13



பொதுவாக, இயற்கை எனும் தத்துவக் கோட்பாடு, ஒரு செயலை மீண்டும், மீண்டும் செய்துகொண்டேதான் இருக்கிறது.

உயிர்கள் பிறப்பதும், இறப்பதும், பின்பு மீண்டும் பிறப்பதும் நம் கோள்களின் சுழற்சி போல, கெடிகாரத்தின் சுழற்சி போல நிகழ்ந்து கொண்டேயிருக்கும் ஒரு செயல். இரவானால் உறங்க வேண்டும், பகலில் எழ வேண்டும், உணவு உண்ண வேண்டும், பின்பு மீண்டும் உறங்க வேண்டும் என்பவை நம் ஜீன்களில் பதிந்துபோன ஒரு விஷயம்.அதுவும் குறிக்கப்பட்ட நேரம் தவறாமையில் நடைபெறும் நிகழ்ச்சி நிரல் .

ஆதி மனிதர்கள் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் உண்டு, குறிப்பிட்ட நேரத்தில் கழிவுகளை கழித்தும் வாழ தொடங்கும்போது, அவர்களின் உடலும் அதற்குப் பழகிப் போகிறது. உதாரணமாக, சூரியன் உச்சியில் இருக்கும் போது உணவு உண்கிறார்கள் என்றால், அதை மீண்டும் மீண்டும் செய்ய தொடங்க, மறுநாள் சூரியன் உச்சிக்கு வரும் முன்பே வேட்டைக்குச் சென்றுவிட வேண்டும் என்று அவர்களுக்கு தோன்றும்.

இந்த சூரியன் உச்சியில் இருக்கும்போது நாம் உணவு உண்டுவிட வேண்டும் என்று அவன் முதன் முதலில் நினைத்தபோதே, அவன் நேரம் என்ற கோட்பாட்டை அவனுக்கு தெரியாமலே உருவாக்கிவிட்டான். பகலானால் வேட்டை, இரவானால் உறக்கம் என்பதும் அதற்கான உதாரணம்தான்.

பின்பு நாகரிகம் வளர வளர, அவன் அன்றாடம் செய்யும் செயல்கள் அதிகமாக, அதிகமாக அவற்றையெல்லாம் எப்போது செய்ய வேண்டும் என்று குறித்துக்கொள்ள அவனுக்கு ஒரு அளவு கோல் தேவைப்பட்டது. அதுதான் நேரம் என்ற கோட்பாடு. தற்போது நேரம் என்பது மனிதன் செய்யும் ஒவ்வொரு செயலுக்கும் காரணமாக விளங்குகிறது.

நேரம் இல்லாத உலகம் குழப்பங்களின் குவியலாக இருக்கும் என்று நீங்கள் நினைத்தால் அதுதான் இல்லை. நேரம் இல்லாத உலகம் என்பது சாத்தியமே இல்லாத ஒன்று. நேரம் என்ற ஒன்று இல்லாத உலகம் வேண்டும் என்றால், அங்கே இருக்கும் உயிர்களின் ஜீன்களுக்குள் சுழற்சி என்ற விஷயமே பதிந்திருக்கக் கூடாது.
எப்போது நம் வாழ்வில் சுழற்சி என்ற ஒன்று நுழைந்துவிட்டதோ, அப்போதே நேரம் என்ற ஒரு கோட்பாடு உள்ளே நுழைந்துவிட்டதாகத்தான் அர்த்தம். அதை கூறுகளாக பிரித்து கெடிகாரம் கொண்டு அளக்கவில்லை,அவ்வளவுதான்.

ஒரு பெண் தன் மாதவிலக்கின் சுழற்சி மற்றும் பேறுகாலத்தின் காலம் என்று சந்திரனின் சுழற்சி கணக்கின்படி மாதத்திற்கு 28 நாட்கள் என்று கணக்கிட்டாலும், குழந்தை பிறந்த பிறகு பால் குடிப்பு இரண்டு வருடம் என்பது சூரிய கணக்கின்படியே குறிக்கப்படுகிறது .ஆக இயற்கையின் தத்துவக் கோட்பாட்டோடு இயைந்து கொள்கிறது .

وَوَصَّيْنَا الْاِنْسٰنَ بِوَالِدَيْهِ‌ۚ حَمَلَتْهُ اُمُّهٗ وَهْنًا عَلٰى وَهْنٍ وَّفِصٰلُهٗ فِىْ عَامَيْنِ اَنِ اشْكُرْ لِىْ وَلِـوَالِدَيْكَ ؕ اِلَىَّ الْمَصِيْرُ
"தனது தாய் தந்தைக்கு நன்றி செய்யும்படி மனிதனுக்கு நாம் நல்லுபதேசம் செய்தோம். அவனுடைய தாய் துன்பத்தின் மேல் துன்பத்தை அனுபவித்து(க் கர்ப்பத்தில்) அவனைச் சுமந்து கொண்டலைந்தாள். (பிறந்த) பிறகும் இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னரே அவனுக்குப் பால் மறக்கடித்தாள். ஆகவே, நீ எனக்கும் நன்றி செலுத்து; உன்னுடைய தாய் தந்தைக்கும் நன்றி செலுத்து. முடிவில் நீ நம்மிடமே வந்து சேர வேண்டியதிருக்கின்றது. (குர்ஆன் : 31:14)

உதாரணமாக ஐந்தறிவு மிருகங்களால் நேரம் என்றால் என்னவென்று புரிந்துகொள்ள முடியாது. ஆனால், எப்போது உணவு தேடச் செல்ல வேண்டும், உணவு உண்ண வேண்டும், எப்போது இனப்பெருக்கம் செய்ய வேண்டும் என்ற விஷயங்கள் அவைகளுக்கு நன்றாக தெரிகிறது . அது மிருகத்துக்கு மிருகம் மாறுபடுமே தவிர, ஆனால் அது சுழற்சியாக நடந்து கொண்டேதான் இருக்கும்.

துரதிர்ஷ்டவசமாக, நம் பிரபஞ்சத்தின் இயற்பியல் விதிகளின்படி, சுழற்சி என்ற ஒன்று இயற்கையின் தன்மையாக இருக்கிறது. இங்கே நாம் நேரம் என்ற ஒன்றை விட்டு விடவே முடியாது. நாம் நாள் முழுவதும் கெடிகாரத்தை பார்க்காமல் தவிர்க்கலாம். நம் கண்களை மூடிக்கொண்டால் உலகம் இருண்டு விடுமா என்ன?
ஆனால், பசித்தால் உணவு உண்ண வேண்டும். உறக்கம் வந்தால் உறங்க வேண்டும் . வஃது (குறிப்பிட்ட நேரம்) வந்தால் தொழ வேண்டும் என உங்கள் உடலின் தேவைகள் சுழற்சி நிலையில்தான் இருக்கும். மூஃமின்களின் எண்ணம் தொழுகையின் நேரத்தை தவறவிடக்கூடாதென மனம் ஞாபகப்படுத்திக் கொண்டேயிருக்கும்.அதை மூஃமின்கள் நினைத்தாலும் மாற்ற முடியாது. அதைப்போல் தொழுகையையும் நேரம் மாற்றக் கூடாது. காரணம் தொழுகையும் இயற்கையின் படைப்பில் பெரிதான சூரியனின் நிலையை அடிப்படையாகக் கொண்டு நிர்ணயிக்கப்பட்ட நேரத்தில் தொழுகை நிறைவேற்றப்பட வேண்டும் .

நிச்சயமாக குறிப்பிட்ட நேரங்களில் தொழுகையை நிறைவேற்றுவது முஃமின்களுக்கு விதியாக்கப் பெற்றுள்ளது. (அல்குர்ஆன் : 4:103)

இயற்கை எனும் தத்துவக் கோட்பாடு, ஒரு செயலை மீண்டும், மீண்டும் செய்துகொண்டேதான் இருக்கிறது. அதுவும் குறிக்கப்பட்ட நேரத்தில் .

ரஹ்மத் ராஜகுமாரன்.

தாவரங்களும் பேசுகின்றன...!

அறிவியலிலிருந்து ஆன்மீகம் வரை 14




தாவரங்களுக்கு உணர்வும் அறிவும் இருக்கின்றன, என்கிறார் பரிணாமவியல் சூழலியலாளர் மோனிகா கக்லியானோ.
தான் மேற்கொண்ட அறிவியல் சோதனைகளின் விளைவாகவும், அறிவியல் தரவுகளின் அடிப்படையிலும் இந்தக் கருத்து உருவானது என்றும், மூளையும் நரம்பு மண்டலமும் இல்லாவிட்டாலும், அறிவாற்றலை கொண்டு தாவரங்களால் செயல்பட முடியும் எனவும் அவர் கூறுகிறார்

தாவரங்கள் பேசுவதை மனிதர்களால் கேட்க முடியுமா?
சொற்களை பயன்படுத்தி பேசுவது என்ற மனித வழக்கத்தின்படி, அவை பேசுவதில்லை. ஆனால், அவை பேசுவதை கேட்க வேண்டுமென யாரேனும் விரும்பினால், அவை பேசும்.
தாவரங்களால் கட்டமைக்கப்பட்ட சுற்றுச்சூழலுக்கு இயற்கையிலேயே ஒத்திசைவு கொண்ட உயிரினங்கள் நாம். எனவே, ஏதாவது ஒரு வழியில் அவற்றுடன் நாம் தொடர்புகொள்ள வேண்டியது அவசியம். அப்போதுதான் நாம் எப்படி ஒருவரோடு மற்றொருவர் இணைந்திருக்கிறோம் என்பதைப் புரிந்துகொள்ள முடியும். இன்றைய சூழலியல் சீர்கேடுகளுக்கு முக்கிய காரணம், தாவரங்களுடன் கொண்டிருந்த உறவை நாம் மறுத்து வருவதுதான் காரணம்.

மனிதர்களுடன் உறவை ஏற்படுத்திக் கொள்வதைப் போன்றது தான் இதுவும். நமக்கு விருப்பமான சிலருடன் உரையாடுவது மகிழ்ச்சியைத் தரும். அதை போலவே, சிலருடன் பேசுவதை நாம் விரும்புவதில்லை.
தாவரங்களை வளர்ப்பவர்கள், அவற்றின் அருகில் இருப்பவர்கள் எந்த நேரமும் அவற்றை கவனித்துக் கொண்டிருப்பதால் அவற்றின் மொழியை அறிய முடியும். எல்லாவற்றுக்கும் மேலாக உங்கள் உடலையும் மனதையும் அமைதிப்படுத்தி, அவை என்ன சொல்ல வருகின்றன? என்று கவனிக்கவும், புரிந்துகொள்ளவும் முயல வேண்டும். கருணையோடு அவற்றை அணுகி தொடர்பை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். எல்லா உறவுகளுக்குமே இதுதான் அடிப்படை.

ஓர் உயிர் அறிவாற்றலுடன் திகழ்வதற்கு மூளை தேவை இல்லை. அறிவியல் பூர்வமாக இதை நிரூபிப்பதற்கு இப்போது எங்களிடம் தரவுகள் இருக்கின்றன. தாவரங்கள் ஒன்றோடொன்று பேசுவது மட்டுமல்லாமல், கற்பது, நினைவில் கொள்வது, முடிவெடுப்பது போன்ற திறன்களையும் கொண்டிருக்கின்றன என்பதற்கான தரவுகளும் எங்களிடம் உள்ளன.

இவை அனைத்தும் அறிவாற்றலுடன் சம்பந்தப்பட்டவை. முடிவெடுப்பது, கற்றல் ஆகியவற்றுக்கு விஷயங்களை தேர்ந்தெடுக்கும் திறன் தேவைப்படுகிறது. எனவே, தாவரங்கள் அறிவாற்றல் மிகுந்தவையே என விளக்கம் அளிக்கிறார், பரிணாமவியல் சூழலியலாளர் மோனிகா கக்லியானோ.

நபி ஸல் அவர்கள் மிம்பர் படியிலிருந்து பயான் செய்யும்போது தங்களுடைய கரத்தை ஒரு பேரீத்த மரத்துண்டு மீது வைத்திருந்து பேசுவார்கள். பின் அந்த மிம்பர் மாற்றியமைக்க என்று முடிவு செய்யப்பட்டது . ஆகையால் பேரீத்த மரத்துண்டை எடுத்துவிட்டு புதிய மிம்பர் செய்யப்பட்டது. அப்புறப்படுத்தப்பட்ட ஈச்ச மரத்துண்டு குழந்தை அழுவது போன்று அழுததாகவும் ,அதை நபிதோழர்கள் கேட்டதாகவும் கூறப்படுகிறது.

நபி (ஸல்) அவர்கள் சிறுவராக இருந்தபோது அபூதாலிப் அவர்கள் சிரியாவிற்கு வியாபார நிமித்தமாக செல்லும்போது நபியவர்களை அழைத்துச் சென்றார்கள் அப்போது சிரியாவிற்கு சற்றுமுன்னர் அவர்களை கவனித்து பஹீரா என்கிற பிரபலமான ஞானி அவர்கள் அபூதாலிபிடம் , " இந்த சிறுவர் யார் ?" என்றார்கள் அவர் என் மகன் என்று கூறினார் அதற்கு பஹீரா "சாத்தியம் இல்லையே " என்று கூறினார்கள் உடனே அபுதாலிப் இவர் என்னுடைய சகோதரரின் மகன் இவர் பிறப்பதற்கு முன்பே இவருடைய தகப்பனார் இறந்து விட்டார்கள் இவரின் தாயார் இவர் பிறந்ததும் இறந்துவிட்டார்கள் எனவே நானே என் மகனாக எடுத்து வளர்க்கிறேன் என்று கூறினார்கள்

அதற்கு நீங்கள் சொல்வது உண்மையே மேலும் இவ்வாறு இறைவனால் அனுப்பப்பட்ட தூதுவராக இருப்பார் ஏனென்றால் இவருக்கு செடிகள் தாவரங்கள் ஸுஜூது செய்வதை நான் கவனித்தேன் எனவே இவரை சிரியாவிற்கு அழைத்துச் செல்ல வேண்டாம் இவரை உங்கள் தாய் நாட்டிற்கு உடனடியாக அனுப்பி வையுங்கள் இதனால் இவருக்கு வர இருக்கும் ஆபத்துகளிலிருந்து இவரை தவிர்க்கலாம்.
وَّالنَّجْمُ وَالشَّجَرُ يَسْجُدٰنِ
செடிகள், (கொடிகள்,) மரங்கள் (ஆகிய அனைத்தும் அல்லாஹ்வுக்கு வழிப்பட்டுச்) சிரம் பணிகின்றன.
(அல்குர்ஆன் : 55:6)
ரஹ்மத் ராஜகுமாரன் .

உயிரினங்களின் வகைகள் .

அறிவியலிலிருந்து ஆன்மீகம் வரை 15



பூமியில் கோடிக்கணக்கான உயிர்கள் உள்ளன . இவற்றை வகைப்படுத்துவது கடினம் . ஆனாலும், முன்னோர்கள் உயிரினங்களை ஆதிகாலம் முதலே பகுத்துப் பார்க்க தொடங்கினர் .

நமது முன்னோர்கள் செடி, கொடிகளை 4 பிரிவாகவும், பிராணிகளை 3 பிரிவாகவும் பிரித்தனர் .
இதன்படி மனிதனும், பாலூட்டிகளும் ஒரு வகுப்பு . மீன், பறவை, பாம்பு ஆகிய முட்டையிடும் பிராணிகள் 2 -வது பிரிவு . 3 -வது பிரிவு தனி ரகம் என்று பிரித்தனர் .

செடிகளில் பூ உள்ளவை ஒரு பிரிவு . பூ இல்லாதவை ஒரு பிரிவு . காய்ந்தபின் வாடி அழிந்துபோகும் செடிகள் ஒரு வகை . படரும் தண்டுகளை உடையவை 4 -வது பிரிவு என்று பகுத்தனர் .

புல், பூண்டு தாவரங்களை உற்றறியும் ஓரறிவு உயிரினங்களாகவும், சிப்பி, நத்தை போன்றவை இரண்டறிவு உள்ளவையாகவும், எறும்புகள், ஈசல் போன்றவை மூன்றறிவு உள்ளவை என்றும், தும்பி, வண்டு போன்றவை நான்கறிவுள்ளவை என்றும், பறவைகள், விலங்குகள் ஐந்தறிவு உள்ளவை என்றும், மனிதன் ஆறறிவு உள்ளவன் என்றும் தொல்காப்பியம் வகைப்படுத்துகிறது .

ஆனால் இந்த வகைப்படுத்துதலை விஞ்ஞானிகள் ஏற்கவில்லை . இவை செயற்கையானவை என்று கூறிவிட்டனர் 1707 -ம் ஆண்டில் லின்னேயஸ் என்ற பிரெஞ்சு விஞ்ஞானி இயற்கையான வகைப்படுத்தும் திட்டத்தை வெளியிட்டார் . அவர் உயிகளின் உடலமைப்பு, தன்மை, இயல்புகளை அடிப்படையாகக் கொண்டு வகைப்படுத்தினார் .

உயிரினங்கள் முதலில் தாவரங்கள், பிராணிகள் என்று இரு மாபெரும் பிரிவுகளாக பிரிக்கப்படுள்ளன .
இவை இரண்டிலும் பல உட்பிரிவுகள் உள்ளன . பிராணிகளில் முதுகெலும்பு உள்ளவை, முதுகெலும்பு இல்லாதவை என்று இரு உபபிரிவுகள் உள்ளன . முதல் பிரிவில் மீன், தவளை, ஊர்வன, பறப்பன, பாலூட்டிகள் என்று 5 பிரிவுகள் உள்ளன .

அமீபா, கடற்பஞ்சி, பவளம், மண்புழு, பூச்சி, சிப்பி, நட்சத்திரமீன் ஆகியவை முதுகெலும்பு இல்லாத பிராணிகளின் பிரிவுகள் ஆகும் . இவற்றுக்குள் பல உப பிரிவுகள், குடும்பங்கள், உப குடும்பங்கள், வகுப்புகள், இனங்கள் அடங்கி உள்ளன.இவற்றின் மிகச்சிறிய தொகுதியே இனமாகும் .
தாவரங்களில் இரு பெரும் பிரிவுகள் உண்டு . பூ உள்ளவை, பூ இல்லாதவை . பூவுள்ள தாவரங்களில் மூடிய விதையுள்ளவை, மூடாத விதை உள்ளவை என உப பிரிவு உண்டு . ஆல்கா, காளான், பாசி, பிரணி ஆகியவை பூவாத தாவர பிரிவுகள் ஆகும்.
ஆனால் குர்ஆனில் அல்லாஹ் தாவரங்களை பலவகைப்படுத்தி, அவைகள் படைப்பில் வெவ்வேறானாவைகளாக இருந்தாலும் அவைகளுக்கு ஒரே நீர் புகட்டப்படுவதை கூறி சிந்திக்கச் சொல்கிறான்.

وَ فِى الْاَرْضِ قِطَعٌ مُّتَجٰوِرٰتٌ وَّجَنّٰتٌ مِّنْ اَعْنَابٍ وَّزَرْعٌ وَّنَخِيْلٌ صِنْوَانٌ وَّغَيْرُ صِنْوَانٍ يُّسْقٰى بِمَآءٍ وَّاحِدٍ وَنُفَضِّلُ بَعْضَهَا عَلٰى بَعْضٍ فِى الْاُكُلِ اِنَّ فِىْ ذٰلِكَ لَاٰيٰتٍ لِّـقَوْمٍ يَّعْقِلُوْنَ
பூமியில் பல தொகுதிகளை சேர்ந்தாற்போல் அமைத்து (அதில்) திராட்சை, தானியப்பயிர் நிலங்களையும், பேரீச்சந் தோப்புகளையும் ஆக்கினான்; கிளைகள் உள்ளதும், கிளைகள் இல்லாததுமான மரங்களையும் (உற்பத்தி செய்கிறான். இவை அனைத்திற்கும்) ஒரேவித நீர் புகட்டப்பட்டபோதிலும், சிலவற்றைவிட சிலவற்றை சுவையில் நாம் மேன்மையாக்கி வைத்தோம். இதில், அறிவுடைய மக்களுக்கு நிச்சயமாக பல அத்தாட்சிகள் இருக்கின்றன. (குர்ஆன் : 13:4)

பாலூட்டிகள் குட்டி போட்டு பால் தருபவை . ஊர்வனவற்றுள்ள பாலூட்டிகள் உஷ்ண ரத்தம் உடையவை . நுரையீரல்களால் சுவாசிப்பவை . பறவைகளும் நுரையீரலால் சுவாசிக்கின்றன . ஆனால் அவை முட்டையிட்டு குஞ்சு பொரிப்பவை .
காது வெளியே தெரிகிற உயிரினங்கள் குட்டி போட்டு பால் கொடுக்கும் .காது உள்ளடக்கி இருக்கிற உயிரினங்கள் முட்டையிட்டு குஞ்சு பொறிக்கும் என்பதாக அலி (ரலி) அவர்கள் கூறியுள்ளார்கள்
இஸ்லாம் விலங்குகள் அனைத்தையும் நீரில் இருந்து படைத்ததாகக் கூறுகின்றது.

وَاللّٰهُ خَلَقَ كُلَّ دَآبَّةٍ مِّنْ مَّآءٍ فَمِنْهُمْ مَّنْ يَّمْشِىْ عَلٰى بَطْنِهٖ وَمِنْهُمْ مَّنْ يَّمْشِىْ عَلٰى رِجْلَيْنِ وَمِنْهُمْ مَّنْ يَّمْشِىْ عَلٰٓى اَرْبَعٍ يَخْلُقُ اللّٰهُ مَا يَشَآءُ اِنَّ اللّٰهَ عَلٰى كُلِّ شَىْءٍ قَدِيْرٌ
(மனிதர்களே!) ஊர்ந்து செல்லக்கூடிய (உயிர்ப் பிராணிகள்) அனைத்தையும் அல்லாஹ் ஒரேவித தண்ணீரைக் கொண்டு படைத்திருந்த போதிலும் (அவை யாவும் ஒரு வகையாக இருக்க வில்லை.) அவைகளில் சில தன் வயிற்றால் (பாம்புகளைப் போல்) ஊர்ந்து செல்கின்றன. அவைகளில் சில இரு கால்களால் நடக்கின்றன. அவைகளில் சில நான்கு கால்களால் நடக்கின்றன. (இவ்வாறு) அல்லாஹ் தான் விரும்பியவைகளை (விரும்பியவாறு) படைப்பான். நிச்சயமாக அல்லாஹ் அனைத்தின் மீதும் மிக்க ஆற்றலுடையவன்.
(அல்குர்ஆன் : 24:45)

ஒவ்வொரு பிரிவிலும் வெவ்வேறு லட்சணங்களும், பாகுபாடுகளும் உண்டு . ஆடும், மாடும் ஒரே குடும்பம் . பூனையும், புலியும் ஒரு குடும்பம் . கழுதையும், குதிரையும் ஒரே குடும்பம் . இவை பாலூட்டிகள் . இவற்றில் சைவம், அசைவம் உண்டு . என்வே நாய், பூனை, புலி இவை உறவுள்ள இனங்கள் . கழுதையும், குதிரையும் இவற்றின் தாயாதிகள் . ஆடும், மாடும் இவற்றின் உறவினர்களாகும் .
உணவுக்காக எந்தெந்த விலங்கினங்களை பயன்படுத்தலாம் என்பதைப் பற்றி இஸ்லாம் தெளிவுப்படுத்துகிறது
விலங்கினங்களில் எவற்றுக்குக் கோரைப் பற்கள் உள்ளனவோ அவற்றை உண்ணக் கூடாது என்று நபிகள் நாயகம்(ஸல்) தடை செய்தார்கள்.
அறிவிப்பவர்: அபூ ஸலமா (ரலி), நூல்: புகாரி 5781, 5530.

மேற்பகுதியில் உள்ள பல் வரிசையின் முன் பற்களில் நான்கு பற்களுக்குப் பின் உள்ள பல் கோரைப் பல் எனப்படும்.
கோரைப் பல் என்பது மற்ற பற்களை விட நீளமாக இருக்கும். மனிதனுக்குக் கூட மற்ற விலங்கினம் அளவு இல்லா விட்டாலும் கோரைப் பல் இருக்கிறது.
மேல் பகுதியில் அமைந்துள்ள பற்களில் வலப்பக்கம் ஒரு பல்லும் இடப்பக்கம் ஒரு பல்லும் மற்றபற்களை விட நீளம் அதிகமாக இருக்கும்.
இப்படி கோரைப் பல் எவற்றுக்கு உள்ளதோ அதை நாம் உண்ணக் கூடாது. ஆடு, மாடு போன்றவற்றின் பற்கள் அனைத்தும் சமமான உயரம் கொண்டதாக அமைந்திருக்கும்.
பூனை,நாய், சிங்கம், புலி போன்ற விலங்குகளுக்கு இரண்டு பற்கள் மட்டும் மற்ற பற்களை விட மிகவும் நீளமாக இருக்கும்.
இந்த அளவுகோலை விளங்கிக் கொண்டால் எவற்றை உண்ணலாம் என்பது எளிதில் விளங்கிவிடும்.
கழுதையைப் பொறுத்தவரை அதன் பற்கள் வரிசையாக இருந்தாலும் இந்த அளவு கோலில் அவை அடங்காவிட்டாலும் அதைக் குறிப்பிட்டு ஹராமாக்கி விட்டதால் கழுதைக்கு இந்த அளவு கோலைப் பொருத்தக் கூடாது.
பல துறைகளிலும் விற்பன்னராக இருந்த அபூஅலீ இப்னு ஸீனா அவர்கள் விலங்கினங்களை ஆய்வு செய்து ஒரு தகவலைத் தருகிறார்.
கொம்பு உள்ள எந்த உயிரினத்துக்கும் கோரைப் பல் இருக்காது என்பது அவரது ஆய்வு.
எனவே எந்த விலங்குக்காவது கொம்பு இருந்தால் அதை நாம் உண்ணலாம். எவற்றுக்கு கொம்பு இல்லையோ அவற்றுக்கு மட்டும் கோரைப் பல் உள்ளதா என்று ஆய்வு செய்த பின் உண்ணலாம்.

ரஹ்மத் ராஜகுமாரன் .

ஒட்டகமும், பாவோபாப் மரங்களும்

அறிவியலிலிருந்து ஆன்மிகம் வரை 16





ஒட்டகம் பாலைவனத்தில் வாழ்பவை என்பது உங்களுக்கு தெரிந்ததுதான் . பொதுவாக பாலைவனத்தில் வசிக்கும் பிராணிகள் தன் உணவில் இருந்து நீரை எடுத்து கொள்ளும். ஆனால், இதற்கு மாறாக ஒட்டகமோ நீரூற்றில் இருந்துதான் நீரை எடுத்து கொள்ளும். தண்ணீர் கிடைத்துவிட்டால் 10 நிமிடத்தில் 123 லிட்டர் நீரை ஒரே மூச்சில் உறிஞ்சிவிடும். எவ்வளவு தூரம் வெயிலில் நடந்தாலும் இவற்றிற்கு வியர்த்து போகாது.

இரண்டு வகை ஒட்டகம் உள்ளது. ஒருவகை ஒரு முதுகு உடையது; மற்றொன்று இரண்டு முதுகு உடையது. இரண்டுமே நீரில் நன்றாக நீந்தும். 70-80 லிட்டர் தண்ணீர் குடிக்கும் ஒட்டகத்துக்கு மூன்று வயிறுகள்.
முதல் வயிற்றில் உணவை சேகரிக்கும். இரண்டாவது வயிற்றில் திரவ சுரப்புகள் இருக்கும். மூன்றாவதில் அசை போடப்பட்ட உணவு ஜீரணமாகும்.

முதல் இரண்டு வயிற்றில் உள்ள பைகளில் தண்ணீரை நிறைய சேமித்து வைத்து கொள்ளும். அந்த பைகளில் நீர் நிரம்பியவுடன் தசைகள் மூடிவிடும். தண்ணீர் தேவைப்படும் போது திறந்து சுரக்கும்.
ஆடு, மாடு, ஒட்டகம் ஆகிய கால்நடைகளில் இரத்தத்திற்கும் சாணத்திற்கும் இடையில் அதன் வயிற்றில் இருந்து கலப்பற்ற பாலை இறைவன் சுரக்க செய்கிறான் என்பதாக குர்ஆனில் அல்லாஹ்

وَاِنَّ لَكُمْ فِى الْاَنْعَامِ لَعِبْرَةً نُسْقِيْكُمْ مِّمَّا فِىْ بُطُوْنِهٖ مِنْ بَيْنِ فَرْثٍ وَّدَمٍ لَّبَنًا خَالِصًا سَآئِغًا لِّلشّٰرِبِيْنَ
(ஆடு, மாடு, ஒட்டகம் ஆகிய) கால்நடைகளிலும் உங்களுக்கு ஒரு படிப்பினை உண்டு. இரத்தத்திற்கும் சாணத்திற்கும் இடையில் அதன் வயிற்றில் இருந்து கலப்பற்ற பாலை (உற்பத்தி செய்து) நாம் உங்களுக்குப் புகட்டுகிறோம். அது அருந்து பவர்களுக்கு மிக்க இன்பகரமானது. (குர்ஆன் : 16:66)

ஆனால் ஒட்டகத்தின் வயிற்றில் மட்டும் தண்ணீர் சேமித்து வைத்திருக்க பை போன்ற 'வாட்டர்டேங்க்' கையும் சேர்த்தே இறைவன் படைத்திருக்கிறான் .
பாலைவனப் பயணத்தின்போது குடிநீர் காலியாகி, கிடைக்காமல் போனால் , பயணிகள் பயணம் செய்யும் ஒட்டகங்களில் ஒன்றை அறுத்து அதன் வயிற்றிலிருக்கும் நீரை குடிநீராகப் பயன்படுத்திக் கொள்கிறார்கள் .
ஒட்டகம் மாதிரி இறைவன் ஒருவித மரத்தையும் படைத்துள்ளேன்.
மடகாஸ்கர் தீவில் இருக்கும் **Baobab (பாவோபாப்)** மரங்கள் தான் உலகில் மிகப்பெரிய மரங்கள். உயரத்தில் அல்ல, சுற்றளவில். இந்த மரங்களின் உயரம் என்னவோ 15லிருந்து 98 அடி தான். ஆனால் மரத்தின் சுற்றளவும் அதிகபட்சமாக 154 அடிகள் வரை இருக்கும்.

இவற்றின் மற்றொரு ஸ்பெஷல் என்ன தெரியுமா? மரத்தின் அடிப்பகுதி மூங்கில் மாதிரி வெற்றிடம் கொண்டதாகவும், அந்த வெற்றிடத்தில் நீர் நிறைந்தும் இருக்கும். ஒரு பெரிய **Baobab** மரத்தில் **1,20,000** லிட்டர்கள் நீர் சேமித்து வைக்கப்பட்டிருக்கும். கோடை காலங்களில் இந்த நீர் ஆவியாக மாறிவிடாமல் மரங்களே பாதுகாக்கின்றன.
**மடகாஸ்கர்** தீவிலிருக்கும் மக்கள் வறட்சிக்காலங்களில் இம்மரங்களிலிருக்கும் நீரை அருந்துகின்றனர். மரங்கள் இறந்துவிட்டால், அடிப்பகுதியைத் தண்ணீர் சேமித்து வைக்க உபயோகப்படுத்துகின்றனர். 1000 வருடங்கள் பழமையான மரங்கள் இத்தீவில் இருக்கின்றன என்று சொல்லப்பட்டாலும், அதை நிரூபிக்க ஆதாரம் ஏதும் இல்லை..ஏனென்றால், மரங்களின் வயதைக் கணக்கிடும் growth rings பாவோபாப் மரங்களில் கிடையாது.
இறை வல்லமை என்னவென்று சொல்வது ?

ரஹ்மத் ராஜகுமாரன்

நித்திரை எனும் ஒரு நிம்மதி

அறிவியலிலிருந்து ஆன்மிகம் வரை 17



ஒரு நாளின் மொத்த உடலியக்கத்தைக் கட்டுப்படுத்துவது உடல் கெடிகாரத்தின் வேலை. சூரிய ஒளியின் இருப்பை அடிப்படையாகக் கொண்டு சுரக்கும் மெலடோனின் ஹார்மோன், பகலுக்கும் இரவுக்கும் நம்மை தயார்படுத்துகிறது.

பகலில் விழித்திருக்கும் உயிரினங்கள் பகலாடிகள், இரவில் விழித்திருக்கும் உயிரினங்கள் இரவாடிகள். பகலில் விழித்துச் செயல்படும் வகையிலும், இரவில் ஓய்வுக்கு ஏற்ற வகையிலும் பகலாடி உயிரினத்தின் உடல் அமைந்திருக்கும். நாமும் பகலாடிகள்தான்.

ஒரு நாளின் மொத்த உடலியக்கத்தைக் கட்டுப்படுத்துவது உடல் கெடிகாரத்தின் வேலை. சூரிய ஒளியின் இருப்பை அடிப்படையாகக் கொண்டு சுரக்கும் மெலடோனின் ஹார்மோன், பகலுக்கும் இரவுக்கும் நம்மை தயார்படுத்துகிறது.

மெலடோனின், பீனியல் எனும் சுரப்பியால் சுரக்கப்படுகிறது. இதுவே ஓய்வுக்கும் உறக்கத்துக்கும் உடலை தயார்படுத்துகிறது. ரத்த அழுத்தத்தையும், இதய துடிப்பையும் மிதமாக குறைக்கிறது.
சூரியஒளி இருந்தால், மெலடோனின் சுரப்பு தடுக்கப்பட்டு, உடல் விழிப்பு நிலையில் இருக்கிறது.

சில நேரம் தூக்கமின்மை, வேறு நேர மண்டலங்களுக்குப் பயணிப்பதால் உடலுக்கு ஏற்படும் 'ஜெட்லாக்' எனப்படும் உடல் கெடிகாரக் கோளாறு ஆகியவற்றை சரிசெய்ய மெலடோனினை பயன்படுத்துகிறார்கள்.
அதே நேரம் நீல நிற ஒளியால் மெலடோனின் சுரப்பு தடுக்கப்படுகிறது.

பகல் நேரத்து சூரிய வெளிச்சம் போக, இரவு நேரத்தில் நாம் பயன்படுத்தும் விளக்குகள் அனைத்தும் மஞ்சள் ஒளியையே வெளியிட்டுவந்தன. மின்விளக்குகள் வந்த பிறகும்கூட, மஞ்சள் ஒளியை உமிழும் குண்டு பல்புகள்தான் பயன்பாட்டில் அதிகம் இருந்தன. அதன் பின்னர் வந்த குழல் விளக்குகள் வெண்ணிற ஒளியைத் தந்தாலும், நீல ஒளியையும் வெளியிட்டதால் மெலடோனின் சுரப்பு குறையாமல் இருந்து வந்தது.

கடந்த 10 ஆண்டுகளாக அதிகம் புழக்கத்தில் உள்ள எல்.இ.டி., அதிக நீல ஒளியை வெளியிடுகின்றன. இந்த விளக்குகளை வீட்டில் பயன்படுத்தும்போது மெலடோனின் சுரப்பில் தடை ஏற்பட வாய்ப்புண்டு.
விளக்குகள் அனைத்தையும் அணைத்துவிட்டாலும், கணினித்திரை, கைபேசி திரையில் இருக்கும் ஒளி உமிழிகள் நீல நிற ஒளி பாதிப்பை ஏற்படுத்தும். மெலடோனின் இயல்பாகச் சுரந்து, ஒழுங்காக உறக்கம் வரவேண்டும் என்றால் உறங்குவதற்கு சில மணி நேரத்துக்கு முன்னர் நீல ஒளியை பார்ப்பதை நீங்கள் தவிர்க்க வேண்டும்.
அதேநேரம் இன்றைக்கு நாம் பயன்படுத்தும் கைபேசி, மடிக்கணினி அனைத்திலும் நீல ஒளியை குறைக்கிற அமைப்புகள் வந்துவிட்டன. 'நைட் மோட்' என்று அழைக்கப்படும் அவற்றைப் பயன்படுத்தும்போது, திரை மெல்லியச் சிவப்பு ஒளியுடன் தோன்றும். அதனால் நீல ஒளி தவிர்க்கப்பட்டு இயல்பான மெலடோனின் சுரப்புக்கு உடல் தயாராகும்.

கணினி, கைபேசிகளில் அந்த அமைப்பு இல்லையென்றால், அவற்றுக்கான இலவச செயலிகள் இணையத்தில் உண்டு. அவற்றைத் தரவிறக்கியும் பயன்படுத்தலாம். தூக்கம் முக்கியம் அல்லவா?
ஒரு சுரப்பி சுரக்கும் ஹார்மோனைக் கொண்டு நமக்கு நித்திரை என்னும் பாக்கியத்தை அருளச் செய்த வல்ல ரஹ்மான் பாக்கியமுடையவன்.

وَمِنْ اٰيٰتِهٖ مَنَامُكُمْ بِالَّيْلِ وَالنَّهَارِ وَابْتِغَآؤُكُمْ مِّنْ فَضْلِهٖ ؕ اِنَّ فِىْ ذٰلِكَ لَاٰيٰتٍ لِّقَوْمٍ يَّسْمَعُوْنَ
இரவிலும் பகலிலும் நீங்கள் நித்திரை செய்து இளைப்பாறிக் கொள்வதும்,
(பூமியின் பல பாகங்களிலும் சென்று) நீங்கள் அவனுடைய அருளைத் தேடிக்கொள்வதும் அவனுடைய அத்தாட்சிகளில் ஒன்றாகும்.
(நல்லுபதேசத்தைச்) செவியுறும் மக்களுக்கு இதிலும் நிச்சயமாகப் பல அத்தாட்சிகள் இருக்கின்றன.
(அல்குர்ஆன் : 30:23)

ரஹ்மத் ராஜகுமாரன்

எறும்பின் கூட்டு முயற்சி

அறிவியலிலிருந்து ஆன்மிகம் வரை 18



ஒன்றன் பின் ஒன்றாக வரிசை மாறாமல் எறும்புகள் செல்வது சர்வசாதாரணம்..
ஒரு கூட்டமாக ஒன்றோடொன்று ஒட்டிக்கொண்டு கோடையில் நம்முடைய தண்ணீர் சேமிப்பில் மிதக்கும் . பார்த்திருப்பீர்கள் ஆனால் கிட்டத்தட்ட ஒரு படகு/தட்டு மாதிரி செல்வது பார்த்திருக்கிறீர்களா ?
காடுகளிலிருக்கும் நெருப்பெறும்புகள் மழைக்காலங்களில் வரும் வெள்ளப்பெருக்கிலிருந்து தப்பிக்கத்தான் இப்படி ஒரு ட்ரிக்கை உபயோகிக்கின்றன.

மழையால் எறும்புப்புற்றுகளில் தண்ணீர் நுழையும்போது, அதில் வாழும் எறும்புகளனைத்தும் ஒன்று சேர்ந்து ஒரு தட்டுபோன்ற அமைப்பை உருவாக்கி, இலைகள் மிதப்பதுபோல் நீரில் மிதக்கின்றன.
மெதுவாக மிதந்துவந்து மற்றொரு தரைப்பகுதியையோ அல்லது மரங்களையோ பற்றி உயிரைக் காப்பாற்றிக்கொள்கின்றன.

நடுப்பகுதியில் ராணி எறும்பும், அதைச் சுற்றி சின்ன வயது எறும்புகளும், வயதில் பெரிய எறும்புகள் ஓரத்தில் இருப்பது போலவும் இவை ஒன்று சேர்கின்றன.
நீரில் மிதந்து வரும்போது, (நிஜமான) படகுக்கோ மீன்களுக்கோ இரையாகாமல் தப்பிப்பதுதான் இவற்றின் மிகப் பெரிய சவால்.
இந்த மிகச் சிறிய ஜீவராசிகளின் கூட்டு முயற்சியைப் பற்றியும் குர்ஆனில் மிக அழகாக அவைகளின் முடியாட்சியின் அரசாட்சியைப் பற்றியும் அழகாக படம் பிடித்து காட்டுகிறான் .
எறும்பு பேசியதைக்கேட்ட சுலைமான் நபியும் , பிரேசிலின் விஞ்ஞானக் கண்டுபிடிப்பும்!

இறைத்தூதர் சுலைமான் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் (கி.மு. 1032 - கி.மு. 975) ஓர் பேரரசர்.
"அவர்கள் எறும்புகளின் ஓடைக்கருகே (வாதிந் நம்ல்) வந்தபோது ஓர் எறும்பு, "எறும்புகளே நீங்கள் உங்கள் புற்றுகளுக்குள் (மஸாகின்) நுழைந்துவிடுங்கள். சுலைமானும் அவருடைய படையினரும் உங்களை மிதித்துவிட வேண்டாம்" என்று கூறியது. அது கூறியதைக் கேட்டு சுலைமான் புன்னகைத்துச் சிரித்தார். **(27:18,19)**

இங்கு 'எறும்பு ஓடை' என்பதைக் குறிக்க 'வாதிந் நம்ல்' எனும் சொற்றொடர் ஆளப்பட்டுள்ளது. நம்லத்-எறும்பு; நம்ல்-எறும்புகள். 'வாதீ' என்பதற்கு பள்ளத்தாக்கு **(Conyon),** கணவாய் **(Ravine),** மலை இடுக்கு **(Gully),** இடுக்கு வழி **(Gorge),** ஓடை **(Rivulet)** ஆகிய பொருள்கள் உள்ளன. இந்தச் சொல்லாக்கத்தைப் பார்த்து கீழை அறிஞர்கள் சிலர் நகைத்ததுண்டு.
ஏனெனில், புற்றுகளில் எறும்பு இருக்கும்; மண் தரையில் வழியமைத்து சிறிய அளவில் வீடுகளை அமைத்து வாழும். எறும்புகளுக்குப் பெரிய அளவில் ஓடையோ சுரங்கமோ எங்கே உள்ளது என்று அவர்கள் குர்ஆன்மீது வினா தொடுத்தார்கள்; இதைக் கருத்தில் கொண்டுதானோ என்னவோ நம்மில் சிலரும் 'வாதிந் நம்ல்' என்பதற்கு 'எறும்புப் புற்று' என்றே பொருள் செய்துவருகிறோம்.

உண்மையில் புற்றைக் குறிக்க இவ்வசனத்தில் வேறொரு சொல் (மஸாகின் - குடியிருப்புகள்) ஆளப்பெற்றிருப்பது கவனத்திற்குரியது. ஆக, எறும்புக்கு ஓடையோ சுரங்கமோ இல்லை என்றே உலகம்

கருதிவந்த நிலையில் அண்மையில் அப்படி ஒன்று உண்டு என்பதை அகழ்வாராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்துள்ளதுதான் வியப்பு.

பிரேசில் நாட்டில் அண்மையில் நடந்த அகழ்வாராய்ச்சியில் பூமிக்கடியில் எறும்புகளின் ஒரு நகரமே கண்டுபிடிக்கப்பட்டது. அதில் எறும்புகளுக்கான சாலைகள், தோட்டங்கள் என எல்லாம் உள்ளன. சீனாவின் பெருஞ்சுவரைப் போல மிகப்பெரும் அற்புதமாக இது காட்சியளிக்கிறது. பல மில்லியன் எறும்புகள் சேர்ந்து இச்சாதனையைப் புரிந்துள்ளன இந்த எறும்பு நகரத்தில், பொதுச்சாலைகள், கிளை நடைபாதைகள், பூங்காக்கள் உள்பட ஒரு நகரத்திற்கு வேண்டிய எல்லா கட்டமைப்புகளும் உள்ளன.

இதுதான் உலகிலேயே எறும்புகளின் பெரும்கூட்டம் வசிக்கும் இடமாக இருக்கும் எனக் கருதப்படுகிறது. காற்று வாங்குவதற்காகக் கால்வாய் போன்று எறும்புகள் தயாரித்துள்ள இடைவெளிகளில் 10 டன் வெள்ளை சிமிண்டை முதலில் நிபுணர்கள் கொட்டினார்கள். இதனால் அக்கால்வாய்கள் வலுவாகவும் உறுதியாகவும் மாறக்கூடும். பூமியின் மேற்பரப்பிற்குக் கீழே 8 மீட்டர் ஆழத்தில் 46.5 ச.மீட்டர் பரப்பை நிரப்புவதற்காக சிமிண்ட் கொட்டும் பணிக்கே 10 நாட்கள் பிடித்தது.

ஒரு மாதத்திற்குப்பின், பேராசிரியர் லூயிஸ் ஃபோர்ஜி தலைமையிலான ஆராய்ச்சியாளர்கள் குழு பூமியை அகழும் பணியைத் தொடங்கியது. அப்போதுதான் எறும்புகளின் இந்தப் பிரமாண்டமான நகரத்தைக் கண்டுபிடித்து, சீனப் பெருஞ்சுவர் போன்ற உலக அற்புதம் இது என்று வர்ணித்தனர். கட்டமைப்புகளை உருவாக்குவதில் வியத்தகு ஆற்றல் பெற்றது எறும்புக் கூட்டம்.

ஒவ்வோர் எறும்புக்கும், தன் எடையைப்போல் 50 மடங்கு எடையைச் சுமக்கும் ஆற்றல் உண்டு. அதைத் தூக்கிக்கொண்டு பல பத்து கி.மீ. தூரம் நடக்கவும் அதற்கு முடியும். இதைத் தொடர்ச்சியாகத் திரும்பத் திரும்பச் செய்யும் திறன் படைத்தது. இந்த அடிப்படையில்தான், இந்தச் சுரங்கத்தைக் கட்ட சுமார் 40 டன் மண்ணை ஒரு பெரிய எறும்புக் கூட்டம் தோண்டி எடுத்துள்ளது.
இதன்மூலம் எறும்புகள் புதிய காற்றைச் சுவாசிக்கவும் சுருக்க வழியில் பயணிக்கவும் வழி பிறந்தது. இந்த எறும்பு நகரத்தில், அறைகளை இணைக்கும் முதன்மைச் சாலைகள் உண்டு. புற்றுகளுக்குச் செல்லும் குறுக்குச் சாலைகளும் உண்டு. அங்கு சிறு தானியங்களையும் சேமித்த உணவுகளையும் எறும்புகள் பாதுகாக்கின்றன. அவ்வாறே, எறும்புகள் கொண்டுவந்து சேர்த்த பச்சைப் புற்களைக் கொண்டு அமைக்கப்பட்டுள்ள தோட்டங்களும் உண்டு. இவை எறும்புகளின் முட்டைப் புழுக்களை (Larva) காப்பதில் பெரும் பங்கு வகிக்கின்றன.
இப்போது சொல்லுங்கள்! அந்த வசனத்தில் எறும்பு ஓடை, அல்லது பள்ளத்தாக்கு (வாதிந் நம்ல்) என்று அல்லாஹ் குறிப்பிட்டிருப்பது எவ்வளவு பொருத்தம்! எவ்வளவு பெரிய ஆராய்ச்சி! எத்துணை பெரும் உண்மை! சுப்ஹானல்லாஹு!

Ref : வலைதளம் மற்றும் அஹ்மத் கான் பாக்கவி பதிவிலிருந்தும்

ரஹ்மத் ராஜகுமாரன்

Mayday Mayday Mayday ( மே டே ...மே டே ..மே டே... )

அறிவியலிலிருந்து ஆன்மிகம் வரை 19







விமானம் பறந்துகொண்டிருக்கும்போது, அதிலிருப்பவர்களுக்கு ஏதும் பெரிய ஆபத்து நேர்ந்தால், தரையிலிருக்கும் கண்ட்ரோல் ரூமுக்கு தாங்கள் ஆபத்திலிருக்கிறோம் என்று தெரிவிக்க விமானிகள் "Mayday" என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றனர்.
அதென்ன "Mayday" ?

1923ஆம் ஆண்டு லண்டன் விமானநிலையத்தில் பணியாற்றிய Frederick Stanley Mockford என்பவரை அவசர காலத்தில் விமானிகள் உபயோகிக்க வார்த்தை ஒன்று சொல்லுங்கள் என்று கேட்டனர் அதிகாரிகள்.
"Help" என்ற வார்த்தை மிகச்சாதாரணமாக எல்லோராலும் உபயோகிக்கப்படுவதால், ஆபத்துக்காலங்களில் அந்தச் சொல்லைப் பயன்படுத்தும்போது வித்தியாசம் ஏதும் தெரியாது.

1923களில் லண்டனுக்கும் பாரிசுக்கும் இடையில் அதிக விமானங்கள் பறந்ததால் , கண்ட்ரோல் ரூமில் இருப்பவர்கள் பிரெஞ்சு மொழி பேசும் விமானிகளுடன் அதிகம் உரையாட வேண்டியிருந்தது. இதயெல்லாம் யோசித்த அந்த அதிகாரி, **"Help Me"** என்று பொருள் தரக்கூடிய "m'aider" என்ற பிரெஞ்ச் வார்த்தையின் சாயலில் "Mayday" வார்த்தையை சஜஸ்ட்டினார். அப்படி உருவானது தான் இந்த **Mayday.**

விமானங்கள் மட்டுமல்ல, கப்பல்களிலும் இதே வார்த்தைதான் உபயோகப்படுத்தப்படுகிறது.
அமெரிக்காவில் தேவையில்லாத நேரத்தில் Mayday அழைப்பு விடுத்தால், விமானிக்கு 6 வருட சிறையும், 250,000 டாலர்கள் அபராதமும் விதிக்கப்படும். செப்டம்பர் 11 விமானத் தாக்குதலின் போது ஒரே ஒரு விமானத்திலிருந்து மட்டும் இந்த Mayday அழைப்பு வந்தது. சமீபத்தில் காணாமல் போன மலேசிய விமானத்திலிருந்து இந்த **Mayday** அழைப்பு கடைசி வரை வரவில்லை.

وَاِذَا مَسَّكُمُ الضُّرُّ فِى الْبَحْرِ ضَلَّ مَنْ تَدْعُوْنَ اِلَّاۤ اِيَّاهُ‌ۚ فَلَمَّا نَجّٰىكُمْ اِلَى الْبَرِّ اَعْرَضْتُمْ‌ؕ وَكَانَ الْاِنْسَانُ كَفُوْرًا
இன்னும், கடலில் உங்களை ஏதேனும் தங்கடம் (துன்பம்) தீண்டினால், அவனையன்றி நீங்கள் (தெய்வங்கள் என) எவற்றை அழைத்துக் கொண்டிருந்தீர்களோ, அவையாவும் மறைந்து விடும்; எனினும் (அல்லாஹ்) உங்களை ஈடேற்றிக் கரையளவில் கொண்டு வந்து சேர்க்கும் பொழுது நீங்கள் (அவனைப்) புறக்கணித்து விடுகிறீர்கள் - இன்னும், மனிதன் மகா நன்றி மறப்பவனாகவே இருக்கின்றான்.
(அல்குர்ஆன் : 17:67)

اَفَاَمِنْتُمْ اَنْ يَّخْسِفَ بِكُمْ جَانِبَ الْبَرِّ اَوْ يُرْسِلَ عَلَيْكُمْ حَاصِبًا ثُمَّ لَا تَجِدُوْا لَـكُمْ وَكِيْلًا ۙ
(கரை சேர்ந்த) பின் அவன் உங்களை பூமியின் ஒரு புறத்தில் புதையும்படி செய்து விட மாட்டான் என்றோ, அல்லது உங்கள் மீது கல்மாரியை அனுப்பமாட்டான் என்றோ அச்சந் தீர்ந்து இருக்கிறீர்களா? பின்னர் நீங்கள் உங்களைப் பாதுகாப்போர் எவரையும் காண மாட்டீர்கள்.
(அல்குர்ஆன் : 17:68)

اَمْ اَمِنْتُمْ اَنْ يُّعِيْدَكُمْ فِيْهِ تَارَةً اُخْرٰى فَيُرْسِلَ عَلَيْكُمْ قَاصِفًا مِّنَ الرِّيْحِ فَيُغْرِقَكُمْ بِمَا كَفَرْتُمْ‌ۙ ثُمَّ لَا تَجِدُوْا لَـكُمْ عَلَيْنَا بِهٖ تَبِيْعًا
அல்லது, அவன் மீண்டும் ஒரு தடவை அக்கடலில் உங்களை மீளச் செய்து, (எல்லாவற்றையும்) முறித்துத் தள்ளும் புயல் காற்றை உங்கள் மீதனுப்பி, நீங்கள் நிராகரித்ததற்காக உங்களை மூழ்கடித்து விடமாட்டான் என்றும் நீங்கள் அச்சந்தீர்ந்து இருக்கிறீர்களா? (அப்படி நேர்ந்தால் ஏன் இவ்விஷயத்தை அவ்வாறு செய்தோம் ஏன் இவ்விஷயத்தை அவ்வாறு செய்தோம் என) நம்மைத் தொடர்ந்து உங்களுக்காக(க் கேட்போர்) எவரையும் காணமாட்டீர்கள்.
(அல்குர்ஆன் : 17:69)

இயற்கையின் பேரிடர் மற்றும் ஆபத்து காலங்களில் விமானங்களிலோ, கப்பல்களிலோ உதவி கோரி மேடே , மேடே என்று கத்துவதை **"Help Me"** என்று பொருள் தரக்கூடிய **"m'aider"** என்ற பிரெஞ்ச் வார்த்தையின் சாயலில் "Mayday" என்று கத்துவதை பழக்கிக் கொடுத்தவர்கள் " **0h..my God ....!** " என்று இறைவனை அழைப்பதை ஏனோ கற்றுக் கொடுக்க மறுக்குகிறார்கள் .

இதைத்தான் குர்ஆனில் அல்லாஹ் "இன்னும், கடலில் உங்களை ஏதேனும் தங்கடம் (துன்பம்) தீண்டினால், அவனையன்றி நீங்கள் (தெய்வங்கள் என) எவற்றை அழைத்துக் கொண்டிருந்தீர்களோ, அவையாவும் மறைந்து விடும்; எனினும் (அல்லாஹ்) உங்களை ஈடேற்றிக் கரையளவில் கொண்டு வந்து சேர்க்கும் பொழுது நீங்கள் (அவனைப்) புறக்கணித்து விடுகிறீர்கள் - இன்னும், மனிதன் மகா நன்றி மறப்பவனாகவே இருக்கின்றான்.
ரஹ்மத் ராஜகுமாரன்.

அமில ஆறும் / இரத்த ஆறும்

அறிவியலிலிருந்து ஆன்மிகம் வரை 20






ரியோ டிண்டோ(**Rio Tinto)** ஒரு அமில நதி. ஸ்பெயின் நாட்டிலிருக்கும் **Andalusia** மலைத்தொடரில் உருவாகும் இந்த நதியின் நீர் ரத்தச் சிவப்பில்(மொத்தமும் விஷமாய்) இருக்கிறது.

ஸ்பெயின் தென்மேற்குப் பகுதியில் பாய்கிறது இந்த ரியோ டிண்டோ நதி. சுமார் 100 கிலோ மீட்டர் நீளம் பாய்ந்து செல்லும் இந்த நதி செவ்வாய் கிரகத்தின் நிலப்பரப்பைப் போல் இருக்கிறது என்கின்றனர் விஞ்ஞானிகள்.

காரணம், பல நூற்றாண்டுகளாக இங்கு நடந்த, நடைபெற்றுக்கொண்டிருக்கும் சுரங்கத்தொழில். கி.மு 3000 ல் தொடங்கி இந்த ஆற்றோரம் **தாமிரம், வெள்ளி, தங்கம்** என பல உலோகங்களுக்காக சுரங்கங்கள் இன்னும் தோண்டப்பட்டு வருகின்றன.

நடுவில் கொஞ்சகாலம் யாராலும் கண்டுகொள்ளப்படாமலிருந்த சுரங்கங்கள், 1556ஆம் ஆண்டு மீண்டும் கண்டுபிடிக்கப்பட்டு ஸ்பெயின் அரசாங்கத்தின் கருணைப்பார்வையில்(!) வந்து விழுந்தது.

1724ஆம் ஆண்டு முதல் ஆற்றோரங்களில் மீண்டும் தொடங்கியது உலோக வேட்டை. சுரங்கங்களிலிருந்து வெளியேற்றப்படும் தேவையில்லாத கழிவுப்பொருட்கள் ஆற்றில் கலந்ததால், ஆற்று நீர் விஷமாக மாறியது. அவற்றிலிருந்த அளவுக்கதிகமான இரும்புதான் தண்ணீரின் ரத்தச் சிவப்பு நிறத்துக்கான காரணம்.
ஆரம்பத்தில் இந்நதி நன்னீர் ஓடும் நதியாகத்தான் இருந்திருக்கிறது . மனிதனின் தீராத பேராசையால்தான் இது அமிலம் கலந்த இரத்த நதியாக மாற்றப்பட்டிருக்கிறது.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

'இன்றிரவு (கனவில்) இரண்டு மனிதர்களைக் கண்டேன். அவர்கள் என்னிடம் வந்து தூய்மையான ஒரு நிலப்பகுதிக்கு என்னை அழைத்துச் சென்றனர்.
நாங்கள் நடந்து வந்தபோது, இரத்த ஆறு ஒன்றை அடைந்தோம்.
ஆற்றில் ஒருவர் நின்றிருந்தார். ஆற்றின் நடுவில் இன்னொருவர் தமக்கு முன்னே கற்களை வைத்து நின்றிருந்தார்.
ஆற்றிலே உள்ளவர் வெளியேற முனையும்போது, அவர் வாயில் (ஆற்றின் நடுவில்) நின்றிருந்தவர் கல்லை எறிந்து அவர் முன்பு நின்ற இடத்திலேயே அவரைக் கொண்டுபோய் நிறுத்தினார். அவர் வெளியேற வரும் போதெல்லாம் இவர் அவரின் வாயில் கல்லை எறிய, அதனால் அவர் முன்பிருந்த இடத்திற்கே திரும்பிச் சென்று கொண்டிருந்தார்!
'அவர் யார்?' என்று (என்னை அழைத்துச் சென்றவர்களிடம்) கேட்டேன்.
அதற்கவர்கள் 'ஆற்றில் நீர் பார்த்தவர் வட்டி உண்பவராவார்!' எனக் கூறினார்கள்.' என ஸமுரா(ரலி) அறிவித்தார்.
ஸஹீஹ் புகாரி : 2085.

மனிதன் செய்த பெரும் பாவத்தில் ஒன்று வட்டி .இந்த வட்டி பாவத்தின் காரணமாக இரத்தம் பெருக்கெடுத்து ஓடும் நதியை நபிகளார்கள் கண்டார்கள் .
மனிதனின் பேராசையால் ஓர் அமில நதியும் , மனிதன் பாவத்தால் ஓர் இரத்த நதியும் உருவாகி இருக்கின்றன.

ரஹ்மத் ராஜகுமாரன்.
இத்துடன் "அறிவியலிலிருந்து ஆன்மிகம் வரை " தொடர் பதிவு நிறைவு பெறுகிறது

## வாய் இல்லாத உலகம்.


பஞ்ச தந்திரம் என்பது சமஸ்கிருத மொழியில் எழுதப்பட்ட கதைச் செய்யுள்களின் தொகுப்பாகும். இது விஷ்ணு சர்மா என்பவரால் கி.மு 200-ல் எழுதப்பட்டதாகச் சொல்லப்படுகிறது.

பஞ்ச தந்திரக் கதைகள் பொழுது போக்குக் கதைகள் போலத் தோன்றினும் அரசியற் சூழ்ச்சி பற்றிய மூலக் கொள்கைகளைத் தெளிவுபடுத்தும் கதைகளாகவே இருக்கின்றன. அதுவும் தேர்தல் களத்தின் சதுரங்க ஆட்டம் ஆங்காங்க மொத்த பாரதத்தையும் இப்போது சூடுப்படுத்திக் கொண்டிருக்கும் இக்காலச் சூழலை மனதிற்கொண்டு இத்தொடரை ஆரம்பிக்கிறேன்.

எனக்கு அரசியல் எழுத வராது , ஆனாலும் தினம் தினம் தினசரி படிக்கும் எனக்கு ஒவ்வொரு அரசியல் நிகழ்வுகளின் அடித்தள சூட்சமம் ஓரளவு தெரியும் என்ற நம்பிக்கையில் இத்தொடரை உங்களுக்கு அறிமுகப்படுத்துகிறேன்.
இந்த பஞ்சதந்திர கதைகள் ஒவ்வொன்றும் அரசியற் சூழ்ச்சியின் ஏதாவது ஒரு விளக்கத்தை அளிப்பதாகவே இருக்கிறது. இதில் அரசநீதியின் மையக்கருத்துக்களை பறவைகள் , விலங்குக் கதைகளின் மூலம் ஐந்து முதன்மையான கருத்துக்களைச் சொல்லியுள்ளன. அவையாவன:

**1) நட்பு பிரித்தல்**
**2) நட்பு உண்டாக்குதல்**
**3) அடுத்துக் கெடுத்தல்**
**4) பெற்றதை இழக்கச் செய்தல்**
**5) ஆராயாத செயல்தவிர்த்தல்**

"இதெல்லாம் அரசியலில் சகஜமப்பா !" என்று நீங்கள் கூறுவது எனக்குக் கேட்கிறது . ஆனால் இதை விஷ்ணு சர்மா என்பவர் கி.மு 200-ல் சிந்தித்து எழுதியதைத்தான் என்னால் வியக்காமல் இருக்க முடியவில்லை .
இக்கதைகளின் மூலம் சொல்லப்படும் நீதிகளை குர்ஆன் கூறும் அறிவுறுத்தலுடன் சொல்ல விழைகிறேன் .
பறவைகள் , விலங்குகள் போன்ற வாய் இல்லாத ஜீவன்கள் வாய் கொண்டு பேசி இருப்பதை குர்ஆனும் பதிவு செய்திருக்கிறது.

حَتّٰٓى اِذَآ اَتَوْا عَلٰى وَادِ النَّمْلِۙ قَالَتْ نَمْلَةٌ يّٰۤاَيُّهَا النَّمْلُ ادْخُلُوْا مَسٰكِنَكُمْ لَا يَحْطِمَنَّكُمْ سُلَيْمٰنُ وَجُنُوْدُهٗ ۙ وَهُمْ لَا يَشْعُرُوْنَ
அவை எறும்புகள் வசிக்கும் ஓர் ஓடையின் சமீபமாக வந்தபொழுது அதிலொரு பெண் எறும்பு (மற்ற எறும்புகளை நோக்கி) "எறும்புகளே! நீங்கள் உங்கள் வீடுகளுக்குள் நுழைந்து கொள்ளுங்கள். ஸுலைமானும் அவருடைய ராணுவமும் (நீங்கள் இருப்பதை) அறியாது உங்களை(த் தங்கள் கால்களால்) மிதித்துவிட வேண்டாம்" என்று கூறியது.
(அல்குர்ஆன் : 27:18)

وَوَرِثَ سُلَيْمٰنُ دَاوٗدَ وَقَالَ يٰۤاَيُّهَا النَّاسُ عُلِّمْنَا مَنْطِقَ الطَّيْرِ وَاُوْتِيْنَا مِنْ كُلِّ شَىْءٍ ؕ اِنَّ هٰذَا لَهُوَ الْفَضْلُ الْمُبِيْنُ
பின்னர் தாவூதுக்கு ஸுலைமான் வாரிசானார். (ஸுலைமான் மனிதர்களை நோக்கி) "மனிதர்களே! எங்களுக்குப் பறவைகளின் மொழி கற்பிக்கப்பட்டிருக்கிறது. எங்களுக்கு (வேண்டிய) எல்லா பொருள்களும் (ஏராளமாகவே) கொடுக்கப்பட்டிருக்கின்றன. நிச்சயமாக இது (இறைவனின்) மிக்க தெளிவானதொரு அருளாகும்" என்று கூறி(யும் நன்றி செலுத்தி)னார். (அல்குர்ஆன் : 27:16)

فَمَكَثَ غَيْرَ بَعِيْدٍ فَقَالَ اَحَطْتُّ بِمَا لَمْ تُحِطْ بِهٖ وَ جِئْتُكَ مِنْ سَبَاٍ ۢ بِنَبَاٍ يَّقِيْنٍ
(இவ்வாறு கூறி) அதிக நேரமாகவில்லை. (அதற்குள் ஹுத்ஹுத் என்னும் பறவை அவர் முன் தோன்றி) "நீங்கள் அறியாத ஒரு விஷயத்தை நான் அறிந்துகொண்டு "ஸபா"வைப் பற்றி நிச்சயமான (உண்மைச்) செய்தியைக் கொண்டு வந்திருக்கிறேன். (அல்குர்ஆன் : 27:22)

இக்குர்ஆன் நிகழ்வுகள் கூட அரசியல் பின்னணி கொண்டதாகத்தான் குர்ஆன் கூறுகிறது . வாய் இல்லாத ஜீவன்கள் வாய் கொண்டு பேசுவதெல்லாம் அரசியல்தானோ ? ...என்று கூட எண்ணத் தோன்றுகிறது .எனவே இத் தொடருக்கு " வாய் இல்லாத உலகம் " என்ற தலைப்பில் அரசியல் பஞ்ச தந்திரங்களை இன்ஷா அல்லாஹ் சொல்ல வருகிறேன் .

ரஹ்மத் ராஜகுமாரன்

சிலந்தியிடம் பாடம் கற்ற அரசன்

வாய் இல்லாத உலகம் 2




போரில் தோல்வி அடைந்த அரசன் தன் உயிரைக் காப்பாற்றிக்கொள்ள ஓடி ஒளிந்தான். அரசன் மிகவும் வீரத்துடன் போரிட்டாலும் அவனின் படை மிகவும் சிறியதாக இருந்ததினால்
அவனால் வெல்ல முடியவில்லை. எதிரியிடம் மாபெரும் படை இருந்ததினால் வெற்றி பெற்றன்.
தோல்வியுற்ற அரசனை கொலை செய்யுமாறு அவனை
வென்ற அரசன் கட்டளை பிறப்பித்தான். அதனால் அவன்
காட்டிற்கு ஓடிச் சென்றுஅங்கு இருந்த ஒரு குகையில் ஒளிந்து
கொண்டான்.

தோல்வி கண்ட அரசன் மிகவும் மனவருத்தம் கொண்டான்.
மனச்சோர்வினால் துணிவு இழந்தான். ஒருநாள் சோம்பலுடன் அரசன் குகையில் படுத்திருந்தான். அந்தக் குகையினுள் ஒரு சிலந்தி வாழ்ந்து வந்தது.

அந்த சிறிய சிலந்தியின் செயல் அவன் கவனத்தைக்
கவர்ந்தது. குகையின் ஒரு பகுதியினுள் ஒரு வலையைப்
பின்னக் கடுமையாக முயற்சி செய்து கொண்டிருந்தது.
சுவரின் மீது ஊர்ந்து செல்லும் போது வலையினில் பின்னிய நூல் அறுந்து சிலந்தி கீழே விழுந்து விட்டது.
இவ்வாறு பலமுறை நடந்தது. ஆனாலும், அது தன்
முயற்சியைக் கடைவிடாமல் மறுபடியும் மறுபடியும் முயன்றது. கடைசியில் வெற்றிகரமாக வலையைப் பின்னி முடித்தது.

அரசன் "இச் சிறு சிலந்தியே பல முறை தோல்வியடைந்தும்
தன் முயற்சியைக் கைவிடவில்லை. நான் ஏன் விடவேண்டும்?
நானோ அரசன். நான் மறுபடியும் முயற்சி செய்ய வேண்டும்"
என்று எண்ணினான் மறுபடியம் தன் எதிரியுடன் போர் புரிய
தீர்மானித்தான். அரசன் தான் வசித்த காட்டிற்கு வெளியே
சென்று தன் நம்பிக்கையான ஆட்களைச் சந்தித்தான்.
தன் நாட்டில் உள்ள வீரர்களை ஒன்று சேர்த்து பலம் மிகுந்த
ஒரு படையை உருவாக்கினான். தன் எதிரிகளுடன் தீவிரமாகப்போர் புரிந்தான். கடைசியில் போரில் வெற்றியும் பெற்றான்.

அதனால் தன் அரசைத் திரும்பப் பெற்றான். தனக்கு அறிவுரைபோதித்த அந்த சிலந்தியை அவன் என்றுமே மறக்கவில்லை.
இன்பங்களும் துன்பங்களும் இரண்டறக்கலந்த கலவைதான் இவ்வுலக வாழ்க்கை. இவ்வாழ்க்கையில் பருவ மாற்றங்களைப்போல இடையிடையே எட்டிப்பார்க்கின்ற எதிர்ப்புகள், பிரச்சனைகள் மற்றும் பின்னடைவுகளை

எதிர்கொள்ள இயலாமல் மக்களில் பலர், தங்களுடைய இலட்சிய இலக்கை விட்டும் பாதியிலேயே புறமுதுகிட்டு ஓடிவிடுகின்றார்கள்.

அரிதாக சிலர் பல்வேறான மாற்று முயற்சிகள், கடும் உழைப்புகள் மூலம் துயரங்கள் தூக்கிப் போடுகின்ற முட்டுக்கட்டைகளை உடைத்தெறிந்துவிட்டு, தங்களது இலட்சிய எல்லையை திட்டமிட்டபடி எட்டிப் பிடிப்பதைப் பார்க்கின்றோம். இத்தகையவர்கள் அனைத்து துறைகளிலும் இருக்கின்றார்கள்.

உதாரணமாக அறிவியல் அறிஞர்கள், ஆய்வுகளில் ஈடுபடுகின்றபோது தங்களைத் தோல்விகள் தாக்கினாலும் தளர்ந்துவிடாமல் முயற்சித்ததால்தான், இன்று நாம் நவீன கருவிகளால் அலங்கரிகப்பட்ட நவீன வாழ்க்கையை அனுபவித்துக் கொண்டிருக்கின்றோம்.

உத்திரப் பிரதேச அருணிமா சின்ஹா என்ற வாலிபால் வீராங்கனையான இவர் ரெயில் கொள்ளையர்களால் தாக்கப்பட்டு இரயிலிலிருந்து தூக்கி எறியப்பட்டார் . இதனால் இடது காலை இழந்தார்.2013-மே 21 ல் செயற்கை காலுடன் எவரெஸ்ட் சிகரம் ஏறி சாதனைப் படைத்தார் .

சிறு வயதினிலேயே நடனத்தின் மீது தீராத ஆர்வம் கொண்ட சுதா சந்திரன் 1981-ல் ஒரு விபத்தில் காலை இழந்தார் . செயற்கை காலுடன் நடனமாடி 1984-ல் மயூரி என்ற திரைப்படத்தில் நடன நடிகையாக நடித்து சாதனைப் படைத்தார் .
இதனாலேயே முயற்சித் திருவினையாக்கும்... என்ற பழமொழி சமுதாய வழக்கில் இன்றளவும் இருந்து கொண்டிருக்கின்றது. சுருங்கச் சொன்னால், இவ்வுலக வாழ்க்கையிலே ஆசைப்படுகின்றவற்றை அடைவதற்கேற்ப நம்மிடத்தில் ஆர்வமும், விடாமுயற்சியும் அவசியமாக இருக்க வேண்டும்.
அப்போதுதான் நம்முடைய சுயதேவைகளையும், நமக்குக் கொடுக்கப்பட்ட கடமைகளையும் கூட நம்மால் சிறப்பாக நிறை வேற்றிக் கொள்ள முடியும்.
இதை பின்வரும் வசனங்களில் நமக்கு அல்லாஹ் தெளிவுபடுத்துகிறான்.

اِنَّ سَعْيَكُمْ لَشَتّٰىؕ
உங்கள் முயற்சி பலதரப்பட்டதாக உள்ளது.
(அல்குர்ஆன் 92 : 4)

ரஹ்மத் ராஜகுமாரன்

ஆப்பு பிடுங்கிய குரங்கு

வாய் இல்லாத உலகம் 3



பழைய ஊர் ஒன்றில் ஒரு கோயில் இருந்தது. கோயில் திருப்பணிக்காக மரங்களை அறுத்துக் கொண்டு வந்து போட்டிருந்தார்கள். அந்த மரங்களின் ஒன்றை இரண்டாக அறுத்துக் கொண்டிருந்த தச்சன், பாதி அறுத்தபின் அறுத்த பிளவிலே ஆப்புவைத்துவிட்டு, மீதியை அறுக்காமல் சென்று விட்டான்.
கோயிலையடுத்திருந்த மாதுளை மரச் சோலையில் பல குரங்குகள் இருந்தன. அந்தக் குரங்குகளில் சில, தாவி விளையாடிக் கொண்டே மரம் அறுத்துக் கிடந்த இடத்திற்கு வந்து சேர்ந்தன.

அவற்றில் ஒரு குரங்கு பாதி பிளந்து கிடந்த மரத்தின் மேல் வந்து உட்கார்ந்தது. அது சும்மாயிருக்காமல், அந்த மரப்பிளவில் வைத்திருந்த ஆப்பை
அசைத்து அசைத்துப் பிடுங்கியது. ஆப்பைப் பிடுங்கியவுடன், பிளந்திருந்த மரத்தின் இரு பகுதிகளும் நெருங்கின. அவற்றிற் கிடையிலே மாட்டிக் கொண்ட அந்தக் குரங்கு உடல் நசுங்கி உயிர் விட்டது.

ஆகையால் தனக்குத் தொடர்பில்லாத ஒரு காரியத்தில் தலையிடக்கூடாது. தனக்கு தேவையில்லாத பிரச்சனைகளில் மூக்கை நுழைக்கக்கூடாது.

இறைநம்பிக்கையின் ஒரு பகுதி வீண் பேச்சுக்களை தவிர்ந்திருப்பதாக உள்ளதால் இறைநம்பிக்கையாளர்கள் ஒன்று பேசினால் நல்லதை பேசட்டும். இல்லையென்றால் வாய்மூடி இருந்து கொள்ளட்டும். கண்டதை பேசி வம்பில் மாட்டிக் கொள்ள வேண்டாம் என்பது நபிமொழியாகும்.

'இறைவனையும், மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டவர் (ஒன்று) நல்லதைப் பேசட்டும். அல்லது வாய்மூடி இருக்கட்டும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்'. (அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலி), புகாரி)
வீணானவற்றை பேசுவதிலிருந்து தவிர்ந்திருப்பது இறைநம்பிக்கைக்கு பாதுகாப்பு அரணாக அமையும்.
'கெட்டவார்த்தையும், அதிகமான பேச்சும் நயவஞ்சகத்தின் ஒரு பகுதியாக உள்ளது என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்'. (அறிவிப்பாளர்: அபூஉமாமா (ரலி) நூல்: திர்மிதி)

கேலி செய்யாதே, குறை கூறாதே, பட்டப்பெயர்களால் குத்திக் காட்டாதே, துருவித்துருவி ஆராயாதே, புறம் பேசாதே. இவை யாவும் வீண் பேச்சுக்களே. இவற்றை தவிர்ந்திடுவீர் என்று திருக்குர்ஆன் இவ்வாறு சுட்டிக்காட்டுகிறது:

'நம்பிக்கை கொண்டோரே, ஒரு சமுதாயம் இன்னொரு சமுதாயத்தைக் கேலி செய்ய வேண்டாம். இவர்களை விட அவர்கள் சிறந்தோராக இருக்கக்கூடும். எந்தப் பெண்களும் வேறு பெண்களைக் கேலி செய்ய வேண்டாம். இவர்களை விட அவர்கள் சிறந்தோராக இருக்கக்கூடும். உங்களுக்குள் நீங்கள் குறைகூற வேண்டாம். பட்டப் பெயர்களால் குத்திக்காட்ட வேண்டாம். நம்பிக்கை கொண்ட பின் பாவமான பெயர் (சூட்டுவது) கெட்டது. திருந்திக் கொள்ளாதவர்கள் அநீதி இழைத்தவர்கள்'.

நம்பிக்கை கொண்டோரே, ஊகங்களில் அதிகமானதை விட்டு விலகிக்கொள்ளுங்கள். சில ஊகங்கள் பாவமாகும். துருவித்துருவி ஆராயாதீர்கள். உங்களில் ஒருவர் மற்றவரைப் புறம் பேசாதீர்கள். உங்களில் எவரேனும் இறந்த தமது சகோதரனின் மாமிசத்தைச் சாப்பிட விரும்புவாரா?, அதை வெறுப்பீர்கள். இறைவனை அஞ்சுங்கள். இறைவன் மன்னிப்பை ஏற்பவன்; நிகரற்ற அன்புடையோன்'. (திருக்குர்ஆன் 49:11,12)

தேவையில்லாத பிரச்சனையில் தலையிட்டு ,ஆப்பு பிடுங்கிய குரங்கு மாதிரி மாட்டிக் கொள்ளாதீர்கள் .
ரஹ்மத் ராஜகுமாரன் .

## சாட்சி சொன்ன மரம்

வாய் இல்லாத உலகம் 4



ஒரு பட்டணத்தில் இரண்டு வணிகப் பிள்ளைகள் இருந்தார்கள். ஒருவன் பெயர் நல்ல புத்தி. இன்னொருவன் பெயர் கெட்டபுத்தி. இரண்டு பேரும் பணம் சேர்ப்பதற்காக வெளியூருக்குச் சென்றார்கள். அங்கே நல்லபுத்திக்கு ஆயிரம் பொன் கிடைத்தது, கெட்டபுத்திக்கு எதுவும் கிடைக்க வில்லை.

நல்ல நோக்கமுடைய நல்லபுத்தி, கெட்டபுத்தியைப் பார்த்து, 'கவலைப்படாதே, நாம் இருவரும் ஆளுக்கு ஐநூறு பொன்னாகப் பங்கிட்டுக் கொள்ளலாம்' என்று கூறினான்.

'சரியென்று ஒப்புக் கொண்ட கெட்டபுத்தி, 'நாம் உடனே இவ்வளவு பணத்தையும் ஊருக்கு எடுத்துச் சென்றால் கெடுதல் உண்டாகும். இங்கேயே ஒரு மரத்தின் கீழ்ப் புதைத்து வைப்போம். மற்றொரு நாள் வந்து எடுத்துக் கொண்டு போவோம்' என்றான்.

இது பொருத்தமாகத் தோன்றவே, நல்லபுத்தி ஒப்புக் கொண்டான். உடனே அங்கொரு மரத்தடியில் பள்ளம் தோண்டிப் பணத்தைப் புதைத்து ஓர் அடையாளம் வைத்துவிட்டு இருவரும் ஊருக்குள் சென்றார்கள்.
கெட்டபுத்தி அன்று இரவே திரும்பி வந்து ஆயிரம் பொன்னையும் அடித்துக் கொண்டு போய் விட்டான்.

சில நாள் கழித்து இருவரும் அந்த மரத்தடிக்கு வந்து பார்த்தார்கள். பணம் காணவில்லை. உடனே, கெட்டபுத்தி முந்திக் கொண்டு நல்லபுத்தியைப் பார்த்து, 'நண்பா இப்படி மோசம் செய்யலாமா?' என்று கேட்டான்,
'நீதான் எடுத்துக் கொண்டு என்னை ஏமாற்று கிறாய்!' என்றான் நல்லபுத்தி.
இருவருக்கும் சண்டை வந்து விட்டது. கடைசியில் வழக்கு மன்றத்திற்குப் போனார்கள். ஊர் வழக்காளர் அவர்களுடைய வழக்கை விசாரித்தார். பிறகு, 'ஏதாவது சாட்சி உண்டா?' என்று கேட்டார். 'எங்கள் இருவரையும் தவிர அந்த இடத்தில் வேறுயாரும் சாட்சியில்லை' என்றான் நல்லபுத்தி.

'அந்த மரமே இதற்குச் சாட்சி சொல்லும்' என்றான் கெட்டபுத்தி.
'உண்மைதானா? காலையில் வாருங்கள் அந்த மரத்தையே கேட்போம்' என்று சொல்லி வழக்காளர் போய்விட்டார்.
வீட்டுக்கு வந்த கெட்டபுத்தி தன் தந்தையை அழைத்து மரப்பொந்தில் போய் ஒளிந்து கொண்டு, மரம் சாட்சி சொல்வது போல் பேசச் சொன்னான்.
தந்தை அறிவுரை கூறினார் . ஆனால், கெட்டபுத்தி அவர் பேச்சைக் கேட்கவில்லை. அவரை வலுவாக இழுத்துச் சென்று அந்த மரப் பொந்தில் ஒளிந்து. கொள்ளும்படி வற்புறுத்தினான்.
பொழுது விடிந்தது. ஊர் வழக்கர் தன் ஆட்களோடு நல்லபுத்தியையும் கெட்டபுத்தியையும் அழைத்துக் கொண்டு வந்து மரத்தைச் சாட்சி சொல்லும்படி கேட்டார்.
மரம் பேசியது : 'நல்லபுத்திதான் பணத்தை எடுத்தான்!' என்று அழுத்தந்திருத்தமாகக் கூறியது.
'ஆ! என்ன புதுமை! மரம் சாட்சி சொல்லுகிறதே!" என்று ஊர் வழக்காளர் ஆச்சரியப்பட்டார்.
'இது சூது!' என்று தெரிந்து கொண்ட நல்ல புத்தி, மரத்தில் ஏறி அந்தப் பொந்தில் நெருப்பை மூட்டினான்.
நெருப்பின் சூடு தாங்காமல், கெட்டபுத்தியின் தந்தை மரப்பொந்தின் உள்ளிருந்தபடியே' கெட்ட புத்தி, உன்னால் கெட்டேன்!' என்று பதைபதைத்துக் கதறினான். நெருப்பில் வெதும்பி இறந்து போனான்.
இதைக் கண்ட ஊர் வழக்காளர் அரசரிடம் போய் நிகழ்ந்ததைக் கூறினார்.
பொன் முழுவதையும் நல்லபுத்திக்குக் கொடுக்கும்படி சொல்லி, கெட்டபுத்தியை அரசர் சித்திரவதை செய்து கொல்லும்படி உத்தர விட்டார்.
பிறரைக் கெடுக்க நினைப்பவர்கள் தாங்களே கெட்டொழிவார்கள்.
மனைவியின் நகைகளையும் சொத்துக்களையும் விற்று, கடன் வாங்கிக் கொடுத்தப் பணத்தை, வெளிநாட்டிற்கு அனுப்புவதாகக் கூறி வாயில் போட்டுக் கொள்ளும் மோசக்காரர்கள் கொஞ்சம் கூட இறைவனின் பயம் இல்லாமல் தலை நிமிர்ந்து இந்த உலகத்தில் நடக்கிறார்கள்.
வாங்கிய கடனை திருப்பித் தராமல் ஏப்பம் விட்டு விட்டு ஓடி ஒளியும் கல் நெஞ்சக்காரர்களை கணக்கில் அடக்கி விட முடியாது.
நிலத்தை விற்பதாகக் கூறி, பொய்யான பத்திரத்தைக் காட்டி ஏமாற்றும் நெஞ்சில் ஈரமில்லாத ஆசாமிகள் அலைகடலெனத் திரண்டு விட்டார்கள்.
இன்றைக்கு நாம் கண்கூடாகப் பார்க்கும் இந்தக் கயவர்களைப் பற்றி நபி (ஸல்) அவர்கள் அன்றைக்கே எச்சரித்துள்ளார்கள்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நிச்சயமாக உங்களுக்குப் பின் ஒரு சமுதாயத்தார் (வர) இருக்கிறார்கள். அவர்கள் நம்பிக்கை மோசடி செய்வார்கள். அவர்களிடம் எதையும் நம்பி ஒப்படைக்கப்படாது. அவர்கள் சாட்சியாக இருக்கத் தாமாகவே முன் வருவார்கள். ஆனால் சாட்சியம் அளிக்கும் படி அவர்களை யாரும் கேட்க மாட்டார்கள். அவர்கள் நேர்ச்சை செய்வார்கள். ஆனால் அதை நிறைவேற்ற மாட்டார்கள். அவர்களிடையே பருமனாயிருக்கும் (தொந்தி விழும்) நிலை தோன்றும்.
அறிவிப்பவர்: இம்ரான் பின் ஹுசைன் (ரலி) புகாரி (2651)
ரஹ்மத் ராஜகுமாரன்

சிங்கத்தைக் கொன்ற முயல்

வாய் இல்லாத உலகம் 5




ஓர் அடர்ந்த காட்டில் சிங்கம் ஒன்று இருந்நது அது அந்தக் காட்டில் இருந்த மற்ற விலங்குகளை எல்லாம் கண்டபடி வேட்டையாடிக் கொன்று தின்று கொண்டிருந்தது.
இவ்வாறு நாளுக்கு நாள் அதன் வெறிச் செயல் அதிகமாகிக் கொண்டு வந்தது. இதைக் கண்ட மற்ற விலங்குகளெல்லாம் ஒன்றாகக் கூடி அந்தச் சிங்கத்தினிடம் சென்றன.

'சிங்கம், இந்தக் காட்டில் உள்ள விலங்குகளை எல்லாம் கண்டபடி வீணாகக் கொன்று கொண்டிருக்க வேண்டாம். இப்படிச் செய்து கொண்டிருந்தால் விரைவில் இந்தக் காட்டில் விலங்குகளே இல்லாமல் போய்விடும். ஆகையால் நாங்கள் இதற்கு ஓர் ஏற்பாடு செய்கிறோம். நாள் ஒன்றுக்கு ஒரு விலங்கு ஆக உனக்கு இரையாக அனுப்பிக் கொண்டிருக்கிறோம்' என்றன.

சிங்கம் இந்த ஏற்பாட்டுக்கு ஒப்புக் கொண்டது. அதுபோல் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு விலங்காக வந்து சிங்கத்திற்கு இரையாகிக் கொண்டிருந்தன.
ஒரு நாள் ஒரு முயலின் முறை வந்தது.' இனி நாம் பிழைக்க முடியாது. இருந்தாலும் ஒரு முயற்சி செய்து பார்க்கலாம். இதில் நாம் வெற்றி பெற்றால் காட்டு விலங்குகளை எல்லாம் காப்பாற்றிய பெருமை நமக்குச் சேரும். நாமும் சாவினின்று தப்பலாம்' என்று அந்த முயல் ஒரு சிந்தனை செய்தது.
சிங்கத்தின் பசி வேளைக்குச் செல்ல வேண்டிய முறைப்படி செல்லாமல், நெடுநேரம் கழித்துச் சென்றது முயல். வேளை தப்பி வந்த முயலைக் கண்ட சிங்கத்திற்குக் கோபம் வந்து விட்டது.
'ஏ, அற்ப முயலே, பெரிய மதயானை கூட என் பசி வேளைக்குத் தப்பி வந்ததில்லை. நீ ஏன் பிந்தி வந்தாய்?' என்று சீறியது.

'ஐயா, கோபம் கொள்ளாதீர்கள். உங்கள் பசி வேளைக்குச் சரியாக வந்து சேர வேண்டும் என்று சரியான நேரத்தில்தான் புறப்பட்டேன். ஆனால் வழியில் மற்றொரு கொடிய சிங்கத்தைக் கண்டு, எங்கே அதன் கண்ணில் பட்டால் அதற்கு இரையாகி விடுவோமோ என்று பயந்து ஓரிடத்தில் ஒளிந்து கொண்டிருந்தேன். மெல்ல மெல்ல அந்தச் சிங்கம், அங்கிருந்த ஒரு பெரிய குகைக்குள் நுழைந்து சென்றதைக் கண்ட பிறகு, வெளிப்பட்டு வேகமாக உங்களிடம் வந்து சேர்ந்தேன்' என்றது அந்த முயல்.
'என்னைத் தவிர இன்னொரு சிங்கமும் இந்தக் காட்டில் இருக்கிறதா? எங்கே அதைக் காட்டு பார்க்கலாம்! 'என்றது சிங்கம்.

உடனே முயல் சிங்கத்தை அழைத்துக் கொண்டு போய்ப் பக்கத்தில் இருந்த ஒரு பாழுங் கிணற்றைக் காட்டியது. சேறும் நீருமாக இருந்த அந்தக் கிணற்றுக்குள் சிங்கம் எட்டிப் பார்த்தது. தெளிவாகக் கிடந்த அந்தக் கிணற்று நீரில் சிங்கத்தின் நிழல் தெரிந்தது.

முயல் சொல்லிய மற்றொரு சிங்கம் அது தான் என்று எண்ணிய அந்த மூடச் சிங்கம், ஆத்திரங் கொண்டு கிணற்றுக்குள்ளே பாய்ந்தது. கிணற்றுக்குள் இருந்த சேற்றில் சிக்கி அது வெளியில் வர முடியாமல் உயிரிழந்தது. சூழ்ச்சியினால் யாரையும் வெல்லலாம் என்பதற்கு இந்தக் கதை நல்ல எடுத்துக் காட்டாகும்.

கந்தக் - அகழ்ப்போர்
குரைசிகளும் மேலும் ஆறு கோத்திரத்தாரும் சேர்ந்து சுமார் பத்தாயிரம் படையினரும், இரண்டாயிரத்துக்கு மேற்ப்பட்ட ஒட்டகங்களும் ஏராளமான ஆயுதங்களும், குதிரைபடையினரும் ஆரவாரத்துடன் கூட்டுப்படையாக மதினாவை தாக்க புறப்பட்டு சென்றனர்.

இந்த செய்தியை அறிந்த நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸ்ஸலாம் அவர்கள் தமது தோழர்களுடன் போர் தந்திரங்களை பற்றி ஆலோசனை செய்தனர்.

மதினாவை சுற்றிலும் ஓர் அகழியை தோண்டி எதிரிகளின் முன்னேற்றத்தை தடை செய்வது என்ற பாரசீக போர் தந்திரத்தை ஸல்மான் பாரிஸ் ரளியல்லாஹ் அன்ஹு அவர்கள் முன் வைத்தார்கள்.
பெருமானார் அதை வரவேற்று ஒரு வாரம் கடினமாக உழைத்து ஒன்பதாயிரம் அடி நீளமும், குதிரைப் படையினரால் எளிதில் தாண்டமுடியாத அளவுக்கு அகலமும் , ஆழமும், கொண்ட ஒரு பெரிய அகழியை தோண்டினார்கள்.
பட்டினியால் நிமிர்ந்து நிற்க முடியாமல் தமது வயிற்றில் கற்களை கட்டிவைத்துக் கொண்டு பெருமானாரும் தோழர்களும் அந்த அகழியை தோண்டினார்கள்.

அகழிக்கு மறுபுறம் வந்த கூட்டுப் படையினர் அந்த அகழியைப் பார்த்து அதிர்ச்சியுற்று நின்றனர். அகழிக்கு மறுபுறம் ஸல்வு மலை உச்சியிலும் உள்ள முஸ்லிகளிடம் மட்டும் குறைந்த ஆயுதங்களுடன் போர் செய்ய முடிந்தது. இப்படியே சில நாட்கள் நடந்தது. எதிரிகள் இந்த அகழி தந்திரத்தை அறிந்திருக்கவில்லை .எப்படி பஞ்சதந்திர கதையில் பலம் குறைந்த சிறுமுயல் பலம் கொண்ட பெரும் சிங்கத்தை பாழடைந்த கிணற்றின் சூழ்ச்சியால் கொன்றதை போல் இந்த அகழ் போரின் பள்ளம் எதிரிகளை பாழடையச் செய்தது.

முஸ்லீம்களிடம் ஏற்படுத்திக் கொண்ட சமாதான ஒப்பந்ததையும் மீறி யூதர்கள் எதிரிகளிடம் சேர்ந்து கொண்டனர். மஸ்ஜித் பத்ஹ் என்ற இந்த இடத்தில்தான் பெருமானாரின் முகாம் இருந்தது. இந்த அகழ் போர் ஏன்தான் நாம் முஸ்லிம்களிடம் ஒப்பந்தத்தை மீறினோம் ? என்று யூதர்கள் அச்சப்பட , முஸ்லிம்களுக்கு யூதர்களின் சுயரூபத்தை அகழ் போர் அழகாக படம் பிடித்துக் காட்டியது .

இந்த நிலைமை ஒரு சில நாட்கள் நீடித்தது. மேலும் இறைவன் தானும் ஒரு தந்திரத்தை செய்தான் .
ஒரு இரவில் பெரும் இரைச்சலுடன் காற்று வீசியது. பலத்த மழை பொழிந்தது. இடியும் மின்னலும் தொடர்ந்தது. அந்த சூறாவளி காற்றில் முகாம்கள் பறந்து சென்றன. முஸ்லீம்கள் அகழியை தாண்டி தாக்க வருவதாக தவறாக எதிர்களின் மனம் எண்ணியது . எதிரிகளான கூட்டுப் படையினர் பொழுதும் விடியும் முன்னரே தப்பித்தோம் பிழைத்தோம் என்று கந்தக்கை விட்டு ஓடிச் சென்றனர்.
அல்லாஹ்வின் இந்த தந்திரம் முஸ்லீம்களை காப்பாற்றியது. தங்களை காப்பாற்றிய அல்லாஹ்விற்கு முஸ்லீம்கள் அல்லாஹ்வை போற்றி புகழ்ந்து நன்றி செலுத்தினார்கள்.

ரஹ்மத் ராஜகுமாரன்

குரங்கும்,முதலையும்

வாய் இல்லாத உலகம் 6



ஓர் ஆற்றங்கரையில் ஒரு குரங்கு இருந்தது. அந்தக் குரங்கு ஒரு நாள் பழம் பறித்து உண்பதற்காக ஆற்றின் ஓரத்தில் இருந்த ஒரு மரத்தின் மேல் ஏறியது. அது பழம் பறித்துத் தின்று கொண்டிருக்கும் போது கை தவறிச் சில பழங்கள் ஆற்றுக்குள் விழுந்தன.

அப்போது முதலையரசன் அந்தப் பக்கமாக வந்தது. அது மரத்திலிருந்து உதிர்ந்த பழங்களைத் தின்றது. அந்தப் பழங்கள் மிகச் சுவையாக இருந்தபடியால் அது அந்த இடத்திலேயே நின்று விட்டது. குரங்கைப் பார்த்து அந்த முதலை, "நண்பனே, “நான் உன்னைப் பிரியவே மாட்டேன். ஏனென்றால் நீ எனக்கு மிகச் சுவையான பழங்களை உதிர்த்துக் கொடுத்தாய்" என்று சொல்லியது.
நாள் தோறும் குரங்கு பழங்களை உதிர்த்துக் கொடுக்க, முதலை அதைத் தின்றுகொண்டு அந்த இடத்திலேயே இருந்தது. அது தன் இருப்பிடத்திற்குத் திரும்பிச் செல்லாததால் அதன் மனைவியான முதலையரசி மிகவும் கவலை கொண்டது. அது தன் தோழியான ஒரு முதலையை அழைத்துக் கணவனிடம் தூது போய் வரும்படி அனுப்பியது.

அந்தத் தூதி முதலையரசனிடம் வந்து "மன்னவா, தங்களைக் காணாமல் அரசியார் மெலிந்து போய் விட்டார்கள். அவர்களுடைய காதல் நோய் வெப்பு நோயாக மாறி உடலை இளைக்கச் செய்து விட்டது. தாங்கள் வந்து நோய் தீர்க்க ஏற்பாடு செய்ய வேண்டும்" என்று கூறியது.

“ஏ தூதியே, குரங்கோ எனக்கு உயிர் நண்பனாகி விட்டது. அதைப் பிரிந்து வருவதோ என்னால் முடியாது, நீயோ என் மனைவி நோயாய் இருக்கிறாள் என்று சொல்கிறாய். அதைக் கேட்டதும் என் மனமோ மிகவும் வருந்துகிறது. புறப்படவும் முடியவில்லை நான் என்ன செய்வேன்" என்று வாய்விட்டுச் சொல்லி முதலை வருந்தியது.

'இந்தக் குரங்கு என்ன சொக்குப் பொடி தூவியதோ, நம் அரசர் இதை விட்டுவர மறுக்கிறார். இந்தக் குரங்கைத் கொன்றால்தான் இதற்குப் புத்தி தெளியும்’ என்று நினைத்தது அந்தத் தூதி முதலை.

அது முதலையரசனைப் பார்த்து, “மன்னவா, அரசியாருக்கு நாங்கள் எத்தனையோ மருந்து கொடுத்துப் பார்த்து விட்டோம். நோய் தீர வில்லை. குரங்கின் ஈரல் கொண்டு வந்து கொடுத்தால்தான் பிழைப்பாளென்று பெரிய மருத்துவர் சொல்கிறார். நீங்கள் அதற்கு வேண்டிய ஏற்பாட்டுடன் உடனே வர வேண்டும். இல்லா விட்டால் அரசி உயிருக்கே ஆபத்தாய் முடியும்’ என்று சொல்லியது.

இதைக் கேட்டதும் முதலையரசனின் மனம் குழம்பியது. குரங்கின் ஈரலுக்கு அது எங்கே போகும். அதற்குத் தெரிந்தது ஒரே ஒரு குரங்கு தான். தினமும் பழம் பறித்துப் போடும் உயிர் நண்பனான அந்தக் குரங்கைக் கொல்வது பாவம். அதைக் கொல்லாமல் இருந்தால் முதலையரசி இறந்து போய் விடும். நண்பனைக் கொல்வதா, அரசியை இழப்பதா? என்று எண்ணிக் கடைசியில் அரசியைக் காப்பது தான் முக்கியம் என்று முடிவுக்கு வந்தது.
இப்படி அது வருத்தத்தோடு இருக்கும் போது எங்கோ போயிருந்த குரங்கு அங்கு வந்து சேர்ந்தது. அது முதலை கவலையாய் இருப்பதைப் பார்த்து அதன் துயரத்திற்கு என்ன காரணம் என்று கேட்டது.

"நண்பா, இதுவரை நான் உன்னைப் பிரியாமல் இருந்தேன். இப்போதோ என் மனைவி நோயாகக் கிடப்பதால் உன்னைவிட்டுப் பிரிந்து போக வேண்டி இருக்கிறது. அதுதான் கவலையாக இருக்கிறது” என்றது முதலையரசன்.
"இப்போதே போய்வா. இதற்கெல்லாம் யோசித்துக் கொண்டிருக்க முடியாது!" என்று குரங்கு பதில் அளித்தது.
"உடனே போகத்தான் வேண்டும். ஆனால் உன்னைப் பிரிந்து என்னால் ஒரு கணமும் இருக்க முடியாது. ஆகையால் நீயும் என்னோடு வரவேண்டும்?" என்று முதலை கேட்டுக் கொண்டது.

“நீயோ நீரில் இருப்பவன்; நானோ தரையில் வாழ்பவன். நான் எப்படி உன்னோடு வர முடியும்?” என்று கேட்டது குரங்கு.
“என் முதுகில் ஏறிக் கொண்டு வா. போய் விரைவில் திரும்பி விடலாம்" என்றது முதலை.
அவ்வாறே குரங்கு முதலையின் முதுகில் ஏறிக் கொள்ள அது தன் இருப்பிடத்தை நோக்கிப் புறப்பட்டது. போகும் வழியெல்லாம் முதலையின் மனம் குழம்பிக் கொண்டே இருந்தது.அதன் குழப்ப நிலையைக் கண்ட குரங்கு,
“நண்பா, இன்றெல்லாம் உன் முகம் மிக வாடி இருக்கிறதே என்ன காரணம்? உன் மனைவி மிகவும் ஆபத்தான நிலையில் இருக்கிறாளா? எதையும் ஒளிக்காமல் சொல்’’ என்று கேட்டது.

"நண்பா, நான் என்ன சொல்வேன்! என் மனைவியோ சாகும் நிலையில் இருக்கிறாளாம். குரங்கின் ஈரல் கொடுத்தால்தான் அவள் பிழைப்பாளென்று மருத்துவர்கள் சொல்லுகிறார்களாம். அதற்கு நான் எங்கே போவேன்?'என்று சொல்லி முதலைக் கண்ணிர் வடித்தது முதலை.

முதலையின் மனநோக்கத்தைக் குரங்கு புரிந்து கொண்டது. "பூ! இதற்குத்தானா இவ்வளவு கவலைப்படுகிறாய்? குரங்கு ஈரல் எத்தனை வேண்டும்? நூறு வேண்டுமா?" என்று கேட்டது.
"அவ்வளவு வேண்டாம். ஒன்று இருந்தால் போதும்" என்றது முதலை.
"அதோ அந்த நீண்ட மரத்தின் கிளைகளில் வரிசையாக தொங்கிக் கொண்டிருக்கிறதே! முன்பே நீ எனக்குச் சொல்லியிருக்கக் கூடாதா? இத்தனை தூரம் வந்த பிறகு சொல்கிறாயே! சரி, சரி, நண்பா திரும்பு. போய் ஈரல்களில் ஒன்றிரண்டு எடுத்துக் கொண்டு, உன் மனைவிக்குக் கொடுக்கப் பழங்களும் பறித்துக் கொண்டு திரும்புவோம்" என்று கூறியது குரங்கு.

முதலையும் அதன் சொல்லை நம்பி உடனே திரும்பி புறப்பட்ட கரைக்கே கொண்டு வந்து விட்டது. கரை நெருங்கியவுடன் ஒரே பாய்ச்சலாக பாய்ந்து, மரத்தின் மேல் ஏறி உட்கார்ந்து கொண்டது குரங்கு.
மரத்தின் மேல் ஏறிய குரங்கு இறங்காததைக் கண்டு எதிர்பார்த்துக் கொண்டிருந்த முதலை, நெடுநேரமான பின் "நண்பா, ஈரலை எடுத்துக் கொண்டு விரைவில் வா!" என்று அழைத்தது.
" ஏ முதலையே, இன்னும் ஆசை வைத்துக் கொண்டு ஏன் காத்துக் கொண்டிருக்கின்றாய்? உனக்கும் எனக்கும் உள்ள நட்பு இத்தோடு போதும். இனியும் துரோகத்தால் நான் ஏமாறுவேன் என்று எதிர்பார்க்காதே. நீயோ உன் பெண்டாட்டிக்காக என்னைக் கொன்று விடவே நினைத்து விட்டாய். தினம் தினம் உனக்கு உணவு அளித்த இந்த நண்பனுக்கு நீ துரோகம் செய்ய நினைத்தாய் .இது மிகவும் தீது.” என்று குரங்கு மரக்கிளையின் உச்சாணிக் கிளையில் அமர்ந்து கொண்டது .

.
மக்களில் சிலர் (ரிஅல், தக்வான், உஸய்யா, பனூ லஹ்யான் ஆகிய கூட்டத்தார்) நபி (ஸல்) அவர்களிடம் வந்து,
"எங்களுக்குக் குர்ஆனையும் "சுன்னா"வையும் கற்பிப்பதற்காக எங்களுடன் சிலரை அனுப்பிவையுங்கள்" என்று கேட்டுக் கொண்டனர்.
அதற்கிணங்க அன்சாரிகளில் எழுபது பேரை அவர்களிடம் நபி (ஸல்) அவர்கள் அனுப்பிவைத்தார்கள். அவர்கள் குர்ஆன் அறிஞர்கள் (அல்குர்ராஉ) எனப்படுவர். அவர்களில் என் தாய்மாமா ஹராம் பின் மில்ஹான் (ரலி) அவர்களும் ஒருவர்.
அவர்கள் (எழுபது பேரும்) இரவில் குர்ஆனை ஓதுவார்கள்; ஒருவருக்கொருவர் கற்றுக் கொடுக்கவும்,கற்றுக்கொள்ளவும் செய்வார்கள். பகல் நேரங்களில் (அருந்துவோருக்காகவும், அங்கத்தூய்மை செய்வோருக்காகவும்) தண்ணீர் கொண்டுவந்து (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசலில் வைப்பார்கள். விறகு சேகரித்து வந்து அதை விற்றுக் காசாக்கி அதன் மூலம் திண்ணைவாசிகளுக்கும்,ஏழைகளுக்கும் உணவு வாங்கிக் கொடுப்பார்கள்.

நபி (ஸல்) அவர்கள் இவர்களை அனுப்பியபோது, அவர்கள் (குறிப்பிட்ட) அந்த இடத்திற்குப் போய்ச் சேர்வதற்கு முன்பே அவர்களை இடைமறித்து, ("பிஃரு மஊனா" எனும் இடத்தில்) அனைவரையும் அக்கூட்டத்தார் கொன்றுவிட்டனர்.

(இறையறிவிப்பின் (ஜிப்ரயீல்) மூலம் இது குறித்து அறிந்த) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், தம் தோழர்களிடம்,
"உங்கள் சகோதரர்கள் கொல்லப்பட்டுவிட்டனர். அவர்கள் (இறக்கும் தருவாயில்) "இறைவா! நாங்கள் உன்னிடம் வந்து சேர்ந்துவிட்டோம். உன்னை நாங்கள் உவந்து கொண்டோம்; எங்களை நீயும் உவந்துகொண்டாய்" என எங்கள் நபியிடம் தெரிவித்துவிடுவாயாக ! என்று கூறினர்" எனத் தெரிவித்தார்கள்.
இவர்கள் குறித்து (அருளப்பட்டிருந்த) குர்ஆன் (வசனமொன்றை) ஓதி வந்தோம். பின்னாளில் அது (இறைவனால்) நீக்கப்பட்டுவிட்டது. அந்த வசனம் 'நாங்கள் எங்கள் இறைவனிடம் சென்று சேர்ந்து விட்டோம். அவன் எங்களைக் குறித்து திருப்தியடைந்துவிட்டான்; எங்களை அவன் திருப்தியுறச் செய்தான்' என்று எங்களைப் பற்றி எங்கள் சமுதாயத்தாரிடம் தெரிவித்து விடுங்கள்' என்பதே அந்த வசனமாகும். (புகாரி 4090)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் “பிஃரு மஊனா” நாளில் கொல்லப்பட்ட குர்ஆன் அறிஞர்கள் (அல்குர்ராஉ) என்றழைக்கப்பட்ட எழுபது பேருக்காக மன வேதனைப்பட்டதைப் போன்று தாம் அனுப்பிவைத்த வேறு எந்தப்

படைப்பிரிவினருக்காகவும் (அவர்கள் உயிர் நீத்தபோது) மனவேதனைப்பட்டதில்லை. அவர்களைக் கொன்றவர்களுக்கெதிராக அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஒருமாத காலம் குனூத் (சோதனைக் காலப் பிரார்த்தனை) ஓதினார்கள். – அனஸ் பின் மாலிக் (ரலி)
ஸஹீஹ் முஸ்லிம் : 3860 & 1204.

அடுத்த துரோகம் . அனஸ்(ரலி) அறிவித்தார்.

உறைனா எனும் கோத்திரத்தைச் சேர்ந்த சிலர் மதீனா வந்தபோது மதீனாவின் பருவநிலை ஒத்துக் கொள்ளாமல் நோயுற்றனர்.
எனவே ஸகாத்தாகப் பெறப்பட்ட ஒட்டகம் இருக்குமிடத்திற்குச் சென்று அதன் பாலையும் சிறுநீரையும் குடிப்பதற்கு அவர்களை நபி(ஸல) அவர்கள் அனுமதித்தார்கள்.
ஆனால், அவர்கள் அங்கு சென்று ஒட்டகம் மேய்ப்பவரைக் கொலை செய்துவிட்டு ஒட்டகங்களையும் ஓட்டிச் சென்றனர். செய்தியறிந்த நபி(ஸல்) அவர்கள், அவர்களைப் பிடித்துவர ஆள் அனுப்பினார்கள்.
அவர்கள் பிடித்து வரப்பட்டதும் அவர்களின் கைகளையும், காகளையும் வெட்டினார்கள்; கண் (இமை)களின் ஓரங்களில் சூடிட்டார்கள்; அவர்களைக் கருங்கற்கள் நிறைந்த ஹர்ரா எனுமிடத்தில் (பற்களால்) கற்களைப் (பற்றிப்) பிடித்துக் கொண்டிருக்கும்படி விட்டுவிட்டார்கள். புகாரி : 1501.

கீரிப் பிள்ளையைக் கொன்றான்

வாய் இல்லாத உலகம் 7



ஓர் ஊரில் ஒரு பார்ப்பனன் இருந்தான். அவன் அந்த நாட்டு அரசனுக்குப் பஞ்சாங்கம் சொல்லும் வேலை பார்த்து வந்தான். அவன் மனைவிக்கு நெடுநாளாகப் பிள்ளை பிறக்கவில்லை. அதனால் அவர்கள் ஒரு கீரிப்பிள்ளையை ஆசையோடு எடுத்து வளர்த்து வந்தார்கள்.
அந்தப் பார்ப்பனன் தன் பிள்ளையாசை முழுவதையும் அந்தக் கீரிப் பிள்ளையின் மேல்வைத்திருந்தான். அதை அன்போடு எடுத்து மடியின் மேல் வைத்துக் கொள்வான். மார்பில் சேர்த்து வைத்துத் தழுவிக் கொள்வான். முத்தம் இடுவான். பாலும் சோறும் தன் கையாலேயே ஊட்டுவான். தன் மார்பின் மேல் போட்டுத் தூங்கவைப்பான். இப்படி அன்பாகக் கீரிப்பிள்ளையை வளர்த்து வரும்போது அவன் மனைவி வயிற்றில் கருப்பம் உண்டாகியது.
பஞ்சாங்கம் சொல்பவனாகிய அந்தப் பார்ப்பனன் தன் மனைவியைப் பார்த்து, "அன்பே, உனக்கு ஓர் ஆண் பிள்ளை பிறப்பான். அவன் நான்கு வேதங்களுக்கும் தலைவனாக விளங்குவான். பெரும் செல்வமும் செல்வாக்கும் பெற்றுத் திகழ்வான். உன்னையும் என்னையும் நம் குலத்தையுமே ஆதரித்துக் காப்பாற்றுவான். அரசர் மெச்சிப் புகழும்படி புரோகிதம் சொல்லிக் கொண்டு நூறு வயது வரை இருப்பான்' என்று பிறக்கப் போகும் தன் மகனைப் பற்றி ஆரூடம் கணித்துச் சொன்னான்.
அவன் மனைவிக்குக் கர்ப்பம் முற்றிக் கடைசியில் ஒரு நாள் நல்ல வேளையில் ஓர் அழகான ஆண் பிள்ளை பிறந்தது. அந்தப் பிள்ளை பிறந்த பின் ஒரு நாள் தீட்டு கழிப்பதற்காக அவள் சுனைக்கு நீராடச் சென்றாள், பார்பனன் பிள்ளையைப் பார்த்துக் கொண்டு வீட்டில் இருந்தான்.
அப்போது அரச தூதர்கள் வந்து அரண்மனையில் சிரார்த்தம். அதற்கு வாருங்கள்' என்று அழைத்தார்கள். அந்தச் சமயத்தில் தான் போகாவிட்டால் மற்ற பார்ப்பனர்கள் சிரார்த்த தட்சணைகள் வாங்கிக் கொண்டு போய் விடுவார்கள்; தனக்குக் கிடைக்க வேண்டியது கிடைக்காமல் போய்விடும் என்று பார்ப்பனன் உடனே புறப்பட்டான்.
வீட்டில் பிள்ளைக்கு வேறு துணையில்லாததால், தான் வளர்த்த கீரிப் பிள்ளையைக் கொண்டு வந்து, தன் பிள்ளையின் பக்கம் வைத்துவிட்டு அரண்மனைக்குச் சென்றான்.

அரண்மனையில் சிரார்த்தம் முடித்து, அங்கிருந்து பெற்ற சரிகை வேட்டி, அரிசி, பருப்பு எல்லாவற்றையும் மூட்டைகளாகக் கட்டிக் கொண்டு வீட்டுக்குத் திரும்பி வந்தான்.

அவன் அரண்மனை போய்த் திரும்பி வரு முன்னால் வீட்டிற்குள் ஒரு கருநாகம் புகுந்தது. அது குழந்தையிருந்த இடத்தை நோக்கிச் சென்றது. அதைக் கண்ட கீரிப்பிள்ளை உடனே கருநாகத்தின் மேல் பாய்ந்து, அதைக் கடித்து இரண்டு துண்டாக்கிப் போட்டு விட்டது. அதன் வாயெல்லாம் இரத்தம் ஒழுகத் தன் சாதனையைக் காட்ட வேண்டும் என எண்ணி, மிகுந்த மகிழ்ச்சியோடு, அது வீட்டு வாசலில் வந்து நின்றது.
அரண்மனையிலிருந்து திரும்பி வந்த பார்ப்பனன் இரத்தம் ஒழுகும் வாயோடு நின்ற கீரிப்பிள்ளையைக் கண்டதும் அது தன் குழந்தையைத்தான் கடித்து விட்டது என்று நினைத்துக் கொண்டு அதைத் தடியினால் அடித்துக் கொன்று விட்டான்.

தன் பிள்ளை என்ன ஆயிற்றோ என்ற கலவரத்தோடு அவன் வீட்டிற்குள் வந்தான். அங்கே அவன் பிள்ளை சிரித்துக் கொண்டு கிடந்தது. அதன் எதிரில் தூரத்தில் கரும்பாம்பு இரண்டு துண்டாகக் கிடந்தது. அப்போதுதான் உண்மையாக என்ன நடந்ததென்று அவனுக்குப் புரிந்தது.
ஆராயாமல்
**அருமையாக**
வளர்த்த அந்த நல்ல கீரிப் பிள்ளையை வீணாகக் கொன்று விட்டோமே என்று வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டான பைத்தியக்காரன் போல் தன் தலையில் மண்ணை வாரிப்போட்டுக் கொண்டான். பெற்ற பிள்ளையைக் காட்டிலும் அதிகமாக உன்னைப் பேணி வளர்த்தேனே! வாசலில் எதிரே வந்து நின்று என்னையே எமனாகத் தேடிக் கொண்டாயே' என்று அந்தக் கீரிப் பிள்ளையின் மேல் விழுந்து விழுந்து தரையில் முட்டி மோதிக் கொண்டு அழுதான்.

நீராடப் போன அவன் மனைவி திரும்பி வந்து, கீரிப்பிள்ளை இறந்து கிடப்பதைக் கண்டு ஓவெனக் கூவியழுதாள். நடந்ததைக் கேட்ட பிறகு நெருப்பிலிட்ட மெழுகுபோல் அவள் உள்ளம் உருகி நின்றாள். தீர விசாரியாமல் செயல் புரிந்தோர் அடைந்த துன்பங்களையெல்லாம் கதை கதையாய்ச் சொல்லி அவள் அழுதாள்.

**ஒரு தடவை நபி (ஸல்)** அவர்கள் ஜகாத் நிதியை வசூலிப்பதற்கு ஹசரத் வலீத் பின் உக்பா (ரலி) அவர்களை பனீமுஸ்தலிக் எனும் கோத்திரத்தாரிடம் அனுப்பி வைத்தார்கள்.
இவருக்கும் அந்த கோத்திரத்தாருக்கும் இஸ்லாத்திற்கு வரும் முன் ஒரு கொலை சம்பந்தமான பகை உணர்வு இருந்து வந்தது. இஸ்லாத்திற்கு வந்தபின் அந்த பகை மறைந்து போனது.

**ஹசரத் வலீத் பின் உக்பா (ரலி)** அவர்கள் வருகை புரியும் செய்தியறிந்து, அந்த கோத்திரத்தார் அவரை வரவேற்பதற்காக பெரும் படையை திரட்டி புடைசூழ ஊரின் எல்லையில் குழுமியிருந்தார்கள்.
இதை கண்ட ஹசரத் வலீத் பின் உக்பா (ரலி) அவர்கள் உண்மை என்னவென்று உறுதிப்படுத்தாமல் பழைய பகை உணர்வை மனதில் வைத்து நம்மை தீர்த்து கட்ட இவர்கள் ஒன்று குழுமியிருக்கிறார்கள் என மனதில் நினைத்துக் கொண்டு, வந்த வழியை நோக்கி நபி (ஸல்) அவர்களிடம் திரும்பிவிட்டார்கள்.
மேலும் அந்த கோத்திரத்தார் குறித்து தம் எண்ண அடிப்படையில் பின்வரும் சில வதந்திகளை பரப்பி விடுகிறார்கள்.

**1) அவர்கள் இஸ்லாத்திலிருந்து வெளியேறி விட்டார்கள்,**
**2) ஜகாத் நிதியை தர மறுக்கிறார்கள்,**
**3) என்னை கொலை செய்யவும் தயாராகி விட்டார்கள்.**
இந்த வதந்திகளை நபி (ஸல்) அவர்கள் கேட்டதும் நம்பவில்லை. நடந்தது உண்மையா? அல்லது வதந்தியா? என்பதை ஆய்வு செய்வதற்காக ஹசரத் காலித் பின் வலீத் (ரலி) அவர்களின் தலைமையில் ஒரு சிறிய படையை அனுப்பி வைத்து, அவர்களுக்கு தெரியாமல் இரவு நேரத்தில் அந்த ஊருக்குள் நுழையும்படி ஆலோசனை வழங்கினார்கள்.

அந்த ஊரின் எல்லை அருகே படை வந்ததும், ஹசரத் காலித் (ரலி) அவர்கள் சில ஒற்றர்களை உளவு பார்க்க அனுப்பி வைத்தார்கள். அந்த நேரம் மக்ரிப் தொழுகை நேரமாகும். ஒற்றர்கள் சென்றபோது அந்த கோத்திரத்தார் தொழுகையில் ஆர்வமாக ஈடுபட்டதை கண்டார்கள்.

இந்த செய்தியை அறிந்து கொண்ட காலித் (ரலி) அடுத்த நாள் காலையில் அவர்களிடம் சென்று ஜகாத் நிதியை வசூலித்துக் கொண்டு, நபி (ஸல்) அவர்களிடம் திரும்பிச் சென்று நடந்த உண்மை நிலவரத்தை எடுத்துச் சொன்னார்கள். அப்போதுதான் இந்த இறைவசனம் இறங்கியது.
''முமின்களே! தீயவன் எவனும் உங்களிடம் ஒரு செய்தியைக் கொண்டு வந்தால் அதைத் தீர்க்க விசாரித்துக் கொள்ளுங்கள். (இல்லையேல்) அறியாமையினால் (குற்றமற்ற) ஒரு சமூகத்தாருக்கு நீங்கள் தீங்கு செய்து விடலாம்; பின்னர் நீங்கள் செய்தவை பற்றி நீங்களே கைசேதப்படுபவர்களாக (கவலைப்படுபவர்களாக) ஆவீர்கள்'' (திருக்குர்ஆன் 49:6).

உடனே நபி (ஸல்) அவர்கள் ''நிதானம் இறைவனின் செயல். அவசரம் ஷைத்தானின் செயல்'' என்று கூறினார்கள். மேற்கூறப்பட்ட சம்பவத்தில் நபி (ஸல்) அவர்கள் அவசரப்படாமல் நிதானமாக சமயோசிதமாக நடந்து கொண்டதினால் ஒரு பெரும் போர் தவிர்க்கப்பட்டது. அந்த நபித் தோழரின் வதந்தியை நம்பி, நபி (ஸல்) அவர்கள் செயல்பட்டால் அநியாயமாக ஒரு சமூகத்தாருக்கு அநீதி இழைத்தவர்களாக ஆகியிருப்பார்கள்.
கண்டதை எல்லாம் பேசுவது வதந்தியின் ஆரம்ப நிலையாக அமைந்து விடுகிறது. நாம் பேசக்கூடிய ஒவ்வொன்றுக்கும் நாமே பொறுப்பு. வதந்தியால் ஏற்படக்கூடிய அனைத்து விதமான அசம்பாவிதங்களுக்கும் அதனை பரப்பியவர் மீதே சாரும்.

''எதைப் பற்றி உமக்கு (த்தீர்க்க) ஞானமில்லையோ அதை(ச் செய்யத்) தொடர வேண்டாம்; நிச்சயமாக (மறுமையில்) செவிப்புலனும், பார்வையும், இருதயமும் இவையாவுமே (அதனதன் செயல் பற்றி) கேள்வி கேட்கப்படும்''
(திருக்குர்ஆன் 17:36)

''தான் கேட்பதையெல்லாம் ஒருவன் பரப்புரை செய்வது அவன் பொய்யன் என்பதற்கு இதுவே போதுமானது'' என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
ஹசரத் ஹப்இபின் ஆஸிம் (ரலி) அவர்கள், (முஸ்லிம்).

''தான் கேட்பதையெல்லாம் பரப்புரை செய்பவன் பரிபூரண முஸ்லிமாக முடியாது; மேலும் அவன் ஒரு போதும் தலைமைத்துவத்திற்கு தகுதியும் பெற முடியாது'' **(பைஹகீ)**

ஹசரத் உமர் (ரலி) அவர்கள் கூறும்போது ''உங்களையும், குழப்பத்தையும் நான் எச்சரிக்கை செய்கின்றேன். ஏனெனில், வாளால் ஏற்படும் அதே பாதிப்பு நாவினாலும் ஏற்படும்'' என்றார்கள்.
வதந்தியால் பலரின் வாழ்க்கை பாழாகி போயிருக்கிறது. இன்றைய நவீன காலத்தில் தகவல் பரப்பும் சாதனங்களால் உண்மையை விட உண்மைக்கு புறம்பான வதந்திகள்தான் அதிகம் பரப்புரை செய்யப்படுகிறது. பகிரவும் செய்யப்படுகிறது. இதனால் கலவரம் கூட ஏற்படுகிறது. வதந்திகளை நம்பாமலும் பரப்பாமலும் வாழ்வதே அண்ணலாரின் அறிவுரையாகும்.

ரஹ்மத் ராஜகுமாரன்

## ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு.

## வாய் இல்லா உலகம் 8




கோதாவரி நதிக்கரையில் வேடன் ஒருவன் தன் கைகளில், வலையும், வில்லும், அம்புகளும் வைத்திருந்தான். வேட்டையாட வந்த அவனைக் கண்டவுடன் எல்லாப் பறவைகளும் பறந்து ஓடி விட்டன.

அந்த வேடன் வலையை விரித்து வைத்து அதைச் சுற்றித் தீனியும் போட்டு வைத்தான். ஏதாவது பறவைகள் வந்து அகப்படாதா என்று எதிர் பார்த்து அவன் ஓரிடத்தில் ஒளிந்து கொண்டிருந்தான்.

அப்போது புறாக் கூட்டம் ஒன்று அந்த வலைப் பக்கத்தில் பறந்து வந்தது. அருகில் இருந்த மரத்தில் இறங்கிய அந்தப் புறாக்கள் கீழே கிடந்த தானியங்களைக் கண்டன.

அந்தப் புறாக்களின் அரசனும் அந்தக் கூட்டத்தோடு வந்திருந்தது. அது மிகுந்த அறிவுள்ளது.
அந்த அரசப் புறாதன் கூட்டத்தைப் பார்த்து, 'காட்டில் தானியம் கிடப்பதென்றால், தானாக வந்து கிடக்காது. யாரோ இதைக் கொண்டு வந்து எதற்காகவோ போட்டு வைத்திருக்க வேண்டும். இதை நன்றாகத் தெரிந்து கொள்ளாமல் நாம் போய்த் தின்னக் கூடாது. ஆராயாமல் நாம் இதைத் தின்னப் புகுந்தால் துன்பமடைய நேரிடும்' என்று மற்ற புறாக்களை எச்சரித்தது.

அப்போது அந்தப் புறாக்களில் ஒன்று 'இப்படி ஒவ்வொன்றுக்கும் யோசனை செய்து கொண்டிருந்தால் நாம் இரையே இல்லாமல் இறந்து போக வேண்டியதுதான்! எப்படியும் எந்தெந்தக் காலத்தில் என்னென்ன நடக்க வேண்டுமோ, அந்தந்தக் காலத்தில் அது அது அப்படி அப்படி நடந்தே தீரும்' என்று பதில் சொல்லியது.

உடனே எல்லாப் புறாக்களும் இறங்கித்தீனி தின்னப் போய் வலையில் மாட்டிக் கொண்டன.இதைக் கண்ட அந்த அரசப்புறா எல்லாப்புறாக்களும் சிக்கிச் சாகும்போது, தான் மட்டும் உயிர் பிழைத்திருப்பது தக்கதல்ல என்று மனத்தில் நினைத்துக் கொண்டு, தானும் வலையில் போய் வீழ்ந்து அகப்பட்டுக் கொண்டது. மற்ற புறாக்கள் தங்கள் தவறை நினைத்து வருந்தின .மேலும் அரசப் புறாவிற்கு தாங்கள் கீழ்படிவதாக வாக்குறுதியும் அளித்தன.அப்போது அரசப் புறா மனத்தில் ஓர் **அருமையான** எண்ணம் தோன்றியது.

''வேடனிடம் அகப்படாமல் தப்ப வேண்டுமானால், எல்லோரும் இந்த வலையைத் துக்கிக் கொண்டு ஒன்றாகப் பறப்பதைத் தவிர வேறு வழியில்லை' என்று அரசப்புறா மற்ற புறாக்களைப் பார்த்துக் கூறியது.
உடனே எல்லாப் புறாக்களும் கூடிப் பறந்தன. வலையை எடுத்துக் கொண்டு அவை வானத்தில் பறந்ததைக் கண்ட வேடன் கலங்கிப் போனான். புறாக்கள்தான் அகப்படவில்லை என்றால், வலையும் போச்சே என்று மனம் வருந்தினான்.

'இந்தப் புறாக்கள் எவ்வளவு தூரம்தான் இப்படியே பறந்து ஒடப் போகின்றன. விரைவில் களைப் படைந்து கீழே விழத்தான் நேரிடும். அப்போது அவற்றைப் பிடித்துக் கொள்வதோடு வலையையும் திரும்பப் பெறலாம்' என்று எண்ணிக் கொண்டு அந்த வேடன் அவற்றின் பின்னாலேயே ஓடினான்.

ஆனால், அவனுக்குத்தான் விரைவில் களைப்பு வந்ததே தவிர அந்தப் புறாக்கள் களைக்கவேயில்லை. அவை வெகு தொலைவில் பறந்துபோய் அவன் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்துவிட்டன.
வலையோடு புறாக்கள் பறந்து சென்று கொண்டிருக்கும் போது ஒரு காடு குறுக்கிட்டது. அதைக் கண்டவுடன் அரசப்புறா, 'எல்லோரும் இங்கே இறங்குங்கள். என் நண்பனான எலி ஒன்று இங்கே இருக்கிறது' என்று கூறியது. எல்லாப் புறாக்களும் அங்கே இறங்கின.

சிறகுகளைப் படபடவென்று அடித்துக் கொண்டு புறாக்கள் கூட்டமாக இறங்கியதைக் கண்டவுடன், என்னவே ஏதோ என்று பயந்து போன அந்த எலி, தன் வளைக்குள்ளே ஓடிப்போய் ஒளிந்து கொண்டது.
அதன் வளைக்கு நேரே இறங்கிய புறாவரசன், 'நண்பா, நண்பா என் எலி நண்பா, இங்கே வா' என்று வளைத்துளையில் மூக்கை வைத்துக்கொண்டு கூப்பிட்டது.

நண்பனின் குரலைக் கேட்டு வெளியில் வந்தது அந்த எலி. அது தன் நண்பன் நிலையைக் கண்டு மனம் வருந்தியது.
'எதையும் முன்னும் பின்னும் சிந்தித்துச் செய்யக் கூடிய அறிவாளியான நீ எப்படி இந்த வலையில் சிக்கினாய்?' என்று அந்த எலி கேட்டது.
'எவ்வளவு சிறந்த அறிவிருத்தாலும் எவ்வளவு சாமார்த்தியம் இருந்தாலும் விதியை மீறமுடியுமா? எந்த இடத்தில், எந்தக் காலத்தில், எப்படிப்பட்ட காரணத்தினால், யாரால் எவ்வளவு நல்வினை தீவினைகளின் பயனை அனுபவிக்க வேண்டுமோ, அந்த இடத்தில் அந்தக் காலத்தில், அப்படிப்பட்ட காரணத்தால், அவரால் அவ்வளவும் அனுபவித்துத் தானே ஆகவேண்டும்!' என்று புறா பதில் கூறியது.

.அந்த எலி, தன் நண்பனான அரசப்புறாவையும் அதன் கூட்டத்தையும் சிக்க வைத்துக் கொண்டிருந்த அந்த வலையைத் தன் கூர்மையான பற்களால் அறுத்தெறிந்து அவற்றை விடுவித்தது.

அன்றைய அரபு மக்கள் பல குலங்களாக,கோத்திரங்களாக பிரிந்து நின்று ஆண்டாண்டு காலமாக தங்களுக்குள் சண்டையிட்டு மனித உருவில் மிருகங்களாக நடமாடினார்.
தற்போதைய கருப்புக்கல்லான ஹஜ்ருல் அஸ்வத் கல்லை காபாவின் சுவரில் நபி ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பொருத்தினார்கள் என அறிய முடிகிறது.

இப்னு இஷாக் தொகுத்து எழுதிய 'சீரா ரசூலுல்லாஹ்' என்ற நூலில் ஒரு நிகழ்வு குறிப்பிடப்பட்டுள்ளது. ஒரு பெரும் தீ விபத்தில் காபாவின் ஒரு பகுதி அளிக்கப்பட்டதாகவும் அதன் பின்னர் மீண்டும் காபாவை கட்டியெழுப்பும் வேலையின் போது தற்காலிகமாக அந்தக் கருப்புக் கல் அதன் இடத்தை விட்டு அகற்றப்பட்டது.

மீண்டும் அதை அதே இடத்தில் பொருத்துவதற்குத் தகுதியான மரியாதைக்குரிய ஒரு பெரிய மனிதர் தமக்குள் இல்லை என அவர்கள் வாதிட்டனர். அப்போது அவர்கள் அந்த வாசல் வழியாக அடுத்து யாராவது ஒருவர் வரும் வரை காத்திருந்து அவரிடமே இது பற்றி முடிவு செய்யச் சொல்லலாம் எனக் கூறினர்.
இந்நிகழ்வு நபி (ஸல்) அவர்களுக்கு நபித்துவம் கிடைப்பதற்கு 5 ஆண்டுகளுக்கு முன்னர் அதாவது நபி (ஸல்) அவர்களின் 35 ஆம் வயதில் நடைபெற்றது.

இதற்கு முடிவு கூறும் விதமாக நபி (ஸல்) அவர்கள் ஒரு துணியைக் கொண்டு வர செய்து மக்கா நகரத்து முக்கியப் பிரமுகர்களின் வம்சத்தைச் சேர்ந்த வாரிசுகளின் மூத்தவர்கள் அத்துணியின் நடுவில் அந்தக் கல்லைத் தூக்கி வைக்குமாறு கூறி , அத்துணியின் மூலைகளை குலத் தலைவர்கள் ஒவ்வொருவரும் பிடித்துத் தூக்கிச் சென்று சரியான இடத்தில் வைக்கலாம் என்று கூறினார்கள்.

இவ்வாறாக முஹம்மது அக்கல்லை சரியான இடத்தில் பொருத்தினார்கள். இந்நிகழ்வு அனைத்து மக்கா வாசிகளுக்கும் திருப்தியை அளித்தது.

இம்மக்கள் முஸ்லிமாகி குர்ஆன் கூறும் ஒற்றுமை கயிற்றை பற்றிப் பிடித்தவுடன் சகோதரத்துவம் பிறந்தது சண்டை சச்சரவு ஒழிந்தது. இஸ்லாம் மலர்ந்தது.

அல்லாஹ் கூறுகிறான்,
" இன்னும் நீங்கள் அல்லாஹ்வின் கயிற்றை வலுவாகப் பற்றிப் பிடித்துக் கொள்ளுங்கள். நீங்கள் பிரிந்தும் விடாதீர்கள்; அல்லாஹ் உங்களுக்கு கொடுத்த அருட்கொடைகளை நினைத்துப் பாருங்கள்; நீங்கள் பகைவர்களாய் இருந்தீர்கள்- உங்கள் இதயங்களை அன்பினால் பிணைத்து; அருளால் நீங்கள் சகோதரர்களாய் ஆகிவிட்டீர்கள்; இன்னும், நீங்கள் நரக நெருப்புக் குழியின் விளிம்பின் மீது இருந்தீர்கள்; அதனின்றும் அவன் உங்களைக் காப்பாற்றினான்- நீங்கள் நேர் வழி பெறும் பொருட்டு அல்லாஹ் இவ்வாறு தன் வசனங்களை உங்களுக்கு தெளிவாக்குகிறான்." –அல் குர்ஆன்.3:103.

அப்துல்லாஹ் இப்ன் ஸுபைர் (ரலி) (மக்காவினுள் ஹஜ்ஜாஜ் இப்னு யூசுப்பால் முற்றுகையிடப்பட்ட யுத்த) குழப்ப வருடத்தில் இப்ன் உமர்(ரலி) அவர்களிடம் இரண்டு மனிதர்கள் வந்து,
" மக்கள் (அரசியல் காரணங்களுக்காகத் தங்களிடையே பிளவு பட்டு) அலைக்கழிக்கப்படுகிறார்கள். தாங்கள் உமர் (ரலி) அவர்களின் புதல்வரும், நபி (ஸல்) அவர்களின் தோழரும் ஆவீர்கள். (நியாயத்திற்காக போராட) தாங்கள் புறப்படுவதற்கு எது தடையாக உள்ளது?" என்று கேட்டனர்.

அதற்க்கு இப்ன் உமர் (ரலி) " என் சகோதரனின் இரத்தத்தைச் சிந்துவதற்கு அல்லாஹ் தடை விதித்திருப்பதே என்னை தடுக்கிறது" என்று கூறினார்கள்.
அதற்கு அவர்களிருவரும் "குழப்பம் நீங்கி மார்க்கம் (முழுவதும்) அல்லாஹ்வுக்கு உரித்தானதாகும் வரை அவர்களுடன் நீங்கள் போரிடுங்கள்." என்று அல்லாஹ் இவ்வசனத்தில் (அல் குர்ஆன்.2:193.) கூறவில்லையா?" என்று கேட்டார்கள்.
அதற்கு இப்ன் உமர் (ரலி) அவர்கள்,
"(ஆம்! இறைத்தூதர் (ஸல்) அவர்கள் காலத்தில்) குழப்பம் நீங்கும் வரை (பகைவர்களுடன்) நாங்கள் போராடினோம். மார்க்கம் (முழுவதும்) அல்லாஹ்வுக்கு உரித்தானதாக ஆனது. ஆனால் (இப்போது) நீங்களோ (அரசியல் காரணங்களுக்காகப்) போராடி குழப்பம் உருவாகுவதையும், மார்க்கம் அல்லாஹ் அல்லாதோருக்கு உரித்தானதாக ஆவதையுமே விரும்புகிறீர்கள்!" என்றார்கள்.
அறிவிப்பாளர்: நாபிஉ (ரஹ்). நூல்: புஹாரி.4513.

ரஹ்மத் ராஜகுமாரன்

செய்நன்றிக்கு பரிசு

வாய் இல்லா உலகம் 9



ஒரு கட்டெறும்பு தண்ணீரில் தத்தளித்துக் கொண்டிருந்தது.
மரத்திலிருந்து இதைப் பார்த்த புறா ஒன்று மரத்திலிருந்த இலை ஒன்றைப் பறித்து நீரில் வீசியது.
எறும்பும் தத்தித் தத்தி வந்து அந்த இலையின் மேல் ஏறிக் கொண்டது. அந்த இலை காற்றில் அசைந்து மெதுவாகக் கரைப்பக்கம் ஒதுங்கக் கரையில் ஏறி தப்பியது அந்த எறும்பு.

மற்றொரு நாள் ஒரு வேடன் அந்த புறாவைக் குறி வைப்பதைப் பார்த்தது அந்த எறும்பு. ஆனால் புறாவோ இதை அறியாமல் வேறெங்கோ கவனமாக இருந்தது. அன்று தன்னைக் காப்பாற்றிய புறாவின் உயிரைக் காப்பாற்ற வேண்டியது தனது கடமையாக எண்ணியது எறும்பு.
விரைந்து சென்று வேடனின் காலில் நறுக்கென்று கடித்தது.
கடியின் வலி தாங்க முடியாமல் கத்திய வேடனின் குறி தப்பியது.
சத்தத்தைக் கேட்டுத் திரும்பிய புறா தனக்கேற்படவிருந்த ஆபத்தை அறிந்து அந்த இடத்தை விட்டுப் பறந்தது.
அன்று புறா நமக்கென்ன என்று அலட்சியமாயிருக்காமல் உதவி செய்ததால்தான் புறாவின் உயிர் தப்பியது. அந்த சிறிய உருவம் கொண்ட எறும்பும் நன்றி மறக்காமல் செயல்பட்டது.
எவருக்கும் எந்த நேரத்திலும் நம்மால் முடிந்த உதவியைச் செய்ய வேண்டும். அது போல் நமக்குச் செய்த நன்றியையும் எந்தக் காலத்திலும் மறக்கக் கூடாது.

மக்காவில் இனி வாழ இயலாது என்கிற அளவுக்கு நிலைமை முற்றியது. நபி (ஸல்) அவர்கள் தோழர் அபூபக்கர் ( ரலி) அவர்களுடன் மக்காவைத் துறந்து மதீனாவுக்குப் புறப்பட்டார்கள்.
நபிகளார் தப்பி விட்டதாக குறைஷித் தலைவர்களுக்கு தெரிய வருகிறது. அவசர கூட்டம் கூட்டி "முஹம்மதுவை உயிருடனோ அல்லது பிணமாகவோ பிடித்துக் கொண்டு வந்து ஒப்படைத்தால் 100 ஒட்டகங்கள் சன்மானம்" தமுக்கடிப்பவன் அறிவிப்பு செய்ய....
மக்கா நகர் பரபரப்பாகிறது. சுராகா இப்னு ஜஅஷம் என்கிற குதிரை வீரர் சிறந்த வில்லாளி' உத்வேகமும் கொண்டவர். அம்பறாத் துணியை முதுகில் மாட்டிக் கொண்டு குதிரை மீதெறி பறக்கிறார்.

".... அதோ முஹம்மது " சுராகாவின் கண்கள் கண்டு கொண்டன .அம்பு எய்யும் எல்லை வந்தவுடன் , அம்பை நாணில் பூட்டியதுதான் தாமதம் .அவரின் குதிரைஅடி வயிறு பூமியை தொடும் வரை மண்ணில் புதைந்தன.
குதிரையோடு குப்புற விழுந்த சுராகா "இது புதை குழியோ .....அட, முஹம்மது தப்பி விடுவாரே ....குதிரை எழுப்பி மீண்டும் ஏறி விரட்டி , இப்போ மிகச் சரியான அம்பின் எல்லை வச்ச குறி
தப்பாது " என்றெண்ணி நாணை இழுக்க.... மீண்டும் தொப்க்கடீர் குதிரை மண்ணில் அடி வயறு வரை புதைகிறது .
மூன்றாவது முறையாக மீண்டும் அம்பை நாணில் பூட்டி .... குதிரை மண்ணில் புதைந்து பாதியளவு ஆனது.
நாம யாரை பிடிக்க வந்தோமோ அந்த முஹம்மது நம்மை பிடித்துக் கொண்டார். "முஹம்மதே...! என்னை மன்னித்து விடுங்கள் நீங்கள் உண்மையிலேயே இறைத்தூதரே என்னை மன்னித்து விடுங்கள் முஹம்மதே " அவரை அறியாமலேயே அவரின் வாய் கலிமாவை மொழிந்தது.

நூறு ஒட்டகத்தைப் பெறத் துடித்த சுராகா நூரே முஹம்மதிய்யா வைப் பெற்றுக் கொண்டார் .
நபிகளார் அவரை மன்னித்ததோடு "சுரகா ....என்னைக் கண்டதை யாரிடமும் சொல்ல வேண்டாம் . இதற்குரிய பகரமாக பாரசீக மன்னர் குஸ்ரூ வின் காப்பு உமக்கு அணிவிக்கப்பட்டு மிக மேலான கௌரவத்தை நீங்கள் அடையப் பெறுவீர்கள்" என்று அவருக்கு முன்னறிவிப்பு செய்தார்கள் .

காலச் சக்கரம் சுழன்று கொண்டிருந்தது. சுரகா இஸ்லாத்திற்கு வந்து மதீனாவில் சேர்ந்தார்.
தட்ப வெப்ப நிலை மாறி உடல் நிலை பாதிக்கப்படும் பொழுதெல்லாம் , "இந்த நோய் முற்றாது .எனக்கு இப்போது மரணம் இல்லை " என்று சுரகா சொல்வது வழக்கம் . காரணம் விளக்காது மக்கள் திகைப்படைவார்கள் .
உமர் (ரலி) அவர்களின் ஆட்சி காலத்தில் இஸ்லாமியப் படைத் தளபதி இணையற்ற வீரர் சஅத் இப்னு அபீ வக்காஸ் (ரலி) அவர்கள் பாரசீகத்தை முறியடித்து வெற்றி பெற்ற போது , கணக்கற்ற போர்ச் செல்வங்களை கலீஃபா உமர் (ரலி) அவர்களின் காலடியில் கொண்டு வந்து குவித்தார் .அந்த மலையளவு குவியலில் பாரசீகப் பேரரசர் பர்வேஸ் குஸ்ரூ வின் காப்பும் அதில் கிடந்தது.

உமர் (ரலி) அவர்கள் அந்தக் காப்பை எடுத்து சுரகாவின் கைகளில் அணிவித்து அழகு பார்த்த போது, "பாரசீக மன்னர் குரூஸின் காப்பு உமக்கு அணிவிக்கப்பட்டு கௌரவிக்கப்படுவீர்கள்" திரு நபிகளாரின் தூய மொழிகள் சுரகா (ரலி) அவர்களின் காதில் ஒலிக்க கண்களில் கண்ணீர் பளித்தது.
"நான் சாக மாட்டேன்" என உறுதியாக பல முறை சுராகா கூறியதன் காரணத்தை .அவருடைய உறவினர்களும் , நபித்தோழர்களும் இப்போது உணர்ந்து கொண்டனர்.

ரஹ்மத் ராஜகுமாரன்.

வஞ்சகக் கொக்கு

வாய் இல்லா உலகம் 10



வசந்த புரம் என்றொரு ஊர் இருந்தது. அழகிய வனாந்தரமும் நீர் நிலைகளும் இருக்கும் அந்த ஊரில் ஒரு பெரிய குளம்
இருந்தது.
அதில் ஒரு கொக்கு தினசரி மீன் பிடித்து உண்பதை
வழக்கமாகக் கொண்டிருந்தது. தினசரி அதிக நேரம்
காத்திருந்து மீனைப் போராடிப் பிடிப்பதால் கொக்கு
சலிப்புற்றிருந்தது.
ஒரு நாள் கொக்கின் மூளையில் ஒரு யோசனை தோன்றியத
இந்த மீன்களை அவைகளின் சம்மதத்தோடே நாம் விரும்பிய இடத்தில் கொண்டு போய் தின்றால் எப்படி இருக்கும் என்று யோசித்தது. அதற்கு ஒரு வஞ்சகமான திட்டமும் தயாரித்தது.
ஒரு நாள் கொக்கு வருத்தமுடன் ஒற்றைக் காலில் நின்று
கொண்டிருந்தது. துள்ளிக் கொண்டிருந்த மீன்களில் ஒன்றுக்கு சந்தேகம் வந்தது.

“கொக்கு நம்மைப் பார்த்தவுடன் கவ்விக் கொள்ளுமே. சும்மாவிடாதே, ஆனால் இது செயலற்று நிற்கின்றதே என்னவாக
இருக்கும்” என்று, யோசித்தவாறே அதன் முன் வந்தது.
“என்ன கொக்காரே! உன் ஆகாரத்தைக் கொத்தாமல் சும்மா
நிற்கிறீர்”? என்றது. அதற்கு கொக்கு கூறிற்று "நான்
மீனைகொத்தித் தின்பவன்தான், ஆனாலும் இன்று எனக்கு
மனசு சரியில்லை" என்றது.
“மனசு சரியில்லையா ஏன்”? என்றது மீன்.
''அதையேன் கேட்கிறாய்..” என்று அலட்டியது கொக்கு.
"பரவாயில்லை சொல்லுங்களேன்' என்றது மீன். சொன்னால் உனக்கு அதிர்ச்சியாக இருக்கும் என்றது மீன்.
மீனுக்குப் பரபரத்தது. “சொன்னால்தான் தெரியும்” என்றது.
“வற்புறுத்திக் கேட்பதால் சொல்கிறேன். இப்போது ஒரு
மீனவன் இங்கே வரப்போகிறான்”, என்று இழுத்தது கொக்கு.
"வரட்டுமே" என்றது மீன்.. “என்ன வரட்டுமே? உங்களையெல்லாம் ஒட்டுமொத்தமாகப் பிடித்துச் சென்றுவிடப் போகிறான்” என்றது கொக்கு.
இதைக் கேட்ட மீன்கள் அனைத்தும் அதிர்ச்சியடைந்தன.
அவை தங்களைக் காப்பாற்றுமாறு கொக்கிடமே வேண்டின.
ஆனால் கொக்கு "நான் என்ன செய்வேன்? என்னால்
மீனவனோடு சண்டை போட முடியாது. கிழவன் நான்,
வேண்டுமானால் உங்களை இக்குளத்திலிருந்து வேறொரு
குளத்துக்குக் கொண்டு போகிறேன். அதனால் எனக்கும் நல்ல பெயர் வரும். நீங்களும் பிழைத்திருப்பீர்கள்", என்றது மிகவும் இறக்கம் கசிய.
மீன்கள் எல்லாம் தம் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள அதன் பேச்சை நம்பின.
“எங்கள் உயிரைக் காக்க நீங்களே உதவி செய்கிறேன்
என்கிறீர்கள். அதன்படியே செய்யுங்கள்”, என்றன மீன்கள்
எல்லாம் ஒருமித்த குரலில்.
கொக்குக்குக் கசக்குமா காரியம்?. நடைக்கு ஒவ்வொன்றாக
குளத்திலிருக்கின்ற மீன்களையெல்லாம் கௌவ்விக்
கொண்டுபோய் சில மீன்களைத் தின்று, மற்ற மீன்களை ஒரு பாறையில் உலரவைத்து.
குளத்திலிருந்த நண்டு ஒன்று இதைப் பார்த்துக் கொண்டே
இருந்தது. அதற்கும் வேறு குளத்திற்குச் செல்ல உள்ளுக்குள் உயிர் ஆசை சுரந்தது.
அந்த நண்டு கொக்கிடம் வந்து “வயோதிகக் கொக்கே! இந்த
மீன்களையெல்லாம் எங்கே கொண்டு போகிறீர்களோ
அங்கேயே என்னையும் கொண்டு போங்கள், என்னையும்
மீனவனிடமிருந்து காப்பாற்றுங்கள்”, என்று கெஞ்சியது.
நண்டு கெஞ்சுவதைப் பார்த்த கொக்கு அதன் மேல்
இரக்கப்பட்டு நண்டையும் கௌவிக்கொண்டு பறந்தது.
பறக்கும் போது வழியில் மீன்களின் முள்ளுடல்கள்
ஆங்காங்கே சிதறிக் கிடப்பதை கண்டது நண்டு.
அதைப் பார்த்த நண்டுக்கு ஒரே அதிர்ச்சி.
வேறு நீர்நிலைக்குக் கொண்டுச் செல்வதாகக் கூறி
மீன்களைத் தின்றுவிடும் கொக்கின் வஞ்சகம் நண்டுக்குச்
சட்டென்று புரிந்துவிட்டது. தன் நிலையும் அப்படித்தானா?
என்று நண்டு பயப்படத் துவங்கியது.
உயிரைக் காப்பாற்றிக் கொள்ள நண்டுக்கு ஒரு உபாயம்
தோன்றியது. வைரத்தை வைரத்தால் அறுப்பது போல் அதற்கு மூளை வேலை செய்தது. கொக்காரே! நீங்கள் என்மேல்
இரக்கப்பட்டு எடுத்துக்கொண்டு வந்தீர்கள். ஆனால் அங்கே
என் உறவினர்கள் பலர் வரப்போகும் ஆபத்து தெரியாமல்
இருப்பதால், என்னை மீண்டும் அங்கே கொண்டு சென்றால்,
அவர்களிடம் விஷயத்தைச் சொல்லி அவர்களையும்

உங்களுடன் வரத் தயார் செய்வேன்" என்றது நண்டு.
கொக்குக்கு ஒரே சந்தோஷம். இன்னும் நிறைய நண்டுகள் கிடைக்கப் போவதை நினைத்து மகிழ்ச்சி அடைந்து.
“அப்படியா, இன்னும் இருக்கிறதா நண்டுகள்?”. என்று கேட்டுக் கொண்டே பழைய குளத்திற்கு மீண்டும் நண்டைக் கொண்டு போனது.
குளத்துக்கு நேராக வரும்போதும் அதுவரை அமைதியாக இருந்த நண்டு தன் கொடுக்கினால் கொக்கின் கழுத்தை இரண்டு துண்டாக்கிவிட்டுக் குளத்து நீரில் வீழ்ந்து உயிர் பிழைத்துக் கொண்டது.
குளத்தில் மிச்சம் இருந்த மீன்கள் பிழைத்துக் கொண்டன.

'நயவஞ்சகனின் அறிகுறிகள் மூன்று. பேசினால் பொய்யேபேசுவான்; வாக்களித் தால் மீறுவான்; நம்பினால் துரோகம் செய்வான்' என்று இறைத் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்'.
(அறிவிப்பவர்: அபூஹுரைரா-ரலி, நூல்:புகாரி)

அன்ஸார்களாகிய மதீனவாசிகளின் கிளைக் கோத்திரங்களாகிய அவுஸ், கஸ்ரஜ் கோத்திரங்களுக்கு மத்தியில் நடந்துவந்த போர்ச் சூழலை இஸ்லாம் மாற்றியது.
மதீனாவில் சகோதரத்துவம் நிலவி துவங்கியது. உத்தமத் திருநபி (ஸல்) அவர்கள் மதீனாவில் இஸ்லாமிய பேரரசின் தலைவராக நிகழ்தார்கள். எனவே தனக்கு கிடைக்கும் என எதிர்பார்த்திருந்த தலைமைத்துவம் பறிபோய் விட்டதை ஜீரணிக்கவியலாத அப்துல்லாஹ் பின் உபை பின் ஸலூல் என்ற நயவஞ்சகன், தன் நயவஞ்சக கூட்டத்திற்கு தலைவனாக செயலாற்றத் துவங்கினான்.

இவனும் இக்கூட்டத்தாரும் போரில் புறமுதுகு காட்டி ஓடினர். முஸ்லீம்கள் என்ற போர்வையிலேயே ஊடுறுவிய நயவஞ்சகர்கள், ஒன்றுபட்டிருந்த முஸ்லிம் சமூகத்தை இரண்டாக உடைப்பதற்காக தனிப் பள்ளிவாயில் கட்டினர்.
நபி (ஸல்) அவர்களையும் அவர்களின் குடும்பத்தினரின் கண்ணியத்தை கொச்சைப் படுத்தும் நோக்கத்தில் நபி (ஸல்) அவர்களின் மனைவி மீது அவதூறைப் பரப்பினர்.
நபி (ஸல்) அவர்களையும் முஸ்லிம்களையும் பூண்டோடு அழிக்கத் திட்டமிட்டு, இஸ்லாமிய எதிரிகளுடன் இரகசியமாகக் கைகோர்த்திருந்தனர். இவ்வாறு அவர்களின் ஈனச் செயல்களின் பட்டியல் நீள்கிறது.

5353. ஸைத் பின் அர்கம் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் ஒரு பயணத்திற்காகப் புறப்பட்டோம். அப்பயணத்தில் (உணவுப் பற்றாக்குறையால்) மக்களுக்குச் சிரமம் ஏற்பட்டது.
அப்போது (நயவஞ்சகர்களின் தலைவர்) அப்துல்லாஹ் பின் உபை பின் சலூல் தம் நண்பர்களிடம், "அல்லாஹ்வின் தூதருடன் இருக்கும் இவர்களுக்கு நீங்கள் செலவு செய்யாதீர்கள். அவர்கள் அல்லாஹ்வின் தூதரிடமிருந்து விலகிச் சென்றுவிடுவார்கள்" என்றும், "நாம் மதீனாவுக்குத் திரும்பிச் சென்றால், (எம்முடைய இனத்தாரான) கண்ணியவான்கள் இழிந்தோ(ராகிய முஹாஜி)ர்களை அங்கிருந்து வெளியேற்றிவிடுவர்" என்றும் சொன்னான்.

நான் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் சென்று, அ(வர் சொன்ன)தை அவர்களிடம் தெரிவித்தேன். அப்போது அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், அப்துல்லாஹ் பின் உபையிடம் ஆளனுப்பினார்கள். (அவர் வந்தவுடன்) அவரிடம் (அது குறித்துக்) கேட்டார்கள்.
தாம் அப்படிச் செய்யவேயில்லை என்று அவன் சத்தியம் செய்து சாதித்தார். அவர், "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஸைத் பொய் சொல்லிவிட்டார்" என்று (என்னைப் பற்றிக்) கூறினார். (அவருடன் சேர்ந்து) மக்களில் சிலரும் அப்படிச் சொன்னதால் என் உள்ளத்தில் கடுமை(யான வேதனை) ஏற்பட்டது. அப்போது என் வாய்மையைக் குறிக்கும் வகையில் "(நபியே!) இந்த நயவஞ்சகர்கள் உங்களிடம் வருகின்றபோது..." (63:1) என்று தொடங்கும் வசனத்தை அல்லாஹ் அருளினான்.

பிறகு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அந்த நயவஞ்சகர்களுக்காகப் பாவமன்னிப்புக் கோர அவர்களை அழைத்தார்கள். (அவர்கள் அதற்கு இணங்காமல்) தமது தலையைத் திருப்பிக் கொண்டார்கள்.

நயவஞ்சகர்களின் தலைவனாகத் திகழ்ந்த) அப்துல்லாஹ் இப்னு உபை இறந்து விட்டான். அப்போது அவனுடைய (முஸ்லிமான) மகன், நபி(ஸல்) அவர்களிடம் வந்து, 'இறைத்தூதர் அவர்களே! அவரை கஃபனிடுவதற்காக உங்கள் சட்டையைத் தாருங்கள்! மேலும் நீங்கள் அவருக்கு ஜனாஸாத் தொழுது. அவருக்காகப் பாவமன்னிப்பும் கேட்கவேண்டும்' என்று கோரினார்கள்.

உடனே நபி(ஸல்) அவர்கள் தமது சட்டையை அவருக்குக் கொடுத்துவிட்டு, '(கஃபனிட்டு ஆயத்தமானதும்) எனக்குத் தெரிவியுங்கள்;! நான் ஜனாஸாத் தொழுகை நடத்துவேன்' என்றார்கள்.
பிறகு அறிவிக்கப்பட்டதும் நபி (ஸல்) அவர்கள் அவனுக்கு ஜனாஸாத் தொழ நாடியபோது, உமர்(ரலி) நபி(ஸல்) அவர்களை இழுத்து, 'நயவஞ்சகர்களுக்கு ஜனாஸாத் தொழக் கூடாது! என அல்லாஹ் உங்களைத் தடுக்கவில்லையா?' எனக் கேட்டார்கள்.

அதற்கு நபி(ஸல்) அவர்கள் '(ஜனாஸாத் தொழுவது, தொழமலிருப்பது என) இரண்டில் எதையும் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் உரிமை எனக்கு உள்ளது' எனக் கூறிவிட்டு, 'நீர் நயவஞ்சகர்களுக்குப் பாவமன்னிப்புத் தேடினாலும் அல்லது தேடாமலிருந்தாலும் சமமே! நீர் அவர்களுக்காக எழுபது முறை பாவமன்னிப்புத் தேடினாலும் அல்லாஹ் அவர்களை மன்னிக்கப் போவதே இல்லை' என்ற (அல்குர்ஆன் 09:80) வசனத்தை ஓதிக்காட்டி விட்டு ஜனாஸாத் தொழுதார்கள்.
உடனே 'அ(ந்நய)வ(ஞ்சக)ர்களில் யாரேனும் இறந்தால் அவர்களுக்காக ஒருபோதும் (ஜனாஸாத்) தொழ வேண்டாம்' என்ற (அல்குர்ஆன் 09:84) வசனம் அருளப்பட்டது. (அறிவிப்பவர்: இப்னு உமர் -ரலி, நூல்: புகாரி 1269)

5354. ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
நபி (ஸல்) அவர்கள் (நயவஞ்சகர்களின் தலைவர்) அப்துல்லாஹ் பின் உபையின் (பிரேதம் சவக்குழிக்குள் வைக்கப்பட்ட பிறகு அந்த) சவக்குழிக்கு வந்து, அந்தப் பிரேதத்தை வெளியே எடுத்துத் தமது மடியில் வைத்து, அதன் மீது தமது உமிழ்நீரை உமிழ்ந்து, தமது அங்கியையும் அதற்கு அணிவித்தார்கள். (இதற்குக் காரணம் என்னவோ) அல்லாஹ்வே அறிந்தவன்!

ரஹ்மத் ராஜகுமாரன்

## இயற்கையின் தேர்ந்தெடுப்பு 1



இயற்கை என்பது இயல்பாக இருக்கும் தோற்றப்பாடு
என்னும் பொருள் கொண்டது. இயல்பாகத் தோன்றி மறையும் பொருட்கள், அவற்றின் இயக்கம், அவை இயங்கும் இடம், இயங்கும் காலம் மற்றும் பருவ நிலைகள் ஆகியவை அனைத்தையும் இணைத்து "இயற்கை" என்கின்றோம்.

உயிரினம், உயிரின அறிவு போன்றவையும் இயற்கையில் அடங்கும். பொதுவாக இயற்கையை ஆய்வு செய்வதென்பது அறிவியலின் மிகப்பெரிய ஒரு பகுதியாகும். மனிதர்களும் இயற்கையின் ஒரு பகுதியே ஆவர். மற்ற இயற்கை நிகழ்வுகளிலிருந்து மனிதனின் நடத்தைகள் முற்றிலும் வேறுபட்ட தனியான ஒரு பிரிவு என்று பெரும்பாலும் கருதப்படுகிறது.

இதில் இயற்கையின் தேர்ந்தெடுப்பு **( Netural selection )** என்னும் முறையின் வாயிலாக உருமலர்ச்சி **(Evolution)** ஏற்படுகிறது என்னும் உயிரியல் கோட்பாட்டினை வகுத்த ஆங்கில விஞ்ஞான சார்லஸ் டார்வின் கூட இறைவனின் படைப்பு என்பதை தவிர்த்து அது இயற்கையின் வடிவமைப்பு என்பதாக பகர்ந்தார்.

இயற்கையின் தேர்வு என்பது இறைவனின் தேர்ந்தெடுப்பே ஆகும் . விஞ்ஞானிகள் தங்கள் நாத்திக கொள்கைக்கு தக்கவாறு இறைவனை இயற்கையின் வடிவமாக ஏற்றுக் கொள்கிறார்கள் . ஆனால் அல்லாஹ் தன் அடியார்களுக்கு அறிமுகப்படுத்தும் மார்க்கத்தை இயற்கை மார்க்கம் என்றே குர்ஆனில் குறிப்பிடுகின்றான்.

فَاَقِمْ وَجْهَكَ لِلدِّيْنِ حَنِيْفًا ؕ فِطْرَتَ اللّٰهِ الَّتِىْ فَطَرَ النَّاسَ عَلَيْهَا ؕ لَا تَبْدِيْلَ لِخَـلْقِ اللّٰهِ ؕ ذٰ لِكَ الدِّيْنُ الْقَيِّمُ ۙ وَلٰـكِنَّ اَكْثَرَ النَّاسِ لَا يَعْلَمُوْنَ ۙ
(நபியே! இப்ராஹீமுடைய) நேரான மார்க்கத்தை நோக்கி நீங்கள் உங்களுடைய முகத்தை உறுதியான ஓர்மைப்பாட்டுடன் திருப்புங்கள். (அதுவே) மனிதர்களுக்காக அல்லாஹ் ஏற்படுத்திய இயற்கை மார்க்கமாகும். அவன் படைத்த (மார்க்கத்)தை (எவராலும்) மாற்றிவிட முடியாது. இதுதான் நிலையான மார்க்கம். எனினும், மனிதரில் பெரும்பாலானவர்கள் (இதனை) அறிந்துகொள்ளவே மாட்டார்கள். (அல்குர்ஆன் : 30:30)

ஆயிரமாயிரம் அண்டங்களில் ஒன்றில் நம் சூரியனை தேர்ந்தெடுத்து , அந்த சூரிய மண்டலத்தில் ஒன்பது கோள்களை படைத்து , அவற்றின் ஒன்றே ஒன்றில் உயிர்களைப் படைக்க, உயிர்க்கோளமாக பூமியை தேர்ந்தெடுத்ததும் இறைவன்தான்.
இந்த பூமி என்ற உயிர்க்கோளத்தில் மனிதர்கள் வாழ்வதற்கு வசதியாக இயற்கையை வடிவமைத்ததும் அவனே.

الَّذِىْ جَعَلَ لَـكُمُ الْاَرْضَ فِرَاشًا وَّالسَّمَآءَ بِنَآءً وَّاَنْزَلَ مِنَ السَّمَآءِ مَآءً فَاَخْرَجَ بِهٖ مِنَ الثَّمَرٰتِ رِزْقًا لَّـكُمْ فَلَا تَجْعَلُوْا لِلّٰهِ اَنْدَادًا وَّاَنْـتُمْ تَعْلَمُوْنَ
அவனே பூமியை நீங்கள் வசிக்கும் இடமாகவும், வானத்தை ஒரு முகடாகவும் அமைத்து, மேகத்திலிருந்து மழையைப் பொழிவித்து, அதனைக் கொண்டு (நீங்கள்) புசிக்கக்கூடிய கனி வர்க்கங்களையும் உங்களுக்கு வெளியாக்குகின்றான். ஆகவே (இவைகளையெல்லாம்) நீங்கள் தெளிவாக அறிந்துகொண்டே அல்லாஹ்வுக்கு எதனையும் இணையாக்காதீர்கள். (அல்குர்ஆன் : 2:22)

இதெல்லாம்தான் இயற்கையின் தேர்ந்தெடுப்பு எனப்படுகிறது.
ஆண் வெளிப்படுத்தும் 30 கோடி விந்தணுவில் ஒரே ஒரு விந்தணு மட்டுமே பெண் சினைமுட்டைக்குள் புகுந்து கருவாகி உருவான ஒவ்வொரு மனிதனும் 30 கோடியில் ஒருவன் என்ற இயற்கையின் தேர்ந்தெடுப்பு .
இந்த இந்த காலத்தில் இங்கே ஹிட்லர் பிறக்க வேண்டும். அங்கே தெரஸா பிறக்க வேண்டும் என்ற இந்த இயற்கையின் தேர்ந்தெடுப்பு மனிதர்களிடம் மட்டும் அல்ல , ஒவ்வொரு உயிரினத்திலும் தொடர்கிறது
.
وَعِنْدَهٗ مَفَاتِحُ الْغَيْبِ لَا يَعْلَمُهَاۤ اِلَّا هُوَ ؕ وَيَعْلَمُ مَا فِى الْبَرِّ وَالْبَحْرِ ؕ وَمَا تَسْقُطُ مِنْ وَّرَقَةٍ اِلَّا يَعْلَمُهَا وَلَا حَبَّةٍ فِىْ ظُلُمٰتِ الْاَرْضِ وَلَا رَطْبٍ وَّلَا يَابِسٍ اِلَّا فِىْ كِتٰبٍ مُّبِيْنٍ
மறைவானவற்றின் சாவிகள் அவனிடமே இருக்கின்றன. அவற்(றில் உள்ளவற்)றை அவனையன்றி வேறெவரும் அறிய மாட்டார். நிலத்திலும், நீரிலும் உள்ளவைகளையும் அவன் நன்கறிவான். அவன் அறியாமல் யாதொரு இலையும் உதிருவதில்லை. பூமியின் (ஆழத்தில்) அடர்ந்த இருளில் (புதைந்து) கிடக்கும் (கடுகு போன்ற சிறிய) வித்தும், பசுமையானதும், உலர்ந்ததும் அவனுடைய தெளிவான (பதிவுப்) புத்தகத்தில் இல்லாமலில்லை.
(அல்குர்ஆன் : 6:59)

ரஹ்மத் ராஜகுமாரன் .

காலச் சூழ்நிலைக்கேற்ற படைப்பினங்கள்

இயற்கையின் தேர்ந்தெடுப்பு 2



பெரு வெடிப்பு மூலம் நம் பிரபஞ்சம் 1500 கோடி வருஷங்களுக்கு முன்னர் படைக்கப்பட்டது.
இறைவன் தன்னை அடிபணிந்து தன்னைத் துதித்துக் கொண்டிருக்கும் படைப்பினங்களாக, புகை அகற்றப்பட்ட தெளிந்த ஒளிபெற்ற நெருப்பினால் வானவர்களைப் படைத்தான்.
அதன் பின் நம் பூமி 454 கோடி வருஷங்களுக்கு முன்னர்தான் படைக்கப்பட்டது. அது படைக்கப்படும் போது நெருப்பு கோளமாகத்தான் பூமி முதலில் இருந்தது. இந்த நெருப்பு கோளத்தில் வாழக் கூடிய படைப்பினங்களாக நெருப்பும் காற்றும் கலந்த புகை சூழ்ந்த நெருப்பினால் "தார்னூஷ் "என்ற ஜானை ஜின்களின் ஆதித் தந்தையைப் படைத்தான்.
அவரின் வழித்தோன்றல்களாக அவருடைய சந்ததிகளை அனுப்பி அவர்களுக்கு என்று ஒரு சட்டத்தையும் வழங்கி அதன்படி செயலாற்றுமாறு இறைவன் பணித்தான். நாளடைவில் அவர்களின் வழித்தோன்றல்கள் நெறிதவறி இறைவனுக்கு மாறு செய்ய தொடங்க, அவர்களை அழித்து ஒழித்தான் இறைவன் .

பல யுகங்களுக்கு பின் ஜின் இனத்தில் இன்னொரு சமுதாயத்தவரை படைத்தான்.அவர்களுக்கென்று ஒரு சட்டத்தையும் **"ஹலியயிஷ் "** என்னும் பெயருடைய ஒரு தலைவரையும் அனுப்பினான். அவர்களும் நாளடைவில் ஒழுக்கம் கெட்டு நெறிதவறி சென்றனர்.எனவே அவர்களையும் அழித்து ஒழித்தான் .
பல யுகங்களுக்கு பின் **ஜின் இனத்தில் "மலிகா** " என்ற தலைவரையும் அவருடைய சமுதாயவரையும் படைத்தான் . பின் நெறி தவற அவர்களையும் அழித்தான் .

பல யுகங்களுக்கு பின் ஜின் இனத்தில் **ஹமூஸ்** என்ற தலைவரையும் அவருடைய சமுதாயவரையும் படைத்தான். அவர்களும் நெறி தவற அவர்களை அழிப்பதற்காக வானவர்களை மண்ணகத்து இறைவன் அனுப்பி வைத்தான். அவர்கள் அந்த ஜின் இனங்களை அழித்தார்கள் .அவர்களில் சிலர் தப்பி தீவுகளிலும் பாழடைந்த இடங்களிலும் அடைக்கலம் புகுந்தனர் . ஏனையோர் சிறை செய்யப்பட்டு விண்ணகம் கொண்டு செல்லப்பட்டனர்.அவ்வாறு கொண்டு செல்லப்பட்டவர்களில் ஒருவனாக "அஸாஸீல் " என்பவனும் இருந்தான்.

விண்ணகம் சென்ற **அஸாஸீல்** அங்கு கல்வி கேள்விகளில் மிகைத்து வானவர்களுக்கு கல்வி போதிக்கும் தன்மையை பெற்றான் அவனைச் சூழ வானவர்கள் குழுமி நின்றனர்.
இப்படியே பல யுகங்கள் கடந்தபின் பூமியில் தீவுகளிலும் பாழடைந்த இடங்களிலும் அடைக்கலம் புகுந்த ஜின் இனங்கள் பல்கிப் பெருகின . இறைவனின் அனுமதிபெற்று வானவர்களுடன் மண்ணகம் வந்தான் அஸாஸீல்
அவனை ஜின்கள் தங்களின் தலைவராக ஏற்றுக் கொண்டனர்
பின்னர் விண்ணகம் சென்ற **அஸாஸீல், "ஸஹ்லூப் இப்னு முல்லாத்துப் "** என்பவரை ஜின்களுக்கு நேர்வழி காட்ட மண்ணகம் அனுப்பி வைத்தான். அவரை அவர்கள் கொன்று விட்டார்கள்.
அவரிடமிருந்து யாதொரு செய்தியும் வராததை கண்ட அவன், பூமியின் நிலைமை அறிந்து வருவதற்காக மற்றொருவரை அனுப்பிவைத்தான் . அவருக்கும் அதே கதியை ஏற்பட்டது .

இறுதியாக யூசுப் இப்னு யூசுப் என்பவரை மண்ணகம் அனுப்பிவைத்தான் அஸாஸீல் . ஜின்கள் பல சூழ்ச்சிகள் செய்தன. எனினும் அவர் உயிர் தப்பி விண்ணகம் வந்து, நடந்ததை அவனிடம் கூறினார் . அதுகேட்டு அஸாஸீல் கொதித்து எழுந்தான். அதன்பின் அஸாஸீல் இறைவனின் அனுமதி பெற்று வானவர்களையும் தன்னுடைய

துணைக்கு அழைத்துக் கொண்டு மண்ணகம் வந்து ஜின்களுடன் போர் செய்து அவர்களை முறியடித்து அடிபணியச் செய்தான் .

இறைவன் அவனுக்கு மண்ணகத்து ஆட்சியையும், முன் வானத்தின் அரசுரிமையையும் கொடுத்ததோடு சுவனக் கருவூலத்தையும் வழங்கினான். இதன் காரணமாக அவன் விண்ணகத்திற்கு மண்ணகத்திற்கும் வரப்போக இருந்தான். இதிலிருந்து **அஸாஸீல்** பெருமை அதிகரித்தது . "இறைவனுக்கு அடுத்தபடியாக நான்தான் என்னைத் தவிர வேறு எவருமில்லை என்பதாக அவன் நினைத்துக் கொண்டான்.
ஒருநாள் வானவர்கள் **லவ்ஹுல் மஹ்பூல்** பலகையின் அருகில் சென்றபோது அதில் "இறை அண்மையை நெருங்கிய ஒருவர் என்றென்றும் இறை சாபத்திற்கு இலக்காகி இழிவடைவார் " என்று குறிக்கப்பட்டு இருப்பதைக் கண்டதும் அது அவர்களைப் பெரும் துயரத்தில் ஆழ்த்தியது . அவர் எவராக இருக்கும் ஒருவேளை நாமாக இருப்போமா என்னும் வினாக்கள் வானவர்களின் மனதில் எழுந்தன .

இதனை அவர்கள் அறிந்துகொள்ள அஸாஸீலிடம் கேட்டனர் "அதைப்பற்றி கவலைப்படாதீர்கள்.நானும் அல்ல , நீங்களும் அல்ல என்பதைப் பற்றி நான் எவ்வளவோ நாட்களுக்கு முன்பே அறிவேன் "என்றான் அவன் . அது தான்தான் என்பதை அவன் அறிந்து கொள்ளவே இல்லை அந்த கேடு கெட்ட இப்லீஸ் .
இவ்வாறு ஒன்றன் பின் ஒன்றாக 18 ஜின் இன படைப்புகளை பல்வேறு உருவங்களில் இறைவன் படைத்தான் என்றும், அவற்றில் ஒரு படைப்பினத்திற்கு முன்னும் பின்னும் இரண்டு முகங்கள் இருந்தன என்றும் , மற்றொரு படைப்பதற்கு முகம் மனிதர்களின் முகம் போன்றும், முதுகு ஆமையின் முதுகு போன்றும் இருந்தன என்றும்,அதன் தலையில் கொம்புகள் இருந்தன என்றும், அதன் பேச்சு நாய் குறைப்பது போல் இருந்தது என்றும் கூறப்படுகிறது.

இத்தனை யுகங்கள் கடந்த போதும் பூமி அன்றுதான் படைக்கப்பட்ட நிலையில் நெருப்பு குழம்பாக கொதித்துக் கொண்டுதான் இருந்தது. இந்த நெருப்புக் குழம்பில் வாழ தகுதியான படைப்பினமாக இயற்கையின் தேர்ந்தெடுப்பாக அதே நெருப்பில் படைத்த ஜின்களைத்தான் இறைவன் வாழவைத்தான் . இதற்கு ஆதாரமாக ...
மிஸ்ஸிஸிப்பி நதியின் மேற்குக்கரையில் செயின்ட் லூயிஸ் என்னும் இடத்தில் ஒரு கற்படுகையை தோண்டி எடுத்தார்கள். அதில் ஒரு ஜோடி மனித கால்களின் காலடிச்சுவடு பதிந்திருக்கிறது !
பத்தரை அங்குல நீளம் , நான்கு அங்குல அகலம் , முன்னங்கால் பகுதியில் இரு பின்னங்கால்களுக்கும் இடையே ஆறேகால் அங்குலமும் , இரு கட்டை விரல்கள் இடையே பதின்மூன்றரை அகலமும் கொண்ட அழுத்தமான கால்தடம் பதிவு அது.

அது பதிந்திருக்கும் விதத்தைப் பார்த்தால் அந்த கற்படுக்கை மிக நெகிழ்வாக, பூமி குழம்பாக இருந்தபோது பதிந்தது என்று சொல்ல முடிகிறது. அத்தனை அழுத்தமாக கால் பதிக்க முடியாது. இதில் என்ன ஆச்சரியம் என்கிறீர்களா ?
பூமிஇயல் , **ஜியாலஜிப்படி** அந்த கற்படுகையின் வயதை அறிவியல் முறையில் மதிப்பிட்டிருக்கிறார்கள்.இந்த காலடிகள் 27 கோடி வருஷங்களுக்கு முன் பதிந்தவை என்று தெரிகிறது.
அப்போது மனிதன் மனித ரூபத்தில்தான் இருந்தனா என்பதற்கோ சக்தி படைத்திருந்தானா என்பதற்கோ , இப்போது நாம் நடப்பது போல் நடந்து கொண்டிருந்தானா அல்லது நம்பவே முடியாத அளவுக்கு வெகுதூரம் வரை பல நாட்கள் விடாமல் நடந்து கொண்டே இருக்கும் சக்தி பெற்றிருந்தானா என்பதற்கோ எந்தவித சாட்சியமும் இல்லை.
ஆனால் மனித இனம் படைக்கப்படுவதற்கு முன்னதாக ஜின் இனத்தை படைத்ததாக குர் ஆனில் ...
وَالْجَآنَّ خَلَقْنٰهُ مِنْ قَبْلُ مِنْ نَّارِ السَّمُوْمِ
அதற்கு முன்னதாக ஜின்களைக் கொடிய உஷ்ணமுள்ள நெருப்பிலிருந்து படைத்தோம்.
(அல்குர்ஆன் : 15:27)

ரஹ்மத் ராஜகுமாரன் .

**Mohamed Rafiq**

எனக்கு நீண்ட காலமாகவே ஒரு சந்தேகம் உள்ளது! உங்களை விட்டால் என் இறுதி வரையில் எனக்கு விடை கிடைக்காமலே போகலாம்!?!?
அல்லாஹ் ஜின்களை படைத்ததையும், பிறகு அதை அழித்து மனிதர்களை படைத்ததையும் பற்றி அல்-குரான் பதிவு செய்து இருக்கிறது!
இடையிலே (டைனோசர்கள்) படைப்பை பற்றி குரானிலோ ஹதீஸிலோ ஏதும் சொல்லப்பட்டு இருக்கிறதா?
ஏன் டைனோசர்கள் எனும் மிருகங்களை படைக்கப்படவேண்டும்?
பிறகு ஏன் அழிக்கப்படவேண்டும்?அதன் அழிவுக்கும் மனிதர்கள் வாழ்விற்கும் ஏதும் சம்பந்தம் உள்ளதா?
நேரம் கிடைக்கும்போது கொஞ்சம் தெளிவாக விளக்குங்களேன் ஆசிரியரே!

**Rahmath Rajakumaran**

**Mohamed Rafiq** ஜின்கள் இப்பூமியில் வாழ்ந்த காலத்தில்தான் டைனோசர்கள் இப்பூமியில் வாழ்ந்திக்கக் கூடும் .6 அடி மனிதர்கள் வாழும் இக்காலத்தில் யானைகள்தான் பெரிய உருவம் .
டைனோசர்கள் பெரிய உருவத்தில் இருந்ததால் அவற்றின் காலத்தில் வாழ்ந்த ஜின்களின் உருவத்தை கற்பனை பண்ணிக் கொள்ளவும்.
சார்லஸ் டார்வின் கொள்கைப்படி உருமலர்ச்சி என்பது வாழும் இடத்தின் காலச் சூழ்நிலைக்கு தக்கவாறு படைப்பில் மாற்றம் இருக்கும் .
நம் இடத்தின் பாம்பு 4 அடி இருந்தால் மலைப்பாம்பு மலையில் 40 அடி இருக்கும் . நம் ஆற்று மீன்கள் 2 கிலோ இருந்தால் , கடலில் புளு திமிங்கம் 100 டன் இருக்கும் .எல்லாமே உருமலர்ச்சி கொள்கை கோட்பாடு

யாருக்கு வெற்றி என்பதை முன்பே தீர்மானிக்கப்பட்டது.

இயற்கையின் தேர்ந்தெடுப்பு 3



மதீனாவைச் சுற்றிலும் வாழ்ந்த பனூ குரைளா என்ற யூதக் குலத்தவர்கள் இஸ்லாத்திற்கு எதிராகத் தொடர்ந்து செயல்பட்டு வந்த காரணத்தாலும், இஸ்லாத்தின் எதிரிகளுக்கு உதவிக்கரம் நீட்டி வந்ததாலும்,
அவர்கள் மீது நடவடிக்கை எடுக்காதபட்சத்தில் முஸ்லிம்களின் நிலை இன்னும் மோசமாக மாறி விடும் என்ற நிலையில், அவர்களே தங்களது தலையில் மண்ணை அள்ளிப் போட்டுக் கொள்ளும் நிலை உருவாகியது.
இறுதியாக, அவர்கள் மீது கடுமையான நடவடிக்கை எடுப்பது என இறைத்தூதர் (ஸல்) அவர்கள் முடிவெடுத்தார்கள். யூதர்களது வலுவான கோட்டைகளை முற்றுகையிட்டார்கள், அவர்களை அங்கிருந்து வெளியேற்றினார்கள், இன்னும் அவர்களது கோட்டைகளிலேயே அன்றைய தொழுகையை நடத்தினார்கள்.
இன்னும் கைபர் என்ற இடத்தில் யூதர்களது வலுவான கோட்டைகள் தொடர்ச்சியாக இருந்தன.

இந்தக் கோட்டைகள் இருந்து வருவது என்றைக்கும் முஸ்லிம்களுக்கு ஆபத்துக்களை விளைவிக்கக் கூடியதாக இருந்தது. முஸ்லிம்களை அச்சுறுத்தும் விதத்தில் அமைந்துள்ள அந்தக் கோட்டைகளை எதிர்த்து இறைத்தூதர் (ஸல்) அவர்கள் தனது படைகளை அனுப்ப முடிவு செய்தார்கள்.

முஸ்லிம்களை எதிர்த்து, கடுமையான தடைகளை ஏற்படுத்தி வைத்திருந்தார்கள் யூதர்கள். இருப்பினும், அவர்களது கோட்டைகள் ஒன்றன் பின் ஒன்றாக முஸ்லிம்களின் வசம் வீழ்ந்து கொண்டிருந்தது.
இருப்பினும், 'குமாஸ்" என்ற கோட்டையை மட்டும் முஸ்லிம்களால் ஒன்றும் செய்ய இயலாமல் இருந்தது.

அந்தக் கோட்டையின் தளபதியாக இருந்த மர்ஹப் என்பவனின் கடுமையான எதிர்ப்பின் காரணமாக முஸ்லிம்களால் அந்தக் கோட்டையை ஒன்றும் செய்ய இயலாமல் இருந்தது.

நபித்தோழர்கள் எப்படியாவது அக்கோட்டையை வசப்படுத்த முயற்சி செய்தனர். இருப்பினும் யாருடைய வெற்றிக்கோ காத்திருப்பது போன்று அக்கோட்டை காத்திருந்தது என்பதை மட்டும் அறிந்தனர் .
இந்த நிலையில், இறைத்தூதர் (ஸல்) அவாகள் கூறினார்கள், ''நாளைக்கு நான் அல்லாஹ்வையும், அவனது தூதரையும் மிகவும் நேசிக்கக் கூடிய புதியதொரு தளபதியை நியமிக்கப் போகின்றேன். அல்லாஹ் அவருக்கு வெற்றியை அருளுவான்"" என்று கூறினார்கள்.
புஹாரி : 4416 ஸஅது பின் அபீவக்காஸ் (ரலி).

1557. நபி (ஸல்) அவர்கள் கைபர் போரின்போது, 'அல்லாஹ் எவருடைய கரத்தில் வெற்றியைத் தரவிருக்கிறானே அத்தகைய ஒரு மனிதரிடம் (நாளைக்கு) நான் (இஸ்லாமியச் சேனையின்) கொடியைத் தருவேன்" என்று கூறக் கேட்டேன்.
உடனே, நபித் தோழர்கள், அதை யாரிடம் நபி (ஸல்) அவர்கள் கொடுக்கப் போகிறார்கள் என்று எதிர் பார்த்து நின்றனர். அவர்களில் ஒவ்வொருவரும் அது தம்மிடமே தரப்பட வேண்டுமென்று விரும்பியவர்களாக மறுநாள் வந்தனர்.
அப்போது நபி (ஸல்) அவர்கள், 'அலீ எங்கே ?' என்று கேட்டார்கள். 'அவருக்குக் கண்வலி" என்று கூறப்பட்டது. உடனே, நபி (ஸல்) அவர்கள்,
அலீ (ரலி) அவர்களை அழைத்து வரும்படி கட்டளையிட்டார்கள். அவ்வாறே அவர்கள் அழைத்து வரப்பட்டார்கள்.
நபி (ஸல்) அவர்கள் அலீ (ரலி) அவர்களின் கண்களில் (தம்) எச்சிலை உமிழ்ந்தார்கள். உடனே அவர்களின் கண், அதற்கு முன்பு வலி எதுவுமே இல்லாதிருந்ததைப் போல் குணமாகிவிட்டது.
உடனே, அலீ (ரலி), 'நம்மைப்போல் (முஸ்லிம்களாய்) ஆகும் வரை நாம் அவர்களுடன் போர் புரிவோம்" என்று கூறினார்கள்.
அதற்கு நபி (ஸல்) அவர்கள், 'நிதானமாகச் சென்று அவர்களின் களத்தில் இறங்குவீராக!
பிறகு, அவர்களை இஸ்லாத்திற்கு அழைத்து (அதை ஏற்கும் பட்சத்தில்) அவர்களின் மீது கடமையாகுபவற்றை அவர்களுக்குத் தெரிவிப்பீராக!

அல்லாஹ்வின் மீதாணையாக! உங்கள் வாயிலாக ஒரேயொரு மனிதருக்கு நேர்வழியளிக்கப்படுவது (அரபுகளின் உயரிய செல்வமான) சிகப்பு ஒட்டகங்களை (தர்மம் செய்வதை) விட உங்களுக்குச் சிறந்ததாகும்" என்றார்கள்.
குமாஸ்" என்ற கோட்டை அலீ (ரலி) அவர்களால் முஸ்லிம்கள் வசமானது.
இயற்கை வெற்றியைக் கூட இன்னாருக்குத்தான் இன்னார் வழங்க வேண்டும் என்ற நியதியைக் கொண்டுள்ளது போலும். இயற்கையின் தேர்ந்தெடுப்பு இறைவனின் நாட்டம் அல்லவா ?

ரஹ்மத் ராஜகுமாரன்

தாலூத் எனும் அரசர் உருவாகுதல்
இயற்கையின் தேர்ந்தெடுப்பு 4



அல்லாஹ் ஒரு கழியையும், ஒரு பாத்திரத்தில் எண்ணெய்யையும் அனுப்பி, பனீ இஸ்ரவேலர்களில் அரசனுக்குத் தகுதியானவர்கள் அந்தக் கழியின் உயரமிருப்பர் என்றும், அத்தகையவர் அங்கு வந்ததும் பாத்திரத்திலுள்ள எண்ணெய் கொப்பளிக்கும் என்றும் அத்தகையவரே பனீ இஸ்ரவேலர்களுக்குரிய அரச பதவிக்குத் தகுதியானவர் என்றும் அறிவித்தான்.
இத்தகவலை தம் மக்களுக்கு நபி ஷம்வீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அறிவித்ததும் மக்கள் கூட்டம் கூட்டமாக அன்னாரின் வீட்டில் குழுமினர். ஒருவருக்கும் அந்த அடையாளம் பொருந்தவில்லை.
இறுதியாக தாலூத் என்பார் தம்முடைய காணாமல் போன கழுதையைத் தேடி ஹழ்ரத் ஷம்வீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் வீட்டிற்கு வந்தார். அவர் வந்ததும் அந்த எண்ணெய் கொப்பளிக்க ஆரம்பித்தது. கழியை வைத்து அளந்து பார்த்ததில் சரியான அளவாகவே இருந்தது.

தாலூத் பனீ இஸ்ரவேலர்களின் அரசன் என்று ஸம்வீல் (அலை) அவர்கள் அறிவித்ததும் தாலூத் ,யூசுப் (அலை) அவர்களின் சகோதரர் புன்யாமீன் வழி வந்தவராயிருந்தார். மேலும் மிகவும் ஏழ்மை நிலையில் இருந்தார்.
அதனால் பனீ இஸ்ராயீல்கள் தங்கள் அரசனாக அவனை ஏற்றுக் கொள்ள முன்வரவில்லை. "தங்கள் யஹூதா வமிசாவழியில் வந்தவரல்ல. அரச குடும்பத்தில் அவர் பிறக்கவில்லை எனவே அவர்கள் எங்கள் மீது ஆட்சிபுரிய அவருக்கு என்ன தகுதி இருக்கிறது? "என்று கேட்டார்கள்.

அதாவது அரச குடும்பத்தில் பிறக்காத அவர் எப்படி எங்களுக்கு ஆட்சியாளராக வர முடியும்? அவரைவிட நாங்களே ஆட்சிப் பொறுப்புக்கு தகுதியானவர்கள் அவருக்கு பொருள் வசதிகூட வழங்கப்படவில்லை ஆட்சி புரிவதற்கு தேவையான பொருளாதார வசதி இல்லாத ஏழையாகவும் அவர் இருக்கிறார் என்று கூறினார்கள்.
தாலூத் நீர் இறைக்கும் வேலை செய்து வந்தார் என்று சிலர் கூறியுள்ளனர் அவர் தோல் பதனிடும் வேலை செய்து வந்தார் என்றும் கூறப்பட்டுள்ளது.

இது இறைத்தூதரிடம் அவர்கள் செய்த ஆட்சேபமும் பிடிவாதமும் ஆகும்.முறைப்படி அவர்கள் இறைத்தூதருக்கு கீழ்படிந்து நல்ல வார்த்தை சொல்லி இருக்க வேண்டும் ஆனால் அவர்கள் அவ்வாறு நடந்துகொள்ளவில்லை.
பின்னர் அவர்களின் இறைத்தூதர் ஷம்வீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் " உங்களை விட அவரை அல்லாஹ் தேர்ந்தெடுத்துள்ளான் என்று கூறினார்.
அதாவது அல்லாஹ் உங்கள் மத்தியில் உங்களுக்காக அவரையே தேர்வு செய்துள்ளான் உங்களைவிட அவரைப் பற்றி அவனே நன்கறிந்தவன். எனது சொந்த விருப்பத்தின் பேரில் நான் அவரை நியமிக்கவில்லை நீங்கள் என்னிடம் கேட்டுக் கொண்டதால் அல்லாஹ் தான் அவரை நியமிக்கும்படி எனக்கு கட்டளையிட்டான் என்று கூறினார்.
இது அல்லாஹ்வின் ஏற்பாடு. இதை மறுப்பது அவனை கோபத்திற்குள்ளாக்கிவிடும் என்று அச்சமூட்டி அவர்களை ஒப்புக் கொள்ள வைத்தனர்.
இந்த சம்பவத்தை அல்லாஹ் திருக்குர்ஆனில் கூறுகின்றான்

وَقَالَ لَهُمْ نَبِيُّهُمْ اِنَّ اللّٰهَ قَدْ بَعَثَ لَـكُمْ طَالُوْتَ مَلِكًا  قَالُوْٓا اَنّٰى يَكُوْنُ لَهُ الْمُلْكُ عَلَيْنَا وَنَحْنُ اَحَقُّ بِالْمُلْكِ مِنْهُ وَلَمْ يُؤْتَ سَعَةً مِّنَ الْمَالِ قَالَ اِنَّ اللّٰهَ اصْطَفٰهُ عَلَيْكُمْ وَزَادَهٗ بَسْطَةً فِى الْعِلْمِ وَ الْجِسْمِ وَاللّٰهُ يُؤْتِىْ مُلْكَهٗ مَنْ يَّشَآءُ  وَاللّٰهُ وَاسِعٌ عَلِيْمٌ.
மேலும், அவர்களுடைய நபி ஷம்வீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களை நோக்கி "நிச்சயமாக அல்லாஹ் தாலூத்தை உங்களுக்கு அரசனாக அனுப்பியிருக்கின்றான்" என்று கூறியதற்கு (அவர்கள்) "எங்கள் மீது அரசாளும் உரிமை அவருக்கு எவ்வாறு ஏற்படும். அவரை விட நாங்கள்தான் அரசாட்சி புரிய மிகத் தகுதியுடையவர்கள், (அரசாட்சி புரிவதற்கு அவசியமான) திரளான செல்வத்தையும் அவர் அடையவில்லை" என்று கூறினார்கள்.
(அதற்கு அவர்களுடைய நபி) "நிச்சயமாக அல்லாஹ், உங்கள் மீது (ஆட்சி புரிய) அவரைத் தேர்ந்தெடுத்திருக்கின்றான். அன்றி (போர்க்) கல்வியிலும், தேகத்(தின் பருமனிலும் பலத்)திலும் உங்களைவிட அவரை அதிகப்படுத்தியும் இருக்கின்றான். அல்லாஹ் தான் விரும்பியவர்களுக்கே தன் ஆட்சியை வழங்குவான். அல்லாஹ் (வழங்குவதில்) அதிக விசாலமானவன் (அரசாட்சி புரியத் தகுதியுடையவர்களை) நன்கறிந்தவன்" என்று கூறினார். (அல்குர்ஆன் : 2:247)

ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்காக அல்லாஹ் ஒரு பெட்டியை கொடுத்திருந்தான். அப்பெட்டி நபிமார்களின் குடும்பத்தினர்களிடம் கைமாறிக் கொண்டே வந்தது.
ஹழ்ரத் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் கைக்கு அது வந்தபோது அதில் தவ்ராத் வேதத்தையும், சில பொருட்களையும் அதில் வைத்திருந்தார்கள். இந்தப் பெட்டி யார் கையில் இருக்கிறதோ அவருக்கு வெற்றி நிச்சயம் என்று இஸ்ரவேலர்கள் நம்பி வந்தனர்.
இப்பெட்டி அமாலிகா என்ற பெயர் கொண்ட கூட்டத்தினரிடம் சிக்கிக் கொண்டது. அவர்கள் அதற்கு உரிய மரியாதை கொடுக்காமல் அசுத்தமான இடங்களில் வைத்திருந்தனர். அதனால் அவர்களுக்கு அது பெரும் துன்பமாக மாறிவிட்டது. எனவே அதை ஒரு குப்பை மேட்டில் வைத்து புதைத்து விட்டனர்.
அல்லாஹ் அந்தபெட்டியை வானவர்கள் மூலம் அரசர் தாலூத்திடம் சேர்த்து விட்டான்.

وَقَالَ لَهُمْ نَبِيُّهُمْ اِنَّ اٰيَةَ مُلْكِهٖٓ اَنْ يَّاْتِيَكُمُ التَّابُوْتُ فِيْهِ سَكِيْنَةٌ مِّنْ رَّبِّكُمْ وَبَقِيَّةٌ مِّمَّا تَرَكَ اٰلُ مُوْسٰى وَاٰلُ هٰرُوْنَ تَحْمِلُهُ الْمَلٰٓٮِٕكَةُ اِنَّ فِىْ ذٰلِكَ لَاٰيَةً لَّـكُمْ اِنْ كُنْتُمْ مُّؤْمِنِيْنَ
பின்னும், அவர்களுடைய நபி அவர்களை நோக்கி "அவருடைய அரசுரிமைக்கு அறிகுறியாவது: உங்கள் இறைவனிடமிருந்து மலக்குகள் சுமந்த வண்ணமாக ஒரு பேழை திண்ணமாக உங்களிடம் வரும். அதில் உங்களுக்கு ஆறுதல் அளிக்கக்கூடியதும், மூஸாவின் சந்ததிகள் மற்றும் ஹாரூனுடைய சந்ததிகள் விட்டுச் சென்றதில் மீதமுள்ளதும் இருக்கும். நீங்கள் உண்மை நம்பிக்கையாளர்களாக இருந்தால் நிச்சயமாக உங்களுக்கு அதில் ஓர் அத்தாட்சி உண்டு" என்று கூறினார்.(அல்குர்ஆன் : 2:248)

அந்த பேழையான பெட்டியை வஸீலாவாக்கி , " இந்த பெட்டியின் பொருட்டால் , எங்களுக்கு வெற்றியைத் தா " என்று இறைவனிடம் கேட்டார்கள் .அவனும் வெற்றியைக் கொடுத்தான் . வஸீலாவாக நபிமார்கள் பயன்படுத்திய பழைய பொருட்கள் போதுமானதாக இருக்க, நாம் ஏன் நபி (ஸல்) அவர்களை வஸீலாவாக்கக் கூடாது ?

ரஹ்மத் ராஜகுமாரன்.

மனித எலும்பு குகை

இயற்கையின் தேர்ந்தெடுப்பு 5







மனித எலும்புகளைக் கொண்டு ஒரு கலைப்படைப்பை உருவாக்க முடியுமா என்று கேட்டால் பலரும் முடியாது என்பார்கள்.
ஆனால் பிரான்ஸ் நாட்டினரோ முடியும் என்று சொன்னதோடு மட்டுமல்லாமல் நடத்தியும் காட்டியிருக்கிறார்கள் . பிரான்ஸ் தலைநகரான பாரீஸ் நகரின் நிலத்துக்கு அடியில் ஏராளமான சுண்ணாம்பு குகைகள் உள்ளன .இவை அனைத்தும் இயற்கையாக உருவானவை இவற்றின் மொத்த நீளம் 300 கிலோ மீட்டர் .

இந்த குகைகள் எந்த உபயோகமும் இல்லாமல் வெறுமனே இருந்தது. 300 ஆண்டுகளுக்குப் முன் பிரான்சில் பஞ்சமும், தொற்றுநோய்களும் பரவத் தொடங்கின இதில் ஏராளமான மனிதர்கள் இறந்து போனார்கள். இறந்த மனிதர்களை புதைக்க பாரிஸ் நகர கல்லறைகளில் இடமில்லை. இடப் பற்றாக்குறையால் உடல் சரியாகப் புதைக்கப்படவில்லை. உடல் அழுகி துர்நாற்றம் வீச தொடங்கியது .அதன் மூலமும் நோய்கள் பரவின இதனை கண்ட அன்றைய மன்னர் உடல்களை பூமிக்கு அடியில் இருக்கும் சுண்ணாம்பு குகைக்குள் வைக்கச் சொன்னார்.
அன்று முதல் இறந்தவர்களை கல்லறைகளில் புகைப்பதில்லை அவர்களின் உடலை சுண்ணாம்பு குகைக்குள் வைத்துவிடுவார்கள். இந்த பழக்கம் 300 வருடங்களுக்கு மேலாக தொடர்ந்து வருகிறது .

**1814** ஆம் ஆண்டு நகரின் மற்ற கல்லறைகளில் இருந்த உடல்களையும் எலும்புகளையும் எடுத்து இங்கு கொண்டுவந்து சேர்த்தனர். இந்த எலும்புகள் மண்டைஓடுகள் ஆகிய அனைத்தும் கொண்ட ஒரு அட்டகாசமான கலைப் படைப்பை உருவாக்கி விட்டனர்.
இந்த இடத்திற்கு **"கேட்டகோம்பஸ் ஆப் பாரீஸ் "** என்று பெயரிட்டனர் மனித எலும்புகளால் ஆன சுவரை உருவாக்கினார்கள். துணிவு மிக்கவர்கள் மட்டுமே இந்த குகைக்குள் சென்று அடுக்கி வைக்கப்பட்ட எலும்புக்கூடுகளை பார்த்து வந்தார்கள்.

இப்படி அடுக்கி வைக்கப்பட்ட எலும்புக்கூடுகளை மேலும் கலைநயமிக்க படைப்பாக மாற்றவேண்டும் என்று நினைத்தார்கள். அதற்காக 1995 -ல் இந்த குகையை மூடினார்கள். பத்து வருடங்கள் குகைக்குள் எலும்பு கூடுகளையும் மனித மண்டை ஓடுகளையும் கொண்டு கட்டுமான பணிகள் நடந்தன .
2005 ஜூன் 14 ஆம் தேதி மீண்டும் திறக்கப்பட்டது . நிலத்தின் அடியில் 130 படிகள் இறங்கிப்போனால் , பூமியிலிருந்து 60 அடி ஆழத்தில் இந்த குகை இருக்கிறது. 2 கிலோ மீட்டர் நீளம் கொண்ட இந்தக் குகையில் 60 லட்சத்திற்கும் மேற்பட்ட மனிதர்களின் எலும்புக்கூடுகள் கலைநயத்தோடு வடிவமைக்கப்பட்டிருக்கின்றன.
மனதில் துணிவு இருப்பவர்கள் இந்த குகையை பார்த்து வந்து ஆஹா ஓஹோ என்று புகழ்கிறார்கள். ஆதனால் சுற்றுலா பயணிகளின் கூட்டம் அலைமோதுகிறது .

காலை 10 மணியிலிருந்து இரவு 8 மணி வரை பார்வையாளர்களை அனுமதிக்கிறார்கள் .அதிகமான நுழைவு கட்டணம் கொடுத்து இரவில் இந்த குகைக்குள் எலும்புக் கூடுகளுக்கு நடுவே படுத்து தூங்க துணிவிருந்தால் தாராளமாக தூங்கலாம். 45 நிமிடம் நீடிக்கும் இந்த சுற்றுலா ஒரு வித்தியாசமான அனுபவத்தை கொடுக்கும் இரண்டு மாதங்களுக்கு முன்பே ஆன்லைனில் டிக்கெட் வாங்கினாலும் இரண்டு மணி நேரம் உள்ளே செல்வதற்கு காத்திருக்க வேண்டும் .

இதுவரை வாழ்ந்த இவ்வுலக வாழ்க்கையின் முடிவு மரணத்தின் மூலம் ஒரு முடிவுக்கு வருகிறது. ஆக மரணம்தான் இயற்கை நேர்ந்தெடுத்த இவ்வுலக வாழ்வின் பரிசோதனைத் தளம். இந்தப் பரிசோதனையின் பயம் நல்லோர்களையும் ஆட்டிப்படைக்கும் போது , பாரீஸ் நகர மக்கள் புதைகுழியை பொழுது போக்கும் கலைப் படைப்பாக மாற்றியமைத்தது வருந்ததக்க விஷயம்.

அஸ்மா பின்த் அபீபக்ர் (ரலி) அவர்கள் அறிவித்தார்கள் :
ஒரு முறை நபி(ஸல்) அவர்கள் உரையாற்றும் போது, மண்ணறையில் மனிதன் அனுபவிக்கும் சோதனையைப் பற்றிக் கூறினார்கள். அவ்வாறு கூறிக்கொண்டிருக்கும் போது முஸ்லிம்கள் (அச்சத்தால்) கதறிவிட்டார்கள். புகாரி 1373
உஸ்மான் (ரலி) அவர்கள் மண்ணறைக்கு அருகில் நின்றால் தாடி நனைகின்ற அளவு அழுவார்கள்." சொர்க்கம் , நரகத்தைப் பற்றி கூறப்படும் போது தாங்கள் அழுவதில்லை . ஆனால் மண்ணறையைப் பார்த்தால் அழுகிறீர்களே ஏன் ? " என்று அவர்களிடத்தில் வினவப்பட்டது.
அதற்கு அவர்கள் கூறினார்கள். " மண்ணறைதான் மறுமையின் நிலைகளில் முதல் நிலையாகும் . இதில் ஒருவன் வென்று விட்டால் இதற்குப் பின் உள்ள நிலை இதை விட இலகுவானதாக இருக்கும்.

இதில் ஒருவன் வெற்றி பெறாவிட்டால் இதற்குப் பின் உள்ள நிலைமை இதை விடக் கடுமையானதாக இருக்கும்.
நான் கண்ட காட்சிகளிலேயே மண்ணறைதான் மிகக் கோரமான இருந்தது " என்று அல்லாஹ்வின் தூதர் ( ஸல்) அவர்கள் கூறியிருக்கிறார்கள். எனவேதான் மண்ணறையைப் பார்த்தால் அழுகிறேன் " என்று உஸ்மான்(ரலி) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர் : ஹானிஃ (ரஹ்) திர்மிதி 2230

ரஹ்மத் ராஜகுமாரன்

ஞானி உருவாகுதல்

இயற்கையின் தேர்ந்தெடுப்பு 6




தொலைக்காட்சிகளில் கானுயிர் சார்ந்த நிகழ்ச்சிகளை காணும்போது, சிங்கமும், புலியும் எளிய உயிர்களை துரத்திப் பிடித்து கிழித்து அதனை உண்பதைக் கண்டு உங்கள் மனம் பதறுகிறது . ஒரு இளமானை சிங்கங்கள் அதன் உயிர் துடிதுடிக்கும்போதே தின்று கொண்டிருப்பதை பார்த்து நீங்கள் கண்ணீர்விட்டிருப்பீகள். இடுப்பு ஒடிந்த ஒரு சிங்கக்குட்டி உயிர் வாழ்வதற்காக தன் கூட்டத்தை நொண்டி நொண்டி பின்தொடர்ந்து,பட்டினியால் மெல்லமெல்லச் சாவதைக் கண்டு பலநாட்கள் நிம்மதி இழந்து இருப்பீர்கள்.

இந்நிகழ்ச்சிகளை படமாக எடுக்க ஒரு குழு அங்கு இருந்தது என்ற உண்மை, உடனே அவர்கள் கன்னத்தில் ஓங்கி அறைந்தால் என்ன ? அவர்கள் அந்த உயிரை காப்பாற்றி இருக்கக்கூடாதா ? அவர்கள் அந்த பெரும் துன்பங்களைக்கண்டு கண்கலங்காமல் இருந்து இப்படி படம் எடுத்து இருக்கிறார்களா ? அவர்களுக்கு மிருகங்கள் மேல் கொஞ்சம் கூட கனிவே இல்லையா ?
ஆனால் டேவிட் அட்டன்பரோ போன்றவர்கள் மாபெரும் உயிர்நேயர்கள் என நாம் அறிவோம். அந்த காருண்யநேயம் ஏன் இந்தப் புகைப்படக்காரர்களை செயல்படச் செய்யவில்லை ?
அதற்கான பதில் அவர்கள் பார்வையாளர்களான வெறும் சாட்சிகள் மட்டுமே.
காடு என்பது ஒட்டுமொத்தமான ஒரு பேரியக்கம் என அவர்கள் அறிந்திருக்கிறார்கள். ஒவ்வொன்றும் இன்னொன்றுடன் இயல்பாக இணைந்து சமன் செய்யப்பட்டிருக்கிறது. கண்ணுக்குத் தெரியும் ஒன்றில் அவர்கள் தலையிடுவதாக வைத்துக் கொள்வோம்.

காடெங்கும் அதேபோல் பல்லாயிரம் நிகழ்ச்சிகள் நடந்து கொண்டே இருக்கின்றன. அவற்றையெல்லாம் இவர்களால் என்ன செய்ய முடியும் ? மேலும் அப்படி தலையிடுவது காட்டின் சமநிலையை அழித்து,மேலும் சிக்கலையும், அழிவுகளையுமே உருவாக்கும்.
இந்த அழிவுகளை தடுக்க வேண்டுமென்றால், ஒட்டுமொத்த காட்டின் செயல்பாட்டையும் அவர்கள் தங்கள் கட்டுக்குள் வைத்திருக்க வேண்டும் .

அது சாத்தியமா ?
காட்டின் பேரியக்கத்தை அவர்களால் புரிந்து கொள்ள கூட முடியாது. ஆகவே அதில் நிகழ்வதைப் பார்த்தப்படி ஒரு பார்வையாளனாக வெளியே இருப்பதே உசிதமானதாகும் . அதுவே உயிரியலில் அங்கீகரிக்கப்பட்ட வழி .உயிர் நேயம் என்பது உயிர்களை புரிந்து கொள்வதே அவ்வளவுதான் .
ஒரு காட்டை தன் கட்டுக்குள் வைத்திருக்க முடியும் அதன் 'குறை' களை தன்னால் தீர்த்துவிட முடியும் என்ற நம்பிக்கையை , இது அறியாமை உருவாக்கும் ஆணவம் என்று கானியலாளர்கள் சொல்கிறார்கள்.
அந்த ஆணவம் கொண்டு ஒருவர் செயல்பட்டார் என்றால், படிப்படியாக அவர் காட்டையே அழிக்கக் கூடும். இந்த ஆணவத்தை வென்றவனே கானியலாளனாக ஆக முடியும்.

அந்தக் காடாக இப்பிரபஞ்சத்தை நாம் உருவகிப்போம் . ஞானி என்பவர் அந்த கானியலாளர் போல என்று வைத்துக் கொள்வோம் . அவருக்கு இப்பிரபஞ்சத்தின் பேரியக்கம் தெரியும். அதன் சமநிலையை அவர் அறிவார். ஆகவே வெறும் காட்சியாக அதை கண்டு வெறுமே அமர்ந்திருக்கிறார்.
இப்பிரபஞ்சத்தின் இயக்கத்தை தன்னால் சீர்திருத்த முடியும் என்ற அகங்காரத்தையே அவர் முதலில் வென்றிருப்பார். தான் அந்தப் பேரியக்கத்தின் ஒரு சிறு துளி மட்டுமே என அவர் அறிந்திருப்பார் .
ஆகவே ஞானியர்களில் எப்போதும் இருப்பது சமநிலையும் , அதிலிருந்து வரும் இனிய நகையுணர்ச்சியும்தான் .
ஞானி ஏன் உலகின் துயர்களை களைவதற்காக முயல்வதில்லை என்ற வினாவுக்கு இதுவே சரியான விடை .
ஞானியர்கள் என்னதான் தருகிறார்கள் ? அவர்கள் ஞானியாக இருப்பதன் மூலமே மானுடனின் உச்சக்கட்ட சாத்தியம் ஒன்றை நமக்குச் சுட்டிக் காட்டுகிறார்கள் . ஒரு ஞானி எதையும் சொல்லாமலேயே அவரது சன்னிதியில் பேரமைதி ஒன்றை உருவாக்குகிறார்.
காரணம் நாம் அனைவருமே நம்மைச் சூழ்ந்துள்ள பிரபஞ்சத்திடம் நம் அகங்காரத்தால் முரண்பட்டு, முட்டிமோதிக் கொண்டிருக்கிறோம். சிராய்ப்புகளும் காயங்களுமாகத் தத்தளித்துக் கொண்டிருக்கிறோம் .
ஒரு ஞானியிடம் நாம் காண்பது முழுமையான பிரபஞ்ச ஒத்திசைவு மட்டுமே.ஆகவே ஓர் அழகிய மலைச் சரிவை, மலர்வெளியை ,மலையடுக்குகளை, பசும்புல்வெளியைக் காணும் அதே உணர்வை அவரைக் காணும்போது நாம் அடைகிறோம்.

இன்னும் சற்று விளக்கமாக ....உண்மை என்பது சாமானிய உண்மை , விசேஷ உண்மை என இருவகைப்படும். சாமானிய தளத்தில் உண்மை என்பதற்கு விசேஷ தளத்தில் ஒரு பொருளுமே இருக்காது .சாமானியம் என்பது மானுடனைச் சார்ந்தது. அதாவது நம்மிடமிருந்து பார்க்கும் கோணத்தில் உருவாவது. நம்மைச்சுற்றி நம்மை கட்டுப்படுத்தும் நியதிகளால் ஆனது .நம் புலன்களாலும் நாம் அறிவு அறிந்து கையாளப்படுவது.
விசேஷ உண்மை என்பது பிரபஞ்சம் சார்ந்த கோணத்தில் அனைத்தையும் பார்ப்பது . அப்போது மனித வாழ்க்கையும் மானுட அறிதல் முறையும் அதில் துளியினும் துளியாகவே இடம் பெற முடியும் .
ஃப்ரிஜோ காப்ராவின் **'தாவோ ஆஃப் பிசிக்ஸ் '** நூலின் ஒரு நல்ல உதாரணம் உண்டு. பொருட்கள் அனைத்தும் மூலக்கூறுகளால் ஆனவை . மூலக்கூறுகள் அணுக்களால் ஆனவை. அணுக்கள் துகள்களால் ஆனவை. துகள்கள் என்பவை வெறும் மின்குவியங்கள் மட்டுமே.

ஆகவே பொருள் என்பதே இல்லை ஆற்றல் மட்டுமே உள்ளது. இது விசேஷ உண்மை . அதற்காக நான் சுவர் வழியாக அந்தப் பக்கம் சென்று விடமுடியாது . இது சாமானிய உண்மை.
உங்கள் பக்கத்திலுள்ள சேரை நீங்கள் தொடாமல் நகர்த்த முடியாது. இது சாமானிய உண்மை .
ஆனால் ஸபா நாட்டிலுள்ள அரசியின் சிம்மாசனத்தை ஆஸிப் இப்னு பர்க்கியா என்ற ஞானியால் தொடாமலேயே தூக்கி வர முடியும் .இது விசேஷ உண்மை .
இந்த இரண்டு உண்மைகளும் முரண்படுவது இல்லை உண்மை எப்போதுமே இந்த இருபட்டைக் கொண்டதே .

وَلَا تَطْرُدِ الَّذِيْنَ يَدْعُوْنَ رَبَّهُمْ بِالْغَدٰوةِ وَالْعَشِىِّ يُرِيْدُوْنَ وَجْهَهٗ مَا عَلَيْكَ مِنْ حِسَابِهِمْ مِّنْ شَىْءٍ وَّمَا مِنْ حِسَابِكَ عَلَيْهِمْ مِّنْ شَىْءٍ فَتَطْرُدَهُمْ فَتَكُوْنَ مِنَ الظّٰلِمِيْنَ
(நபியே!) தங்கள் இறைவனின் திருப்பொருத்தத்தை விரும்பி காலையிலும் மாலையிலும் பிரார்த்தித்துக் கொண்டிருப்பவர்களை நீங்கள் விரட்டி விடாதீர்கள்! அவர்களுடைய கணக்கிலிருந்து எதுவும் உங்களுடைய பொறுப்பாகாது. உங்களுடைய கணக்கிலிருந்து எதுவும் அவர்களுடைய பொறுப்பாகாது. ஆகவே, நீங்கள் அவர்களை விரட்டினால் அநியாயக்காரர்களில் நீங்களும் ஒருவராகி விடுவீர்கள்! (அல்குர்ஆன் : 6:52)

இயற்கையின் தேர்ந்தெடுப்பான ஞானிகள் இந்த இரு உண்மைகளையும் நன்கு உணர்ந்தே உருவாகுகிறார்கள் .

ரஹ்மத் ராஜகுமாரன் .

காலம் இருந்துகொண்டே இருக்கும்.

இயற்கையின் தேர்ந்தெடுப்பு 7




காலத்தை முன்னோக்கி நகரும் நதியாக உருவகப்படுத்தப்படுகிறது. அணை கடந்த வெள்ளம் அழுதாலும் வராது என்பது போல கடந்த போன காலம் கடந்ததுதான் அது திரும்ப வராது என்பதெல்லாம் காலத்தை நதியோடு உருவகப்படுத்தப்படுகிறது. இதனால் பெரும்பாலானோர் காலம் நகர்ந்து கொண்டிருப்பதாகவே நம்புகிறார்கள் . அது உண்மை அல்ல.

உறுதிப்படுத்தப்பட்ட உண்மை என்னவென்றால் , அது இருக்கும் இடத்திலேயே நிலவுகிறது , நகர்கிறது என்ற "கருத்து " காலம் என்று அழைக்கப்படலாம். அக்கருத்து தவறானது .காலம் நகருவதாகவே உணர்ந்து பழகிவிட்ட ஒருவருக்கு இருந்த இடத்திலேயே காலம் நிலவுகிறது என்பதைப் புரிந்து கொள்ள இயலாது.காலம் எப்படி இருக்கிறதோ அப்படித்தான் இருந்துகொண்டே இருக்கிறது.

இதை இப்படிச் சொன்னாலாவது நீங்கள் நம்புவீர்கள் என நினைக்கிறேன். 'சூரியன் கிழக்கில் உதிக்கிறது , மேற்கில் மறைகிறது ' என்றுச் சொன்னால், உண்மையில் சூரியன் கிழக்கில் உதிப்பதும் இல்லை, மேற்கில்

மறைவதும் இல்லை. அது இருக்கிற இடத்திலேயே இருக்கிறது. நம்ம பூமிதான் கிழக்கிலிருந்து மேற்காக சுழல்கிறது .இதனால் சூரியன் கிழக்கில் உதயமாகி , மேற்கில் மறைவதாக நம்ப வைக்கப்படுகிறது .இது போன்றே காலத்திலும் நடந்திருக்கிறது .

" வெளி - காலம் " என்பதில் நாம் ஒவ்வொருவருக்கும் இறந்த காலம் , நிகழ்காலம் , எதிர்காலம் என்று தோற்றமளிக்கின்ற அனைத்தும் ஒரே உருண்டையாக உருவகிக்கப்படுகிறது .
ஒவ்வொரு பார்வையாளனும் அவனை பொறுத்து காலம் கடக்கும் போது, புதிய " வெளி - காலம் " துண்டங்களாகக் கண்டறிகிறான் என்று சொல்லலாம் . காரணம் அவை அவனுக்கு பருண்மையான உலகின் பார்த்துப்பழகி விட்ட ஓர் அம்சமாகவே காலத்தை பருண்மையாகவேப் பார்க்கிறான். இதனால் அடுத்தடுத்த அம்சங்களாக காலம் அவனுக்கு தோற்றமளிக்கின்றன. ஆனால் உண்மையில் அவன் அதை பற்றி அறிவதற்கு முன்பே நிகழ்வுகளின் தொகுப்பான
" வெளி - காலமாக உருவெடுத்து இருந்தவை.
இன்னுமோரு உதாரணத்தைச் சொல்கிறேன் . விஞ்ஞானக் கற்பனையான டைம் மிஷனில் ஏறி, ஒருவன் கடந்த காலத்தில் சென்று தன் பாட்டனைப் பார்ப்பதாக விவரிப்பதும் , எதிர்காலத்தில் புகுந்து தன் தலைமுறையின் பேரனைக் காண்பதும் சாத்தியமாகும் என்று சொல்லும் போது , கடந்த காலத்தில் பாட்டனும் இன்னும் இறக்காமல் உயிருடன்தான் இருந்து கொண்டிருக்கிறான் .எதிர்காலத்தில் தலைமுறை பேரன் பிறக்காமலே இன்னும் வாழ்ந்து கொண்டிருக்கின்றான் என்றால்....இறப்பும் , பிறப்பும் வெறும் வார்த்தை ஜாலங்களா ? என்றால் வெறும் வார்த்தை ஜாலம்தான் என்கிறது நவீன விஞ்ஞானம் .

" ஆன்மீக உலகில் நேற்று, இன்று, நாளை என்கிற காலப் பாகுபாடு இல்லவே இல்லை . அவை நமக்குள் சுருங்க பெற்று நிகழ் தருணம் என்று ஒன்றாகி விடுகிறது . வாழ்க்கை உண்மையிலேயே அங்கே துவள்கிறது . இறந்த காலமும், எதிர்காலமும் , நிகழ்தருணம் என்கிற ஒளிவெள்ளத்தில் சுருட்டப்பட்டு விடுகின்றன .நிகழ்தருணம் என்பது அனைத்தையும் உள்வாங்கிக்கொண்டு செயலற்று நிற்பதல்ல; இடையூறா இயக்கப் பண்பு கொண்டது" என்கிறார்

டி.ட்டி சுசுக்கி
இதனால்தான் சுவனவாசிகள் 30 வயதுடையவர்களாக எப்போதுமே இருப்பார்கள் என நபிமொழி கூறுகிறது . இதன் மூலம் சுவனத்தில் காலத்தின் பாகுபாடு இல்லாமல் நிகழ்தருணம் என்ற ஒளிவெள்ளத்தில் சுருட்டப்பட்டுவிட்டது .

"இந்தத் தருணமே ஏகாந்தமான அமைதி; இத்தருணம் என்றால் அந்தத் தருணம் காலவரம்பற்றது; இங்கேதான் அழிவிலா ஆனந்தம் நிலவுகிறது" - ஹீய் - நெங்
"காலம் கடந்து செல்வதை மறந்திடுங்கள் , கருத்துக்களிடையே தோன்றும் முரண்பாடுகளையும் மறந்து விடுங்கள் . எல்லையற்ற ஒன்றிடம் முறையிடுவோம் ; அங்கே நமக்குரிய இடம் தேடுவோம்

" _சுவாங் - சுரஹ்மத் ராஜகுமாரன்.
காலம் பற்றி நூற்றுக்கணக்கான கட்டுரைகள் எழுதினாலும் என்னுள் அதன் ஆர்வம் தீராது . இன்னும் ஏதோ ஒன்றை இக்கட்டுரையில் கூட சொல்லாமல் விட்டது போல ஒரு வெறுமை இன்னும் இருந்து கொண்டே இருக்கிறது .

இதற்கும் காலம்தான் பதில் சொல்ல வேண்டும் . ர.ரா

வளைந்து போன காலம்

இயற்கையின் தேர்ந்தெடுப்பு 8




ஒரு சமதளத்தில் ஒரு சதுரத்தை வரைவது என்றால் ஒரு நேர்கோட்டில் ஒரு மீட்டர் தூரத்தை குறிப்போம்.
அதில் ஒரு மூலையில் ஒரு செங்கோணம் ஏற்படுத்துவோம்.
அதன் மேல் ஒரு மீட்டர் தூரத்தை ஒரு புள்ளியால் குறிப்போம் .
மறுபடி அப்புள்ளியிலிருந்து ஒரு செங்கோண ஏற்படுத்துவோம் ;
அதன் மீது ஒரு மீட்டர் தூரத்தை குறிப்போம். அப்புள்ளியிலிருந்து மூன்றாவது செங்கோணத்தை ஏற்படுத்தி ,
ஒரு மீட்டர் தூரத்தை குறித்தால், புறப்பட்ட புள்ளிக்கே திரும்ப வந்துவிடுவோம் ;
இப்போது நமக்கு சதுரம் முழுமையடைந்து விடும் . இச்சதுரம் சமதள பரப்பில் வரைவது பற்றி பார்த்தோம்
இதே சதுரத்தை சமதளமாக இல்லாத ஒரு உருண்டை கோளத்தில் மீது வரைவதற்கு இம்முறை உதவாது. யூக்லிடியன் வரைவியல் விதிகள் வளைந்த பரப்புகளின் மேல் செல்லுபடியாகாது .
அது சரி உருண்டை கோளத்தில் ஏன் ஒரு நேர்கோட்டையுடைய சதுரம் வரைய முயற்சிக்க வேண்டும் ? சொல்றேன் .
நம்ம ஆய்வு கோள வடிவத்தில் சதுரம் வரைவது பற்றி அல்ல. வெட்ட வெளியானது சமதளம் இல்லாதது மட்டும் அது கோள வடிவமானது .
ஏன் ' வெளி 'வளைந்து போனது ?
சார்பியல் கொள்கைப்படி ' வெளி ' என்பது முப்பரிமாணம் கொண்டதாகவோ ' காலம் ' தனித்துவமான ஒன்றாகவோ இல்லை . இவை இரண்டும் நெருக்கமாக பிணைக்கப்பட்ட "வெளி - காலம் " என்னும் நாற்பரிமாண தொடர் அமைப்பாகும் .

ஆல்பர்ட் ஐன்ஸ்டைனின் கொள்கைப்படி நட்சத்திரம்,
விண்மீன் ,கோள்கள் போன்ற சக்தி வாய்ந்த பருப் பொருட்களின் ஈர்ப்பு விசையால் அவைகளைச் சுற்றியுள்ள வெட்ட வெளியையே அது வளைத்து விடுகிறது .
சார்பியல் கொள்கையின்படி, காலத்தை தொடர்புறுத்தாமல் வெளியைப் பற்றியோ வெளியைத் தொடர்புறுத்தாமல் காலத்தைப் பற்றியோ விளக்க இயலாது .
வெளியும் காலமும் ஒன்றோறொன்று பிண்ணிப் பிணைக்கப்பட்ட ,பிரிக்கமுடியாத தொடர்பு கொண்டதாகும் எனவே ' வெளி ' ஈர்ப்பு விசையால் வளைந்து போகும் போது அதோடு பிணைக்கப்பட்ட காலமும் வளைந்து போகிறது .

ஈர்ப்பு விசையின் காரணமாக காலமும் வளைவதால்,
'காலம் - வெளி' யில் வேறுபாடு ஏற்படுகிறது . பிரபஞ்சமெங்கும் வெளி ஏகமாக சமமாக இல்லாமல் , இடத்திற்கு இடம் மாறுபடும் ஈர்ப்பு விசையைப் பொருத்து வளைவின் வில் ஆரம் மாறுபடுகிறது. இதனால் ' வெளி ' யோடு இயைந்த காலமும் மாறுபாடுகிறது .
' வெளி 'வளைந்திருக்கிறதா ? எப்படி நிரூபியுங்கள் என்று ஐன்ஸ்டைனிடம் விஞ்ஞான உலகம் கேட்க,

'பகலில் இரவு வர வேண்டும் . பட்டப் பகல்ல சூரியன் மறைந்து , நட்சத்திரங்கள் வெளிப்பட்டு வானம் இருட்டாக வேண்டும் " என்றார் ஐன்ஸ்டீன்

" நடக்கிற காரியமா ? " நடந்தது .

முழு சூரிய கிரகணம் 1919 மே 29 -ல்
பட்டப் பகலில் சூரியன் மறைந்து வானம் இருட்டானது . நட்சத்திரங்கள் ஐன்ஸ்டீனைப் எட்டிப்பார்த்து சிரித்தது . ஹயாடெஸ் **(Hyades )** என்கிற நட்சத்திர விண்மீன் தொகுதியில் உள்ள ஒரு நட்சத்திரத்தை முத்தைய இரவில் டெலஸ்கோப் மூலம் படம் பிடித்து , டெலஸ்கோப்பை நகர்த்தாமல் அப்படியே வைத்து பகலில் சூரிய கிரகணம் ஏற்பட்ட போது மீண்டும் அதே நட்சத்திரத்தை படம் எடுக்க, அந்த நட்சத்திரம் கொஞ்சம் இடம் மாதிரி இருந்தது. அந்த இடமாற்றத்தின் வளைவு 1.75 ° ஆர்க் வினாடி . ஆக விண்வெளி வளைந்துள்ளது நிரூபிக்கப்பட்டது .
' வெளி ' யின் ஒரு இடத்தில் பூமியின் ஆயிரம் வருடத்திற்கு சமமான ஒரு நாளாகிறது .

' வெளி ' யின் இன்னொரு இடத்தில் பூமியின் ஐம்பதினாயிரம் வருடத்திற்கு சமமான ஒரு நாளாகிறது .

يُدَبِّرُ الْاَمْرَ مِنَ السَّمَآءِ اِلَى الْاَرْضِ ثُمَّ يَعْرُجُ اِلَيْهِ فِىْ يَوْمٍ كَانَ مِقْدَارُهٗۤ اَلْفَ سَنَةٍ مِّمَّا تَعُدُّوْنَ
வானத்திலிருந்து பூமி வரையிலுமுள்ள எல்லா காரியங்களையும் அவனே ஒழுங்கு படுத்துகின்றான். (ஒவ்வொன்றின் முடிவும்) ஒரு நாளன்று அவனிடமே சென்றுவிடும். அந்த (ஒரு) நாள் நீங்கள் எண்ணுகின்ற உங்கள் கணக்கின்படி ஆயிரம் ஆண்டுகளுக்குச் சமமாகும்
(அல்குர்ஆன் : 32:5)

تَعْرُجُ الْمَلٰٓٮِٕكَةُ وَ الرُّوْحُ اِلَيْهِ فِىْ يَوْمٍ كَانَ مِقْدَارُهٗ خَمْسِيْنَ اَلْفَ سَنَةٍ
அந்நாளில் மலக்குகளும், ஜிப்ரயீலும் அவனிடம் போய்ச் சேருவார்கள். (அந்நாள்) ஐம்பதினாயிரம் வருடங்களுக்குச் சமமாக இருக்கும். (அல்குர்ஆன் : 70:4)

இதே வளைந்த காலத்தைப் பற்றி குர்ஆன் (2:259) உஜைர் நபி வரலாற்றில் இறைவன் , உஜைர் நபிக்கும் அவர் ஏறி வந்த கோவேறு கழுதைக்கும் நூறு வருடங்கள் மரணிக்கச் செய்து , பின் உயிர் பிழைக்கச் செய்தான். அதே சமயம் நபியவர்கள் கொண்டு வந்த உணவும் பானமும் கெட்டுப் போகாமல் ஒரே ஒரு நாள் கால நேரத்தையை வழங்கி காட்டினான் .

உணவு பானத்திற்கு காலம் - வெளி வளைந்த வளைவை விட நபியவர்களுக்கும் அவருடைய கழுதைக்கும் காலம் - வெளி வளைந்த வளைவு அதிகம் .
'வெளி - காலத்தை இறைவன் இப்படித்தான் இயற்கையாக தேர்ந்தெடுத்திருக்கின்றான்.

ரஹ்மத் ராஜகுமாரன் .

தனித்துவம்

இயற்கையின் தேர்ந்தெடுப்பு 9



ஒரு சமயம் குறைஷிகள் நபிகள் பெருமானார் (ஸல்) அவர்களிடம் "உங்கள் அல்லாஹ்வின் இலக்கணங்களை சொல்லுங்கள் " என்று கேட்டபோது,சூரா இக்லாஸ் அருளப்பட்டது. (திர்மிதீ , தாரிகுல் புகாரீ )
قُلْ هُوَ اللّٰهُ اَحَدٌ
(நபியே) நீர் கூறுவீராக: அல்லாஹ் அவன் ஒருவனே.
(அல்குர்ஆன் : 112:1)

''சொல்லுக ! அவன் அல்லாஹ் ஒருவன் "
சர்வ லட்சணங்களும் பூரணமாய் அமையப்பெற்று தனக்கு நிகரில்லாத உள்ளமையை அரபி மொழியில் "அல்லாஹ்" என்று சொல்லபபடுகிறது .
அல்லாஹ் அஹத் :- ஒருவன் , தனித்தவன் .
ஒன்று என்ற பொருளைக் குறிக்க அரபி மொழியில்
"வாஹித் " _ "அஹத் "என்ற இரு பதங்கள் உபயோகிக்கப்பட்டாலும் , இரு பதங்களின் கருத்திலும் வித்யாசம் உண்டு .
எண்ணிக்கையில் குறைந்த எண்ணாகிய ஒன்று என்பதைக் குறிப்பதற்காக மட்டும் "வாஹித் " என்ற பதம் உபயோகப்படுத்தப்படுகிறது.
ஆனால் " அஹத் " என்ற பதமானது, " எந்த ஒன்றும் அந்த ஒன்றுக்கு சமமானதாக இருக்க முடியாத அந்த ஒன்றே ஒன்றை மட்டும் குறிக்கும்.
ஒரு மனிதன் என்பதைக் காட்ட "ரஜுலுன் வாஹிதுன் " என்று சொல்லலாம். ஆனால் " ரஜுலுன் அஹதுன் "என்று சொல்லக் கூடாது .
"அஹத்" என்ற பதமானது தனக்கு எந்த வகையிலும் நிகரில்லாத அல்லாஹ் ஒருவனை மட்டுமே குறிப்பதற்காக உபயோகப்படுத்தப்படும் . அவன் தனது உள்ளமையிலும், **சர்வ சக்தி, சர்வ ஞானம் ,**

1) அநாதித்துவம், பூரண கிருபை ,
2) நித்தியத்துவம் ,
3) சர்வ வியாபகம்

முதலிய அவனுக்கே சொந்தமான பூரணச் சிறப்பு இலட்சணங்களிலும் தனக்கு நிகரில்லாத தனித்தவன்.

1 ) ஆரம்பமில்லாதிருப்பது
2) என்றென்றும் நிலைத்திருப்பது
3 ) எங்குமிருத்தல்

இப்படி அஹதான தனித்தவன் தான் படைத்த படைப்புகள் ஒவ்வொன்றிலும் தனித்துவமான ஒன்றுக்கொன்று மிகைத்தவைகளாக , ஒவ்வொன்றும் ஒவ்வொன்றாக தனித்துவமாகவே படைத்தான் என்பதுதான் வியப்பு .

என்னை மாதிரியோ , உங்களை மாதிரியோ யாரெனும் இப்பாருலகில் இருந்தவர் உண்டா ? அட , ஒட்டிப்பிறந்த இரட்டையரில் கூட இந்த தனித்துவம் மிளிரக் காண்கிறோம் .
**Made for Each other** - ஒவ்வொன்றும் தனித்தனியான தனித்துவம் கொண்டது . ஒன்றும் மற்றொன்றும் ஒன்றல்ல
**one is not equal to one**

உங்களது முகத்தை நெற்றி வடுகிலிருந்து கோடு போட்டாற் போல் பிரித்து, முகக்கண்ணாடியில் உங்கள் முகத்தைப் பாருங்கள் . உங்கள் வலது கண்ணும் , உங்கள் இடது கண்ணும் படைப்பில் மாற்றம் தெரியும் . இப்படித்தான் படைப்புகளில் அனைத்திலும் ஒவ்வொன்றும் தனித்துவமானது .

ஒரு மழைத்துளியைப் போல் எந்த மழைத்துளியும் இல்லை .
இப்போர்ப்பட்ட தனித்துவ படைப்பாளன் தன் படைப்பு ஒன்று இன்னொன்று போல இருப்பதை விரும்புவானா ?
ஒவ்வொரு மனிதனும் தனித்தன்மையுடன் படைக்கப்பட்டிருக்கிறான் .அவன் வேறொருவன் போல் இருக்க முயல்வது இயற்கையை மறுதலிப்பதற்குச் சமமாகும்.

நாம் இந்தப் பிரபஞ்சத்தில் முடிவற்ற சாத்தியக் கூறுகளுடன் பிறக்கிறோம். நம் ஒவ்வொரு மூச்சுக்காற்றும் நம் உள்ளத்தில் எரியும் அணையாத நெருப்பை ஊதி விடுகின்ற ஊக்கியாக இருக்க வேண்டுமே தவிர அடுத்தவர்களைப் பார்த்து நம்மைச் சிதைத்துக் கொள்கின்ற வாழ்க்கைத் தொடர்ச்சியாக இருக்கக் கூடாது.
சிதைப்பது வேறு , செதுக்குவது வேறு, செதுக்குவது நமக்கு உரிய வடிவத்தை உணர்ந்து, அதை நோக்கி நம்மை செலுத்துவது. நாம் உண்மையான முகத்தை நோக்கிய உளிப் பயணமே உள்ளொளிப் பயணம்.
பிரபலமானவர்களை போல உடை அணிந்து, சிகை திருத்தி, நடைநடந்து ,அவர்களின் பிம்பங்களாக ஆகத் துடிப்பவர்கள் நீர்த்துப் போய்விடுவார்கள்.

அவர்கள் சதைகள் இருந்தும் எலும்புக்கூடுகளாக, உயிர் இருந்தும் நடைப்பிணங்களாக தங்களை ஆக்கிக்கொண்டு பூமியின் மீதி பொதி மூட்டையாக ஒரு வாழ்கிறார்கள்.
அவர்கள் வாழ்வது குறித்து யாரும் மகிழ்வதும் இல்லை . வீழ்கின்ற போது யாரும் வருந்துவதும் இல்லை . அவர்கள் வாழ்த்துக்களை சேகரிப்பதும் இல்லை : அவர்களது சாபங்களை பெறுவதும் இல்லை . அவர்கள் மரணம் அடைகின்ற போது மலர் வளையங்களைக் கூட யாரும் வைப்பதில்லை . ஏனென்றால் வாழுகின்ற போது அவர்கள் தோல்களில் மாலைகள் விழுந்ததில்லை.

மானுடம் பல்வேறு இதழ்களைத் தாங்கிய பூக்களாய் மலர்ந்திருக்கிறது.
ஒவ்வொரு மனிதனும் இந்த பூமியின் மீது தன் புன்னகையைப் பதிவு செய்ய வருகிறான்.
அவன் சுயச்சார்புடன் மண்ணைக் கிளறும் போது, மணிக்கதிர்கள் முளைக்கின்றன.
வானை வருடும்போது காற்றாலைகள் உதயமாகின்றன. அவன் கடலைக் கடையும்போது உப்பு உற்பத்தியாகிறது.

தன் பங்களிப்பால் பூமியைப் புதுப்பிக்கின்றவன் தன்னிடம் இருக்கும் ஆற்றலை வெளிக்கொணடு வர உழைக்கிறான் .
அவன் நீர் வார்க்கும் போது செடியாகிறான் .
போர் புரியும்போது வாளாகிறான்.
புன்னகை புரியும் போது பொன்னிதழ்களாகிறான்.
அவன் தனித்தவன் . அவனின் படைப்புகளும் அவனை மாதிரி தனித்துவமானது .

ரஹ்மத் ராஜகுமாரன் .

வெற்றியும் மமதையும்

இயற்கையின் தேர்ந்தெடுப்பு 10



வெற்றி பெறுகின்ற போது நாம் மிகுந்த எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். செல்வம் சேருகின்ற போது நாம் மிகுந்த கவனத்துடன் இருக்க வேண்டும்.ஏனென்றால் வெற்றி கொஞ்சம் பிசகினால் நமக்கு ஆணவத்தையும், மமதையும் ஏற்படுத்திவிடும்.
மிகப் பெரிய யானைதான் ஆனாலும் எந்த நேரத்திலும் பூச்சி தன் காதில் நுழைந்து விடலாம் என்ற எச்சரிக்கையுடன் காதை சதா ஆட்டிக்கொண்டே இருக்கிறது !
இந்த உலகம் நான் இனி தோல்வியே பெற மாட்டோம் என்று சொல்லி நம்மை மனோவசியப்படுத்த பார்க்கும்.
அடுத்தடுத்து பெற்ற வெற்றிகள்தான் உலகத்தை ஜெயிக்க வேண்டும் என்று அலெக்சாண்டருடைய தலையில் பேராசையை ஏற்படுத்தியது .
தான் பெற்ற வெற்றி நிரந்தரம் என்று நினைத்ததால்தான் நெப்போலியன் தனக்குத்தானே முடிசூட்டிக் கொண்டார்.

இனி நாம் தோல்வியே அடைய மாட்டோம் என்கின்ற எண்ணம்தான் ஹிட்லரையும்,முசோலினியையும் வீழ்த்தியது
உலகப் போரில் வென்ற சர்ச்சில் உள்ளூர் தேர்தலில் தோற்றுப்போனார்.
வெளி உலகில் மட்டுமல்ல, நம் அகவய உலகத்திலும் நம்முடைய முன்னேற்றங்களைக் காரணமாக்கி, நாம் அதீத மகிழ்ச்சி அடையக் கூடாது. நம்மை கண்டு நாமே வியந்தால் நம்மால் அடுத்த நிலையை அடைய முடியாது .என்னை யாரும் வெற்றி கொள்ள முடியாது என நினைப்பவர்களெல்லாம் பரிதாபமான தோல்வியைத் தழுவியிருக்கிறார்கள்.

அது சூழ்ச்சியால் நிகழ்ந்திருக்கலாம். கவனமின்மையால் இருந்திருக்கலாம் .பலவீனங்களால் நிழந்திருக்கலாம் . எச்சரிக்கையின்மையால் நிகழ்ந்திருக்கலாம் . அதீத நம்பிக்கையால் ஏற்பட்டிருக்கலாம். அடுத்தடுத்த வெற்றிகள் நம்மை தவிர யாருமில்லை என்று எண்ண வைத்து விடுகின்றன . இப்படித்தான் இஸ்லாமிய உஹத் யுத்தத்தில் நடந்தது .

ஒரு குதிரைவீரன் நபியவர்களிடம் முத்திரையிடப்பட்ட கடிதம் ஒன்றைக் கொண்டு வந்து கொடுத்தார். அதில் மக்காவிலிருந்து மதீனாவை நோக்கி 3000 படைவீரர்களை அழைத்துக் கொண்டு வருவதற்கு இறைமறுப்பாளர்கள் தயாராகிக் கொண்டிருக்கிறார்கள் என்றும், அதில் 700 குதிரைப்படை, அதேயளவு ஒட்டகங்கள் மற்றும் கவசமணிந்த காலாட்படை அத்துடன் படைவீரர்களை மகிழ்விக்க பெண்கள் ஆகியோர் உள்ளனர் என்றும் குறிப்பிடப்பட்டிருந்தது.
எதிரிகள் கரையோரத்து மேற்குப்பாதை வழியாக வந்து கொண்டிருக்கின்றனர் என்றொரு செய்தியும், பின்னர் உஹத் மலையின் அடிவாரத்தில் பாசறை அமைத்துக் கொண்டனர் என்ற மற்றொரு செய்தியும் நபியவர்களை வந்தடைந்தது.

உடனே தமது தோழர்களை அழைத்து ஆலோசனை செய்துவிட்டு, யுத்தத்திற்கான ஆயத்தங்களைச் செய்யுமாறு நபியவர்கள் கட்டளையிட்டார்கள். மறுநாள் பிற்பகல் தொழுகையை முடித்தபின் 1000 வீரர்களைக் கொண்ட படை நபியவர்களின் தலைமையில் உஹுதை நோக்கி நகரத் தொடங்கியது.
ஷைகன் என்ற இடத்தை அடைந்தபோது மாலை நேரமாகியது. மாலைநேரத் தொழுகையை முடித்த நபியவர்கள், தமது படையினரைப் பார்வையிடச் சென்றார்கள். அச்சமயம் எதிரிகள் மிக அதிகமாக உள்ளனர் என்ற பொய்க் காரணத்தை முன்வைத்து 300 நயவஞ்சகர்கள் மதீனாவுக்குத் திரும்பிச் சென்று விட்டனர்.
மீதி இருந்த 700 வீரர்களில் எட்டுச் சிறுவர்களும் இருந்தனர். அவர்களில் மல்யுத்தம் மற்றும் வாள்வீச்சு தெரிந்த இருவரைத் தவிர ஏனைய ஆறு பேரையும் மதீனாவுக்குத் திருப்பி அனுப்பி வைத்தார்கள் நபிகளார்.

இருந்த வீரர்களில் வில்வித்தை தெரிந்த சிலரை காலையில் ஒரு சிறிய குன்றின் மீது நின்று கண்காணிக்க வேண்டுமெனப் பணித்து, ' என் அறிவிப்பு இன்றி குன்றை விட்டு நகரக் கூடாது' என்று கட்டளையிட்டு விட்டு ஏனையோரை ஐம்பது, ஐம்பது பேராக அணிவகுத்து எதிரிகளைத் தாக்க வேண்டும் என்றும் கட்டளையிட்டார்கள். மிக **அருமையான** ராஜதந்திர யுத்த வியூகம். மறுநாள் காலை யுத்தம் ஆரம்பித்தது. ஏற்கனவே அணிவகுத்து நின்ற எதிரிப் படைகளைக் குன்றின் மீது நின்ற இஸ்லாமிய படை எளிதாக துவம்சம் செய்ய ஆரம்பித்தது. சிறிது நேரத்தில் எதிரிப்படைகள் நாலா பக்கமும் சிதறியபோது, அவர்கள் விட்டுச் சென்ற பொருள்களை நபியவர்களின் படைவீரர்கள் எடுப்பதைக் கண்டு, குன்றின் மீது பாதுகாப்பிற்காக நின்ற வில்வீரர்கள் தாம் வெற்றியடைந்ததாக எண்ணி , நபிகளாரின் கட்டளையை மீறி ,குன்றை விட்டு இறங்கி வந்து எதிரிகளின் பொருள்களை எடுக்கத் தொடங்கினார்கள்.

குன்றின் மீது இஸ்லாமிய வீரர்கள் எவருமில்லை என்று தெரிந்த எதிரிகள், பின்புறமாக வந்து நபியவர்களின் படைகளைத் தாக்கத் தொடங்கினார்கள். இதனால் நபியவர்களின் படையினருக்கு பெரும் சேதமேற்பட்டது. ஹம்ஷா (ரலி) போன்ற முக்கிய நபித்தோழர்கள் 70க்கும் மேற்பட்டோர் இந்த பின் விளைவால் ஷஹீதாக்கப்பட்டனர் .

**உத்பா இப்னு அபீ வக்காஸ்** என்பவன் நபியவர்களை நோக்கிக் கல்லெறிந்தான். இதனால் நபியவர்கள் கீழே விழுந்து, நபிகளாரின் வலது கீழவரிசையின் முன் பல் சேதமடைந்து கீழ் உதடும் காயமடைந்தது.
இந்த உஹுத் போரில் அம்பெறி வீரர்கள் செய்த தவறினால் எதிரிகள் நபிகளாரைச் சூழ்ந்து கொண்டனர். நபிகளாரைத் தாக்கவிடாமல் நபித்தோழர்கள் கடுமையாக எதிரிகளை எதிர்த்துப் போராடினர். நபி(ஸல்) அவர்களின் மீது வைத்திருந்த அன்பினால் தங்களையே அர்ப்பணித்து வீர மரணத்தைச் சுவைத்தனர். **ஸஅது இப்னு அபீ வக்காஸ், தல்ஹா இப்னு உபைதுல்லாஹ் (ரலி)** ஆகிய இரு தோழர்களுமே மிகுந்த வீரத்துடனும் துணிவுடனும் போரிட்டனர்.

இதற்கிடையில் நபி (ஸல்) அவர்கள் கொல்லப்பட்டுவிட்டார் என்ற வதந்தி பரவியது. முஸ்லிம்கள் நிலை தடுமாறி, எது முஸ்லிம் படையினர், எது எதிரிப்படையினர் என்று குழம்பிவிட்டவர்களாகத் தங்களுக்குள்ளேயே சண்டையிட்டுக் கொள்ளும் நிலை வந்தது.

நிலைமையை அறிந்த நபி (ஸல்) அவர்களுக்குப் பின்னால் இருந்த அணியிலிருந்து அம்பெறி வீரர்களைப் போர்க்களத்திற்குத் திரும்பி வரும்படி அழைத்தார்கள்.
ஆனால் அவர்கள் அதைக் கவனிக்கவில்லை. அணிகளுக்கிடையில் பெரும் குழப்பம் நிலவியது.எந்த அளவிற்கென்றால் முஸ்லிம்களில் முன்னணிப் படையினர் திரும்பிச் சென்று முஸ்லிம் பின்னணிப் படையினருடன் போரிட்டார்கள்.

அப்போது அங்கு **ஹுதைஃபா (ரலி)** அருகிலிருந்த தன் தந்தை யமான் (ரலி) அவர்களை முன்னணிப் படையினரிடம் சிக்கியதைப் பார்த்துவிட்டு, 'அல்லாஹ்வின் அடியார்களே! இது என் தந்தை, இது என் தந்தை!' என்று உரக்கக் கூறி தடுக்க முயன்றார்கள். ஆனால் முஸ்லிம் வீரர்களுக்கு அந்தக் கூச்சல் குழப்பத்தில் எதுவும் கேட்கவில்லை, அவரைத் தாக்கிக் கொன்றே விட்டனர். ஆனாலும் முஸ்லிம்களை ஹுதைஃபா மன்னித்ததோடு 'அல்லாஹ் உங்களை மன்னிப்பானாக!' என்று பெருந்தன்மையாகக் கூறினார்.

தல்ஹா (ரலி) எதிரிகளுடன் சண்டையிட்டு நபிகளாரைக் காத்தார்கள். அப்போது தல்ஹாக்கும் பலத்த வெட்டுக் காயம் ஏற்பட்டது. நபி (ஸல்) அவர்களைத் தாக்க விரைந்த எதிரிகளின் எண்ணிக்கை அதிகரித்தவாறே இருந்தது. அதைப் போலவே, நபிகளாரைக் காக்க வேண்டுமென்பவர்களின் எண்ணிக்கையும் உயர்ந்தது.

நபிகளாரைக் காக்க வேண்டுமென்று அவர்களின் தோழர்களான அபூபக்ர்(ரலி), உமர்(ரலி), அலீ(ரலி) ஆகியோர் அங்கு விரைந்து நபிகளாரைச் சுற்றிப் பாதுகாப்பு அரணாக மாறினர்.
ஸஹீஹ் புகாரி 3:59:3290, இப்னு ஹிஷாம்,

அர்ரஹீக் அல்மக்தூம்.
மரங்களில் ஏறுவதற்கு கைதேர்ந்த நிபுணர் ஒருவர் பலரை மரம் ஏறப் பழக்கிக் கொண்டிருந்தார். அப்படி ஒருவனுக்கு கற்றுக் கொடுக்கும் போது , சற்று ஆபத்தான உயரத்தில் ஏறவும் முடியாமல், இறங்கவும் முடியாமல் கஷ்டப்படும் போது அந்த நிபுணர் ஒன்றுமே சொல்லாமல் வாளாவிருந்தார்.
ஆனால் இறங்குகின்ற போது பாதுகாப்பான இடத்திற்கு வந்ததும் " பார்த்து இறங்கு ,பார்த்து இறங்கு" என்று சத்தமிட்டார்.

அப்போது அருகில் இருந்தவர்கள் " இப்போது எச்சரிக்கை செய்கிறீர்களே என்ன ஆபத்து இருக்கிறது ? " என்று கேட்டார்கள் .
அதற்கு அவர் அவன் மரத்தின் ஆபத்தான உயரத்தில் இருக்கும் போது மிகவும் குழம்பி இருந்தான். அவன் பயத்தில் இருக்கும் போது நான் ஏதாவது சொல்லி இருந்தால், அவன் இன்னும் பதற்றப்பட்டு இருப்பான். எளிதான இடத்தில்தான் அஜாக்கிரதையாக இருந்து தவறுகள் அதிகம் செய்வார்கள் அதனால் தான் அந்த இடத்தில் நான் எச்சரிக்கை செய்தேன் " என்றார்.
வாழ்க்கை விசித்திரமானது.இலகுவான விஷயங்களில்தான் நாம் அதிகம் கோட்டை விடுகிறோம் . எளிதான தேர்வுகளில்தான் குறைந்த மதிப்பெண்கள் பெறுகிறோம்.
வெற்றியும் மமதையும் இயற்கைத்தான் ஒன்றாக பிணைத்து மறைத்து வைத்திருக்கிறது !

ரஹ்மத் ராஜகுமாரன்

இசை

இயற்கையின் தேர்ந்தெடுப்பு 11



இசை (music) என்பது ஒழுங்கு செய்யப்பட்ட, கட்டுப்படுத்தப்பட்ட, அழகு ஒலியாகும். இசை என்ற சொல்லுக்கு இசைய வைப்பது என்று பொருள். மனிதனையும் மற்ற உயிரினங்களையும் இசைய வைக்கின்ற, பணியவைக்கின்ற ஓர் அருஞ்சாதனம் இசை.
" மலைகளை நோக்கி நீங்கள் அவருடன் (தாவூத்) சேர்ந்து துதி செய்யுங்கள் என்று கட்டளையிட்டோம்.அவ்வாறே பறவைகளுக்கும் கட்டளையிட்டோம்.குர்ஆன் ( 34 : 10)

என்று கூறும் இறைவன் ,ஸபூர் வேதத்தை தாவூத் (அலை) அவர்கள் ஓத அதில் எல்லா ஜீவன்களோடு அஃறிணை வஸ்துகளும் திளைத்திருந்தன என்பதை அறிய முடிகிறது
சங்கீதம் என்பது செவிக்கு இன்பம் தரும் தொனி(ஒலி)களைப் பற்றிய கலையாகும். இசையை வடமொழியில் 'நாதம்' என அழைப்பர்.
மொஸார்ட் ஒரு பிறவி இசைக்கலைஞன் அவன் பல் முளைப்பதற்கு முன்பே இனிய ராகங்களை மீட்டியவன். மொஸார்ட் ,பீத்தோவான் , பேக் போன்றவர்களுடைய தாக்கம் இல்லாமல் மேற்கத்திய இசையை மீட்ட முடியாது என்கிற அளவுக்கு இசை அவர்கள் ரத்தத்தில் கலந்து இருந்தது. அவர்கள் சுவாசம் கூட சுருதி பேதம் இல்லாமல் இசையாய் இருந்தது. அவர்கள் நடை கூட தாளம் தப்பாமல் நடந்தது. சுருக்கமாக சொல்வதென்றால் , அவர்கள் இசையாகவே வாழ்ந்தார்கள்

இசை இன்று பல்வேறு பயன்களைத் தருகின்றது. தற்போது படித்தவர் முதல் பாமரர் வரை இசை பரவி நிற்கின்றது. இணையத்தில் அன்றாடம் பார்க்கப்படும் காணொளிகளில் இருபது விழுக்காடு இசை சம்பந்தமாகப் பார்க்கப்படும் காணொளிகளாகும்

தொல்பொருளியல் ஆய்வுகள் மூலம் பெறப்பட்ட பல பொருட்களில் இருந்து, பண்டைய காலத்தில் இசை எவ்வாறு இருந்தது என்பதை ஊகித்தறிய முடிகிறது.
பழைய கற்காலத்தில் மனிதர்கள் மிருக எலும்புகளில் துளைகளையிட்டு புல்லாங்குழல் போன்றவற்றைப் பயன்படுத்தி வந்துள்ளனர்.

சிந்துவெளி நாகரிகம் இருந்த காலத்திலிருந்து ஏழு துளைகள் கொண்ட புல்லாங்குழல், மேலும் சில வகையான நரம்புகள் கொண்ட இசைக்கருவிகள் தொல்பொருளாய்வில் கண்டெடுக்கப்பட்டிருக்கின்றன.
இந்தியா மிகப் பழமையான இசை மரபைக் கொண்டிருக்கும் நாடுகளில் ஒன்றாக இருப்பதாக அறியப்படுகிறது. அதே நேரத்தில் மிகப் பழமையானவையும், மிக அதிகளவிலான பழைய கற்கால இசைக்கருவிகள் சீனாவில் இருப்பதாக அறியப்படுகிறது. அவை 7000 – 6600 கி.மு விலானவையாக இருக்கின்றன.

உலகிலுள்ள அத்தனை ராக தாளங்கள் எழுப்பும் இசைக்கருவிகளும் சுவனத்தில் இருக்கும் . இன்னும் இத்தனைக்கும் மேலான மனிதர்கள் இதுவரை பயன்படுத்தாத அதிகப்படியான இசைக்கருவிகளும் அங்கு உண்டு.
உலகிலுள்ள அத்தனை இசைக்கருவிகளும் ஏழு ஸ்வரங்களை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்பட்டது என்றால், சுவனத்து இசைக்கருவிகள் எழுபது ஸ்வரங்களை அடிப்படையாகக் கொண்டதாக இருக்கலாம் .
இது போக அங்குள்ள மரங்களில் அநேக ராக தாளங்களுக்கென்றே அமைக்கப்பட்டு , கிளைகளிலும் , விழுதுகளிலும் துவாரங்கள் உள்ளதாக இருக்கும் . சுவனத்தென்றல் ஆடி அசைந்து வீசும் போது , மரம் அசைய அசைய காற்று மரத் துவாரங்களின் வழியே ஊடுருவி செல்லும் போது மனதை மயக்கும் அழகிய கீத நாதங்கள் இசைக்கப்படும் .

மேற்கண்ட காற்றின் இசையுடன் பறவைகள் சங்கீதம் பாடும் .அத்தோடு ஹூருல் ஈன்களோடு மலக்குமார்களும் சேர்ந்து பாடுவார்கள் .

இந்த சங்கீதங்கள் அனைத்தும் தஸ்பீஹு முதலியவைகளும் , குர்ஆனின் ஆயத்துக்களும், ஸபூர் வேத வாக்கியங்களுமாக இருக்கும்.

**நபி தாவூது (அலை)** அவர்களும் அங்கே சங்கீதக்காரர்களில் ஒருவராக இருப்பார்கள் .
இசையை ரசிப்பதன் மூலமோ உருவாக்குவதன் மூலமோ அதில் ஈடுபாடு காட்டுவது ஏற்புடையதல்ல என்றொரு கருத்து இஸ்லாமிய உலகில் இருக்கத்தான் செய்கிறது மறுக்கவில்லை .
இறைவனிடமிருந்து மனிதனை இசை தூரமாக்கி விடுகிறது என்றும் இறைச் சிந்தனையை அது மறக்கடிக்க வைத்து விடுகிறது என்றும் சொல்லப்படுகிறது .

இசையில் ஒருவன் தன்னையே மறக்க நேரிடுவதால் அது தவிர்க்கப்பட வேண்டும் என்றும் வாதிடப்படுகிறது
இசை கூடாது என்றும் அழுத்தமாக சொல்பவர்கள் திருக்குர்ஆனில் இருந்தும் நபிமொழிகளிலிருந்தும ஆதாரங்கள் காட்டப்படுகிறது

நான்கு வேதங்களில் ஒன்றான சபூர் வேதத்தை இசை வடிவில் அருளிய இறைவன் இசை உணர்வற்றவனாக இருப்பானா ? வேதமே இசையாக அருளிய இறைவனுக்கு இசை எதிரியாக இருக்க முடியுமா? சொல்லுங்க !
புத்தகத்தில் ஜென் தத்துவங்களைப் போல, இஸ்லாத்தில் சூஃபித்துவமும் சுதந்திரமானது, இறைநிலை உணர்வுக்கு எந்த சம்பிரதாயங்களையும் கட்டாயப்படுத்துவதில்லை. இயற்கை மீதான பார்வைக்கும், சுய சிந்தனைக்கும் ,

சம்பிரதாயங்களை கடந்த மனிதநேயத்திற்கும் முழு சுதந்திரம் கொடுப்பதுடன்,இயற்கையையும், அன்பையும் இறை-வழியாக கொள்ளப்படுவதால் ,அதில் வெளிப்படும் கலையும் அன்பும், பணிவுமாக மத வேறுபாடின்றி அனைவரையும் ஆட்கொள்கிறது,

ஏழத்தாழ 10 -ம் நுற்றாண்டில் இஸ்லாத்தின் சம்பிரதாய சடங்குகளைத் தவிர்த்து மெய்ஞான தேடலாக உருவானவர்கள் சூஃபிகள்.
பொதுவாக இஸ்லாம் துறவு பற்றி போதிப்பதில்லை.
ஆனால் அதிகப்படியான இறைக்காதலால் துறவு நிலையில் வாழ்ந்த சூஃபி மெய்ஞானிகளும் உண்டு. ஆனால் சூஃபியிசத்தில் கலைகளின் வாயிலாக இறைவனை சரணடைதல் முக்கிய நிகழ்வாகி விடுகிறது. இன்னும் சொல்லப்போனால் இது ஒரு வகை கூட்டு வழிபாடு போன்றது.

ஹாஜா மொயனுட்டின் சிஷ்டி சூபிஞானி (ரஹ்) அவர்கள் 11-ம் நுற்றாண்டில் ஈரானில் பிறந்தவர் இஸ்லாத்தின் முக்கிய மெய்ஞானியாக கருதப்பட்ட இவர்கள்தான் இந்தியாவில் சூஃபியிசம் உருவாக காரணமானவராக அறியப்படுகிறார்.

சூஃபியிசதில் முக்கிய உட்பிரிவுகள் தரிக்கா என்றழைக்கப்படுகிறது (தரிக்கா என்றால் "பாதை" என பொருள்படுகிறது. இஸ்லாம் என்றால் மார்க்கம் ( பாதை)
இவர்கள் பிரபலப்படுத்திய காதிரி தரிக்கா
சூஃபியிசத்தில் இசையும் ஒரு வரைமுறைக்குட்பட்ட நடனமும் கூட்டு வழிபாட்டின் முக்கிய நிகழ்வு, இதற்கு "ஸாம " என்ற பெயருமுண்டு,
ஸாம - வலது கை மேல்புறம் நோக்கியும், இடது கை பூமி நோக்கியும் வைத்துகொண்டு, இடது பாதத்தை நிலத்தில் பதித்து,வலது பாதத்தால் கடிகார எதிர் சுற்றில் சுழன்று சுழன்று ஆடும் இந்த நடனம் உடலையும் மனதையும் ஒரு வித மோன நிலைக்கு ஆட்படுத்தக்கூடியது

புகழ்பெற்ற பெர்சிய சூஃபி கவிஞர் ஜலாலுதீன் ரூமி (1207 - 1273 ) இத்தகைய நடன நிலையில்
இறையுணர்வுக்கு ஆட்படுவதில் விருப்பம் கொண்டவராயிருந்தார்கள் .
இசையும் ,மனமும் இயற்கை தேர்ந்தெடுத்து ,ஒன்றாக பிணைக்கப்பட்டு மனவெளியில் உலாவவிட்டிருக்கிறது.
தாகித்தவன் தண்ணீரைத் தேடுவது போல் , மனித மனமும் அதை தேடுகிறது .

(41000 ஆண்டுகளுக்கு முற்பட்ட எலும்பினால் செய்யப்பட்ட புல்லாங்குழல் ஒன்றை படத்தில் பார்க்கிறீர்கள் )

ஏகத்துவம்

இயற்கையின் தேர்ந்தெடுப்பு 12



'பிறக்கும் குழந்தைகள் அனைத்தும் முஸ்லிம்களே'' என்ற முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சொல்லை ஆய்வின் மூலம் உறுதி செய்த பிரிட்டன் ஆய்வாளார் ஜஸ்டீன்.

حَدَّثَنَا عَبْدَانُ أَخْبَرَنَا عَبْدُ اللَّهِ أَخْبَرَنَا يُونُسُ عَنِ الزُّهْرِىِّ قَالَ أَخْبَرَنِى أَبُو سَلَمَةَ بْنُ عَبْدِ الرَّحْمَنِ أَنَّ أَبَا هُرَيْرَةَ - رضى الله عنه - قَالَ قَالَ رَسُولُ اللَّهِ صلى الله عليه وسلم : مَا مِنْ مَوْلُودٍ إِلاَّ يُولَدُ عَلَى الْفِطْرَةِ ، فَأَبَوَاهُ يُهَوِّدَانِهِ أَوْ يُنَصِّرَانِهِ أَوْ يُمَجِّسَانِهِ ، كَمَا تُنْتَجُ الْبَهِيمَةُ بَهِيمَةً جَمْعَاءَ ، هَلْ تُحِسُّونَ فِيهَا مِنْ جَدْعَاءَ ؟ ثُمَّ يَقُولُ ( فِطْرَةَ اللَّهِ الَّتِى فَطَرَ النَّاسَ عَلَيْهَا لاَ تَبْدِيلَ لِخَلْقِ اللَّهِ ذَلِكَ الدِّينُ الْقَيِّمُ ) –
صحيح البخاري

''பிறக்கும் குழந்தைகள் அனைத்தும் (இஸ்லாமிய) இயல்பிலேயே பிறக்கின்றன வளர்ப்பு முறையில்தான் அந்த குழந்தைகள் யூதனாகவும், கிருதுவனகவும், நெருப்பை வணங்கக் கூடியவனாகவும் வார்த்தெடுக்கப்படுகின்றனர். (அறிவிப்பவர் அபூ ஹுரைரா (ரலி) புகாரி 2568)

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அருள் மொழிகளில் இதுவும் ஒன்று அந்த மாமனிதரின் இந்த சொல்லும் அவரின் தனித்துவத்தையும் அவர்களின் தூதுத்துவத்தையும் அறுதியிட்டு உறுதி கூறும் அற்புத சான்றுகளில் ஒன்றாக ஒளிர்கிறது.

பிரிட்டனை சார்ந்த ஆய்வாளார் டாக்கர் ஜெஸ்டின் குழந்தைகள் பற்றிய ஒரு ஆய்வில் ஈடுபட்டிருந்தார். சில ஆண்டுகள் தொடர்ந்த அவரது ஆய்வில் குழந்தைகள் பற்றிய பல அரிய தகவல்களை கண்டிறிந்தார்.

பிறக்கும் குழந்தைகள் தனது தாய் மற்றும் தந்தை மற்றும் தன்னை சார்ந்தவர்களின் கொள்கைகளையும் , கோட்பாடுகளையும் பார்க்காத நிலையிலும் அறியாத நிலையிலும் வேறு எந்த கொள்கை கோட்பாடுகளையும் போதிக்கப்படாத நிலையிலேயும் வளர்க்கப்பட்டால், அப்படி வளர்க்க பட்ட குழந்தைகளின் உள்ளங்களில் "ஏகத்துவம் " மட்டுமே குடிகொண்டிருக்கும் என்பதும் அவர் கண்டிறிந்த உண்மைகளில் ஒன்றாகும்.

ஆக இஸ்லாம் என்பது ஏகத்துவம் என்பது இயல்பானது இயற்கையானது. அவர்களை திசைதிருப்பாமலும் எதையும் போதிக்காமலும் வளர்க்கப்படுகின்ற குழந்தைகளின் உள்ளங்களில் இயல்பாகவே அதுதான் குடிகொண்டுள்ளது என்பது ஆய்வாளரின் முடிவாகும்.

இப்போது நாம் மேலே குறிப்பிட்டுள்ள அண்ணல் நபியின் அமுதமொழியை மீண்டும் படியுங்கள்.
அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அந்த அருள் மொழியில் வார்த்தைகள் சொல்லி வைத்தது போல் அளந்து பயன்படுத்தப்பட்டுள்ளது.

வளர்ப்பு முறையில்தான் குழந்தைகள் முஸ்லிமாக ஏகத்துவ வாதியாக வார்த்தெடுக்கப்படுகின்றனர் என்று சொல்லப்படவில்லை.
மாறாக அந்த ஏகத்துவம் இயல்பாகவே அந்த குழந்தைகளின் உள்ளங்களில் நிலைப்பெற்றுள்ளது .வளர்ப்புமுறையில்தான் அந்த குழந்தைகள் மாற்று மதத்தவர்களாக வார்க்கப்படுகின்றனர் என்ற அற்புதமான உண்மையை நயமாக நபிகள் நாயகம் சொல்லி உள்ளார்கள்.

ஒரு ஆய்வாளான் சில ஆண்டுகளை ஆய்வில் செலவு செய்து பல்வேறு சோதனைகளை செய்து இந்த உண்மையை கண்டு பிடிப்பது பெரிய விஷயமல்ல.
எந்த ஆய்வுகளிலும் சோதனைகளிலும் ஈடுபடாத முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களால் இந்த உண்மையை சர்வ சாதாரணமான வார்த்தைகளில் எப்படி சொல்ல முடிந்தது.
அவர் சாதாரண மனிதராக மட்டும் இருந்திருந்தால் அவர்களின் காலத்தில் வாழ்ந்தவர்களுக்கு எந்த அறிவு இருந்ததோ அந்த அறிவை கொண்டு மட்டுமே அவர்கள் பேசியிருக்க வேண்டும்.
1400 ஆண்டுகளுக்கு பிறகு ஒரு ஆய்வாளான் சில ஆண்டுகளை ஆய்வில் செலவு செய்து பெற்ற அறிவை அன்றே அண்ணல் நபியால் எப்படி சொல்ல முடிந்தது?!

அவர்கள் யாவற்றையும் அறிந்த படைத்தவனின் தூதராக இருந்ததால் மட்டுமே இதை அன்றே சொல்ல முடிந்தது இந்த நபி மொழியும் உத்தநபியின் நுபுவத்தை உறுதி செய்யும் அற்புத வார்த்தைகளில் ஒன்றாகும்.
ஏகத்துவத்தை மனிதர்களுக்கு மட்டும் அல்லாமல் அனைத்து ஜீவராசிக்குள்ளும் இயற்கை தேர்ந்தெடுத்திருக்கிறது . அதனால்தான்

وَّالنَّجْمُ وَالشَّجَرُ يَسْجُدٰنِ
செடிகள், (கொடிகள்,) மரங்கள் (ஆகிய அனைத்தும் அல்லாஹ்வுக்கு வழிப்பட்டுச்) சிரம் பணிகின்றன.
(அல்குர்ஆன் : 55:6)

ரஹ்மத் ராஜகுமாரன்

## உனக்குள்ளே ஒரு புதையல்

## இயற்கையின் தேர்ந்தெடுப்பு 13



ஊரொன்றுக்கு புத்தர் வந்திருந்தார். அங்கு தனது போதனைகளை வழங்கிக் கொண்டிருந்தார். அப்போது சீடன் ஒருவன் புத்தரிடம் கேள்வி கேட்டான்.
"குருவே! உலக மக்களின் வாழ்க்கையையும் ஒன்றோடு ஒன்று வேறுபட்டது. வறியவன் வாழ்வில் சிரமப்படுகிறான். செல்வந்தனோ வசதியாக இருக்கிறான். ஆனால் இருவருமே வாழ்வில் தேடுவது மகிழ்ச்சியாகவே இருக்கிறதே ஏன்?"

புத்தர் அந்த சீடனைப் பார்த்து புன்னகையுடன், "நான் உனக்கொரு கதை சொல்கிறேன் கவனமாகக் கேள்" என்றார்.
"சொல்லுங்கள் குருவே!" என்றான் சீடன்.
புத்தர் தொடங்கினார், "ஒரு ஊரின் தெருவோரத்தில் பிச்சைக்காரன் இருந்தான். அவ்வூர் மக்களிடம் இரந்து உண்ணும் அவன், தான் தங்கி, உண்டு, உறங்கும் இடத்தை மிகவும் அசுத்தமாக, கடந்து செல்வோர் முகம் சுளிக்கும்படி வைத்திருந்தான். தெருவில் செல்வோரிடம் கையேந்துவான், பொருளோ, உணவோ கிடைத்தால் மகிழ்வான். ஏதும் கிடைக்கவில்லை என்றால் துக்கத்தில் உழல்வான்.

ஒருநாள் அவன் வாழ்வின் கடைசி நாளாக அமைந்துவிட்டது. இறந்த அவனை அப்புறப்படுத்திவிட்டு, அவன் தங்கியிருந்த நாற்றம் பிடித்த இடத்தை சுத்தம் செய்ய முனைந்தார்கள் அப்பகுதி மக்கள். கூட்டிப் பெருக்கியும் நாற்றம் சகிக்கவில்லை. அவன் படுத்திருந்த இடத்தில் இரண்டடிவரை தோண்டி, மண்ணை அப்புறப்படுத்தினார்கள். நாற்றம் ஒழிந்தது. அவர்கள் தோண்டிய இடத்தில் ஏதோ ஒரு பொருளும் ஒளிர்ந்தது. அப்பொருளை எடுத்துப் பார்த்த மக்கள், அது பொற் புதையல் என அறிந்ததும் அதிசயித்தனர்.

தங்க புதையல் தனக்கு கீழே இருந்தது தெரியாமல் வாழ்க்கை முழுவதும் இரந்து உண்டானே அந்த பிச்சைக்காரன் என எண்ணி வியந்தனர் என தனது கதையை முடித்தார் புத்தர்.
"நான் கேட்ட கேள்விக்கும் இக்கதைக்கும் என்ன சம்பந்தம்? புரியவில்லையே குருவே" என்றான் சீடன்.
புத்தர் விளக்க ஆரம்பித்தார். "இந்தக் கதை ஏதோ ஒரு ஊரில் வாழ்ந்த பிச்சைக்காரனின் கதையல்ல. வாழ்வில் மகிழ்ச்சியைத் தேடும் அனைவரின் கதையும் இதுவே".

மனிதன் மகிழ்ச்சியை வெளியில் உள்ள ஒரு பொருளிடமோ அல்லது மற்றொரு மனிதனிடமோ தேடுகிறான். ஆனால் அவனுக்கு எல்லையற்ற மகிழ்வைத்தரும் பொருள் அவனுள்ளேயே இருப்பதை அறியாமலேயே உலக வாழ்வை முடிக்கிறான்.
நீ கூறிய வறியவனின் வாழ்வும், செல்வந்தனின் வாழ்வும் அடிப்படையில் வேறுபட்டதல்ல. அந்த வறியவன் செல்வந்தனானாலும், அந்த செல்வந்தன் செல்வாதி செல்வந்தன் ஆனாலும் அவர்கள் மகிழ்ச்சியை தேடிக்கொண்டேதான் இருப்பார்கள். ஏனென்றால் அவர்கள் தேடுவது வெளியில். உன் உள்ளே இருக்கும் ஆன்மாவை உன்னால் எல்லையற்ற அமைதியில் வைக்க முடிந்தால், அவ்வமைதி கொடுக்கும் ஆற்றலுக்கும் ஆனந்தத்திற்கும் அளவே இராது" என்று முடித்தார் புத்தர்.

உள்ளிருக்கும் ஆன்மா எங்கிருந்து வந்தது ? சற்று சிந்தியுங்கள். குர்ஆனில்
மனிதனை நான் செவ்வையாக்கி, பிறகு என்னுடைய ரூஹிலிருந்து அவனில் ஊதினேன் (அல்குர்ஆன் 38:72)
நம்முடைய ரூஹிலிருந்து அவரில் நாம் ஊதினோம். (அல்குர்ஆன் 21:91)
அதில் தன்னுடைய ரூஹை ஊதினான். (32: 9)

மேற்கண்ட வசனங்களின் வாயிலாக ஆன்மா என்னும் ரூஹ் இறைவனிடமிருந்து மனிதனுக்குள் வந்தது. இதனால் மனிதனை தன் பிரதிநிதியாக (கலீபாவாக ) பிரகடனம் செய்தான். இது இறைவனால் இந்த தேர்ந்தெடுப்பு செய்யப்பட்டது.
ஆனால் மனிதன் மகிழ்ச்சியை வெளியில் உள்ள ஒரு பொருளிடமோ அல்லது மற்றொரு மனிதனிடமோ தேடுகிறான். ஆனால் அவனுக்கு எல்லையற்ற மகிழ்வைத்தரும் பொருள் அவனுள்ளேயே இருப்பதை அறியாமலேயே உலக வாழ்வை முடிக்கிறான்.

ரஹ்மத் ராஜகுமாரன்

ஜீவராசிகளின் விஷம் - மருந்து

இயற்கையின் தேர்ந்தெடுப்பு 14



பாம்பு, தேள் என்ற உடனே அவற்றின் விஷத்தன்மை நம் நினைவுக்கு வரும். இந்த உயிரினங்களுக்கு இரையை வேட்டையாடுவது, தற்காப்புக்கு என்று பொதுவாக 2 செயல்பாடுகளுக்கு விஷம் பயன்படுகிறது.
பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக பரிணாம வளர்ச்சியில் நஞ்சு பலவித மாறுதல்களுக்கு உள்ளாகி, ஒவ்வோர் உயிரினத்தின் தேவைக்குத் தகுந்தாற்போல் தகவமைக்கப்பட்டு உள்ளது.

நஞ்சு என்பது ஒரே ஒரு வேதிப்பொருள் அல்ல; உயிரியல் ரீதியான விளைவுகளை ஏற்படுத்தக்கூடிய பல பொருட்கள் அடங்கியது. குறிப்பாக புரதங்களின் கலவை. அதில் இருக்கும் ஒவ்வொரு சேர்மத்துக்கும் அதன் ஒட்டுமொத்த செயல்பாட்டில் பங்கு உண்டு.

ஒட்டுமொத்தமாக நஞ்சு உடலுக்கும் உயிருக்கும் பாதிப்பை ஏற்படுத்தக் கூடியது என்றாலும், அதில் உள்ள சில பொருட்களுக்கு அபாரமான மருத்துவ பண்புகளும் உள்ளன. பிற உயிர்களிடத்தில் குறிப்பிட்ட ஓர் நஞ்சு ஏற்படுத்தும் வினையை ஆராய முயன்றபோது, நஞ்சில் இருக்கும் பொருட்களின் தனிப்பட்ட செயல்முறை, அவற்றின் மருத்துவப் பயன் ஆகியவை கண்டறியப்பட்டன.
எடுத்துக்காட்டாக, விரியன் வகைப் பாம்பு ஒன்றின் நஞ்சில் இருக்கும் பொருளுக்கு, ரத்த அழுத்தத்தைக் குறைக்கும் ஆற்றல் உண்டு. அதன் நஞ்சில் இருந்து அந்த பொருளைப் பிரித்து ஆராய்ந்து, செயற்கையாகத் தயாரித்து ரத்த அழுத்தத்தை கட்டுக்குள் வைக்கும் மருந்தாகப் பயன்படுத்துகிறார்கள்.

விஷ முறிவு மருந்து என்பது பாம்பின் நஞ்சிலிருந்தே தயாரிக்கப்படுகிறது. பாம்பிலிருந்து எடுக்கப்பட்ட நஞ்சானது நீர்த்துப்போகச் செய்யப்பட்டு பின்னர் குதிரைகள் அல்லது செம்மறி ஆடுகளில் செலுத்தப்பட்டு, அதன் உடலில் உருவாகும் நோய் எதிர்ப்புச் சக்திகளைப் பிரித்தெடுத்து, அதிலிருந்து விஷ முறிவு மருந்து தயாரிக்கப்படுகிறது.

தேள் வகை கொடிய நஞ்சைக் கொண்டது. அதன் நஞ்சில் இருக்கும் சில பொருட்கள், மனித உடலின் புற்றுச் செல்களோடு பிணைந்துகொள்கின்றன; அந்த நஞ்சுக்கு உள்ள ஒரு சிறப்பு பண்பு, குறிப்பிட்ட நிறத்தில் அவற்றை ஒளிரச் செய்வதுதான். மூளைப் புற்றுநோயால் பாதிக்கப்பட்ட நபர்களுக்கு அறுவை சிகிச்சையின்போது அந்த பொருளைச் செலுத்தி, புற்றுச் செல்களோடு அவற்றைப் பிணைந்து கொள்ளச்செய்து, பின்னர் ஒளிரும் செல்களை மட்டும் நீக்குகிறார்கள். இதன்மூலம் ஆரோக்கியமான செல்கள் நீக்கப்படுவதோ புற்றுச் செல்கள் விடுபட்டுப் போவதோ தவிர்க்கப்படுகிறது.

நரம்பு மண்டலத்தை தாக்கும் நஞ்சு வகைகள் பலவற்றில், நாள்பட்ட வலியைப் போக்கக்கூடிய வலிநிவாரணிகள் உண்டு. கூம்பு நத்தைகள் என்ற கடல்வாழ் நத்தைகள் மிக வீரியமான நஞ்சைக் கொண்டவை; கொனோடாக்சின் என்று அழைக்கப்படும் பொருள் அவற்றில் உண்டு. அவை வலியைக் கடத்தும் நரம்புகளை முடக்கி, வலி சமிக்ஞைகள் மூளைக்குச் சென்றடைவதை தடுக்கின்றன.
வலிநிவாரணிகள் தயாரிப்பில் சில நாடுகள் இவற்றை பயன்படுத்துவதாக மருத்துவ வல்லுனர்கள் தெரிவிக்கிறார்கள்.

இறைக்கட்டளைப்படி நபிகளார் தனது தோழர் **அபூபக்கர் சித்திக் (ரலி)** அவர்களுடன் மக்காவில் இருந்து மதீனாவுக்கு புலம் பெயர்ந்து சென்றார்கள். இந்த நிகழ்ச்சி 'ஹிஜரத்' என்று அழைக்கப்பட்டது.

அருமை நபிகளும், அபூபக்கரும் பாலைவனத்தில் மாற்றுப் பாதையை தேர்ந்தெடுத்தார்கள். கிட்டத்தட்ட பாதி தூரம் சென்றவர்கள், அந்த பாலைவனத்தைக் கடந்து தவர் மலையில் உள்ள ஒரு குகையை அடைந்தார்கள்.
அந்த குகை மிகவும் பழமை வாய்ந்த பள்ளதாக்கில் இருந்ததால் மிகவும் சிரமப்பட்டு இருவரும் அதில் ஏறினார்கள். தங்களது கால்தடங்கள் கூட தங்களை எதிரிகளிடம் காட்டிக்கொடுத்து விடும் என்று நபிகளார் அஞ்சினார்கள். எனவே அவர்கள் தங்களது கால்விரல் நுனியிலேயே நடந்து வந்தார்கள். இதனால் அவர்களது கால் விரல் வெப்பத்தினால் வெந்து காயங்கள் ஏற்பட்டு ரத்தம் கசிய ஆரம்பித்தது.
அதனைக் கண்ணுற்ற அபூபக்கர் சித்திக் (ரலி) அவர்கள் உடனே நபிகளாரை தனது தோள்களில் தூக்கி வைத்துக்கொண்டு அந்த குகையை நோக்கி நடந்தார்கள்.

குகைக்குச் சென்றதும் அண்ணலாரை வெளியே இருக்கச் செய்து விட்டு, தான் மட்டும் உள்ளே நுழைந்தார்கள். அந்த குகை மிகவும் சிறியதாக இருந்தது. இரண்டு நபர்கள் படுப்பதற்கும் மூன்று அல்லது நான்கு நபர்கள் அமரும் இடவசதி கொண்டது.

உள்ளே சென்ற அபூபக்கர் சித்திக் (ரலி) அவர்கள் குகையை நன்றாக சுத்தம் செய்தார்கள். குகைகளில் இருந்த ஏராளமான துவாரங்களை தங்களுடைய ஆடையை கிழித்து கிழித்து அடைத்தார்கள். பின்னர் அண்ணலாரை உள்ளே அழைத்தார்கள். அண்ணலார் உள்ளே சென்றதும், களைப்பின் மிகுதியால் அப்படியே துயில் கொள்ள ஆரம்பித்தார்கள்.

அண்ணலாரின் தலையை தன் மடியில் சாய்த்துக்கொண்ட அபூபக்கர் சித்திக் (ரலி) அவர்கள், கிழித்து அடைக்க ஆடை இல்லாததால் தன்னுடைய கால் விரல்களால் மீதமிருந்த இரண்டு துவாரங்களையும் அடைத்துக் கொண்டார்கள்.

துரதிர்ஷ்டவசமாக அந்த துவாரத்தில் இருந்த நாகம் ஒன்று அபூபக்கர் சித்திக் (ரலி) அவர்களின் பாதங்களை தீண்டி விட்டது. கொடிய விஷம் உடலில் ஏறியதால் சொல்லொண்ணா வலியும் வேதனையும் ஏற்பட்டது. கால்களை அசைத்தால் அது அண்ணலாரின் தூக்கத்தை கெடுத்து விடும் என்று நினைத்து, வலியை பொறுத்துக் கொண்டு அமைதியாக இருந்தார்கள்.
ஆனால், வலியின் வேதனையில் அவர்களது கண்ணிலிருந்து வழிந்தோடிய கண்ணீரை கட்டுப்படுத்த முடியவில்லை. சில கண்ணீர்த்துளிகள் வழிந்தோடி அண்ணலாரின் கன்னங்களில் பட்டு தெறித்தது.
உடனே விழித்துக்கொண்ட அண்ணலார், 'அபூபக்கரே! என்ன நேர்ந்தது?' என வினவினார்கள்.
அபூபக்கர் சித்திக் (ரலி) அவர்கள், 'அண்ணலே! எனது காலில் ஏதோ விஷ ஜந்து தீண்டி விட்டது போல் தெரிகிறது. வலியையும் வேதனையையும் என்னால் தாங்கிக்கொள்ள முடியவில்லை' என்றார்கள்.
உடனே பெருமானார் (ஸல்) அவர்கள் தங்கள் உமிழ் நீரை எடுத்து கடிபட்ட இடத்தில் தடவினார்கள். என்னே ஆச்சர்யம் ! உடனே அபூபக்கர் சித்திக் (ரலி) அவர்களின் வலியும் வேதனையும் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டது.

விஷ முறிவு மருந்து என்பது பாம்பின் நஞ்சிலிருந்தே தயாரிக்கப்படுகிறது. பாம்பிலிருந்து எடுக்கப்பட்ட நஞ்சானது நீர்த்துப்போகச் செய்யப்பட்டு பின்னர் குதிரைகள் அல்லது செம்மறி ஆடுகளில் செலுத்தப்பட்டு, அதன் உடலில் உருவாகும் நோய் எதிர்ப்புச் சக்திகளைப் பிரித்தெடுத்து, அதிலிருந்து விஷ முறிவு மருந்து தயாரிக்கப்படுகிறது.

ஜீவராசிகளின் விஷம் வியாதிகளுக்கு மருந்தாகுவதையும் , வலி நிவாரணியாகுவதையும் விஞ்ஞானம் கண்டு பிடித்திருக்கிறது . அந்த ஜீவராசிகளின் விஷத்தையும் , அதனால் ஏற்படும் வலியை போக்கும் நிவாரணியாக அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்களின் உமிழ்நீர் இருந்ததை என்னென்று சொல்வது ?
இதுவும் இயற்கையின் தேர்ந்தெடுப்புத்தான்

ரஹ்மத் ராஜகுமாரன்

கோபம்.

இயற்கையின் தேர்ந்தெடுப்பு 15



இதுவரையிலும் இயற்கை தேர்ந்தெடுத்த விஷயங்கள் ஒவ்வொன்றாக ஒவ்வொரு பதிவிலும் பார்த்தோம். இந்தப் பதிவு இயற்கை தேர்ந்தெடுக்காத ஒரு விஷயம் உண்டென்றால் அது கோபம்தான் என்பது உங்களுக்கு தெரியுமா? சொல்றேன் .

ஒரு சீடர் பான்காய் என்ற குருவிடம் சென்று , "குருவே என்னால் என் கோபத்தை கட்டுப்படுத்தவே முடியவில்லை. அதற்கு என்ன சிகிச்சை செய்ய வேண்டும் ?
அதற்கு பான்காய் சொன்னார். " இது மிகவும் ருசியாக இருக்கிறது. உன்னுடைய கோபத்தை கொஞ்சம் எனக்கு காட்டுவாயாக நான் அதனைப் பார்க்க வேண்டும் " என்றார்
அதற்கு அவன் "தற்சமயம் என்னிடம் கோபம் இல்லை எனவே என்னால் காட்ட முடியாது" .
"அப்படியானால் உன்னிடம் இருக்கும்போது , நீ அதைக் கொண்டு வருவாயாக!"
அதற்கு அவன் "என்னால் அதை கொண்டுவர முடியாது . ஏனென்றால் திடீரென்று அது ஏற்படுகிறது. நான் உங்களிடம் வருவதற்குள் அது நிச்சயம் காணாமல் போய்விடும்" என்று கூறினான்
குரு சொன்னார் : "அப்படியானால் அது உன்னுடைய உண்மை இயல்பாக இருக்க முடியாது. உண்மை இயல்பாக இருந்ததென்றால், நீ எப்போது வேண்டுமானாலும் அதை நீ என்னிடம் காட்டும் முடியும். நீ பிறந்த போது அது இல்லை. உன் பெற்றோர்கள் உனக்கு அதை தரவில்லை. எனவே அது வெளியில் இருந்து தான் உனக்கு வரவேண்டும். நான் உனக்கு ஒன்று சொல்கிறேன், அது உனக்குள் புகும்போதெல்லாம் உன்னை ஒரு குச்சியால் நன்றாக அடிப்பாய். அந்த கோபம் உன்னை விட்டு ஓடும் வரை அடித்துக்கொண்டே
இருப்பாயாய் "

பான்காய் கூறியதை உற்று நோக்க வேண்டும் .நாம் கோபத்துடன் பிறக்கவில்லை. விரல்களைப் போல, விழிகளைப் போல , இதயத்தை போல, ஈரலை போல, அது நமக்குத் தரப்படவில்லை . உடன்பிறந்தவற்றை வெட்டி எறிவது கடினம். விரல்களை வெட்டவோ, ஈரலை வெட்டவோ, காதுகளை நறுக்கவோ முற்பட்டால் ஏற்படும் வலி மிகவும் அதிகமாக இருக்கும். நம்மோடு பிறக்காதவற்றை வெட்டி எறிவது மிகவும் எளிது . கோபம் நம்மோடு பிறக்கவில்லை என்றால் வெட்டி எறியாவிட்டாலும் , குச்சியால் அடித்துக் கொண்டே இருப்பது தவறில்லை.
நாம் அன்போடு பிறந்தோம்.அன்பு குறைகின்றபோதெல்லாம் வெறுப்பு அதிகமாகிறது. நாம் இனிமையோடு பிறந்தோம். இனிமை குறைகின்ற போதெல்லாம் கசப்பு அதிகமாகிறது.

நாம் மகிழ்ச்சியோடு பிறந்தோம். மகிழ்ச்சி குறைகின்ற போதெல்லாம் கோபம் அதிகமாகிறது.
நாம் திருப்தியோடு பிறந்தோம்.திருப்தி குறைகின்றபோதெல்லாம் பொறாமை அதிகமாகிறது.
நாம் நிறைவோடு பிறந்தோம். நிறைவு நீக்குகின்ற போதெல்லாம் பேராசை ஊற்றெடுக்கிறது.

நம் உண்மை வடிவம் அன்புதானே தவிர கோபம் அல்ல . நாம் கோபம் புரிகின்ற போது அதை கட்டுப்படுத்த நினைத்தால் அது மட்டுப்படுவதற்கு பதிலாக துள்ளிக் குதிக்கிறது. நாம் கோபப்படுகின்றபோது நம் கோபத்தைச் சற்றுக் கூர்ந்து கவனித்தால் ஒன்று புரியும் . அந்த கோபம் குறிப்பிட்ட நிகழ்வுக்காக ஏற்பட்டதல்ல. சரஞ்சரமாய் நடந்த பல்வேறு சம்பவங்களிலிருந்து நாம் தேக்கி வைத்த கோபம் கடை வாயிலேயே குதப்பிக்கொண்டிருந்தது. இந்த ஒரு நிகழ்வில் காரி உமிழப்பட்டிருக்கிறது என்பதை நாம் உணர முடியும்.

கோபத்திற்கான பிராயச்சித்தம் கோபத்தை தடை செய்வது அல்ல. மாறாக அதைப்புரிந்து கொள்வது. கோபம் நிகழும் போதெல்லாம் சுயபரிசோதனை செய்து கொண்டால் கோபத்தின் வேர்களை வெட்டி விட முடியும்.

கோபத்தை அடக்கும் மனிதனை இறைவன் நேசிக்கிறான். ''(இறைவனையே முற்றிலும் நம்பியிருப்போர் எத்தகையோர் எனில்) அவர்கள் பெரும் பாவங்களையும், மானக்கேடான செயல்களையும் தவிர்த்து விடுவார்கள். தாம் கோபத்திற்கு உள்ளாகும்போது மன்னித்து விடுவார்கள்'' (42:37) என்றும்,

"அவர்கள் வசதியுள்ள நிலையிலும், வசதியற்ற நிலையிலும் செலவழிப்பார்கள். கோபத்தை அடக்கிக் கொள்வார்கள். மேலும் மக்களை மன்னித்து விடுவார்கள். இத்தகைய உயர்ந்த பண்பினரை அல்லாஹ் நேசிக்கிறான்.'' (3:134) என்றும் திருமறையில் இறைவன் கூறுகின்றான்.
ஒருமுறை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் "மல்யுத்தம் செய்பவர் உண்மையான வீரர் அல்ல. கோபத்தின் போது தன்னை அடக்கிக் கொள்பவரே உண்மையான வீரர்" என்றார்கள். (அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா (ரலி)
நூல்: புகாரி–6114)

இயற்கை நேர்ந்தெடுத்தது அன்பைத்தானே தவிர கோபத்தை அல்ல .
(இப்பதிவு இன்று காலை நடந்த எங்கள் தர்கா நிகழ்வில் எனக்கு கிடைத்த அனுபவம்)
ரஹ்மத் ராஜகுமாரன் .
(இத்துடன் இயற்கையின் தேர்ந்தெடுப்பு தொடர் பதிவுகள் நிறைவு செய்யப்படுகிறது )

இட்லி என்ற தமிழர் உணவு



( நண்பர் ஹாரிஸ் ஜமாலி பையாஜி அவர்களின் வேண்டுகோளுக்கிணங்க இட்லியைப் பற்றிய பதிவு )

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

(உலகின் மற்ற) பெண்களைக் காட்டிலும் ஆயிஷாவுக்கு இருக்கும் சிறப்பு (மற்ற) உணவுகளைக் காட்டிலும் 'ஸரீத்' என்றும் உணவுக்கு இருக்கும் சிறப்பைப் போன்றதாகும். என அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்.

ஸஹீஹ் புகாரி : 3770.

உணவுக்குரிய பிரத்யேக சிறப்புப் பற்றி நபி (ஸல்) அவர்கள் அன்னை ஆயிஷா (ரலி) அவர்களின் சிறப்புக்கு உதாரணமாக ஸரீத் உணவை உவமானப்படுத்தியுள்ளார்கள் .

இப்போது நம்முடைய இட்லியின் சிறப்புப் பற்றி ....

கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தை வாளோடு முன் தோன்றிய மூத்த குடிமக்கள் வாழ்ந்த தமிழ்நாட்டில் இருந்துதான் நாகரீகமாக இருந்தாலும் சரி, உணவுக் கலாச்சாரமாக இருந்தாலும் சரி உலகம் முழுக்க எடுத்துச் சென்றதற்கான மிகப்பெரிய ஆதாரங்கள் உள்ளது.

ஆக இந்த உணவு சார்ந்த கலாச்சாரம் உணவையே மருந்தாக பயன்படுத்திய தன்மை, அதன் பாங்கு எல்லாமே தமிழர்களுடைய வாழ்வியல் முறையில்தான் இருக்கிறது. அதற்கான ஆதாரம், எட்டுத்தொகை படித்தாலும் சரி, பத்துப்பாட்டு, கலித்தொகை படித்தாலும் சரி, ...உள்ளது எல்லாவற்றிலும் பார்க்கும் பொழுது உணவு சார்ந்த மிகப்பெரிய ஆய்வு தமிழர்களுடைய சங்ககால இலக்கியங்களில் இருக்கிறதை நாம் கண் கூடாகப் பார்க்கலாம்.

தமிழர்கள், உணவே மருந்து, மருந்தே உணவு என்ற கொள்கையில் முழுமையாக இருந்து வாழ்ந்தார்கள். தமிழகத்தில் தோன்றிய சித்த மருத்துவத்தில், சித்தர்களால் வழங்கப்பட்ட சித்த மருத்துவத்தில் கடைப்பிடிக்கப்பட்ட ஒரே ஒரு விஷயம் என்னவென்றால், எது உனக்கு உணவாக இருக்கிறதோ அதுவே மருந்தாக இருக்க வேண்டும், எது உனக்கு மருந்தாக இருக்கிறதோ அதுவே உணவாக இருக்க வேண்டும் என்ற கொள்கை.

சித்தர்கள் "பதார்த்தகுண சிந்தாமணி" என்ற நூலை எழுதி அந்த நூலிலே நாம் சாப்பிடக்கூடிய தண்ணீருக்கு என்ன குணம்? பாலுக்கு என்ன குணம் ? பருப்புக்கு என்ன குணம் ? அதே போல அரிசிக்கு என்ன குணம் ? அரிசியில் எத்தனை வகை இருக்கிறது ? பாலில் எத்தனை வகை இருக்கிறது ? வெள்ளாட்டுப் பாலுக்கு என்ன குணம் ? பசும்பாலுக்கு என்ன குணம் ? காராம்பசு பாலுக்கு என்ன குணம் ?. எருமைப்பாலுக்கு என்ன குணம் ? என்று ஒவ்வொன்றையும் வகைப்படுத்தி முழுமையாக எழுதியிருக்கிறார்கள்.

அந்த உணவுப் பொருள்களுக்கான குணத்தை வகுத்து, ஒரு மனிதன் தன்னுடைய உடல் கூறுக்குத் தகுந்த எந்த உணவை எந்தப் பருவகாலத்தில் சாப்பிடவேண்டும் ? எப்படி சாப்பிட வேண்டும் ? என்ற முறைகள் எல்லாம் தமிழர்களுடைய பழங்கால வாழ்வியல் முறைகளில் எல்லாமே எழுதப்பட்டுள்ளது.

அப்படி வகுத்த உணவான இட்லியில் அரிசியும் , உளுந்தும் கலந்த மாவை நீராவியில் அவித்து உண்ணப்படுகிறது. நீராவியில் அவிக்கப்படும் எந்த உணவுப் பதார்த்தங்களும் அதில் கலந்துள்ள பொருட்களின் ஊட்டச் சக்தி அவிக்கப்படுவதால் வீணாக்கப்படுவதில்லை அதன் இயற்கை குணமும் மாறாது.

இட்லி தமிழர்களையும் தாண்டி அனைத்து இந்தியர்களாலும் விரும்பப்பட்ட உணவு என்று உங்களுக்குத் தெரியுமா ?

இட்லியின் வரலாறு சுமார் 700 ஆண்டுகளாக இந்தியாவில் அறியப்பட்டு வந்த ஒரு உணவு பதார்த்தம் ஆகும். பண்டைய இந்திய இலக்கியங்களில், இட்லி பற்றிய முதல் குறிப்பு, கன்னட மொழியில், சிவகோட்டி ஆச்சாரியர் 'வடராதனே' என்னும் காவியத்தில் குறிப்பிட்டுள்ளார்.

பண்டைய நூல்களில் குறிப்பிட்டுள்ள இட்லியின் செய்முறை வேறு, இப்போது தயாரிக்கும் இட்லியின் செய்முறை வேறு. நவீன முறை இட்லி குறித்து, 1250ம் ஆண்டு பின் எழுதப்பட்ட நூல்களில் தான் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்தோனேசியாவை ஆண்ட இந்து சமய அரசர்களின் நூல்களில் குறிப்பிட்டுள்ள செய்முறை தான் இப்போது பின்பற்றப்படுவதாக, உணவு நிபுணர் அட்சயா தனது பதிப்பில் குறிப்பிட்டுள்ளார்.

இட்லி. தமிழகத்தை பொறுத்த வரை இது வெறும் உணவு அல்ல. 'எமோஷன்' என்றே சொல்லலாம். ஒரு காலத்தில் இட்லி என்றால் விசேஷ நாட்களில் மட்டுமே கிடைக்கும் அரிய உணவு என்று நினைவுகளை இச்சுக்கொட்டும் பெரியவர்கள் இன்று இருக்கிறார்கள். ஆனால் இன்று அப்படி அல்ல. வாரத்தில் பெரும்பான்மையான நாட்களில் இட்லி இடம்பிடித்துவிடுகிறது.

இட்லி என்றால் அவ்வளவு சாதாரணம் இல்லை. கைக்குழந்தை தொடங்கி முதியவர்கள் வரை அனைவருக்கும் பொருந்தி போகும் உணவு.

காய்ச்சல் வந்து படுத்திருக்கும் நோயாளிக்கும் கைகொடுக்கும் இட்லி. அவ்வளவு ஏன்? சாப்பிட முடியாத நிலையிலும் கரைத்து குடிக்கும் திரவ உணவாக இட்லி மாறிவிடும். இப்படி நம் வாழ்வோடு ஒன்றி போன இட்லியை இன்று சமூக வலைதளங்களில் #WorldIdliDay என்ற ஹேஸ்டேக்கில் இணையவாசிகள் கொண்டாடி வருகின்றனர்.

நம்முடனே ஒன்றி போனாலும் இட்லி தமிழகத்தின் உணவு இல்லை என்று கூறுகிறார்கள். இந்தோனேஷியாவில் 'கெட்லி' என்ற உணவு இருந்தது. அது தான் இங்கு இட்லியாக வந்தது என்கிறது ஒரு குரூப். கன்னட மக்களின் 'இல்லாலிகே' தான் இட்லி ஆனது என்கிறது ஒரு குரூப். வரலாற விடுங்க 'இட்லினா இப்ப இந்தியா தான்' என்று முடிவு சொல்கிறது ஒரு குரூப்.

புளிக்கவைத்து வேகவைத்தால் தமிழ்நாட்டு இட்லி, புளிக்காத மாவை வேக வைத்தால் குஜராத் டோக்ளா, புளித்த மாவில் கள் சேர்த்து இனிப்பு சேர்த்தால் கேரளா வட்டப்பம், மங்களூர் பக்கம் சன்னாஸ் என்று பல பெயர்களில் இட்லி இந்தியாவை சுற்றி வருகிறது.

இதை சாப்பிட்டால் செரிக்குமோ செரிக்காதோ என்ற சந்தேக பார்வை வீசப்படும் உணவுகள் மத்தியில் இட்லி என்றால் அனைவரும் தலையசைத்துவிடுவது இட்லியின் சிறப்பு. பூண்டு இட்லி, காய்கறி இட்லி, கீரை இட்லி, பொடி இட்லி என இட்லியில் பல வகைகளை கொண்டு வந்த பெருமை நம் வீட்டு தாய்மார்களுக்கே உரித்தானது.

துரித மாவுகள், வாரக்கணக்கில் கெடாத மாவுகள் என்று இட்லியின் தரம் இன்று குறைவது போல இருந்தாலும் பல வீடுகளில் இன்னமும் மல்லிகைப்பூ இட்லிக்கள் பூத்துக்கொண்டு தான் இருக்கின்றன.

சொர்க்கத்தின் காலை உணவு எப்படி இருக்கும் என்று கேட்டால் ''4 இட்லி, ஒரு மெது வடை, ஒரு ஃபில்டர் காஃபி அவ்வளவுதான்'' என்று நகைச்சுவையாக சிரிக்கிறார்கள் இட்லி பிரியர்கள்!

ரஹ்மத் ராஜகுமாரன் .

வெயில்

காலங்களின் பொழுதுகள் 1



' வெயிலைப் போல அழகான பதார்த்தம் வேறில்லை ' என்று பாரதியார் ஜகத்சித்திரம் கவிதையில் ஒரு வரியில் எழுதி இருக்கிறார்.
குடிதண்ணீரில், மண்பானை மோரில், வெள்ளரிக்காயில், தர்பூசணையில் வெயிலின் ருசியே நிரம்பியிருப்பதை நீங்கள் அறிவீர்கள்.
வீட்டிலிருந்தால்கூட வெயிலின் வெம்மை வெறுப்பைத் தருகிறது. நிஜத்தில் வெயில் வெறுக்கக் கூடியதில்லை. அது வாரி வழங்கும் நன்மைகள் ஏராளம்.
மழையைப் போல வெயிலும் இயற்கையின் கொடையே. அதை புரிந்து கொள்ளாமல் நாம்தான் குடைக்குள்ளேயே குடிகொண்டிருக்கிறோம். உச்சி வெயில் உடம்புக்கு ஆகாதுதான். ஆனாலும் உச்சி வெயிலாலும் நல்ல பலன் உண்டு.

நமது உடலின் ரத்த ஓட்டம் வெயில் காலத்திலேயே அதிக அளவு உடலை சுற்றி வருகிறது.வெயிலின் சக்தியை கிரகித்தே மரங்கள் வளருகின்றன. மழைக்காலங்களில் குறைவான வளர்ச்சியையே மரங்கள் பெறுகின்றது.
பகல் பத்து மணிக்கு முந்திய வெயிலும், மாலை இளங்கதிரவனும் மக்களுக்கு நன்மையே செய்கிறது.
காலை கதிரொளி பச்சிளங் குழந்தைக்கு மஞ்சள் காமாலை வராமல் தடுக்கிறது. சிறியவர்களுக்கும், பெரியவர்களுக்கும் 'வைட்டமின்-டி'யை வாரி வழங்குகிறது. இந்த வகை வைட்டமின், உணவுப் பொருட்களின் வழியே அரிதாகத்தான் கிடைக்கிறது. அதை 10 நிமிட வெயிலே உடலுக்குப் போதுமான அளவுக்குத் தந்துவிடுகிறது.

'வைட்டமின்-டி'தான், உடல் கால்சியத்தை கிரகிக்க துணை புரிகிறது. கால்சியம் கிடைத்தால்தான் எலும்பு பலம் பெறும். மனநிலையை சீராக்கும். செரடோனின் திரவமும், ரத்த அழுத்தத்தை கட்டுப்படுத்தும் ரசாயனப் பொருளும் உடலில் வெயில் படுவதாலேயே சுரக்கின்றன. வெயிலால் உரம் பெற்ற தேகம் அதிக நோய் எதிர்ப்பு சக்தி கொண்டதாகும்.
அதனால்தான் மருத்துவர்கள் மாலை வெயிலில் நடைபயணம் செய்யச் சொல்கிறார்கள்.மூளை முடக்கம் அடைந்தவர்களைக்கூட வெயிலில் பயணம் செய்ய வைப்பது ஒரு சிகிச்சை முறையே.
கொளுத்தும் வெயிலோ, சிறுநீரகத்துக்கு சற்று ஓய்வு தருவதுடன் அதிகமான உடல் கழிவுகளை வியர்வையாக வெளியேற்றிவிடுகிறது.

இந்த வெயில் தாகம்தான் அன்னை ஹாஜிரா அவர்களை தொங்கலோட்டம் ஓடி இறுதியில் வற்றாத ஜம்ஜம் நீர்ஊற்றை உலகுக்கு தந்தது !

கொடூர கோடை வெயில் காலத்தில் ரமலான் நோன்பு நோற்பதை அலீ (ரலி) அவர்கள் விரும்பினார்கள்.
உலக நாடுகள் பலவும் வெயிலை பெருவளமாக பயன்படுத்த ஆரம்பித்திருக்கின்றன. நீர் மின்சாரம், காற்று மின்சாரம் போன்றவற்றில் மாதக்கணக்கில் உற்பத்தி செய்யும் மின்சாரத்தை, ஒருநாள் வெயிலிலேயே உற்பத்தி செய்ய முடியும் என்கிறார்கள் விஞ்ஞானிகள்.

வெயில் நேரடியாக விழாத நேரத்திலும் சூரிய கதிர்வீச்சை கிரகிக்கும் சோலார் சக்தி கருவிகளை அவர்கள் வடிவமைப்பதுடன், முழுமையான சூரிய ஆற்றலையும் மின்னாற்றலாக மாற்றிப் பயன்படுத்தும் கண்டுபிடிப்புகளுக்கான ஆராய்ச்சியை முடுக்கிவிட்டிருக்கிறார்கள்.
வெயில் வருத்துகிறது என்றால் அது நாம் செய்த வினையின் எதிர்விளைவுதான் என்பதையும் மறக்காமல் ஒப்புக் கொள்ள வேண்டும். காடுகளை அழித்து கம்பெனிகளாக்கிக் கொள்கிறோம். விவசாய நிலங்களை அழித்து வீடுகளாக்கிக் கொள்கிறோம். மரத்தையும் காசாக்க நினைக்கிறோம். மரம் இருந்த இடத்தில் கூடுதலாக இரண்டு அறைகள் எடுத்துவிட்டால் வாடகை கிடைக்கும் என ஆசைப்படுகிறோம். இவற்றின் விளைவாக வெயிலை அறுவடை செய்கிறோம்.

ஆனால் நாம் வசிக்கும் வீடான பூமியின் கூரையாக இருக்கும் ஓசோனில் ஓட்டை விழ காரணமாகிவிட்டோம் என்பதை மறக்கிறோம்.
வெயில் நம்மை வாட்டி வதைப்பதைப் போலவே பறவைகள், விலங்குகள் போன்றவற்றையும் பாதிக்கும் என்பதையும் நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். பறவைகளுக்கு வீட்டின் கூரை மீது தண்ணீர் வைக்கலாம். விலங்குகளுக்கு வீட்டின் அருகில் நீர் அருந்த வழி செய்யலாம். பாதசாரிகளுக்கு பயண வழியில் தாகம் தணிக்கும் நீர்ப்பந்தல் அமைப்பது

அது கடுமையான கோடைக்காலம். கொளுத்தும் வெயிலில் ஒரு வழிப்போக்கர் நடந்து கொண்டிருந்தார். வெயிலின் கடுமையை அவரால் தாள முடியவில்லை. நாக்கு வறண்டு தாகம் உயிரை எடுத்தது.அவர் தண்ணீர் தேடி அங்கும், இங்குமாய் அலைந்தார். வெகு சீக்கிரத்திலேயே ஒரு கிணற்றையும் கண்டார். ஆனால், அந்தக் கிணற்றில் தண்ணீர் இல்லை. வறண்டு கிடந்தது. மறுபடியும் தண்ணீருக்காக அலைந்தார். தொலைவில் ஒரு கிணறு தெரிந்தது. அதன் அருகில் ஓடினார். ஆனால், அதுவும் வறண்டிருந்தது. மீண்டும் தண்ணீரைத் தேடி அலைந்தார்.
இறுதியில் தண்ணீர் உள்ள ஒரு கிணறையும் கண்டுபிடித்துவிட்டார். ஆனால், தண்ணீர் கிணற்றின் ஆழத்தில் இருந்தது. அத்துடன் நீரை இறைக்க வாளியோ, கயிறோ எதுவும் இல்லை. கடைசியில், வேறு வழியில்லாமல் ரொம்பவும் சிரமப்பட்டுக் கிணற்றில் இறங்கினார். உள்ளே வெயிலின் கடுமை இல்லை. தண்ணீரும் ஜில்லென்று குளிர்ச்சியாக இருந்தது.இரு கரங்களால் தண்ணீரை அள்ளி தாகம் தீரக் குடித்தார். அதன் பிறகுதான் அவருக்கு உடலில் தெம்பு பிறந்தது. இறைவனுக்கு நன்றி செலுத்தியவர் கிணற்றிலிருந்து வெளியே வந்தார்.
கிணற்றின் பக்கத்தில் ஒரு நாய் நின்றிருந்தது. வெயிலின் கொடுமையைச் சமாளிக்க முடியாமல் நாக்கைத் தொங்கப் போட்டு மூச்சிரைக்கத் தவித்துக்கொண்டிருந்தது. கிணற்றைச் சுற்றியிருந்த மணலைக் கால்களால் பிராண்டியது. மணலின் அடிப்பகுதியில் இருந்த ஈரத்தை நக்கியது. தாகம் அடங்காமல் பலவீனமான குரலில் முனகியது.

இந்தக் காட்சியைக் கண்டதும் வழிப்போக்கரின் உள்ளம் இளகிவிட்டது. "ஐயோ பாவம்! வாயில்லாத ஜீவன்! தண்ணீர் தாகத்தால் தவித்துக் கொண்டிருக்கிறது. இன்னும் கொஞ்சம் நேரத்தில் தண்ணீர் கிடைக்காவிட்டால் நாய் நிச்சயமாக செத்துவிடும்!" என்று கருதினார்.

நாயை இரக்கத்துடன் பார்த்தார். கிணற்றில் மீண்டும் கஷ்டப்பட்டு இறங்கினார். தண்ணீரை மொண்டு மேலே கொண்டுவருவது எப்படியென்று கொஞ்சம் நேரம் யோசித்தார்.
பின்பு ஒரு திட்டத்துடன் காலில் மாட்டியிருந்த தோலால் ஆன காலுறைகளைக் கழற்றினார். இரண்டு காலுறைகள் நிரம்பத் தண்ணீரை நிரப்பினார். அவற்றை வாயில் கவ்விக் கொண்டு கிணற்றிலிருந்து மெதுவாக வெளியே வர ஆரம்பித்தார்.

அது அவ்வளவு எளிதாக இல்லை. தண்ணீர் நிரம்பிய காலுறை கனத்தது. வாயும், பல்லும் வலித்தது. பேசாமல் முயற்சியைக் கைவிட்டு விடலாமா என ஒரு கணம் தோன்றியது.
ஆனால், மனக் கண்ணில் தாகத்தால் தவிக்கும் நாய் தெரிந்தது. கஷ்டத்தை மறந்து, பெரு முயற்சி எடுத்து ஒருவாறு ஏறி கிணற்றிலிருந்து வெளியே வந்துவிட்டார்.

கிணற்றருகே அமர்ந்து, முதல் காலுறை நீரை நாய்க்குப் புகட்டினார். நாய் மகிழ்ச்சியுடன் தண்ணீரை நக்கி நக்கி குடிக்க ஆரம்பித்தது. உயிரைக் காத்ததற்கு அடையாளமாக நன்றியுணர்ச்சியுடன் வாலை ஆட்டியது. ஒரு சொட்டுத் தண்ணீரையும் பாக்கி வைக்காமல் இரண்டு காலுறை நீரையும் அது குடித்து முடித்தது. அவ்வளவு தாகம் அதற்கு!

வழிப்போக்கரின் முகத்தில் புன்னகை மலர்ந்தது. நாயின் தாகத்தைத் தீர்த்த மகிழ்ச்சியுடன் அவர் நடக்க ஆரம்பித்தார்.
வழிப்போக்கரின் இந்த செயல், இறைவனுக்குப் பிடித்துப் போனது. சக உயிரினமான நாயிடம் அவர் காட்டிய கருணையால் இறைவன் அவருடைய பாவங்களை மன்னித்தான். அவருக்குச் சொர்க்கம் வழங்கினான்.
நபிகளார் படிப்பினை மிக்க இந்தக் கதையைச் சொல்லி முடித்தார்.

அதைக் கேட்டுக்கொண்டிருந்த தோழர்களில் ஒருவர், “இறைவனின் தூதரே! நாம் உயிரினங்களிடம் நல்ல விதமாக நடந்துகொண்டால், இறைவன் நம் பாவங்களை மன்னிப்பானா?” என்று சந்தேகம் கேட்டார்.
“நிச்சயமாக! உயிரினங்களிடம் நல்ல முறையில் நடந்து கொள்வோருக்கு இறைவன் அருள்மாரி பொழிவான்” என்று நபிகளார் பதிலளித்தார்.

ரஹ்மத் ராஜகுமாரன் .

நிழல்

காலங்களின் பொழுதுகள் 2




நமது வாழ்வில் நம்மை பிற மனிதர்கள் பின் தொடர்கிறார்களே இல்லையே, நமது நிழல் நம்மை பின்தொடர்ந்து கொண்டுதான் இருக்கிறது.
இருட்டிய நேரத்தில் நாம் சாலையில் நடந்து செல்கையில் நம்மை அறியாமலேய நமது நிழலை பார்த்து சில நேரத்தில் அச்சம் கொள்கிறோம்.
ஒரு திசையில் ஒளி வீசும் பொழுது, அத்திசையில் ஒளியூடுருவா ஒரு பொருள் இருந்தால், அப்பொருளால் ஒளி தடுக்கப்பட்டு, அப்பொருளின் பின்னே ஒளி விழாமல் இருக்கும் பகுதிக்கு நிழல் என்று பெயர்.
நம்மில் பலபேர் நிழல் கருப்பாக இருக்கிறது என்று நினைத்துக் கொண்டிருக்கிறோம், ஆனால் நிழல் கருப்பாக இல்லை, ஒளி அற்று இருக்கிறது.
ஒளி அற்றதை நாம் கறுப்பு என்கிறோம், எல்லா நிற ஒளியும் சீரான அளவில் கலந்து இருந்தால் அது வெள்ளையாகப் புலப்படும், சில நிறங்கள் தனித்தோ, கலந்தோ இருக்கும் போது பல வண்ணங்கள் காணப்படும்.
நிசப்தம் என்பது சப்தம் இன்மை என்பது போல, கருமை என்பது நிறம் அல்ல, ஒளி இன்மை.

நிழலின் அருமை வெயிலிலே தெரியும் எனும் பழமொழியை நாமெல்லாம் தெரிந்து வைத்திருப்போம். இருப்பினும், அதன் உண்மையான விளக்கத்தை அதன் அருமையை இப்போது நாம் அனுபவ ரீதியாக உணர்கிறோம்.

வெயிலின் வெப்பம் வேகமாகத் தாக்குவதால் தேகம் வியர்வையைச் சிந்திச் சிந்தி சோர்வடைந்து விடும். இந்தத் தருணத்தில், நிழலின் அருமையை உணர்கிறோம்
நாம் நிம்மதியாக வாழ வேண்டும் என்பதற்காக நித்திய ஜீவனான அல்லாஹ்வே இந்த நிழலை ஏற்படுத்தியிருக்கிறான். வெறும் வெயிலை மட்டும் கொடுத்து நம்மை வேதனையில் தள்ளிவிடாமல் அதிலிருந்து இதமளிக்கும் நிழலையும் தந்து அவன் நம் மீது கருணையை பொழிந்திருக்கிறான். நமது நலனுக்காக அவன் அளித்திருக்கும் அளவிலா அருட்கொடைகளில் இந்த நிழலும் உள்ளடங்கும்.

இந்த உலகத்தில் தரப்பட்டிருக்கும் இன்பங்களைப் பற்றி மறுமைநாளில் விசாரிக்கும் போது, நிழல் தொடர்பாகவும் நம்மிடம் விசாரிக்கப்படும், நிழல் என்ன பொருளா ? இல்லை நிழல் அருள்
இன்னும் அல்லாஹ்தான் படைத்துள்ளவற்றிலிருந்து உங்களுக்கு நிழல்களையும் ஏற்படுத்தினான்; மலைகளிலிருந்து உங்களுக்கு(த் தங்குமிடங்களாக) குகைகளையும் ஏற்படுத்தினான்; இன்னும் வெப்பத்திலிருந்து உங்களைப் பாதுகாக்கக்கூடிய சட்டைகளையும் உங்களுடைய போரில் உங்களை பாதுகாக்கக்கூடிய கவசங்களையும் உங்களுக்காக அமைத்தான்; நீங்கள் (அவனுக்கு) முற்றிலும் வழிப்பட்டு நடப்பதற்காக, இவ்வாறு தன் அருட்கொடையை உங்களுக்குப் பூர்த்தியாக்கினான். (குர்ஆன் : 16:81)

காலையிலும் மாலையிலும் வெவ்வேறு திசையில் நிழல் விழுவதைப் பார்க்கிறோம். எந்தவொரு காரணமும் இல்லாமல் நிழல் விழுவதாக நாம் நினைத்துவிடக் கூடாது. அனைத்துப் படைப்பினங்களும் படைப்பாளனான அல்லாஹ்விற்குக் கட்டுப்பட்டுப் பணிகின்றன. அவன் விதித்தபடி செயலாற்றிக் கொண்டிருக்கின்றன. அவற்றுள் நிழலும் ஒரு அங்கம். எந்த நேரத்தில் எப்படி விழவேண்டும் என்று வல்ல இறைவன் செயல்திட்டம் வகுத்தானோ அதன்படி அங்குலம் மாறாமல் அப்படியே அடிபணிகிறது நிழல்.

வானங்களிலும், பூமியிலும் உள்ளவை விரும்பியோ, விரும்பாமலோ அவனுக்கே பணிகின்றன. அவற்றின் நிழல்களும் காலையிலும், மாலையிலும் பணிகின்றன.
(திருக்குர்ஆன் 13:15)
அல்லாஹ் படைத்த ஒவ்வொரு பொருளையும் அவர்கள் பார்க்கவில்லையா? அதன் நிழல் வலம் மற்றும் இடப்புறங்களில் சாய்ந்து அல்லாஹ்வுக்கு விழுந்து பணிகின்றன. (திருக்குர்ஆன் 16:48)

சூரியன் எந்தத் திசையில் இருக்கிறதோ அதற்கு எதிர் திசையில் நிழல் தோன்றும். இதன் மூலம் நிழல் ஏற்படுவதற்கு சூரியனே காரணமாக இருக்கிறது என்பதை புரிந்து கொள்ளலாம். இப்படியான திட்டமிடப்பட்ட கச்சிதமான ஏற்பாட்டிற்குச் சொந்தக்காரன் ஏக இறைவன் ஒருவனே என்பதை எவரும் மறுக்க இயலாது.
அந்த இறைவன் நினைத்தால் நிலைமாறும் விதத்தில் வைத்திருக்கும் நிழலை நிலையானதாக ஆக்கிவிடுவான் என்பதையும் நாம் நினைவில் கொள்ள வேண்டும். அவன் நினைத்தால் ஒரே நேரத்தில் ஒட்டுமொத்த உலகையும் நிழல் கொண்டதாக மாற்றமுடியும். இன்னும் ஏன் ? ஒரு குறிப்பிட்ட இடத்தில் மட்டும் நிழலை நிரந்தரமாக வைக்கவும் முடியும்.

உமது இறைவன் எவ்வாறு நிழலை நீட்டுகிறான் என்பதை நீர் அறியவில்லையா? அவன் நினைத்திருந்தால் அதை நிலையானதாக ஆக்கியிருப்பான். சூரியனை அதற்கு ஆதாரமாக ஆக்கினோம். பின்னர் அதை நம்மளவில் இலேசாகக் கைப்பற்றிக் கொள்வோம். (திருக்குர்ஆன் 25:45)

உஹுதுப்போர் தினத்தன்று உறுப்புக்கள் சிதைக்கப்பட்ட நிலையில் என் தந்தையின் உடல் கொண்டு வரப்பட்டு நபி (ஸல்) அவர்களின் முன்னிலையில் வைக்கப்பட்டது.
அவ்வுடல் மீது ஒரு துணி போர்த்தப்பட்டிருந்தது. அப்போது நான் சென்று அந்தத் துணியை நீக்கி (என் தந்தையை)ப் பார்க்க நாடினேன். எனினும் என் கூட்டத்தினர் என்னைத் தடுத்துவிட்டனர். நான் மீண்டும் சென்று துணியை நீக்க முனைந்தேன். மீண்டும் என் கூட்டத்தினர் என்னைத் தடுத்துவிட்டார்கள்.
அப்போது நபி (ஸல்) அவர்கள் (பிரேதத்தை தூக்கும்படி) கட்டளையிட்டார்கள். (பிரேதம்) தூக்கப்பட்டபோது ஒரு பெண் சப்தமாக அழுவதைக் கேட்ட நபி (ஸல்) அவர்கள் “யார் அந்தப் பெண்?” என்று கேட்டார்கள். “அம்ருடைய மகள்” என்றோ அல்லது “அம்ருடைய சகோதரி” என்றோ (கூடியிருந்தோர்) கூறினர்.

நபி (ஸல்) அவர்கள் “நீ ஏன் அழுகிறாய்?” அல்லது “நீ அழ வேண்டாம்” என்று கூறிவிட்டு, “பிரேதம் தூக்கப்படும்வரை வானவர்கள் தங்களின் இறக்கைகளை விரித்து அதற்கு நிழல் கொடுத்துக் கொண்டிருந்தார்கள்” என்று கூறினார்கள்.
ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி),
புஹாரி (1293), (1244), (2816), (4080), முஸ்லிம் (4875), (4876)
(நரகத்திலிருந்து வெளியேறி) இறுதியாக சொர்க்கத்தில் நுழையும் ஒரு மனிதர் சில சமயம் நடந்து வருவார். சில சமயம் தவழ்ந்தபடி வருவார். சில சமயம் நரக நெருப்பு அவரது முகத்தைத் தாக்கிக் கரித்தும்விடும்.
இந்நிலையில் அவர் நரகத்தைத் தாண்டியதும் அதைத் திரும்பிப் பார்த்து, “உன்னிடமிருந்து என்னைக் காப்பாற்றிய (என் இறை)வன் சுபிட்சமிக்கவன்; முன்னோர் பின்னோர் யாருக்கும் வழங்காத (பாக்கியத்)தை அல்லாஹ் எனக்கு வழங்கினான்” என்று கூ(றி இறைவனைப் போற்)றுவார்.

அப்போது அவருக்கு ஒரு மரம் காட்டப்படும். உடனே அவர், “என் இறைவா! அந்த மரத்தின் அருகே என்னைக் கொண்டு செல்வாயாக! அதன் நிழலை நான் பெற்றுக் கொள்வேன்; அதன் (கீழே பாயும்) நீரைப் பருகிக்கொள்வேன்” என்று கூறுவார்.
அதற்கு அல்லாஹ், “மனிதா! அதை நான் உனக்கு வழங்கினால் வேறொன்றை நீ என்னிடம் கேட்கக்கூடுமல்லவா ? "என்று கூறுவான்.
அதற்கு அவர், “இல்லை; இறைவா! வேறெதையும் உன்னிடம் நான் கேட்கமாட்டேன்” என்று கூறி, வாக்குறுதி அளிப்பார். அவரிடம் பொறுமை இல்லை என்பதைக் காணும் அவருடைய இறைவன், அவருக்கு வாய்ப்பளித்து, அவரை அந்த மரத்தின் அருகே கொண்டுசெல்வான். அங்கு அவர் அந்த மரத்தின் நிழலைப் பெறுவார்; அதன் நீரையும் பருகிக்கொள்வார்.
பிறகு அவருக்கு மற்றொரு மரம் காட்டப்படும். அது முதலில் காட்டப்பட்ட மரத்தைவிட மிகவும் அழகாய் இருக்கும். (அதைக் கண்ட) உடன் அவர், “என் இறைவா! இதற்கருகே என்னைக் கொண்டு செல்வாயாக! நான் அதன் நீரைப் பருகி அதன் நிழலை அடைந்து கொள்வேன்! இதைத் தவிர வேறெதையும் உன்னிடம் நான் கேட்கமாட்டேன்” என்று கூறுவார்.
அதற்கு இறைவன், “மனிதா! வேறெதையும் கேட்கமாட்டேன் என்று என்னிடம் நீ (முன்பு) வாக்குறுதி அளிக்கவில்லையா? அதன் அருகில் உன்னை நான் கொண்டுசென்றால், வேறொன்றை என்னிடம் நீ கேட்கக்கூடுமல்லவா” என்பான்.
உடனே அவர், வேறெதையும் கேட்கமாட்டேன் என்று வாக்குறுதி அளிப்பார். இறைவனும் அவரிடம் பொறுமை இல்லை என்பதைக் கண்டு அவருக்கு வாய்ப்பளித்து, அவரை அதன் அருகே கொண்டுசெல்வான். அவர் அதன் நிழலை அனுபவித்துக் கொண்டு அதன் (கீழே ஓடும்) நீரையும் அருந்துவார்.
பிறகு சொர்க்க வாசல் அருகே உள்ள மரம் அவருக்குக் காட்டப்படும். அது முதலிரண்டு மரங்களை விடவும் ரம்மியமானதாய் இருக்கும்.
உடனே அவர், “என் இறைவா! அந்த மரத்தின் அருகே என்னைக் கொண்டு செல்வாயாக! நான் அதன் நிழலைப் பெறுவேன்; அதன் நீரைப் பருகிக் கொள்வேன்; இதைத் தவிர வேறெதையும் உன்னிடம் நான் கேட்கமாட்டேன்” என்று கூறுவார்.

அதற்கு இறைவன், “மனிதா! வேறெதையும் நான் கேட்கமாட்டேன் என்று (முன்பு) என்னிடம் நீ வாக்குறுதி அளிக்கவில்லையா?” என்று கேட்பான். அதற்கு அவர், “ஆம்; என் இறைவா! இந்தத் தடவை (மட்டும்); இனி, இதன்றி வேறெதையும் உன்னிடம் கேட்கமாட்டேன்” என்று கூறுவார்.
இறைவனும் அவரிடம் பொறுமை இல்லை என்பதைக் கண்டு அவருக்கு வாய்ப்பளித்து, அவரை அதன் அருகே கொண்டுசெல்வான்.
அவர் அந்த மரத்தை நெருங்கும்போது சொர்க்கவாசிகளின் குரல் அவருக்குக் கேட்கும். உடனே அவர், “என் இறைவா! சொர்க்கத்திற்குள் என்னை அனுப்புவாயாக!” என்பார்.
அதற்கு இறைவன், “மனிதா! ஏன் என்னிடம் கோருவதை நிறுத்திக்கொண்டாய்? உலகத்தையும் அதைப் போன்ற இன்னொரு மடங்கையும் உனக்கு நான் வழங்கினால் உனக்கு மகிழ்ச்சி ஏற்படும்தானே?” என்று கேட்பான்.
அதற்கு அவர், “என் இறைவா! அகிலத்தின் அதிபதியே! நீயே என்னைப் பரிகாசம் செய்கிறாயா?” என்று கேட்பார். அதைக் கேட்டு இறைவன் சிரிப்பான். மேலும், “நான் உன்னைப் பரிகாசம் செய்யவில்லை. மாறாக, நாடியதைச் செய்கின்ற ஆற்றல் உள்ளவன் நான்” என இறைவன் கூறுவான்.
இப்னு மஸ்ஊத் (ரலி), முஸ்லிம் (310, 311)

ரஹ்மத் ராஜகுமாரன்

இரு பாதைகள்.



وَهَدَيْنٰهُ النَّجْدَيْنِ

அன்றியும் (நன்மை, தீமையாகிய) இருபாதைகளை நாம் அவனுக்குக் காண்பித்தோம். (அல்குர்ஆன் : 90:10)

இக்குர்ஆன் வசனத்தின் முந்தைய வசனங்களில் "இரண்டு கண்கள் " (90 : 8 ) "இரண்டு உதடுகள் (90 : 9) இந்த இரு குர்ஆன் வசனங்களின் தொடராக "இரண்டு பாதைகள்" (90 : 10) என்று குறிப்பிடுகிறது .
"அன்னஜ்தைனி " (இரண்டு பாதைகள்) என்பது நன்மை தீமைக்கான பாதைகளைக் குறிக்கிறது என்பதாக சொல்லப்பட்டாலும் , இந்த இடத்தில் நன்மை ,தீமை என்ற இரு பாதைகள் என்பதைக் காட்டிலும் "நஜ்துன் " என்பதற்கு "உயரமான இடம் " என்பது அசல் பொருளாக உள்ளது. இதன்படி பார்த்தால் பெண்களுக்குரிய இரண்டு மார்பகங்கள் குழந்தைக்கு உயரமான இடத்தில் இருப்பதை இந்த வசனம் குறிப்பதாக சொல்லப்படுகிறது .

இரண்டு கண்கள் , இரண்டு உதடுகள்.. இந்த சீரியலில் அடுத்த வசனம் இரண்டு மார்பகங்கள் என்பதுதான் சரியாக இருக்கும் . ஏனெனில் , குழந்தைகள் பிறந்தவுடன் அவைகள் வாழ்வதற்கான தாய்ப்பால் என்னும் அமிர்தம் வருகிற இரு பாதைகளாக அவைகள் இருக்கின்றன என்று கருத்தும் கூறப்படுகிறது .
இரு மார்பகங்கள் இரு பாதைகள்தான் என்பதற்குரிய அனுகூலமான வேறு சில நபிமொழிகளையும் கூறுகிறார்கள்

"ஆதமுடைய மகனே ! உனது நாவை நான் உனக்கு விலக்கியிருக்கிற காரியங்களில் உனக்கு பிணங்கிக் கொள்ளுமாயின், இரண்டு மூடிகளைக் (உதடுகள் அல்லது தாடைகள்) கொண்டு உனக்கு உதவி செய்திருக்கிறேன். நீ அவைகளைக் கொண்டு மூடிக் கொள்வாயாக !"
"உனது வெட்கஸ்தலத்தை நான் விலக்கியிருக்கிற காரியங்களில் உன்னிடம் பிணங்கி கொள்ளுமாயின், உனக்கு இரு மூடிகளைக் கொண்டு நான் உதவி செய்துள்ளேன் (இரண்டு தொடைகள் ) எனவே அவைகளைக் கொண்டு மூடிக் கொள்வாயாக !" என்று அல்லாஹ் கூறுகிறான்
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்

"தம் இரண்டு தாடைகளுக்கு இடையே உள்ளத(ன நாவி)ற்கும், தம் இரண்டு கால்களுக்கு இடையே உள்ளத(ன மர்ம ஸ்தான உறுப்பி)ற்கும் என்னிடம் உத்தரவாதம் அளிப்பவருக்கு நான் சொர்க்கத்திற்கு உத்தரவாதம் அளிக்கிறேன் "
என ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார். புகாரி : 6474.

“ உனது பார்வை உனக்கு நான் விலக்கி இருக்கிற சிலவற்றில் உன்னுடன் பிணங்கிக் கொண்டால் , இரண்டு மூடிகளை (இமைகள் ) கொண்டு உனக்கு நான் உதவி புரிந்திருக்கிறேன். எனவே அதனைக் கொண்டு நீ மூடிக்கொள்வாயாக !”
ஃபள்ல் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களுக்குப் பின் (ஒட்டகத்தில்) அமர்ந்து கொண்டிருந்தபோது “கஸ்அம்’ எனும் கோத்திரத்தை சேர்ந்த ஒரு பெண் வந்தார். உடனே ஃபள்ல் அப்பெண்ணைப் பார்க்க அப்பெண்ணும் இவரைப் பார்த்தார்.
(இதைக் கவனித்த நபி (ஸல்) அவர்கள்) ஃபள்லின் முகத்தை வேறு திசையில் திருப்பினார்கள். பிறகு அப்பெண் நபி (ஸல்) அவர்களை நோக்கி,

“அல்லாஹ்வின் தூதரே! நிச்சயமாக அல்லாஹ் தன் அடியார்களின் மீது ஹஜ்ஜைக் கடமையாக்கியுள்ளான். ஆனால் எனது வயது முதிர்ந்த தந்தையால் பயணிக்க முடியாது. எனவே நான் அவருக்குப் பகரமாக ஹஜ் செய்யலாமா?’ எனக் கேட்டார்.
நபி (ஸல்) அவர்கள், “ஆம்!’ என்றார்கள். இது “விடைபெறும்’ ஹஜ்ஜின்போது நிகழ்ந்தது.
அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி), புகாரி 1513

நாவைப் பாதுகாக்க , இரு தாடைகளின் இரு உதடுகள் மூலம் இறைவன் உதவி செய்துள்ளான் .
கண்களைப் பாதுகாக்க , இரு இமைகளின் மூலம் இறைவன் உதவி செய்துள்ளான்.
மர்மஸ்தானத்தைப் பாதுகாக்க , இரு தொடைகளின் மூலம் இறைவன் உதவி செய்துள்ளான் .
உயிர் வாழ்வைப் பாதுகாக்க , இரு மார்பகங்களின் மூலம் இறைவன் உதவி செய்துள்ளான் .

ரஹ்மத் ராஜகுமாரன்

ஒரு துன்பத்தில் இரு இன்பங்கள்.



فَاِنَّ مَعَ الْعُسْرِ يُسْرًا ۙ
ஆதலின் நிச்சயமாகத் துன்பத்துடன் இன்பம் இருக்கிறது.
(அல்குர்ஆன் : 94:5)
اِنَّ مَعَ الْعُسْرِ يُسْرًا
நிச்சயமாக துன்பத்துடன் இன்பம் இருக்கிறது.
(அல்குர்ஆன் : 94:6)
ஒரு முறை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இந்த இரு வசனங்களை எடுத்துரைத்து தம் தோழர்களுக்கு நற்செய்தி கூறினார் அப்போது "ஒரு துக்கம், இரு சுகங்களை நிச்சயமாக வெல்ல முடியாது" என தெரிவித்தார்கள்
இன்பமும் துன்பமும்
உலகத்தில் நாம் பரவலாக பார்க்கும்போது இன்பமும் துன்பமும் இருக்கிறது. இந்த உலகத்தில் மனிதனுக்கு, விருப்பத்திற்கு உட்பட்டவைகளும் சம்பவிக்கின்றன. ஆக இன்பம் துன்பம் விருப்பு வெருப்புகள் ஆகிய எல்லாமே நிறைந்ததுதான் வாழ்க்கை.
ஆனால் உலகில் ஒவ்வொரு தனி மனிதனும் “நம் வாழ்வில் இன்பமும் இருக்கிறது. துன்பமும் இருக்கிறது. எது அதிகம்? என்று தன்னைத்தானே கேட்டுக் கொள்ளும் போது
“ஒவ்வொருவனும் 90% க்கு மேல் இன்பத்தை அனுபவிக்கிறார்கள். ஒரு 10% க்கும் குறைவாகவே துன்பம் அவனது வாழ்வில் அவ்வப்போது தலை காட்டுகிறது” என்பதை புரிந்து கொள்வான்.

எப்போதும் வயிற்று வலியால் ஒருவன் துடித்துக் கொண்டிருப்பதில்லை. எப்போதாவது அஜீரணக் கோளாறு ஏற்பட்டு வயிற்றுவலி ஏற்படுகிறது. எப்போதும் ஒருவன் பசியோடு இருப்பதில்லை. எப்போதாவது ஒரு மனிதன் வியாதியிலேயே உழல்வதில்லை. எப்போதாவது சில சமயம் மருத்துவரைப் பார்க்க வேண்டிய நிலமை ஏற்படுகிறது. எப்போதும் ஒருவன் சட்டச் சிக்கலில் மாட்டிக் கொள்வது இல்லை. எப்போதாவது சில நேரங்களில் வக்கீலைப் பார்க்க வேண்டிய நிலமை ஏற்பட்டு விடுகின்றது.
ஆக மனிதன், தன் வாழ்க்கையில் 90%க்கும் அதிகமாக அல்லாஹ்வின் அருளையே அனுபவிக்கிறான். ஒரு 10% துன்பமும் கூட வரம் என்பதை மறுப்பதற்கில்லை. சில நேரங்களில் அவனையும் மீறி இறைவன் ஒருவன் இருக்கிறான் என்பதற்கு சான்றாக அவனது விருப்புக்கு அப்பாற்பட்டவைகளும் நடந்து விடுகின்றன.

அதனால் அவன் தன்னை 'அர்ரஹ்மான் , அர்ரஹீம் 'என்று அறிமுகப்படுத்துகிறான். படைப்பினங்களுக்கு கருணை செய்வதை தன் மீது அவனே கடமையாக்கிக் கொண்டதாகவும் குறிப்பிடுகின்றான்.

அப்படியானால் வியாதி எதற்காக ஏற்படுகிறது? கஷ்டங்கள் எதற்காக ஏற்படுகிறது இயற்கையின் விபத்துகளால் நாங்கள் எதற்காக அழிக்கப்படுகிறோம்? பல்வேறு துன்ங்களுக்கும், கொடுமையான சித்திரவதைகளுக்கும் எதனால் நாங்கள் உள்ளாக்கப்படுகிறோம்? என்று கேட்கும்போது அறிவு குறைந்த, இறைவனைப் புரிந்து கொள்ளாதவன்தான் இவற்றை எல்லாம் இறைவன் தன் மீது கொண்ட கோபத்திற்கு எடுத்துக் காட்டு என்று கொள்வான். ஒரு புத்திசாலி, அல்லாஹ்வை நன்கு புரிந்து கொண்டவன் 'இந்த சோதனையும் அல்லாஹ்வின் கருணையில் ஒன்றுதான் ' என்று புரிந்து கொள்வான்.

ஒரு தாய் தன்னுடைய குழந்தையின் ஒரு கையைப் பிடித்துக் கொண்டு, அவனுடைய கால்கள் மீது தன்னுடைய கால்களை வைத்து அழுத்திக் கொண்டு அவனுடைய வாயைப் பலவந்தமாக திறந்து, அவனுக்கு பிடிக்காத விளக்கெண்ணையை ஊற்றும் போது, அந்த உலகம் தெரியாத குழந்தை “இப்படி சித்திரவதை செய்கிறாளே, கொடுமைப்படுத்துகிறாளே, இவளும் ஒரு தாயா? நம்மைக் கொடுமைப்படுத்துவதுதான் இவளது வேலையா என்று எண்ணிக் கொள்ளும்.

ஆனால் உலக அனுபவமும், முதிர்ச்சியும், அறிவு வளர்ச்சியும் பெற்றவர்கள். இது தாய் நிகழ்த்தும்கொடுமை” என்று சொல்ல மாட்டார்கள். என்ன சொல்வார்கள்? “குழந்தைக்கு அஜீரணக் கோளாறு, குழந்தையின் உள்ளிருந்து சிறுகச் சிறுக, கொன்று கொண்டிருக்கும் வியாதிக்கு இவ்வளவு சிரமத்தோடு இந்த மருந்தைத் தரத்தான் வேண்டும், அந்தக் குழந்தை பொறுமையோடு இல்லாவிட்டாலும், அது தாங்கவியலாமல் துடித்தாலும் இந்தக் காரியம் முதிர்ச்சி பெற்றவாகள் விளங்கிக்கொள்வார்கள். ஆக அந்தக் குழந்தைக்கு வெளித்தோற்றத்தில் வேதனையாகத் தெரிவதும், சித்திரவதையாகப்படுவதும் அந்தக் குழந்தையின் நலனுக்குத்தான் என்பதை அறிவுடையோர் உணர்ந்து கொள்வர்.

கல்விக் கூடத்திற்கு செல்ல மறுக்கும் குழந்தையை தாய் அடிக்கிறாள் துன்புறுத்துகிறாள். அவனுக்கு உணவு தராமல் அவனைப் பட்டினி போடுவதாய் நமக்குத் தோன்றுகிறது. ஆனால் அந்தக் குழந்தையின் வருங்கால நலன்தான். அந்தக் குழந்தை இந்த உலகத்து பிரச்சினைகளில் எதிர்நீச்சல் போட்டு, இந்த உலகத்தின் சவால்களை சமாளிக்கின்ற அளவுக்கு தன்னுடைய சந்ததி வளர வேண்டும் என்கிற தூர நோக்குத்தான், அந்தக் குழந்தைக்கு இவ்வளவு துன்பத்தையும் தருவதற்கு காரணம் என்பதை யாரால் மறுக்க துடியும்?
நமக்கு காரும், பங்களாவும், நல்ல ஆடம்பரமான வாழ்வும் சுகபோகங்களும், ஒரு நாள் கூட காய்ச்சல், தலைவலி என்று படுக்காத ஒரு வாழ்க்கையும் நமக்குக் கிடைத்து விடுவதுதான், “நம்முடைய இறைவன் நம்மீது வைத்திருக்கும் கருணைக்கு எடுத்துக்காட்டு.” என்று நீங்கள் நினைத்தீர்களானால், நீங்கள் இன்னமும் ஞான முதிர்ச்சி பெறவில்லை. இன்னமும் போதிய விழிப்புணர்வு பெறவில்லை. நீங்கள் இன்னமும் அந்த இறைவனைப் புரிந்து கொள்ளவில்லை என்று பொருள்.

அதே நேரத்தில் சற்று தூர நோக்கோடு, “இது எவனால் தரப்பட்டிருக்கின்றது? இந்தச் சோதனையில் நாம் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்ற சிந்தனையின் பாற்பட்டு நீங்கள் இறைவனைச் சிந்திக்க தலைப்பட்டு விடுவீர்களானால் இந்தப் பிரச்சினைகளுக்கெல்லாம் மிகச் சுலபமாக விடை கிடைத்துவிடும்.
மனிதா! இந்த உலக வாழ்க்கையில் உனக்கு மனிதனாக இருக்கலாம். அல்லது அந்த துன்பங்களுக்கு நானே நேரடிக் காரணமாக இருக்கலாம். உன்னைப் போன்ற மனிதன் உனக்கு துன்பங்கள் தரும்போது உதாரணமாக உன்னை அடிக்கிறான், அல்லது உன்னை ஏசுகிறான் அல்லது உன்னிடமிருந்து திருடுகிறான் எனும்போது அதற்காக நீ கவலைப்படாதே! ஏனென்றால் ரஹ்மானும், ரஹீமாகவும் இருக்கின்ற அதே நேரத்தில் நான் மாலிகி யவ்மித்தீனாக – நியாயத் தீர்ப்பு நாளின் அதிபதியாக இருக்கின்றேன். என்னுடைய சன்னிதானத்தில் “உனக்கு ஒரு அணுவத்தனை துன்பம் விளைவித்தவனும் உனக்கு தந்த துன்பத்திலிருந்து தப்பித்துக் கொள்ள முடியாது.” என்ற கருத்தில் இறைவன் கூறுகிறான்.

மனிதர்கள் எந்த வகையிலும் துன்பத்திற்கு காரணமாக ஆகவில்லை, “என் இறைவா! நீயே சில சந்தர்ப்பங்களில் எனது துன்பத்திற்கும் காரணமாக இருக்கின்றாயே! எனக்கு பசியைத் தருகிறாய். அந்த பசிக்கு காரணம் மனிதர்கள் இல்லை. இயற்கையின் சீற்றத்தால் சேதம் விளைவிக்கிறாய், அதற்கு காரணம் நிச்சயமாக மனிதர்களில்லை. என்னுடைய விவசாயம், பொருளாதாரம் இன்ன பிறவற்றில் சேதத்தை ஏற்படுத்துகிறாய்! இதற்கு நூற்றுக்கு நூறு நீயேதான் முழுக் காரணம். இந்த இறைவனிடம் கேட்கும் போது எல்லாம் வல்ல அல்லாஹ்

பதில் கூறுகிறான். "நிச்சயமாக நாம் உங்களை ஓரளவு அச்சத்தாலும், பசியாலும், பொருள்கள், உயிர்கள், விளைச்சல்கள் ஆகியவற்றின் இழப்பினாலும் சோதிப்போம்; ஆனால் பொறுமையுடையோருக்கு (நபியே நீர்) நன்மாராயங் கூறுவீராக! (2:155)

(பொறுமையுடையோராகிய) அவர்களுக்குத் துன்பம் ஏற்பட்ட போது ," நிச்சயமாக நாம் அல்லாஹ்வுக்கே உரியவர்கள்; நிச்சயமாக நாம் அவனிடமே திரும்பிச் செல்வோம்" என்று கூறுவார்கள். 2:156.
நீ சற்று முன்பு என்னிடம் புகார் கொடுத்தாயே, பசியால் சோதிக்கிறாயே! அச்சத்தால் சோதிக்கிறாயே! விவசாயத்தில் அழிவை ஏற்படுத்துகிறாயே! என் குலம் தழைக்க ஒரு சந்ததி இல்லாமல் என்னை ஒரு தனிமரமாக்கி விட்டாயே! இப்படிப்பட்ட சோதனைகளுக்கெல்லாம் நான் என்னைப் போன்ற ஒரு மனிதனை எப்படி பொறுப்பாக்க முடியும்? ரஹ்மான், ரஹீம் என்று சொல்லிக் கொள்ளும் நீ தானே முழுக்க, முழுக்க காரணம் என்று அவன் அவனைப் பார்த்துக் கேட்டால் " உன்னுடைய இந்தச் சோதனைகளுக்கு, உன்னுடைய இந்த வேதனைகளுக்கு, உன்னுடைய இதயம் சுக்கு நூறாகி துன்பப்படுவதெற்கெல்லாம் எவ்வளவு பெரிய சுவனத்துச் சுகபோகங்களை நான் பரிசாக வைத்திருக்கிறேன் என்று" மேற்சொன்ன வசனத்தில் சுபச்செய்தி சொல்வதின் மூலம் நம்மை திருப்பிக் கேட்கின்றான்.

அதே நேரத்தில் உன் வாழ்வு முழுவதும் துன்பம், சோதனை, வேதனை தான் என்று உன்னால் துணிச்சலாக சொல்ல முடியுமா? 90% சதவிகிதம் இறைவனின் கருணைக்கே உட்பட்டிருக்கிறாய் ஒரு 10% சதவிகித துன்பத்தைத் தரும்போது உன்னிடமிருந்து ஏற்பட வேண்டிய பண்பு நிலை என்ன? என்றால் பொறுமை
இந்தப் பொறுமையை நீ கடைபிடித்து எல்லாம் வல்ல அல்லாஹ் நமக்கு அருள்வதற்கு பாத்தியப்பட்டது போல் நம்மிடமிருந்து தந்ததை பறிப்பதற்கும் உரிமை உள்ளவன். எல்லாம் வல்ல அல்லாஹ் நம்மை இன்பத்திற்கு உள்ளாக்கியதைப் போல், சல சமயங்களில் துன்பத்திற்கும் உள்ளாக்கவும் உரிமை உள்ளவன்.

இன்பத்திற்கு உள்ளாகும் போது ஷுக்ரு என்ற நன்றிக்கடனை வெளிப்படுத்தும் பண்பு உன்னிடத்தில் குடிகொள்வதை எதிர்பார்க்கும் அல்லாஹ், துன்பத்தில் சில சமயம் உன்னை சிக்க வைக்கும்போது உன்னிடம் பொறுமை இருக்கிறதா? உன்னிடம் கசிப்புத் தன்மை, அந்த இறைவனைப் பற்றிய நல்லெண்ணம் இருக்கின்றதா? அல்லது அந்த இறைவனை கொடுரமானவனாக, கொடியவனாக, இரக்கமற்றவனாக கற்பனை செய்து கொள்கிறாயா? அல்லது அளவற்ற அருளாளன் என்று நாம் தானே சொன்னோம்; அவனது அருளை நாம் தானே அனுபவித்தோம், ஓராண்டு நம்முடைய வியாபாரத்தில் நட்டம் ஏற்பட்டுவிட்டால் என்ன? பத்து குழந்தைகளில் ஒரு குழந்தை இறந்து விட்டால் என்ன? என்று நீ பொறுத்துக் கொள்கிறாயா என்பதை இறைவன் சோதிக்கும் போது பொறுமையை கடைபிடித்த இப்படிப்பட்ட பொறுமையாளர்களை பார்த்து நபியே! நீர் சுபச் செய்தி கூறும் என்று அல்லாஹ் கூறுகின்றான்.

துன்பம் ஏற்பட்டவுடன், அந்த துன்பத்திற்கு ஒரு வகையில் இறைவனே காரணமாக ஆகும்போதும், தனக்கு பிடிக்காதவைகளை மனிதன் தன் வாழ்வில் சந்திக்கும் போதும் பொறுமையோடு அதை சகித்துக் கொள்வதோடு மட்டும் நில்லாது இன்னா லில்லாஹ் வ இன்னா இலைஹி ராஜிஊன் என்று சொல்கிறார்களே அத்தகைய பண்பு நெறி கொண்டோருக்கு நபியே! நீர் சுபச் செய்தி கூறும் என்று அல்லாஹ் கூறுகிறான்.

இந்தக் குழந்தை மாத்திரம் தான் இறந்து அல்லாஹ்விடத்தில் சேர்ந்து விட்டதா? நான் என்ன இங்கேயே இருக்கப் போகிறேனா? என்னுடைய கடை மாத்திரம் தான் தீப்பிடித்து எரிந்து அழிந்து போய் விட்டதா? நான் இங்கேயே அழியாமல் இருக்கப் போகிறேனா? என் மனைவி தான் என்னை என் குழந்தையோடு விட்டு விட்டு இறந்து விட்டாளா? நான் இங்கேயே இருந்து என் குழந்தைகளை சாகும்வரை காக்கப் போகிறேனா? என்னுடைய விவசாயம் மட்டும் தான் அழிந்து விட்டதா? நான் இங்கேயே நின்று நீடித்து நன்றாக செழித்து வளர்ந்து இந்த உலகத்தில் இருக்கப் போகிறேனா? நானும் இந்த விவசாயம் அடைந்த நிலையை, நானும் கடை அடைந்த நிலையை, நானும் என் மனைவி அடைந்த நிலையை இந்த மரணத்தை அடைய போகும் ஒருவன் தானே தவிர நான் மாத்திரம் இங்கேயே நிலைத்திருக்கக் கூடியவன் அல்லவே! நிலைத்திருக்காத எனக்கு எல்லாமே நிலைத்திருக்க வேண்டும் என்ற எண்ணம் எப்படி நியாயமாகும்?
எனவே அது போன்று நானும் அங்கே தான் போகப் போகிறேன். நானும் இதே போன்ற சோதனைகளுக்கு உள்ளாக்கப்படுவேன். அது இந்த நிமிடமாகக் கூட இருக்கலாம். நான் அப்போது பதறி பரிதவித்து போகக் கூடாது. அப்போது நான் தடுமாறி விடக்கூடாது. அப்போது பொறுமை எனக்கு இல்லை என்றாகி விடக் கூடாது.

துன்பம் வரும்போது இறைவனையே நொந்து கொள்கின்ற பண்பு கொண்ட மனிதனை அல்லாஹ் கண்டிக்கின்றான். அவனுக்கு (மனிதனுக்கு) அவனுடைய வாழ்க்கைப் பிரச்சினையை அக்கட்டுக்குள் கொண்டு வந்து, துன்ப நிலைக்கு உள்ளாக்கி சற்று அவனை அவனுடைய ரப்பு சோதிக்க முற்பட்டாலோ என்மீது என் இறைவனுக்கு கருணையே இல்லை. என்னை அவன் மிகவும் கொடுமைப்படுத்துகின்றான். என்னை மக்கள் மத்தியில் தலை குனியச் செய்து விட்டான், என்னை கேவலப் படுத்தி விட்டர் என்று மனிதன் சொல்கிறான். இந்த எண்ணம் சரி அல்ல அப்படி நீ எண்ணாதே! இந்த எண்ணத்தை நீ தூக்கி எறிந்து விடு.

இப்படி இறைவனை நீ நம்பக் கூடாது, உன் தாய் உனக்கு அமுது படைக்கும் போதும் தாய் தான்! உனக்கு தேவையான நேரத்தில் உனக்கு மருந்து தரும் போதும் தாய் தான் என்று எப்படி தாயின் தரத்தை தலைக்கு மேல் வைத்து பேசுகிறாயோ அதுபோல் உனக்கு இன்பம் தரும் போதும் அவன் தான் உன் கடவுள். உன்னை அவன் துன்பத்திற்கு உள்ளாக்கும் போதும் நீ அவனை மறந்திடக்கூடாது. இது தான் உண்மையான முஃமினுக்குரிய இலட்சியமாக பண்பாக இருக்க வேண்டும். (Readislam)பதிவிலிருந்து ..
ஒரு துன்பத்தில் எத்தனை எத்தனை இன்பங்கள் .
ர.ரா
"விஞ்ஞானப் பார்வையில் நபிவழி மருத்துவம்"
"நோன்பு காலப் பதிவுகள் " என்று 60 பதிவுகள் வரை போன வருடம்(2020) எழுதி பதிந்தாகிவிட்டது .இன்னும் நோன்பைப் பற்றி சொல்வதற்கு நிறைய இருக்கிறது . இருந்தாலும் ஒரு மாற்றத்திற்கு "விஞ்ஞானப் பார்வையில் நபிவழி மருத்துவம்" தொடர் 40 பதிவு நிறைவு பெற்றதை தொடர்ந்து, இன்னும் சொல்லலாம் என்ற நம்பிக்கையில் … இத் தொடர் இன்ஷா அல்லாஹ் ஆரம்பம் .
ர.ரா

விஞ்ஞானப் பார்வையில் நபிவழி மருத்துவம் – 41

(பருவ காலங்களும், நோய்களும்)




பருவகால மாற்றங்கள் நிகழவில்லை எனில் எந்தவொரு உயிரினமும் உயிர் வாழ முடியாது! பூமியும் ஒரு கோளாக வாழ தகுதியற்ற கோளாக சூரிய குடும்பத்தில் இருந்திருக்கும்!
பூமியானது அது சுழலும் சமதளத்திற்கு அதனுடைய அச்சு சாய்வதால் பருவகாலங்கள் ஏற்படுகின்றன; இது 23.5 டிகிரிகள் கோணத்தால் விலகிச்செல்கிறது. இவ்வாறு, எந்த நேரத்திலும் கோடை அல்லது குளிர்காலத்தின்போது கிரகத்தின் ஒரு பகுதி சூரியக் கதிர்களுக்கு அதிகமும் நேரடியாகப் படும்படி இருக்கிறது.

அயன மண்டல பகுதிக்கு அப்பால் ***(Beyond Tropics)*** ஒருபோதும் சூரியன் தலைக்கு மேல் செங்குத்தாக விழுவது இல்லை. அயன மண்டலத்திற்கு அப்பால் உள்ள இந்த பகுதிகளில் நன்கு தெளிவாக வேறுபட்ட நான்கு பருவ காலங்கள் தோன்றுகின்றன. கோடை காலம், இலையுதிர் காலம், குளிர்காலம், வசந்த காலம் ஆகியவை நான்கு பருவகாலங்கள் ஆகும்.
பருவகால நிலை மாற்றத்தினால் மட்டுமே உயிர் சுழற்சி நடைபெறுகிறது!
எப்போதும் வெயில் அடித்தால் எந்த மனிதனும் மற்றும் பறவை ஏன் உணவு பொருட்களை கூட உற்பத்தி செய்ய முடியாது!

அது போல எப்பொழுதும் பனிப்பொழிவு உள்ள நாடுகளில் கடுமையான மற்றும் தொடர் பனிப்பொழிவில் எந்த ஒரு உயிரினமும் உயிர் வாழாது!

மழைக்காடுகள் மற்றும் பருவ காலங்களில் மழை பெய்யும் இடங்களில் தொடர்ந்து மழை பெய்தால் மண் அரிப்பு மற்றும் தாவரங்கள் அழுகல் போன்றவை ஏற்படும்!
பருவகால மாற்றங்கள் மற்றும் கால நிலை மாற்றத்தினால் உயிரி சமநிலை புவியில் உள்ளது! இவை இல்லாமல் போனால் பூமியும் ஒரு உயிர்வாழ தகுதியற்ற கோளாக மட்டுமே இருந்திருக்கும்!
காற்று கெட்டுப் போவதால்தான் கொள்ளை நோய்கள் ஏற்படுகின்றன.பொருள்கள் கெட்டுப் போவதால் நாற்றம்,நச்சு போன்ற மோசமான சார்பு நிலைகளில் ஒன்று மேலோங்கி விடுவதே காற்றுப் போவதற்கு காரணமாகும் . ஆண்டின் எந்த நேரத்திலும் காற்று கெட்டுப் போகுதல் நிகழலாம்.
காற்று கெட்டு போகுதல் பெரும்பாலும் கோடைகாலத்தில் கடைசியிலோ, இலையுதிர் காலத்தின் ஆரம்பத்திலோ இது நிகழலாம்.காரணம் கோடைகாலத்தில் பித்தப்பையில் அதிகமான கசடுகள் ஒன்றிணைகிறது.
இலையுதிர் காலத்தில் காலநிலை குளிர்ச்சியாக இருப்பது கோடைகாலத்தில் இறங்கிக்கொண்டிருந்த கெட்ட தூசுகளும் மாசுகளும் கொண்டு பித்தப் பை சுருங்கி ,சூடாகி கெட்டுப் போகிறது. அதன்பின் கெட்ட நோய்கள் உண்டாகின்றன.

குறிப்பாக உடல் நோயை ஏற்றுக் கொள்வதற்குத் தயாராகும் நோய் எதிர்ப்பு சக்தி குறைவாகவும், இயங்கு சக்தி குறைவாகவும் இருந்தால் நிச்சயம் நோய் உண்டாகி விடும் அதன் பின் அது அவ்வுடலை அழிக்காமல் விடாது.
பருவகாலங்களில் ஆரோக்கியமான காலம் வசந்த காலமாகும் அப்கரீத் என்ற அறிஞர் கூறுவது : "இலையுதிர் காலத்தில் மாய்க்கக்கூடிய அதிகமான நோய்கள் உருவாகின்றன. வசந்த காலமோ பொழுதுகளில் மிகவும் ஆரோக்கியமான பொழுதுகளை கொண்டதாகும். மரணம் மிகக்குறைவாக நிகழக் கூடிய காலமாகும்.
மருந்து விற்போரும், இறந்தோரே நல்லடக்கம் செய்வதில் ஈடுபடுவோரும் வசந்த காலத்திலும் கோடை காலத்திலும் வாழ்வாதாரத்திற்காக கடன் பெறுவது வழக்கத்தில் இருந்து வருகிறது. இலையுதிர் காலம் அவர்களின் வசந்த காலமாகும். தாங்கள் பெற்ற கடனை எல்லாம் அடைத்து விடுவார்கள். எனவே இலையுதிர் காலத்தை அவர்கள் மிகவும் விரும்புவார்கள் அதன் வருகையை ஆவலோடு எதிர்பார்த்து இருப்பார்கள்.
நபிமொழி ஒன்றில் " நட்சத்திரம் தோன்றிவிட்டால் எல்லா ஊர்களிலிருந்தும் ஆபத்துகள் நீங்கிவிடும் " - இதற்கான விளக்க உரை கூறுவோர் சுரையா என்னும் நட்சத்திரம் தோன்றுவதைதான் நபியவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்
வேறுசிலர் வசந்தகாலத்தில் விளைகின்ற செடி, கொடிகள் தான் காரணம் என தெரிவிக்கின்றனர். அதற்கான ஆதாரமாக நட்சத்திரங்களும் ,செடிகளும்,கொடிகளும் தலைவணங்குகின்றன " என்கிற குர்ஆன் வசனங்களை எடுத்து வைக்கின்றனர் .

اَلشَّمْسُ وَالْقَمَرُ بِحُسْبَانٍ
சூரியனும் சந்திரனும் (அவற்றிற்கு நிர்ணயிக்கப் பெற்ற) கணக்கின்படியே இருக்கின்றன.

وَّالنَّجْمُ وَالشَّجَرُ يَسْجُدٰنِ
(கிளைகளில்லாச்) செடி கொடிகளும், (கொப்புங் கிளையுமாக வளரும்) மரங்களும் - (யாவும்) அவனுக்கு ஸுஜூது செய்கின்றன. (குர்ஆன் : 55:05 ,06)

ஏனென்றால் நட்சத்திரங்கள் முழுமையாக தோன்றுவது வசந்த காலத்தில்தான் அந்தப் பருவத்தில்தான் ஆபத்துகள் நீங்குகின்றன .நோய்கள் குணமாகின்றன.
ர.ரா

விஞ்ஞானப் பார்வையில் நபிவழி மருத்துவம் – 42

வாற்கோதுமை (பார்லி)



ஆயிஷா ரலி அவர்கள் அறிவித்துள்ளதாவது :

"அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் குடும்பத்தார் ஒருவருக்கு நோய் ஏற்பட்டால் (வாற்கோதுமை) கஞ்சியை காய்ச்சுமாறு கட்டளையிடுவார்கள் . மேலும் அவர்கள், "இது துன்பமான இதயத்திற்கு இதமளிக்கிறது. மேலும் உங்களில் ஒரு பெண் அழுக்கிலிருந்து தன் முகத்தை கழுவி தூய்மைப்படுத்துவது போல் நோயாளியின் இதயத்தை இது தூய்மைப்படுத்துகிறது " என்று கூறுவார்கள் (நூல் இப்னுமாஜா 3436)

**பார்லி அரிசியின் மருத்துவ பயன்கள்**

மனிதனுக்கு ஆரோக்கியம் தரும் சத்தான உணவுகளில் பார்லி அரிசியும் ஒன்று. இது பெரும்பாலும் நம் நாட்டில் கஞ்சியாக தயார் செய்து சாப்பிடப்படுகிறது. இது ஒரு அற்புதமான சத்துப்பொருள் ஆகும். இது “வாற்கோதுமை” என்றும் அழைக்கபடுகிறது. இந்த பார்லியை டயட்டில் இருப்பவர்கள், நீரிழிவு நோயாளிகள், சர்க்கரை நோயாளிகள், இதய கோளாறு உள்ளவர்கள், சிறியவர்கள், பெரியவர்கள், கர்ப்பிணி பெண்கள் என்று அனைவரும் தினமும் சாப்பிட்டு வரலாம்.

பார்லி புல் வகையைச் சேர்ந்த ஒரு தாவரமாகும். இது உணவாகவும் கால்நடைத் தீவனமாகவும் பயன்படுகிறது. இது உலகில் ஐந்தாவது அதிகம் பயிரிடப்படும் தாவரமாகும். ரஷ்யா, கனடா போன்ற நாடுகளில் அதிகம் பயிரிடபடுகிறது. மத்திய ஆசிய நாடுகளில் அதிக மக்களால் உண்ணப்படும் உணவு தானியமாக பார்லி அரிசி இருக்கிறது.

பார்லியில் நார்ச்சத்து, வைட்டமின் பி, புரோட்டீன், கொழுப்பு சத்து, சுண்ணாம்பு சத்து, கால்சியம், பாஸ்பரஸ், மாங்கனீஸ் மற்றும் காப்பர் சத்து போன்றவை அடங்கியுள்ளது.
எடையை குறைக்கும் . பார்லியில் பீட்டா க்ளுக்கோன் என்ற வேதிப்பொருள் அதிகம் உள்ளது. இந்த பீட்டா க்ளுக்கோனானது, உடலில் உள்ள பித்த நீருடன் சேர்ந்து, தேவையற்ற கொழுப்பை மலம் மூலமாக வெளியேற்றும். எடைக் குறைக்க வேண்டும் என்று நினைபவர்களுக்கு பார்லி சிறந்த உணவாகப் மருத்துவர்களால் பரிந்துரைக்கப்படுகிறது.

**இதய நோயாளிகளுக்கு நல்லது**

இதய நோயாளிகளுக்கு பார்லி அற்புதமான ஒரு உணவாகும். இது உடலின் கொலஸ்ட்ரால் அளவை கட்டுப்படுத்துவதால், இதய நோயாளிகளுக்கு நன்மை பயக்கும். இதில் உள்ள ப்ரோபியானிக் என்கிற அமிலம் கொலஸ்ட்ராலை குறைக்க உதவுகிறது.

**கருவுற்ற பெண்கள்**

கருவுற்ற பெண்கள் பார்லி கஞ்சி தயார் செய்து தினமும் அருந்தினால் உணவுகள் எளிதில் செரிமானம் ஆகும். மேலும் கர்ப்ப காலத்தில் ஏற்படும் தலைச்சுற்றல், நீரிழிவு போன்றவை ஏற்படாமல் தடுக்கும். கை, கால்

போன்றவற்றில் ஏற்படும் வீக்கங்களை குறைக்கும். மேலும் கருவுற்ற பெண்களின் இரத்தத்தில் இருக்கும் நச்சுக்கள் அனைத்தும் சிறுநீர் வழியாக வெளியேற்றி உடலை தூய்மை படுத்துகிறது.

**காய்ச்சல்**
நம் உடலில் உள்ள நிணநீர் என்னும் சுரப்பிகள்தான், உடலின் நீர்ச்சத்தை பராமரிக்கிறது. அது அடைக்கப்பட்டால் உடலில் உள்ள தேவையற்ற தண்ணீர் வெளியேற வழியின்றி உடலில் அப்படியே தேங்கிவிடும். இதனால் காய்ச்சல் உண்டாகும். இவ்வாறு தேங்கிய நீரை வெளியேற்ற பார்லி கொடுக்கப்படுகிறது. இந்த நீர் வெளியேறினால் காய்ச்சல் குறைய தொடங்கும்.

**புற்றுநோய்**
பார்லியில் எல்லா வகையான புற்றுநோய்களையும் தடுக்கக்கூடிய ஆற்றல் அதிகம் இருப்பதாக ஆய்வுகள் தெரிவிக்கின்றன. குறிப்பாக பார்லியை உணவாக அதிகம் பயன்படுத்தும் சீனாவில் உள்ள யுனான் மற்றும் திபத்திய பகுதிகளில் இருக்கும் மக்களுக்கு எந்த வகையான புற்று நோய் பாதிப்புகளும் ஏற்படவில்லை என்று ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்துள்ளனர். மேலும் பார்லியில் இருக்கும் நார்ச்சத்து குடல் புற்று மற்றும் மார்பகப் புற்று நோய்களை தடுப்பதுடன், நோயின் பாதிப்பு ஏற்பட்டவர்களுக்கு நோய் குறைப்பதிலும் சிறப்பாக பார்லி செயல்படுகிறது.

**சர்க்கரையின் அளவைக் குறைக்கும்.**
கோதுமையிலும், ஓட்ஸிலும் அதிக நார்ச்சத்து இருந்தாலும் அவை தயாரிக்கும் பொழுது நார்ச்சத்து ஓரளவு குறைந்து போகின்றன. ஆனால் பார்லியில் பீட்டோ குளுக்கான் என்ற நார்ச்சத்து எந்த வகையான தயாரிப்பு முறையிலும் அழிவதில்லை. இது உடம்பில் இருக்கிற சர்க்கரையின் அளவைக் குறைக்கும்.

**எலும்பு, மூட்டுகள் தேய்மானம்**
பார்லியை தானியத்தை சாறு போன்று செய்து தினமும் குடித்து வருபவர்களுக்கு எலும்புகளும், பற்களும் மிகவும் உறுதி அடையும். மேலும் வயதானவர்களுக்கு வரும் ஆர்த்தரைடீஸ், ஆஸ்டியோபோரோசிஸ் போன்ற எலும்பு, மூட்டுகள் தேய்மானம், வலுவிழத்தல் போன்ற குறைபாடுகள் குறைகின்றன.

**குடல்நலம்**
செரிமான பிரச்சனைகள், மலச்சிக்கல் கொண்டவர்களுக்கு சிறந்த பத்திய உணவு பார்லி ஆகும். பார்லி கொண்டு செய்யப்பட்ட உணவையோ அல்லது பார்லி கஞ்சியோ தயாரித்து பருகுவது வயிறு மற்றும் குடல்களின் நலத்திற்கு மிகவும் சிறந்தது என மருத்துவர்கள் தெரிவிகின்றனர்.
பித்தப்பை கற்கள்
நமது உடலில் பித்தப்பையில் ஏற்படும் அதிகமான அமில சுரப்பு மற்றும் ட்ரைகிளிசரைட் அதிகரிப்பால் பித்தப்பையில் கற்கள் உருவாகிறது. பெண்களுக்கு இந்த பித்தப்பை கற்கள் உருவாகும் சதவீதம் அதிகம். பார்லி கொண்டு செய்யப்பட்ட உணவு பொருட்களை சாப்பிடுபவர்களுக்கு பித்தப்பையில் சுரக்கும் அமிலங்களின் அளவு சரியான அளவில் உள்ளது. இதனால் பித்தப்பை கற்கள் உருவாகாமல் தடுக்கப்படுகிறது.

**சிறுநீரகம்**
தினமும் பார்லியை உட்கொண்டு வந்தால் உடலில் ஊட்டச்சத்தின் அளவு அதிகரிக்கும். மேலும் இந்த பார்லி இரத்த சர்க்கரை மற்றும் இரத்த கொழுப்பை கட்டுக்குள் வைக்கும். மேலும் இந்த பார்லி அரிசி கஞ்சி சிறுநீரகத்தின் செயலாற்றலை ஊக்குவிக்கும்.

ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) கூறினார்.
நாங்கள் வெள்ளிக்கிழமையன்று மிகுந்த மகிழ்ச்சியுடன் இருந்து வந்தோம். ஏனெனில், எங்களுடன் கிழவியொருத்தி நட்பாக இருந்தாள். அவள், நாங்கள் எங்கள் நீரோடைகளின் ஓரமாக நட்டு வந்த 'சில்க்' என்னும் கீரைத் தண்டுகளைப் பிடுங்கி, அவற்றைத் தன்னுடைய பாத்திரமொன்றில் போட்டு, அவற்றுடன் வாற்கோதுமை விதைகள் சிலவற்றையும் கலந்து (ஒரு வகை உணவைத் தயார் செய்து) தருவாள்.

நாங்கள் ஜும்ஆ தொழுகை தொழுதுவிட்டோமென்றால் அந்தக் கிழவியைச் சந்திப்போம். அவள் அந்த உணவை எங்களுக்குப் பிரியமாகத் தருவாள். இதன் காரணமாக நாங்கள் வெள்ளிக் கிழமையன்று மகிழ்ச்சியுடன் இருப்போம். ஜும்ஆ தொழுகைக்குப் பிறகுதான் நாங்கள் உண்போம்; மதிய ஓய்வு கொள்வோம். அந்த உணவு கெட்டியான கொழுப்போ திரவக் கொழுப்போ எதுவும் அற்றதாக இருந்தது' என்று கூறினார்கள். ஸஹீஹ் புகாரி : 2349.
ர.ரா
**Rahmath Rajakumaran**
5381. அனஸ் இப்னு மாலிக்(ரலி) அறிவித்தார்
அபூ தல்ஹா (ஸைத் அல்அன்சாரி(ரலி) தம் துணைவியார் உம்மு சுலைம்(ரலி) அவர்களிடம், 'நான் நபி(ஸல்) அவர்களின் குரலைப் பலவீனமானதாகக் கேட்டேன். அதில் நான் (அவர்களுக்கு இருக்கும்) பசியை

அறிந்துகொண்டேன். உன்னிடம் (உணவு) ஏதேனும் இருக்கிறதா?' என்று கேட்டார்கள். எனவே, உம்மு சுலைம்(ரலி) வாற்கோதுமை ரொட்டித் துண்டுகள் சிலவற்றை எடுத்து வந்தார்கள். பிறகு, உம்மு சுலைம் அவர்கள் தங்களின் முகத்திரை ஒன்றை எடுத்து அதன் ஒரு பகுதியால் ரொட்டியைச் சுருட்டி என்னுடைய கை (அக்குளு)க்குக் கீழே மறைத்து வைத்துவிட்டு, மற்றொரு பகுதியை எனக்கு மேல்துண்டாக ஆக்கினார்கள். பிறகு என்னை இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் அனுப்பினார்கள். நான் அதைக் கொண்டு சென்றேன். இறைத்தூதர்(ஸல்) அவர்களைப் பள்ளிவாசலில் கண்டேன். அவர்களுடன் மக்களும் இருந்தனர். நான் அவர்களுக்கு முன்னால் (போய்) நின்றேன். அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் 'உன்னை அபூ தல்ஹா அனுப்பினாரா?' என்று கேட்டார்கள். நான், 'ஆம்'' என்று சொன்னேன். 'உணவுடனா அனுப்பியுள்ளார்?' என்று அவர்கள் கேட்க, நான் 'ஆம்' என்றேன்.
அப்போது இறைத்தூதர்(ஸல்) அவர்கள் தம்முடன் இருந்தவர்களிடம், 'எழுந்திருங்கள்'' என்று சொல்லிவிட்டு நடக்கலானார்கள். நான் அவர்களுக்கு முன்னால் நடந்தேன். இறுதியில் அபூ தல்ஹா(ரலி) அவர்களிடம் வந்(து விவரத்தைத் தெரிவித்)தேன். உடனே அபூ தல்ஹா(ரலி) (என் தாயாரிடம்) 'உம்மு சுலைமே! இறைத்தூதர்(ஸல்) அவர்கள் மக்களுடன் வந்திருக்கிறார்கள். ஆனால், அவர்களுக்கு உணவளிக்க நம்மிடம் உணவு இல்லையே!'' என்று கூறினார்கள். (என் தாயார்) உம்மு சுலைம்(ரலி), 'அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கறிந்தவர்கள்'' என்று கூறினார்கள். உடனே அபூ தல்ஹா(ரலி) (தாமே நபி(ஸல்) அவர்களை முன்சென்று வரவேற்பதற்காகப்) போய் இறைத்தூதர்(ஸல்) அவர்களைச் சந்தித்தார்கள். அபூ தல்ஹா அவர்களும் இறைத்தூதர்(ஸல்) அவர்களும் வந்து வீட்டுக்குள் நுழைந்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , 'உம்மு சுலைமே! உன்னிடமிருப்பதைக் கொண்டுவா!'' என்று கூறினார்கள். உடனே உம்மு சுலைம் அவர்கள் அந்த ரொட்டியைக் கொண்டு வந்தார்கள். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் அதைத் துண்டு துண்டாகப் பிய்க்கும்படி பணித்தார்கள். அவ்வாறே அது பிய்க்கப்பட்டது. பிறகு, உம்மு சுலைம்(ரலி) தோல் பையிலிருந்து வெண்ணெய் எடுத்துப் பிழிந்து அதை உருக்கினார்கள். பிறகு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் இறைவன் நாடிய (பிஸ்மில்லாஹ் மற்றும் இதர பிரார்த்தனை வரிகள் சில)வற்றைக் கூறினார்கள். பிறகு 'பத்துப் பேருக்கு (உள்ளே வர) அனுமதியுங்கள்'' என்று (அபூ தல்ஹாவிடம்) கூறினார்கள்.
அவ்வாறே அவர்களுக்கு அபூ தல்ஹா(ரலி) அனுமதியளித்தார்கள். அப்போது அவர்கள் (பத்துப் பேரும்) வயிறு நிரம்பும் வரை உண்டுவிட்டு வெளியேறினார்கள். பிறகு இறைத்தூதர்(ஸல்) அவர்கள் 'இன்னொரு பத்துப் பேருக்கு (உள்ளே) வர அனுமதி அளியுங்கள்'' என்று கூறினார்கள். அவ்வாறே அபூ தல்ஹா(ரலி) அனுமதியளிக்க, அவர்களும் வயிறு நிரம்பும் வரை உண்டுவிட்டு வெளியேறினார்கள். பிறகு, 'மேலும் பத்துப் பேருக்கு அனுமதியுங்கள்'' என்று கூற, அபூ தல்ஹாவும் அனுமதியளித்தார்கள். அவர்களும் வயிறு நிரம்பச் சாப்பிட்டுவிட்டு வெளியேறினார்கள். பிறகு பத்துப் பேருக்கு அபூ தல்ஹா(ரலி) அனுமதி கொடுத்தார்கள். மக்கள் அனைவரும் (இவ்வாறே) வயிறு நிரம்பும் வரை உண்டார்கள். (அப்படி உண்ட) அந்த மக்கள் எண்பது பேர் ஆவர்

## விஞ்ஞானப் பார்வையில் நபிவழி மருத்துவம் -43

(மீன் உணவு)




அல்லாஹ்வின் தூதர் நபி ஸல் அவர்கள் கூறியதாக அப்துல்லாஹ் பின் உமர் ரலி அவர்கள் கூறுவதாவது :
"இறந்தவை இரண்டும் , இரண்டு இரத்தங்களும் நமக்கு ஆகுமாக்கப்பட்டுள்ளன. அறிக!
இறந்தவை இரண்டு மீனும் வெட்டுக்கிளியும் ஆகும்
இரண்டு இரத்தங்கள் என்பது கல்லீரலும், மண்ணீரலும் ஆகும் நூல்: இப்னுமாஜா 3305

ஆதி மனிதன், மாமிச பட்சிணி! காடுகளில், சமவெளிகளில், பள்ளத் தாக்குகளில், மற்ற நிலப்பரப்புகளில் கிடைத்த காய், கனிகள் தவிர நீர் நிலை இருந்த இடங்களில் எல்லாம் மீன் பிடித்து உண்டு வந்தவன். மனிதன் தோன்றி, பல லட்சக்கணக்கான ஆண்டுகளான பின்னும் அவனுக்கு உணவாகிறது மீன்...

நியாண்டர்தால் மனிதன் இருந்த காலத்திலேயே மீன் உணவு வழக்கத்தில் இருந்தது கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. 40,000 ஆண்டுகளுக்கு முன்னர் கிழக்கு ஆசியாவில் வாழ்ந்த, பழமையான தியான்யுவான் **(Tiyanyuan)** வம்சத்தைச் சேர்ந்த மனிதர்கள் மீன் உணவு சாப்பிட்டதும் அறியப்பட்டிருக்கிறது.
சுமார் ஒன்றரை லட்சம் பேரிடம் நடத்தப்பட்ட 26 வெவ்வேறு ஆய்வுகளின் முடிவுகளை ஒப்பிட்டு ஆராய்ந்ததில் அதிக அளவு மீன் சாப்பிடுபவர்களுக்கு மன அழுத்த நோய் தோன்றுவதற்கான வாய்ப்பு 17 சதவீதம் குறைவதாக தெரியவந்திருக்கிறது.

மீன் உண்பதைப் பற்றி குர்ஆன் பல வசனங்கள் மூலமாக தெரிவிக்கிறது.
அவன்தான் நீங்கள் மீன்களைப் (பிடித்துச் சமைத்துப்) புசிக்கவும், நீங்கள் ஆபரணமாக அணியக்கூடிய பொருள்களை எடுத்துக்கொள்ளவும் கடலை (உங்களுக்கு) வசதியாக்கித் தந்தான்.(அல்குர்ஆன் : 16:14)
இரு கடல்களும் சமமாகி விடாது; ஒன்று குடிப்பதற்கு இன்பமான மதுரமான தண்ணீர்! மற்றொன்று கொடிய உப்பு(த் தண்ணீர். இவ்வாறு இவ்விரண்டிற்கும் வேற்றுமை இருந்த போதிலும்) இவ்விரண்டில் இருந்துமே புத்தம் புதிய (மீன்) மாமிசத்தைப் புசிக்கின்றீர்கள். (அல்குர்ஆன் : 35:12)

நபி மூஸா (அலை) அவர்களும் , அவர்களின் வழித்துணைவரும் நெடும் பயணத்தில், காலை உணவாக பொறித்த மீனை உண்பதற்காக உணவுப் பாத்திரத்தை திறந்த போது , அம்மீனின் மீது ''மாவுல் ஹயாத் " என்னும் ஜீவநீர் பட்டதும் பொறித்த மீன் உயிர் பெற்று கடலில் குதித்தோடியதாக ..
அவர்கள் இருவரும் இரு கடல்களும் சந்திக்கும் இடத்தை அடைந்தபொழுது தங்களுடைய மீனை அவர்கள் மறந்துவிட்டனர். அது கடலில் தன்னுடைய வழியைச் சுரங்கம் போல் அமைத்துக்கொண்டு (சென்று) விட்டது. (குர்ஆன் : 18:61)

புலால் உணவுகளில் ஆட்டிறைச்சி கொழுப்பு 48 சதமானம், பன்றி இறைச்சியில் 36 சதமானம், ஆனால் மீனில் 11 முதல் 26 சதமானம் மட்டுமே.
மீன் எண்ணெயில் இருக்கும் ஒமேகா-3 கொழுப்பு அமிலங்கள் மூட்டு வாதத்தைக் குறைக்கின்றன. அயிலை மீன் எண்ணெய் தோல் நோய்க்குச் சிறந்த குணமளிக்கிறது. சுறா மீனின் எண்ணெய் காச நோய்க்கு மருந்து
மனித மூளையின் பல்வேறு செயற்பாடுகளுக்கு அவசியத்தேவையாக இருக்கும் கொழுப்பு அமிலங்கள் மீன்களில் அதிக அளவு இருப்பது இதற்கான முக்கிய காரணமாக இருக்கக்கூடும் என்று விஞ்ஞானிகள் கருதுகிறார்கள்.

மூளையில் இருக்கும் சமிக்ஞைகளுக்கான இரண்டு முக்கிய வேதிமங்களான டோபோமைன் மற்றும் செறொடோனின் ஆகியவை மனிதர்களின் மன அழுத்த நோயோடு தொடர்புடையவை.
இந்த இரண்டும் மனித மூளை வேதிமங்களின் செயல்களை கட்டுப்படுத்துவதில் மீன்களில் இருக்கும் ஒமெகா 3 என்கிற கொழுப்பு அமிலம் முக்கிய பங்காற்றுவதால், அதிகமாக மீன் உணவு சாப்பிடுவது மன அழுத்த நோய் வராமல் தடுக்கிறது என்று ஆய்வாளர்கள் விளக்கமளித்திருக்கிறார்கள்.

ஐரோப்பிய நன்னீர் ஆறுகளில் வளரும் விலாங்கு மீன்கள் முழுவளர்ச்சி அடைந்தவுடன், இலட்சக் கணக்கில் ஒன்று சேர்ந்து, பெர்மூடா அருகேயுள்ள வட அட்லாண்டிக் பகுதியில் உள்ள சர்கோஸா கடல் பகுதியினை நீந்தி அடைந்து, அங்கே முட்டைகளை இட்டவுடன் இறந்து போய்விடுகின்றன.
முட்டைகள் அக்கடற்பகுதியிலேயே வளர்ந்து, குஞ்சுகளாகி, சிறு சிறு கூட்டமாக அட்லாண்டிக் கடற்பரப்பினை நீந்திக் கடந்து, தம் தாயின் இருப்பிடமாகிய ஐரோப்பிய ஆற்றுப்பகுதியினை வந்தடைகின்றன! ஏறத்தாழ 3500 கிலோமீட்டர் தாண்டி இன்றளவும் ஆய்வாளருக்கு வியப்பளிக்கும் செய்தி இது
காரணம் தாய் மீனின் மரபணுவில் பதியப்பட்ட செய்தி தன் குஞ்சு மீன்களின் மூளையில் பதிவாகி இருக்கலாம் என்கிறார்கள் .
ஜப்பானில், **சஷிமி (Sashimi)** என்ற ஒரு வகையான மீனைப் பச்சையாகவே சாப்பிடுவார்களாம்.
மத்தி மீன் என்று ஒன்று உண்டு. இதை வாணலியில் இட்டு வறுக்கும்போதே அதில் இருந்து எண்ணெய் வடியும். அந்த எண்ணெயில் ஒமேகா 3 கொழுப்பு உள்ளது. உடலுக்கு எத்தனையோ நன்மைகளைத் தரக்கூடியது.

பொதுவாக மீன்களை அதிகம் சாப்பிடும் வழக்கமுள்ளவர்கள் தமது உணவை ஆரோக்கியமானதாக, எல்லா சத்துக்களும் அடங்கியதாக வைத்துக்கொள்வதில் கூடுதல் கவனம் செலுத்துபவர்களாக இருப்பார்கள் என்பதால், அவர்களின் ஆரோக்கியமான உணவு அவர்களின் மன நலத்தையும், ஆரோக்கியமாக வைத்திருக்க உதவக்கூடும் என்றும் ஒரு விளக்கம் அளிக்கப்படுகிறது.

“மன அழுத்த நோயை தடுப்பதற்கான முதல்கட்டத்தில் அதிகமான மீன் உணவு உட்கொள்வது நல்ல பலன் தரும்”, என்கிறார் கிங்டாவ் பல்கலைக்கழகத்தின் மருத்துவ கல்லூரியைச் சேர்ந்த பேராசிரியர் டாங் பஃபெங் ஜாங்.
சுருக்கமாக, மீன் உணவு இதயத்துக்கு இதம், உடலுக்கு பலம், மனதுக்கு நலம்!
ர.ரா

விஞ்ஞானப் பார்வையில் நபிவழி மருத்துவம்.-44

கருவாடு



கருவாடு யாருக்கு தான் பிடிக்காது. சிலருக்கு கருவாடு வாசனைதான் பிடிக்காதே தவிர, சமைத்த பிறகு ஒருப்பிடி பிடிக்காமல் விட மாட்டார்கள். கருவாடு பலருக்கு சரியாக சமைக்க தெரியாது. அதனால், சுவை சரியாக வராது. எல்லா வகை கருவாடும் உடலுக்கு நல்லதுதான்.

நீரின் அடித்தளத்தில் வாழும் நன்னீர் மீன் வகைகளுக்கு எடுத்துக்காட்டாக விளங்குவது கெளிறு மீன். இதைக் கெளுத்தி மீன் என்றும் ' ஹிர்ரீ ' என்றும் பேச்சு வழக்கில் அழைக்கின்றனர். இவற்றின் தொடுமுளைகள் பூனையை நினைவுபடுத்துவது போல உள்ளதால் இவை மேனாட்டில் இதை பூனை மீன் (cat fish) என்றும் அழைப்பதுண்டு.
இவற்றுக்குச் செதில்கள் கிடையாது. செதில்கள் இல்லாத காரணத்தால் யூதர்கள் மற்றும் ஷியா முஸ்லிம்கள் இவற்றை உண்பதில்லை.

இந்த மீனை உப்பிட்டு கருவாடாக சாப்பிட்டால் மூச்சுக் குழாயை சுத்தப்படுத்தும். குரலை தெளிவாக்கும். இதனை நன்றாக இடித்து வயிற்றின் வெளிப்புறத்தில் வைத்துக் கொண்டால், இது தனது ஈர்ப்பாற்றலால் பிரசவத்திற்கு பின் தாயின் வயிற்றிலிருந்து குழந்தை வெளியேறிய மெல்லிய தோல், மற்றும் வயிற்றின் அடியில் தங்கிவிட்ட கசடுகள் ஆகியவற்றை வெளியேற்றிவிடும்.

ஷிர்ரீ வகை கருவாட்டின் உப்பு நீரில் குடல்புண் உள்ளோர் அமர்ந்தால், நோயின் தொடக்கத்திலேயே இந்த நோய்க்கான மூலக்கூறை தனது ஈர்ப்பாற்றலால் முறியடித்துவிடும் .இதை உள் மருந்தாக பயன்படுத்தினால் அதன் மூலம் இடுப்புச் சந்து வாதம் (Sciatica) குணமாகும்

அசைவ உணவுகளில் அதிக கொழுப்பு சத்து இல்லாத உணவு மீன் மற்றும் கருவாடுதான். ஆனால், கருவாட்டை எந்தெந்த உணவுகளுடன் சேர்த்து சாப்பிடக் கூடாது, யாரெல்லாம் சாப்பிடக் கூடாது என உங்களுக்கு தெரியுமா? கருவாடு மட்டுமின்றி மீன், நண்டு போன்ற உணவுகள் சாப்பிடும் போதும், மோர், தயிர், கீரை போன்ற உணவுகள் சேர்த்துக் கொள்ள கூடாது. இது புட் பாய்சன் ஆக காரணமாகலாம். சிலருக்கு தோல் அலர்ஜி ஏற்படலாம்.

கருவாடு சாப்பிடும் போது மிளகு, பூண்டு, சீரகம், திப்பிலி போன்றவை சேர்த்து ரசம் வைத்து சாப்பிடுவது ஆரோக்கியமானது. மேலும் இந்த ரசத்தை தனியாக குடித்து வந்தால் அஜீரணம், வாந்தி, பேதி ஆகாமல் தடுக்கும்.

இரத்த அழுத்தம் மற்றும் சர்க்கரை நோய் உள்ளவர்கள் உப்பு அதிகமான உணவுகள் சேர்த்துக் கொள்ள கூடாது, ஆகையால் அவர்கள் கருவாடு அதிகம் உண்ணுதல் கூடாது. கருவாடு மட்டுமின்றி அப்பளம் மற்றும் ஊறுகாயும் கூட இவர்களுக்கு தடை செய்யப்பட்ட உணவுகள்தான்.
மேலும், மீன், கருவாடு சாப்பிட்ட பிறகு பால், தயிர் சாப்பிடக்கூடாது. மீறி உண்டால் **"வெண் மேகம்"** போன்ற நோய்கள் வர வாய்ப்புள்ளது.

ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.
"இறைத்தூதர்(ஸல்) அவக்ள் எங்களில் குதிரைப்படை வீரர்களான முந்நூறு பேரை (ஒரு புனிதப் போருக்கு) அனுப்பினார்கள். அபூ உபைதா இப்னு ஜர்ராஹ்(ரலி) எங்கள் தலைவராக இருந்தார்கள். நாங்கள் குறைஷிகளின் வணிகக் குழுவை எதிர்பார்த்துக் காத்திருந்தோம். எனவே, நாங்கள் கடற்கரையோரமாக அரை மாதம் தங்கினோம்.

எங்களைக் கடுமையான பசி பீடிக்க, கருவேல மரத்தின் இலையை நாங்கள் புசித்தோம். எனவே, அந்தப் படைப் பிரிவு 'கருவேல இலைப்படைப் பிரிவு' என்று பெயர் சூட்டப்பட்டது.
கடல் எங்களுக்காக **'அல் அம்பர்'** எனப்படும் (ஒரு வகை மீன் இனப்) பிராணியை (கரையில்) போட்டது. நாங்கள் அதிலிருந்து அரை மாதம் உண்டோம். அதன் கொழுப்பிலிருந்து எண்ணெய் எடுத்துக் கொண்டோம். அதனால் எங்கள் (வலிமையான) உடல்கள் எங்களுக்கு திரும்பக் கிடைத்துவிட்டன.
அபூ உபைதா(ரலி) அந்த (பெரிய) மீனின் விலா எலும்புகளில் ஒன்றை எடுத்து அதை (பூமியில்) நட்டுவிட்டுத் தம்முடனிருந்த மிக உயரமான மனிதரிடம் சென்றார்கள். (அவரை அந்த விலா எலும்பின் கீழே நடந்து செல்லும்படி கேட்டுக் கொண்டார்கள்.)
மற்றோர் அறிவிப்பில் 'ஒரு மனிதரையும் ஓர் ஒட்டகத்தையும் அழைத்துக் கொண்டு அந்த எலும்பு(க் கூடடுக்)க்குக் கீழே நடந்து சென்றார்கள்' என்று இடம் பெற்றுள்ளது.
ஸஹீஹ் புகாரி : 4361.

இஸ்லாமிய 300 வீரர்கள் அரை மாதத்திற்கு கரை ஒதுங்கிய திமிங்கல மீனை கருவாடாக்கி, அதனை உண்டார்கள் என்பதாக தெரிகிறது .
ர.ரா

விஞ்ஞானப் பார்வையில் நபிவழி மருத்துவம். -45

கீரை வகைகள் (Chard)




உம்முல் முன்திர் பின்த் கைஸ் அல் அன்ஸாரிய்யா (ரலி) அவர்கள் அவர்கள் கூறுவதாவது:

"எங்களிடம் அல்லாஹ்வின் தூதர் (ஸல் ) அவர்கள் வந்தார்கள் அவர்களுடன் அலீ பின் அபுதாலிப் (ரலி ) அவர்களும் வந்தார்கள். அலீ (ரலி) அவர்கள் அப்போதுதான் நோய்வாய்ப்பட்டு நிவாரணம் அடைந்திருந்தார்கள்.
எங்களிடம் அரைகுறையாக பழுத்த பேரீத்தம் பழக்குலை தொங்கிக்கொண்டிருந்தது. அதிலிருந்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சாப்பிட்டார்கள் .

அப்போது அலீ (ரலி ) அவர்கள் அதிலிருந்த பேரீத்தம் பழத்தை சாப்பிடுவதற்காக எடுத்தார்கள். நபி ஸல் அவர்கள் அலீ (ரலி) அவர்களிடம், "நீர் இப்போதுதான் நோயிலிருந்து நிவாரணம் அடைந்துள்ளீர் எனவே நீ இதை சாப்பிட கூடாது " என்று கூறினார்கள்.
அச்சமயத்தில், நான் நபி (ஸல்) அவர்களுக்கு கீரையும், வாற்கோதுமையும் கலந்த கஞ்சி செய்து வைத்தேன்.
அப்போது நபி (ஸல்) அவர்கள் , அலீ (ரலி) அவர்களிடம் ,
"அலீயே இதிலிருந்து தாங்கள் சாப்பிடுங்கள். ஏனென்றால் இது நோயிலிருந்து விடுபட்டுள்ள உமக்கு மிகவும் பயனுள்ளது" என்று கூறினார்கள் .
- இப்னுமாஜா 3433, திர்மிதீ , அபூதாவூத்

பனூ இஸ்ரவேலர்களுக்கு நபி மூஸா (அலை) அவர்கள் இறைவனிடம் வேண்டி வானத்திலிருந்து மன்னு - ஸல்வா உணவை கீழேறக்கி தந்த போது , அவர்கள் மண்ணில் விளையும் கீரையைக் கேட்டதாக குர்ஆனில் ...
ஆனால் (அவர்கள் மூஸாவை நோக்கி) "மூஸாவே! ஒரே (விதமான) உணவை உட்கொண்டிருக்க எங்களால் முடியாது. பூமியில் முளைக்கக்கூடிய கீரை, வெள்ளரிக்காய், கோதுமை, பருப்பு, வெங்காயம் ஆகியவைகளை வெளிப்படுத்தித் தரும்படி உங்களுடைய இறைவனை எங்களுக்காக நீங்கள் கேளுங்கள்" என அவரிடம் கேட்டார்கள். அதற்கு (மூஸா) "மேலானதற்குப் பதிலாகத் தாழ்ந்ததை மாற்றிக்கொள்(ள விரும்பு)கின்றீர்களா?
(அல்குர்ஆன் : 2:61)

'கண்ணு சரியா தெரியலியா... அப்படின்னா பொன்னாங்கண்ணிக் கீரையைச் சாப்பிடுங்க. பகல்ல கூட நட்சத்திரங்களை பார்க்கலாம்.
வயித்துல புண்ணா.. மணத்தக்காளி கீரையைச் சாப்பிடுங்க. இருமல் குறையவே இல்லையா.. தூதுவளைக்கீரையைத் துவையலாக்கி சாப்பிடுங்க.
வாய்ப்புண்ணா... அகத்திக்கீரை சாம்பார் சாப்பிடுங்க.
மூட்டு வலியால அவதியா உங்களுக்கு முடக்கத்தான் கீரைதான் சரியான சாய்ஸ்...
இவையெல்லாம் முன்பு பாட்டிகள் சொன்னவைதான். இன்று இதைத்தான் மருத்துவர்களும் வலியுறுத்துகிறார்கள்.

தினம் ஒரு கீரையைச் சமைத்துச் சாப்பிடச் சொல்லி பாடாய்படுத்திய பாட்டிகளின் பெருமைகளையெல்லாம் இப்போதுதான் உணரத் தொடங்கியிருக்கிறோம். கண்கெட்ட பிறகு சூரிய நமஸ்காரம் என்றாலும், இருக்கும் காலம் வரை இருக்கும் கொஞ்ச நஞ்ச ஆரோக்கியத்தையேனும் காப்பாற்றிக் கொள்ளலாம். அதோடு அடுத்த தலைமுறையினரின் ஆரோக்கியத்தையும் காக்கலாம் என்பதை மருத்துவர்களே வலியுறுத்தும் போது, பிறகென்ன?
முன்னோர்களின் காலம் உணவே மருந்து என்பதை அறிவோம். ஒவ்வொரு நாள் உணவிலும் ஒவ்வொரு சத்துக்களைக் கொண்டிருக்கும் உணவுப் பொருள்களைப் பயன்படுத்தினார்கள். தானியங்கள், பழங்கள், காய்கறிகள், கீரைகள் என்று எல்லாமே சரிவிகித அளவில் இருந்ததாலேயே எந்த விதமான நோய்களும் நம் வீட்டு வாசலை எட்டிக்கூட பார்ப்பதில்லை எனும் நிலை இருந்தது. ஆரோக்கியமாக வாழ்ந்தார்கள்.
இத்தனை வகையான கீரைகள் உண்டு என்று சரியாக பட்டியலிட முடியவில்லை. வயல் ஓரங்களில் இருக்கும் சிறு செடிகள் கூட நம் மூதாதையர்களின் கண் ணுக்குத் தப்பவில்லை. அவை மசியலாக்கப்பட்டது, உணவாக்கப்பட்டன.

என்றாலும் தற்போது நம்மிடையே புழக்கத்தில் இருப்பது 40 வகையான கீரைகள் என்றே சொல்லலாம். மக்கள் அதிகமாக பயன்படுத்துவது முருங்கைக்கீரை, சிறுகீரை, அரைக்கீரை, பொன்னாங் கண்ணி, பாலக்கீரை, முளைக்கீரை, தண்டுக்கீரை, மணத்தக்காளிக் கீரை, வெந்தயக்கீரை போன்றவை.
வீட்டில் பெரியவர்கள் இருந்தால் வல்லாரை, தூதுவளை, பசலைக்கீரை, முடக்கத்தான் கீரை, கலவைக்கீரை, பருப்புக்கீரை, முள்ளங்கிக் கீரை,வாத நாராயணன் கீரை, சுக்காங்கீரை, புளிச்சக் கீரை, பண்ணைக்கீரை என்னும் மசிலிக் கீரை, காசினிக்கீரை, வெள்ளை மற்றும் மஞ்சள் கரிசலாங்கண்ணி கீரை, கல்யாண முருங்கை போன்றவை அதிகம் பயன்படுத்தினார்கள்.

மனித உடலில் வாயு, பித்தம், கபம் மூன்றும் சமநிலையில் இருந்தால் எந்த விதமான நோய்களும் அண்டாது என்கிறது சித்தமருத்துவம். இந்த மூன்றையும் சமநிலையில் வைக்கும் அளவுக்கு சத்துக்களைக் கொண்டிருக்கிறது கீரை வகைகள். கூடவே ஒவ்வொரு விதமான கீரையிலும் தனித்துவமான சத்துக்களும் இணைந்திருக்கின்றன. இதைப் பட்டியலிட்டால் அதைத் தனி கட்டுரையாகவே எழுதலாம்.
பொதுவாக இரும்புச்சத்து, பாஸ்பரஸ், கால்சியம், வைட்டமின் ஏ,சி மற்றும் பி, வைட்டமின், தாதுக்கள் இன்னும் பல்வேறு சத்துக்கள் நிறைந்திருக்கின்றன.

ரத்த சோகையால் பாதிக்கப்பட்டவர்களுக்கு முருங்கைக்கீரை நல்ல பலனளிக்கும். மேலும் இது கண்பார்வை, நரம்புகள், ஆண்மைபெருக்கி முதலான குணங்களையும் பலன்களையும் தரவல்லது.

வயிற்றுப்புண், குடல் புண், வாய்ப்புண், கல்லீரல் பிரச்சினை, உடல் உஷ்ணம் இருப்பவர்களுக்கு மணத்தக்காளிக் கீரையே மாமருந்து. இவை தவிர துத்திக்கீரை, முருங்கைக்கீரையும் சொல்லலாம். அகத்திக்கீரை வயிற்றில் இருக்கும் குடற்புழுக்களை வெளியேற்றுவதோடு பித்தத்தையும் தணிக்கும். ரத்தத்தையும் சுத்தமாக்கும்.

மலச்சிக்கல் பிரச்சினை இன்று அனைத்துவயதினருக்கும் இருக்கிறது. அவர்கள் சிறுகீரை, முருங்கைக்கீரை, அரைக்கீரை, வெந்தயக்கீரை, கலவைக்கீரை என எடுத்து வந்தால் நாளடைவில் சரியாகும்.
ஆண்மையைப் பெருக்கவும், பால்வினை நோய்கள் தீரவும் சிறுபசலைக்கீரை, முருங்கைக்கீரை, அரைக்கீரை, புளிச்சக்கீரை, தூதுவளை, நருதாளி கீரை போன்றவற்றை உணவில் சேர்க்கலாம்.

மூட்டுகளின் தேய்மானத்தைத் தள்ளிப்போட வைப்பதிலும் உடலிலுள்ள வாயுக்களை வெளியேற்றுவதிலும் முடக்கத்தான் கீரைக்கு முக்கிய பங்கு உண்டு.

அழகைக் கூட்டவும் சருமப் பிரச்சினைகளைத் தீர்த்து அதைப் பராமரிக்கவும் கூட கீரைகள் உண்டு. சொரி, சிரங்கு, தேமல், படை, இளவயதில் முகச்சுருக்கம், கரப்பான் போன்ற பிரச்சினைகளை நீக்கி தேகப் பலத்தையும் முகப் பொலிவையும் கொடுக்கக்கூடிய கீரைவகைகளாக வெந்தயக்கீரை, மணத்தக்காளிக் கீரை, சிறுகீரை, சுக்காங்கீரை, தூதுவளைக் கீரை அவற்றோடு பொன்னாங்கண்ணிக் கீரையையும் சொல்கிறார்கள் மருத்துவர்கள். இதை பொன்னாக காண்பாய் மேனி என்றும் சொல்வார்கள்.

சத்து குறையாமல் சமைக்க வேண்டும்:
இயற்கையான முறையில் கீரைகள் விளைவதில்லை. அவற்றிலும் பூச்சிகள் வராமல் இருக்க ரசாயனம் கலந்த உரங்களைத் தெளிக்கிறார்கள். எனவே மரத்திலிருந்து பறிக்கப்படும் முருங்கை, அகத்திக்கீரையை சுத்தம் செய்தால் போதும். மற்ற கீரைகளை நன்றாக ஆய்ந்து நீரில் மண் போக அலசியே பயன்படுத்த வேண்டும்.
அவசர சமையலுக்கு ஏற்ப கீரையை குக்கரில் வேகவைப்பவர்கள் இனி அப்படிச் செய்யாதீர்கள். மண் சட்டியில் (அடியில் சிறு கற்கள் பதித்திருக்கும்) கீரையை வேக வைக்க வேண்டும். அதிக நேரம் வேக வைக்க கூடாது. அரை வேக்காடாகவும் இருக்கக்கூடாது.

கீரையை மசியல், கூட்டு, பொறியல், தோசை, துவையல் எனச் செய்யலாம். சிறு கீரை, பருப்புக்கீரை, அரைக்கீரை, பொன்னாங்கண்ணி கீரையை பாசிப்பருப்பு அல்லது துவரம்பருப்புடன் சேர்த்து கூட்டாக வைக்கலாம்.

எல்லா கீரைகளையும் (முடக்கத்தான், தூதுவளை தவிர்த்து, பசலைக்கீரை) மசியல் செய்யலாம். சட்டியில் இரண்டு கைப்பிடி அளவு பூண்டு, காரத்துக்கேற்ப பச்சைமிளகாய், தக்காளி சேர்த்து தண்ணீர் விட்டு கொதிக்க வைத்து கீரையைச் சேர்த்து வேகவைத்ததும், புளி சேர்த்து மசியலாக்கி வடகம் தாளித்துக்கொட்டி நெய் விட்டு சாப்பிடலாம். (கீரையை வேகவைக்கும் போது புளி சேர்த்தால் கீரையின் நிறம் மாறிவிடும் என்பது குறிப்பிடத்தக்கது ) கீரைகளுடன் பருப்பு சேர்த்து வேகவைத்து மசிக்கலாம்.
முடக்கத்தான் கீரையை ஆய்ந்து சுத்தம் செய்து மிக்ஸியில் அரைத்து இட்லி மாவில் கலந்து க்ரீன் தோசையாக ஊற்றலாம். இதேபோன்று பசலைகீரையை வதக்கி தோசை மாவில் கலந்து அல்லது துவையலாக்கி தோசை மீது தடவிக் கொடுக்கலாம். காசினிக்கீரையை போண்டா மாவில் கலந்து செய்யலாம். தூது வளை, பிரண்டை, வல்லாரை வகைகள் துவையலுக்கு ஏற்றவை.

கீரை வகைகளை இரவு நேரங்களில் கட்டாயம் தவிர்க்க வேண்டும் இது செரிமான பிரச்னைகளை உண்டாக்கும் என்கிறார்கள் ஊட்டச்சத்து நிபுணர்கள்.

இன்னும் பல கீரைவகைகள் உண்டு என்றாலும் கிடைக்கும் இந்த கீரை வகைகளை அவ்வப்போது உணவில் சேர்த்து வந்தாலே போதும். உடல் ஆரோக்கியம் நிச்சயம். இனி கீரையின் வாசம் உங்கள் இல்லத்தில் எல்லா நாளும் மணக்கட்டும்.
ர.ரா

விஞ்ஞானப் பார்வையில் நபிவழி மருத்துவம்.-46

( ஆட்டிறைச்சி )



இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்கள்
" இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (ஆட்டின்) சப்பை எலும்பு ஒன்றை (அது வெந்து கொண்டிருந்த பாத்திரத்தில் இருந்து) எடுத்து அதிலிருந்த இறைச்சியைக் கடித்துச் சாப்பிட்டார்கள். பிறகு எழுந்து தொழுதார்கள். ஆனால் (புதிதாக) அங்கசுத்தி (உளூ) செய்யவில்லை " ஸஹீஹ் புகாரி : 5404.
அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

" இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் (ஒரு விருந்தில்) இறைச்சி கொண்டுவரப்பட்டது. அப்போது (சமைக்கப்பட்ட) புஜம் (முன்கால் சப்பை) ஒன்றை அவர்களிடம் நீட்டப்பட்டது. அது அவர்களுக்கு மிகவும் பிடித்தமானதாக இருந்து வந்தது. நபி(ஸல்) அவர்கள் (அதை) வாயாலேயே (பற்களால்) பற்றிக்கொண்டு அதிலிருந்து சிறிது உண்டார்கள் " ஸஹீஹ் புகாரி : 4712.

சிறப்பான இறைச்சி என்பது எலும்பால் பாதுகாக்கப்பட்டதாகும். இடது பக்கத்தை விட வலது பக்கம் உள்ள இறைச்சி மென்மையானதும் , தரமானதும் ஆகும் .பின் பகுதியைவிட முன்பகுதி சிறப்பானதாகும் .
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஆட்டில் விருப்பமான பகுதி அதன் முற்பகுதி இறைச்சிதான். தலையைத் தவிர அதன் மேற்பகுதி அனைத்தும் அதன் கீழ் பகுதியை விட மென்மையானதும் , தரமானதும் ஆகும்

وَاَمْدَدْنٰهُمْ بِفَاكِهَةٍ وَّلَحْمٍ مِّمَّا يَشْتَهُوْنَ
இன்னும் அவர்கள் விரும்பும் கனிவகைகளையும் இறைச்சியையும், நாம் அவர்களுக்குக் கொடுத்துக் கொண்டிருப்போம். (அல்குர்ஆன் : 52:22)

ஆட்டு மாமிசம் உடலுக்கு குளிர்ச்சி தரக்கூடியது. ஆட்டுக் கறியில் புரதச் சத்து அதிகம் நிறைந்துள்ளது. ஆட்டின் ஒவ்வொரு உறுப்பும் ஒவ்வொரு விதமான பலனை தருவதாக உள்ளது.
ஒரு சிலருக்கு தலைக்கறி மிகவும் விருப்பமாக இருக்கும். தேங்காய் பாலில் சமைத்து சாப்பிடுவார்கள்.
இந்த தலைக் கறியை சாப்பிட்டால் இதயநோய் தீரும் என்கின்றனர் மருத்துவர்கள். தலை தொடர்பான நோய் இருந்தால் அறவே அற்றுப் போகுமாம். குடலுக்கு பலம் கிடைக்கும்.

ஆட்டின் கண் சாப்பிட்டால் பார்வை கோளாறு உள்ளவர் களுக்கு பலம் கிடைக்கும். கண் கோளாறுகள் சரியாகும்.
ஆட்டின் நாக்கு உடல் சூட்டை அகற்றும். சருமத்திற்கு இளமை தரும் பளபளப்பை தரும்.
ஆண்மை பெருகும் ஆட்டின் விதை மற்றும் கிட்னி இவைகள் வயாகராவை விடசக்திகள் அதிகம். சக்கரை நோயாளிகள் சக்கையாக உள்ள பகுதி சாப்பிடலாம் என்று டாக்டர்கள் கூறுவது;

கடினமான சக்கையான பகுதியை சாப்பிட்டால் அதிகமாக சாப்பிட மாட்டார்கள் என்பதால்! மீன் மண்டை மூலை கூட அதிகமாக விந்தணு குறைபாடு உடைய ஆண்கள் இதை சாப்பிட தாது விருத்தி உண்டாகும்.
ஒரு சிலர் ஆட்டின் மூளையை தனியாக வறுத்து சாப்பிடுவார்கள். இதன் சுவையே அலாதியானது. இது மனித மூளைக்கு அதிக சக்தியை கொடுக்கும்.

கண்கள் குளிர்ச்சி பெறும். புத்தி தெளிவடையும், நினைவாற்றல் அதிகரிக்கும். விந்தணு குறைபாடு உடைய ஆண்கள் இதை சாப்பிட தாது விருத்தி உண்டாகும்.
கப நோய் பாதிப்புள்ளவர்கள் ஆட்டின் மார்பு பகுதியில் உள்ள கறியை சாப்பிட்டலாம். நெஞ்சு எலும்பு கறியை சமைத்து உண்பதால் மார்புக்கு பலம் கிடைக்கும்.
மார்பு பகுதியில் உள்ள புண்கள் ஆறும். ஆட்டு இதயம் சாப்பிட்டால் நமது இதயத்திற்கு பலம் கிடைக்கும். மன ஆற்றல் பெருகும்.

ஆட்டின் நுரையீரல் சாப்பிட்டால் உடல் வெப்பம் தணியும், நுரையீரலுக்கு வலு கிடைக்கும். அதே போல் ஆட்டின் கொழுப்பு இதயத்திற்கு நல்ல பலத்தை தரும். வயிற்றில் உள்ள எந்த வித புண்களையும் ஆற்றும் சக்தி இதற்கு உண்டு.
கால், மூட்டு நோவு உள்ளவர்கள் ஆட்டுக்கால் சூப் வைத்து குடிக்கலாம். இதனால் கால்களுக்கு வலிவு கிடைக்கும்.
மனிதர்களுக்கு எந்தெந்த உறுப்புகள் பாதிக்கப்படுகிறதோ , ஆட்டின் அந்தந்த உறுப்புகளை சாப்பிடுவதால் குணம் கிடைக்கிறது .

**ஸுஹ்ரீ (ரஹ்) அவர்கள் கூறியுள்ளதாவது** : இறைச்சி சாப்பிடுவது 70 மடங்கு ஆற்றலை அதிகரிக்கச் செய்கிறது
முகமது பின் வாசிஉ அவர்கள் கூறியுள்ளதாவது இறைச்சி உண்பது பார்வைத் திறனை அதிகரிக்கச் செய்கிறது
அலீ (ரலி ) அவர்கள் கூறியதாக அறிவிக்கப்பட்டுள்ளது இறைச்சி சாப்பிடுங்கள். ஏனென்றால் அது உடலின் நிறத்தைத் தெளிவாக்குகிறது . பசியை தூண்டுகிறது குணத்தை அழகாக்குகிறது.
நாஃபிஉ (ரஹ்) அவர்கள் கூறுவது : இப்னு உமர் (ரலி) அவர்கள் ரமலான் மாதத்தில் இறைச்சி உண்பதைத் தவற விடமாட்டார்கள் .பயணம் செய்தால் இறைச்சி உண்பதைத் தவற விடமாட்டார்கள் .
ர.ரா

விஞ்ஞானப் பார்வையில் நபிவழி மருத்துவம்.-47

( கோழி இறைச்சி )



அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி) கூறினார்
நபி(ஸல்) அவர்கள் கோழி (இறைச்சி) உண்பதை பார்த்தேன்.
இதை ஸஹ்கம் அல்ஜர்மீ(ரஹ்) அறிவித்தார்.
ஸஹீஹ் புகாரி : 5517.

மருந்தாகும் நாட்டுக் கோழி, நோய் தரும் பிராய்லர் கோழி
கிராமத்து வீடுகளிலும் வயல்வெளிகளிலும் ஆங்காங்கே சிதறிக் கிடக்கும் சிறுதானியங்களைக் கொறித்துத் தின்றுவிட்டு, உற்சாகமாக அங்குமிங்கும் திரிந்துகொண்டிருந்தன நாட்டுக் கோழிகள்.
ஆனால், பிறந்து சில நாட்களிலேயே பல்வேறு செயற்கை மருந்துகளால் செறிவூட்டப்பட்டு, அளவுக்கு அதிகமாகத் தீவனத்தைச் சாப்பிட்டுவிட்டு, எங்கும் நகர வழியின்றி, பல்வேறு நோய்களைத் தனக்குள் வைத்துக்கொண்டு வாழ்கிறது பிராய்லர் கோழி.

மரபைத் தொலைத்த பிராய்லர் கோழிகள்
ஹார்மோன் மருந்துகளால் எலும்பு சார்ந்த நோய்கள், வாழ்விடத்தில் பொருத்தப்பட்டுள்ள மின்விளக்குகளால் கண் நோய்கள், அதிக உணவால் உடல் பருமன் என நோய்களின் கூடாரமாக உள்ளன பிராய்லர் கோழிகள்.
பதினொரு வயதுச் சிறுமி, இப்போது வளர்ந்த பெண்ணைப்போலத் தோற்றம் தருவதற்குப் பிராய்லர் கோழியும் ஒரு காரணம்தான். குறைந்த வயதிலேயே பெண்கள் பருவமடைவதற்கு வெள்ளைக் கோழியில் உள்ள ஹார்மோன் கலப்படங்களும் முக்கியப் பங்காற்றுகின்றன.
பிராய்லர் கோழிகள் விரைவாக வளர்வதற்காகக் கொடுக்கப்படும் வேதிப்பொருட்கள், மறதி, நரம்பு சார்ந்த நோய்கள் முதல் புற்றுநோய் வரை உண்டாக்கக் காரணமாக இருப்பதாக ஆய்வுகள் தெரிவிக்கின்றன.
மனித உடலின் இயக்கங்களைப் புரட்டிப்போடும் அளவுக்கு விஸ்வரூபம் எடுத்துவருகின்றன பிராய்லர் கோழி ரகங்கள்.

எல்லாச் சூழ்நிலைகளிலும், நோய்களை எதிர்த்து உயிர் வாழ்வதற்காகவும், உடல் எடையை அதிகரிக்கவும் கோழிகளுக்குக் கொடுக்கப்படும் `ஆன்டிபயாடிக்' மருந்துகளின் விளைவால், ரெசிஸ்டண்ட் பாக்டீரியாக்கள் (அந்த மருந்துகளை எளிதில் சமாளிக்கும் பாக்டீரியாக்கள்) அதிகரித்து, கோழிகளிடையே அந்த நோய்களின் வீரியம் பல மடங்கு பெருகுகிறது. இந்த நோய்களின் தாக்கம், அதைச் சாப்பிடும் மனிதர்களிடம் சங்கிலித் தொடர்போல நீள்கிறது.
முக்கியமாக நாம் கவனிக்க வேண்டியது, நாட்டுக்கோழி முட்டையில் மஞ்சள் கரு அதிகமாவும், வெள்ளை கரு குறைவாகவும் இருக்கும். ஆனால், பிராய்லர் கோழியில் வெள்ளை கரு அதிகமாகவும் மஞ்சள் கரு குறைவாகவும் இருக்கும். இதனால், பிராய்லர் கோழி முட்டை உங்களுக்கு எந்தவிதமான ஊடச்சத்தையும் அளிக்காது.
நாட்டுக்கோழி முட்டையின் ஓடு இலேசான மஞ்சள் நிறத்தில் இருக்கும் . அதனுள்ளே மஞ்சள் கரு நல்ல கொலஸ்ட்ரால் சத்து கொண்டுள்ளது. வாரம் இரு நாட்டுக்கோழி முட்டை சாப்பிடுவது ஆண்மை அதிகரிக்க செய்யும் மற்றும் இதய நலனை பாதுகாக்கும்.

كَاَنَّهُنَّ بَيْضٌ مَّكْنُوْنٌ
அவர்களின் (ஹூருல் ஈன் என்னும் கண்ணழகி ) நிறம் (இறக்கைகளில்) மறைக்கப்பட்ட (நெருப்புக் கோழியின் இலேசான மஞ்சள் வர்ணமுடைய) முட்டைகளைப் போலிருக்கும். (அல்குர்ஆன் : 37:49)
மருந்தாகும் நாட்டுக் கோழி
உறவினர்களை விருந்தோம்பும் நோக்கத்துடன், வீட்டின் முன் அலைந்து கொண்டிருக்கும் கொண்டைச் சேவல்களைப் பிடித்து, விருந்தளித்து, கூடவே ஆரோக்கியத்தையும் கொடுத்து அனுப்பிய மரபு நம்முடையது.
சளி, இருமல் எனச் சற்றுத் தளர்ந்தாலே, மிளகு சேர்த்த நாட்டுக் கோழி ரசம் வைத்துக் கொடுத்து, நோய் நீக்கிய குடும்ப மருத்துவச்சிகள் அக்காலத்தில் ஏராளம். நாட்டுக்கோழிக் குழம்பு குழைத்த சாதத்தைச் சாப்பிட்டு, வீரத்துடன் வாழ்ந்த மனிதர்கள் அப்போது அதிகம்.

தசைகளுக்குத் தெம்பைக் கொடுக்கவும், நரம்புகளுக்கு உரத்தை அளிக்கவும் நாட்டுக் கோழியினங்கள் உதவுகின்றன. சுவாச நோய்களுக்கும் நாட்டுக் கோழி சிறந்த மருந்து.
நாட்டுக் கோழியின் முழுப் பயன்களைப் பெற, கடைகளில் கிடைக்கும் உடனடி மசாலாப் பொடிகளைத் தவிர்த்து, அம்மியில் கைப்பக்குவத்தில் அரைக்கப்பட்ட மசாலா கலவையைப் பயன்படுத்துவது நல்லது.
கோழிக்கறி சாப்பிட்டால், சித்த ஆயுர்வேத முறைகள் குறிப்பிடும் வாத, பித்த, கப நாடி வகைகளில், பித்த நாடி மேலோங்கி இருக்கும் என்று நாடி விஞ்ஞானம் சொல்கிறது.

உடலுக்கு வெப்பத்தைக் கொடுக்கும் குணம் கோழிக்கறிக்கு உண்டு. பருவகாலச் சூழ்நிலைகளுக்கு ஏற்பக் கோழி இறைச்சியைச் சாப்பிட வேண்டும். வெப்பம் மிகுந்த கோடைக் காலத்தில், வெப்பத்தின் பிரதிநிதியான கோழிக் கறியை அதிகமாகச் சாப்பிட்டால் வயிற்றுப்போக்கு, அஜீரணத் தொந்தரவுகள் வரக்கூடும்.

வெள்ளை வெளேரென பிராய்லர் கோழி ரகங்களை மட்டுமே பார்த்துப் பழகிய இன்றைய இளம் தலைமுறைக்குக் கருங்கோழி என்ற ஒன்று நம்மிடையே வாழ்வது ஆச்சரியத்தைக் கொடுக்கலாம். குட்டம், காணாக்கடி, சிரங்கு, விரணங்கள், வாத நோய் முதலியவை கருங்கோழிக் கறியால் குணமாகும் என்கிறது சித்த மருத்துவம்.

முற்காலத்தில் ஆண்களுக்கு வீரியத்தை அதிகரிக்க, சில மூலிகைகளுடன் சேர்த்துச் சமைத்த கருங்கோழிக் குழம்பு பயன்படுத்தப்பட்டிருக்கிறது. சுவையிலும் மருத்துவக் குணத்திலும் மேலோங்கி நிற்பது கருங்கோழியின் தனிச்சிறப்பு. கருங்கோழி, 'கடக்நாத்' என்றும் அழைக்கப்படுகிறது.

ஓமம், பெருங்காயம், மிளகு, பிரப்பங் கிழங்கு எனப் பல மருத்துவ மூலிகைகளைச் சேர்த்துச் செய்யப்படும் கருங்கோழி சூரணத்தால் விக்கல், குட்ட நோய்கள், மூலம், வாயு நீங்கும் என்பதற்கான பாடல் குறிப்பு உண்டு.
ஐந்து நட்சத்திர உணவகங்கள் முதல் சந்துகள் தோறும் நட்சத்திரங்கள்போலச் சிதறிக் கிடக்கும் தள்ளுவண்டிக் கடைகள்வரை, நோயை உண்டாக்கச் சாத்தியமுள்ள பிராய்லர் கோழிகள் செயற்கை மணம் மூலமாகவும் விளம்பரங்கள் மூலமாகவும் அழைப்புவிடுப்பது சாதாரணமாகிவிட்டது.

சிக்கன் 65, சிக்கன் டிக்கா, லாலி-பாப் சிக்கன், கிரில் சிக்கன், சபர்மா என நோய் உண்டாக்கும் பிராய்லர் கோழிகளைக் கொண்டு செய்யப்படும் உணவு வகைகளுக்கு மயங்காமல், நாட்டுக் கோழி ரகங்களுக்கு முன்னுரிமை அளிப்பது சிறந்தது.
சில இடங்களில், பல நாட்களாகக் குளிரூட்டப்பட்ட கோழி இறைச்சி (Frozen chicken) மூலம் தயாரிக்கப்படும் உணவு, பல உடல் உபாதைகளை உண்டாக்கும் சாத்தியம் உள்ளது.

சுவைக்காகவும் அலங்காரத்துக்காகவும் இறைச்சி உணவுகளில் சேர்க்கப்படும் சுவையூட்டிகளும் வேதிப்பொருட்களும் நம் உடல் ஆரோக்கியத்தை நிச்சயம் சீரழிக்கும். அதிலும் இன்றைய உணவு வணிகம், இளைஞர்களைத் தினமும் அசைவ உணவைச் சாப்பிட வைத்து வருவாயைப் பெருக்க மறைமுக அரசியல் செய்துவருவதால் கவனம் அத்தியாவசியம்.

"கறுப்புறு மனமும் கண்ணிற் சிவப்புறு சூட்டும் காட்டி" - எனச் சேவல் சண்டைகளின் நயத்தை விளக்குகிறார் கம்பர். சோழ நாட்டின் தலைநகரமே கோழியின் பெயரால் அழைக்கப்பட்டிருக்கிறது.
வீரம் மற்றும் ஆரோக்கியத்தின் சின்னமாக விளங்கிய கோழியினங்கள், இப்போது உடல் குறையோடு முழுக்க முழுக்க வியாபாரத்துக்காக வளர்க்கப்படுகின்றன. கோழி உணவுப் பிரியர்கள் பிராய்லர் கோழிகளைத் தவிர்த்து, காலம் மற்றும் உடல்நிலை சார்ந்து நாட்டுக் கோழி இனங்களை உட்கொள்வது நல்வாழ்வுக்குப் பெரிதும் உதவும்.

ஐந்து நட்சத்திர உணவகங்கள் முதல் சந்துகள் தோறும் நட்சத்திரங்கள்போலச் சிதறிக் கிடக்கும் தள்ளுவண்டிக் கடைகள்வரை, நோயை உண்டாக்கச் சாத்தியமுள்ள பிராய்லர் கோழிகள் செயற்கை மணம் மூலமாகவும் விளம்பரங்கள் மூலமாகவும் அழைப்புவிடுப்பது சாதாரணமாகிவிட்டது.
சுவனவாசிகளுக்கு சுவனத்தில் அவர்கள்...
وَلَحْمِ طَيْرٍ مِّمَّا يَشْتَهُوْنَ
விரும்பிய பட்சிகளின் மாமிசத்தையும் (கைகளில் ஏந்தி சுற்றி வருவார்கள்) (அல்குர்ஆன் : 56:21)
ர.ரா

விஞ்ஞானப் பார்வையில் நபிவழி மருத்துவம்.-48

( மாட்டிறைச்சி )



فَرَاغَ اِلٰٓى اَهْلِهٖ فَجَآءَ بِعِجْلٍ سَمِيْنٍۙ

எனினும் அவர் (இப்ராஹீம்) தம் குடும்பத்தாரிடம் விரைந்து சென்று, ஒரு கொழுத்த காளைக் கன்றை(ப் பொறித்துக்) கொண்டு வந்தார்.

فَقَرَّبَهٗۤ اِلَيْهِمْ قَالَ اَلَا تَاْكُلُوْنَ

அதை அவர்கள் முன் வைத்து, "நீங்கள் புசிக்க மாட்டீர்களா?" என்று கூறினார்.(அல்குர்ஆன் : 51:26, 27)

பொதுவாக அனைவருக்கும் இருக்கும் சந்தேகம் மாட்டு இறைச்சி நல்லதா? கெட்டதா?
மாட்டு இறைச்சி உடலுக்கு ஆரோக்கியமான ஊட்ட சத்துக்கள் நிறைந்த உணவாகும்.ஆனால் மாட்டு இறைச்சியில் கொழுப்பு அதிகளவு நிறைந்திருப்பதால் அதிகளவு மாட்டு இறைச்சி சாப்பிடும் போது கொலஸ்ட்ரோல் தொடர்பான பிரச்சனைகளை ஏற்படுத்தும்.மற்ற இறைச்சிகளை போல மாட்டு இறைச்சியினையும் அளவோடு சாப்பிட்டு வந்தால் உடலுக்கு எந்த விதமான கெடுதலும் உண்டாகாது.
முக்கியமாக மாட்டு இறைச்சியில் இரும்பு சத்து நிறைந்திருப்பதால் இரத்த சோகை நோய் வராமல் பாதுகாக்கின்றது.

மாட்டு இறைச்சியில் நிறைந்துள்ள வைட்டமின் B12 இரத்த சிவப்பு அணுக்கள் அதிகம் உருவாகவும் மூளை மற்றும் நரம்பு மண்டலங்களை பலப்படுத்தவும் உதவுகின்றது.
மாட்டு இறைச்சி அதிகம் சாப்பிடுபவர்களுக்கு வயதாகும் போது ஏற்படும் தசை இழப்பு, தோல் சுருக்கம் என்பன ஏற்படுவது தாமதமாகும்.
அதிகம் உடல் வேலை செய்பவர்கள் மாட்டு இறைச்சி சாப்பிட்டு வந்தால் உடல் களைப்படைவது குறைவாக இருக்கும்.

இதனை 2012இல் அமெரிக்க ஜர்னல் சத்துணவு ஆய்வு மையத்தின் (American Journal Clinical Nutrition) ஆய்வறிக்கையில் ஆதாரங்களுடன் நிறுவியுள்ளனர்.
கொழுப்பற்ற மாட்டுக்கறியை சாப்பிட்டால் கொலஸ்ட்ரால் அளவை கட்டுப்படுத்தும். மாட்டுக்கறியில் உள்ள ஸ்டீரிக் ஆசிடு நல்ல கொலஸ்ட்ராலை (HDL) அதிகரிக்கிறது. மேலும் நோய் எதிர்ப்பு சக்தியை அதிகரிக்கிறது. பாதிக்கும் மேற்பட்ட மாட்டுக் கொழுப்புகளில் இதயத்திற்கு தேவையான ஒலிக் ஆசிடுகள் நிரம்பியுள்ளன.
இதயத்திற்கு வலு சேர்க்கும் சத்துக்கள் மாட்டுக் கறியில் கிடைப்பது போல வேறெந்த உணவிலும் இல்லை. உங்களால் முட்டை அல்லது மீன்களில் இருக்கும் கொழுப்பை அகற்ற முடியாது. ஆனால் மாட்டிறைச்சியில் எளிதாக கொழுப்பை அறுத்து நீக்கலாம். இதைதான் லீன் பீப் (Lean Beef) என்பார்கள்.இதனை 2012இல் அமெரிக்க ஜர்னல் சத்துணவு ஆய்வு மையத்தின் **(American Journal Clinical Nutrition)** ஆய்வறிக்கையில் ஆதாரங்களுடன் நிறுவியுள்ளனர்.

மாட்டு இறைச்சியில் கிடைக்கும் புரதம் தசைகளை வலுவடைய செய்யவும் ஹார்மோன்கள் அதிகமாக சுரப்பதற்கு உதவுகின்றது.

அமெரிக்க விவசாயத் துறையின் 2002 ஆய்வறிக்கையின்படி, 1.1 கிலோ டுயுனா மீனில் கிடைக்கும் ஸின்க் சத்து 100 கிராம் மாட்டிறைச்சியில் கிடைக் கிறது.
750 கிராம் கோழியின் தோலற்ற நெஞ்சுக் கறியில் கிடைக்கும் வைட் டமின் பி12 100 கிராம் மாட்டிறைச்சியில் கிடைக்கிறது.
300 கிராம் கோழி யின் தோலற்ற நெஞ்சுக் கறியில் கிடைக்கும் பி விட்டமினான ரைபோப்ஃலேவின் 100 கிராம் மாட்டிறைச்சியில் கிடைக்கிறது.
மூன்று கட்டு பாலக்(தரைப் பசலி) கீரையில் கிடைக்கும் இரும்புச் சத்து 100 கிராம் மாட்டிறைச்சியில் கிடைக்கிறது.
மாட்டிறைச்சியில் சத்துக்கள் அடர்த்தியாக உள்ளன. 450 கிராம் டுயுனா மீனில் கிடைக்கும் பி விட்டமினான ரைபோப்ஃலேவின் 100 கிராம் மாட்டிறைச்சியில் கிடைக்கிறது.
ஆறரை கட்டு பாலக் (தரைப் பசலி) கீரை யில் கிடைக்கும் இரும்புச் சத்து 100 கிராம் மாட்டிறைச்சியில் கிடைக்கிறது.
மனிதஇனம் தொன்று தொட்டு மாட்டிறைச்சியை சாப்பிட்டு வருவ தால் பரிணாம வளர்ச்சிக்கு உதவியது என அறிவியல் ஆய்வுகள் கூறுகின்றன. அதனால் தான் நமது உடலும் மாட்டுக்கறியின் சத்துக்களை எளிதாக ஏற்று கொள்கிறது. .
மனித இனம் மாட்டுக்கறியையும் உள்ளடக்கிய சிவப்பு இறைச்சிகளை உண்ணாமல் இருந்திருந்தால் மனிதனின் மூளை இப்போதிருக்கும் அளவில் கால் பங்கு தான் இருந்திருக்கும் என அறிவியல் ஆய்வுகள் கூறுகின்றன. பரிணாம வளர்ச்சியில் மனித இனத்தின் மூளைக்கு கிடைத்த புத்திக் கூர்மைக்கு சிவப்பு இறைச்சிகளே பெரும்
பங்காற்றியுள்ளன.

‘அசைவ உணவு உடம்பிற்கு நல்லது மேலும் வலிமையான இந்தியாவிற்கு அசைவ உணவு அவசியம்’ என்றார் விவேகானந்தர். அமெரிக்கா சென்ற போது மாட்டுக் கறியை கேட்டு வாங்கி சாப்பிட்டுள்ளார்
பசு மாட்டு இறைச்சி பற்றி நபிமொழி ஒன்றில் ...
பசு மாட்டின் பாலை பயன்படுத்திகொள்வதை கடைபிடியுங்கள் ஏனென்றால் அது நிவாரணம் ஆகும்.
அதன் நெய் மருந்தாகும் .
அதன் இறைச்சி நோய்யாகும்.
என்று நபிகள் நாயகம் ஸல்லல்லாஹூ அலைஹி வ ஸல்லம் அவர்கள் கூறினார்கள்
அறிவிப்பாளர் :- ஸூஹைப் ரலியல்லாஹூ அன்ஹூ
ஆதார நூல் ஹாக்கிம் 4/404

சில மருத்துவ ஆதாரங்கள்... வாழ்நாள் முழுவதும் மாட்டிறைச்சிக்கு அதிகமாக உட்கொள்ளுதல் முதுகுவலிக்குள்ளாக புற்றுநோய் உருவாக்கம் ஏற்படலாம் என்று கூறுகின்றனர். மாட்டிறைச்சி மெழுகுவர்த்தல் ஆரோக்கியத்திற்கு தீங்கு விளைவிக்கும்,
இந்த விஷயத்தில், ஒரு நபர் பல்வேறு இதய நோய்களை வளர்ப்பதற்கான ஆபத்தை எதிர்கொள்கிறார். கூடுதலாக, அதிகப்படியான மற்றும் நீடித்த நுகர்வு கொண்ட மாட்டிறைச்சி உள்ள கொழுப்பு முன்னிலையில் இரத்த நாளங்கள் சுவர்களில் கொழுப்பு முளைகளை தோற்றத்தை ஏற்படுத்தும் மற்றும் பெருந்தமனி தடிப்பு ஏற்படுத்தும். இதனுடன் சேர்த்து, இதயம் அல்லது குடலின் செயல்பாட்டில் பிரச்சினைகள் ஏற்படலாம்
ர.ரா

.விஞ்ஞானப் பார்வையில் நபிவழி மருத்துவம்.-49

( முயல் இறைச்சி )




அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:
"மர்ருழ் ழஹ்ரான் என்னுமிடத்தில் நாங்கள் ஒரு முயலை (அதன் பொந்திலிருந்து) கிளப்பி விரட்டினோம். மக்கள் அதைப் பிடிக்க முயற்சி செய்து களைத்துவிட்டார்கள். நான் அதைப் பிடித்துவிட்டேன்.
அதை எடுத்துக் கொண்டு அபூதல்ஹா (ரலி) அவர்களிடத்தில் வந்தேன். அவர்கள் அதை அறுத்து அதன் பிட்டத்தை அல்லது - தொடைகளை அல்லாஹ்வின் தூதரிடம் அனுப்பினார்கள். அதை நபி (ஸல்) அவர்கள் ஏற்றுக் கொண்டார்கள்.

அதிலிருந்து நபி (ஸல்) அவர்கள் உண்டார்களா? என்று ஓர் அறிவிப்பாளர் கேட்க,
.மற்றோர் அறிவிப்பாளர், (ஆம்,) நபி (ஸல்) அவர்கள் அதிலிருந்து உண்டார்கள் என்று கூறிவிட்டு, அதன் பிறகு, அதை நபி (ஸல்) அவர்கள் ஏற்றுக் கொண்டார்கள் என்று கூறினார். ஸஹீஹ் புகாரி : 2572.

மற்ற இறைச்சிகளுடன் ஒப்பிடுகையில் முயல் கறியில் கொலஸ்ட்ராலானது மிகவும் குறைவாக உள்ளது. எனவே எடையை பராமரிக்க நினைப்போர் முயல் கறியை அச்சமின்றி சாப்பிடலாம்.
உயர் இரத்த அழுத்தம் உள்ளவர்கள் சோடியம் அதிகம் உள்ள உணவுப் பொருட்களை உட்கொள்ளக்கூடாது. ஆனால் முயல் கறியில் சோடியம் குறைவாக இருப்பதால், இதனை அத்தகையவர்கள் தாராளமாக உட்கொள்ளலாம்.

முயல் கறியில் செரிவான கொழுப்பு அமிலங்கள் குறைவாகவும், இதயத்தை பாதிக்காத கொழுப்பு அமிலங்கள் அதிகமாகவும் இருப்பதால், இதய நோய் உள்ளவர்கள் எவ்வித பயமும் இல்லாமல் முயல் கறியை சாப்பிடலாம்.
முயல் கறியில் எளிதில் செரிமானமாகக்கூடிய புரோட்டீன்களைக் கொண்டுள்ளது. இதனால் இதனை உட்கொண்ட பின்னர் எந்த ஒரு இம்சையையும் சந்திக்கமாட்டோம். ஆகவே கடுமையான இரையக குடல் பாதை பிரச்சனை உள்ளவர்களும் இதனை சாப்பிடலாம்.

மற்ற இறைச்சியுடன் ஒப்பிடும் போது முயல் இறைச்சியில் கால்சியம் மற்றும் பாஸ்பரஸ் அதிக அளவில் நிறைந்துள்ளது.
முக்கியமாக புற்றுநோய் உள்ளவர்கள், புற்றுநோய்க்கு சிகிச்சை எடுக்கும் போது, முயல் கறியை சாப்பிட்டு வந்தால், அதனால் ஏற்படும் அபாயத்தை மெதுவாக குறைக்க முடியும்.
ர.ரா

விஞ்ஞானப் பார்வையில் நபிவழி மருத்துவம்.-50

(ஒட்டக இறைச்சி )




اَفَلَا يَنْظُرُوْنَ اِلَى الْاِ بِلِ كَيْفَ خُلِقَتْ

(நபியே! இந்நிராகரிப்பவர்கள் தங்களிடமுள்ள) ஒட்டகத்தையேனும் அவர்கள் கவனிக்கவேண்டாமா? அது எவ்வாறு படைக்கப்பட்டுள்ளது?

(அல்குர்ஆன் : 88:17)

ஒட்டகங்களை மனிதர்கள் சுமார் 5,000 ஆண்டுகளுக்கு முன்பு பழக்கியிருக்கலாம் என்று கருதப்படுகிறது. மேலும் ஒட்டகங்கள் அவற்றின் பால், இறைச்சிக்காகவும் சுமைகளை ஏற்றிச் செல்லவும் பயன்படுகின்றன.

ஒட்டக இறைச்சி பல நூற்றாண்டுகளாக சாப்பிட்டு வரப்படுகிறது. சோமாலியா சவுதி அரேபியா எகிப்து சிரியா கஜகஸ்தான் போன்ற பகுதியில் உண்ணப்படுகிறது.

ஒட்டகப்பால் பாலைவன நாடோடிகளின் பிரதான உணவாக இருக்கிறது. ஒரு மாதம் வரை நாடோடிகளால் ஒட்டக பால் மட்டும் குடித்து வாழ முடியும்.

ஒட்டகப் பாலில் தாதுக்கள்,புரதம், இம்னோகுளோபிலின் அடங்கியுள்ளன. பசும்பாலுடன் ஒப்பிடும்போது கொழுப்பு மற்றும் பிளாக்ரோஸ்,பொட்டாசியம்,இரும்பு,வைட்டமின் சி அதிக அளவு உள்ளது.உடல் எடையை குறைக்க உதவுகிறது.

இன்சுலின் சீராக வைப்பதற்கு உதவுகிறது.டயாபிடீஸ் போன்ற பிரச்சினை உள்ளவர்களுக்கு ஒட்டகப்பால் சிறந்தது.

அனிமியா என்னும் இரத்தசோகை பிரச்சனை உள்ளவருக்கு ஒட்டகப்பால் சிறந்த தீர்வாகும். ஏனென்றால் இதில் இரும்புச்சத்து அதிகம் உள்ளதால் ரத்தசோகை போன்ற பிரச்சனை வராமல் தடுக்கிறத.

ரத்த சிவப்பணுக்களின் எண்ணிக்கை அதிகப்படுத்துகிறது.

முகத்தில் சுருக்கங்கள் ஏற்படாமல் இருப்பதற்கு ஒட்டகப்பால் சிறந்த தீர்வாகும்.ஒட்டகப் பாலில் அதிக அளவு புரோட்டீன் இருப்பதால் நோய் எதிர்ப்பு சக்தியை அதிகரிக்கிறது.இதனால் நோய் தொற்று வராமல் பாதுகாக்கிறது.

ஒட்டகம் பத்தினி தனமுடையது தன் தாய்யையும், தன் சகோதரியையும் அது புணராது .

அதற்கு பித்தில்லை. இதனால் தண்ணீர் தாகத்தை மிகுதியாக தாங்கிக் கொள்ள முடிகிறது .

அதன் ஈரலில் பித்தைப் போல் ஒரு வஸ்து உண்டு. அதைக் கண்ணில் தீட்டினால் கண்ணிருளைப் போக்கி விடும்.

ஒட்டகையின் இறைச்சியைத் தின்றால் தாதை எழுப்பி வைக்கும் .

இரத்தம் கசியும் இடத்தில் அதன் முடியை கரித்து தூவினால் இரத்தம் நின்று விடும்

ஆண் ஒட்டகத்தின் மூத்திரத்தை லாகிரி (மனநிலை பாதிக்கப்பட்டவன்) குடித்தால் அப்பவே தெளிச்சல் பெறுவான் .

கெண்டை காலின் மூளையை பஞ்சில் எடுத்து வைத்து மாதவிடாய் முடிந்து துப்புறவான பின் மூன்று நாளைக்கு அபத்துள் ( பெண் குறியினுள் ) வைத்திருந்து பின்பு ஜீமாஉ (உடலுறவு) கொண்டால், மலடியாக இருந்தாலும் கர்ப்பம் உண்டாகும்.

ஒட்டக இறைச்சி .

தன்மை : - . சூடும் , வறட்சியும் ஆகும்.

நன்மை : - குளிர்ந்த உடலுக்கு உதவும். உடல் தழைக்கும் .

நோய் :- வயிறு வலிக்கும் , சூட்டு வாயுவை கிளப்பி காற்று அடிக்கடி பிரியும்

மாற்று :- காடி, புதினா, எலுமிச்சை சாறு.

உகல் அல்லது உரைனா கோத்திரத்திலிருந்து சிலர் மதீனாவிற்கு வந்திருந்தனர் .மதீனாவின் சீதோஷ்ண நிலை அவர்களுக்கு ஒத்துக்கொள்ளவில்லை .எனவே ஒட்டகத்தின் பாலையும் அதன் சிறுநீரையும் அருந்துமாறு அவர்களுக்கு நபி (ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள் உடனே அவர்கள் அதன் மூலம் நோயிலிருந்து நிவாரணம் அடைந்தனர்
ஸஹில் புகாரி 233

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் ஒருவர் (வந்து), “ஆட்டிறைச்சி சாப்பிட்டால் நான் உளூச் செய்ய வேண்டுமா?” என்று கேட்டார்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், “நீர் விரும்பினால் உளூச் செய்து கொள்க! இல்லையேல் உளூச் செய்யத் தேவையில்லை” என்று சொன்னார்கள்.
மீண்டும் அவர், “ஒட்டக இறைச்சி சாப்பிட்டால் நான் (மீண்டும்) உளூச் செய்ய வேண்டுமா?” என்று கேட்டார்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், “ஆம்; ஒட்டக இறைச்சி சாப்பிட்டால் உளூ செய்துக் கொள்க!” என்றார்கள்.
அவர், “ஆட்டுத் தொழுவத்தில் நான் தொழலாமா?” என்று கேட்டார். அதற்கு, “ஆம் (தொழலாம்)” என்றார்கள்.
அவர், “ஒட்டகத் தொழுவத்தில் தொழலாமா?” என்று கேட்டார். அதற்கு நபி(ஸல்) அவர்கள், “கூடாது” என்று கூறினார்கள்.
அறிவிப்பாளர் : ஜாபிர் பின் ஸமுரா (ரலி).

உணவில், ஒட்டக இறைச்சியைத் தவிர எதுவும் உளூவை முறிக்காது. (ஸஹீஹ் முஸ்லீம் 539)
இதைக் கவனத்தில் கொண்டு இனி விஷயத்திற்க்கு வருவோம் உலகின் மிக மிகப் பெரும்பாலான பகுதிகளில் இல்லாததும் அந்தப் பகுதி மக்கள் தாங்கள் உணவாக வாழ்நாளில் ஒருமுறை கூட உண்ணாததும்தான் ஒட்டகமும் ஒட்டக இறைச்சியும் ஆகும்

ஆனால் அரேபியர்களுக்கு அவை அப்படியல்ல அன்றைய முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸ்ஸலாம் அவர்கள் காலந்தொட்டு இன்றைய இந்த நவீன காலம் வரையிலும் அரேபியர்களின் வாழ்வில் அன்றாடத் தேவைகளுக்காகவும் அவர்கள் உண்ணும் பிரதான அசைவ உணவாகவும் உள்ளதால் அவர்களின் வாழ்வில் இரண்டறக்கலந்து விட்ட ஒரு பிராணிதான் ஒட்டகம்.
இந்த அளவிற்க்கு அரபிகளின் முக்கிய அசைவ உணவான ஒட்டகக்கறியைச் சாப்பிட்டால் உளு முறிந்து விடும் என்பதால் ஒருவர் உளு செய்துவிட்டு ஒட்டக இறைச்சியை சாப்பிட்டால் அதற்க்காக அவர் மீண்டும் உளு செய்துவிட்டுத்தான் தொழ வேண்டும் என்பதிலிருந்தும் உலகின் பல பாகங்களில் முக்கியமான அசைவ உணவாக உட்க்கொள்ளப்படும் ஆடு மாடு கோழி போன்றவற்றின் இறைச்சியைச் சாப்பிட்ட ஒருவர் அவர் சாப்பிடுதற்க்கு முன்பு செய்த உளுவே போதும் மீண்டும் உளு செய்யவேண்டியதில்லை
இதிலிருந்தே இது அரேபியர்களுக்கு பாதகமாகவும் மற்றுள்ளவர்களுக்குச் சாதகமாகவும் இருப்பதை நடுநிலையோடு சிந்திப்பவர்கள் அறியலாம் .

இஸ்லாமியச்சட்டதிட்டங்கள் அரபியர்களின் வசதிக்கேற்ப வகுத்தளிக்கப்பட்டதல்ல அவை உலக முடிவு நாள் வரைத் தோன்றக்கூடிய ஒட்டுமொத்த மனிதகுல நன்மையைக் கருத்தில் கொண்டே அகிலங்களின் இறைவனால் தொகுக்கப்பட்டு அவனது இறுதித்தூதர் முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸ்ஸலாம் அவர்களின் மூலம் உலகுக்கு வழங்கப்பட்டதே என்பதை ஐயமற அறியலாம்
அல்லாஹ் மிக அறிந்தவன்.

ர.ரா

விஞ்ஞானப் பார்வையில் நபிவழி மருத்துவம்.-51

( செம்மறி ஆட்டு இறைச்சி )



தமிழகத்தில் கால்நடை வளர்ப்பில் ஆடுகளுக்கு தனி முக்கியத்துவம் இருந்து வருகிறது. அந்த வகையில், மண் சார்ந்த அடையாளங்களைக் கொண்டதாக உள்ளது .

சென்னையின் சிவப்பு ஆடு, திருச்சியின் கருப்பு ஆடு, சேலத்தின் மேச்சேரி ஆடு, கோவை குரும்பை ஆடு, நீலகிரி ஆடு, ராமநாதபுரத்தின் வெள்ளை ஆடு, வெம்பூர் ஆடு, கீழக்கரிசல் ஆடு என 8 வகையான பாரம்பரிய செம்மறி ஆடு இனங்கள் இதன் தொடர்ச்சியாக, எங்கள் திருநெல்வேலியின் 'செவ்வாடு' என்ற பாரம்பரிய ஆடும் கண்டறியப்பட்டுள்ளன.

செம்மறி ஆட்டு இறைச்சி யாருக்கு நல்ல முறையில் செரிமானம் அடைந்ததோ அவருக்கு இது ஆற்றல்மிக்க நல்ல இரத்தத்தை உண்டு பண்ணுகிறது.
குளிர்ச்சியான இயல்புநிலை உடையவருக்கும் , சமநிலை இயல்பு உடையோருக்கும் முழுமையான உடற்பயிற்சிகள் மேற்கொள்வோருக்கும் இக்கறி மிகச்சிறந்ததாகும்.
குளிர்ச்சியான இடங்களிலும் குளிர்ச்சியான பருவங்களிலும் இதை அவர்கள் சாப்பிடலாம்
இக்கறி கரும்பித்தம் உடையோர்களுக்கு மிக பயனுள்ளதாகும். இது நினைவாற்றலை பெருக்குகிறது.
கிழட்டு செம்மறி ஆட்டு கறி மோசமானதாகும். அவ்வாறே பெட்டை செம்மறி ஆட்டுக் கறியும் மோசமானதாகும் .
இறைச்சியில் தரமானது ஆண் கருப்பு செம்மறி ஆடாகும். ஏனென்றால் அது மிகவும் மென்மையானது ,மிகச் சுவையானது ,மிகப் பயனுள்ளதுமாகும் .

காயடிக்கப்பட்ட செம்மறி ஆட்டின் கறி மிகவும் பயனுள்ளதும் தரமானதாகும் ..கொழுத்த ஆட்டை விட சிகப்பான செம்மறி ஆடு உணவுக்கு மிக எளிதாகவும் தரமாகவும் உள்ளது.
கழுத்து கறி தரமானதும்,சுவையானதுமாகும். மிகத் துரிதமாக செரிமானம் அடையக் கூடியது .
முதுகுக் கறியில் மிகுந்த உணவு சத்து உள்ளது. அது நல்ல ரத்தத்தை உண்டுபண்ணுகிறது.
அப்துல்லாஹ் பின் ஜாபர் அலி அவர்கள் அறிவித்துள்ளதாவது " இப்னு ஸுபைர் (ரலி) அவர்கள் அவர்களின் குடும்பத்திற்காக ஒரு ஒட்டகத்தை அறுத்து இருந்தார். அப்போது அவர் கூறியதாவது, "மக்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு இறைச்சியை கொண்டு வந்து கொடுக்கிறார்கள் . ஆனால் இறைச்சியில் சிறந்தது முதுகு இறைச்சி ஆகும் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதை செவியேற்று உள்ளேன் நூல்: இப்னுமாஜா 3299

முன் சப்பை கறி மிகவும் மென்மையானதும் ,மிகச் சுவையானதும்,மிக மிருதுவானதும் அசுத்தத்திற்கு அப்பாற்பட்டதும் ,எளிதில் செரிமானம் ஆகக்கூடியதுமாகும்.

அல்லாஹ்வின் தூதர் ( ஸல் ) அவர்கள் ஆட்டின் முன் சப்பையை மிகவும் விரும்புவர்களாக இருந்தார்கள் என்ற தகவல் புகாரி முஸ்லிம் ஆகிய நபிமொழித் தொகுப்பு நூல்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது.
கைபர் யுத்தத்தின் போது, நபி (ஸல்) அவர்கள் "ஸத்துஸ்ஸஹ்பா" என்ற அதே இடத்தில் மூன்று நாட்கள் தங்கி இருந்தார்கள்.

ஸல்லாம் இப்னு மிஷ்கம் என்பவனின் மனைவி, இவர் கைதியாக பிடிபட்டவர்களில் ஒருவர், பின்னர் அடிமை தனத்தில் இருந்து விடுதலை செய்யபட்டாள். தாங்களுக்கு நடைபெற்ற திருமணத்திற்காகவும் தங்கள் சார்பாக ஒரு விருந்து வைப்பதாக கூறி நபி(ஸல்) அவர்களுக்கு ஒரு விருந்து ஒன்றை ஏற்பாடு செய்து இருந்தாள்.
ஒரு ஆட்டை விஷம் கலந்து சமைத்தாள். நபி(ஸல்) அவர்கள் விரும்பி உண்ணுவது முன் சப்பை என்பதை அறிந்து கொண்டு, அந்த முன் சப்பை பகுதியில் அதிகமாக விஷத்தை தனியாவும் ஏற்றினாள்.

நபி(ஸல்) அவர்கள் முன்பாக அந்த விஷமேற்றிய கறி வைக்கபட்டது. நபியவர்கள் அதில் இருந்து ஒரு துண்டை எடுத்து கடித்தார்கள், ஆனால், விழுங்காமல், அப்படியே துப்பிவிட்டார்கள்.
“இந்த எலும்பு, தன்னில் விஷம் ஏற்றப்பட்டுள்ளது என்று என்னிடம் கூறுகிறது” என்று கூறினார்கள்.
பின்பு, அந்த பெண்ணை பிடித்து விசாரித்தார்கள் நபித்தோழர்கள். அவள் உண்மையை ஒப்பு கொண்டாள். இவர் ஒரு சாதாரண அரசரா அல்லது இறைதூதரா என்று அறிந்து கொள்ளவே அவ்வாறு செய்தேன், நீங்கள் இறைதூதராக இருந்தால் இதை அறிந்து கொள்ளுவீர்கள் என்று நம்பினேன் என்று கூறினாள். நபி(ஸல்) அவர்கள் அவளை மன்னித்து அனுப்பினார்கள்.

ஆனால், அந்த விஷமேற்றப்பட்ட கறியை முழுமையாக சாப்பிட்ட, பிஷ்ர் இப்னு பரா(ரலி) என்ற நபி தோழரின் உடம்பில் விஷம் முழுவதும் பரவி அவர்கள் அங்கேயே மரணம் அடைந்தார்கள்.
ஒருவர் இறக்காரணமாக அவள் அமைந்துவிட்டதால், அவள் மீது ஆத்திரம் கொண்ட நபி தோழர்களால் கொல்லபட்டதாகவும் செய்திகள் உண்டு (புகாரி)
ர.ரா

விஞ்ஞானப் பார்வையில் நபிவழி மருத்துவம்.-52

சேவல் இறைச்சி



சேவல் இறைச்சி இயல்பாகவே மிகவும் சூடானது.மிகக் குறைவான ஈரத்தன்மை உள்ளது . கடும் வயிற்றுவலி மூச்சுத்திணறல் கடுமையான வாயு தொல்லை முதலியவற்றிற்கு பயன் அளிக்கும்.
இதை சமைக்கும்போது குசும்பச் செடி (safflower), உணவாகவும் மருந்தாகவும் பயன்படும் குடைவடிவ மஞ்சள் நிற மலர் கொத்துடைய செடி (Dill) ஆகியவற்றை சேர்த்து சமைத்தால் மேற்கண்ட நோய்கள் அகலும்.
காயடிக்கப்பட்ட சேவல் இறைச்சி போற்றத்தக்க உணவாகும் எளிதில் செரிமானம் ஆகக்கூடியதாகும். மேலும் இதிலிருந்து உற்பத்தியாகக் கூடிய உதிரம் தரமானதும் மென்மையானதும் ஆகும் .

சேவலுக்கு இயற்கையாகவே நல்ல குணம் உள்ளது. தன் குஞ்சுவின் பெயரில் பேராசை கொள்ளாது. அன்பியாக்களுடைய நற்குணமும் அதற்கு உண்டு. மிகுதியாக திக்ரு செய்யும். கண்ணுறங்கும் ஆனால் கல்பு உறங்காது வஃக்துகளை நன்கு அறியும் .

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் : வெள்ளை சேவல் எனக்கு தோழனாக இருக்கும். இன்னும் என்னுடைய தோழர் ஜிப்ரீல் (அலை) அவர்களுக்கும் அது தோழனாக இருக்கும் என்றும் அது தன்னுடைய வீட்டையும் சூழவுள்ள உள்ள 16 வீட்டையும் காத்துக்கொள்ளும்
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நீங்கள் சேவல்கள் கூவுகிற சத்தத்தைக் கேட்டால் அல்லாஹ்விடம் அவனுடைய அருளைக் கேளுங்கள்: ஏனெனில், அவை வானவரைப் பார்த்திருக்கின்றன. (எனவேதான் கூவுகின்றன.)
கழுதை கத்தும் சத்தத்தை நீங்கள் கேட்டால் ஷைத்தானிடமிருந்து அல்லாஹ்விடம் பாதுகாப்புக் கோருங்கள். ஏனெனில், அது ஷைத்தானைப் பார்த்திருக்கிறது. (எனவேதான் கத்துகிறது.)
என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார். ஸஹீஹ் புகாரி : 3303.

இன்னும் அர்ஷுக்கு தாழாலே ரத்தினங்களான இறகுள்ள ஒரு சேவல் இருக்கிறது. எல்லா ஸஹர் நேரத்திலும் அது பாங்கு சொல்லும்.அந்த பாங்கு சப்தம் வானலோகரும் , .பூலோகரும் கேட்பார்கள். ஆனால் மனிதர்களும் ஜின்களும் தவிர. பூலோகத்திலுள்ள சேவல்களெல்லாம் அந்த அர்ஷ் சேவல் சப்தம் கேட்டுதான் கூவும் .
இன்னும் " யாதொருவன் வெள்ளைச் சேவலை அறுத்தானேயானால் அவனுடைய குடும்பக் கிளையிலும், முதலிலும் முகம் குப்புறப் போடப்படுகிறவனாக எக்காலமும் இருப்பான் " என்றார்கள்.
சேவல் இரத்தம் அல்லது மூளை விஷ பூச்சி ஜந்துகளின் கடி விஷத்தை நீக்கி விடும்.
சேவல் இரத்தத்தை கண்ணில் அஞ்சனமிட்டால் கண்ணிலுள்ள வெள்ளையைப் போக்கி கண்ணொளி உண்டாகும்.
படுக்கையில் சிறுநீர் கழிப்பவர்களுக்கு சேவலின் கொண்டைப்பூவை கரித்து குடிக்க கொடுத்தால் குணம் கிடைக்கும் .

சேவலின் நெற்றிலும் , கொண்டை பூவிலும் எண்ணெணெய்யைத் தேய்த்தால் சப்தம் போடாது .
சேவலின் வலது புற இறக்கையின் எலும்பை விடா ஜுரத்துக்கும், இடது புற இறக்கையின் எலும்பை நாலாமுறை காய்ச்சலுக்குங் கட்டினால் குணம் கிடைக்கும்.
இதன் விதையை சுட்டு கர்ப்பம் தரிக்காத பெண்களுக்கு மாதவிடாய் சுத்தத்திற்கு பிறகு 3 நாளைக்கு சாப்பிட கொடுத்தால் , கர்ப்பம் தரிப்பாள் .அதிக போகத்தை விரும்புகிறவன் அதைக் கடுதாசியில் வைத்து இடது கெண்டக்கையில் கட்டிக் கொண்டால் அதிக போகத்தை விளைவிக்கும் . அவிழ்த்தால் போகம் ஒடுங்கும்.
வெள்ளை அல்லது செஞ்சேவலுடைய பூவை பைத்தியக்காரனுக்குப் புகை பிடித்தால் பைத்தியம் தெளியும்.
சேவலின் பித்தை செம்மறி ஆட்டின் சல்னா என்னும் ஆணத்தில் கலந்து வெறும் வயிற்றில் குடித்தால் , மறதிகளைப் போக்கி , மறந்ததை நினைவுக்கு கொண்டு வரும்.
சேவலின் இரத்தத்தை தேனில் கலந்து நெருப்பில் சூடாக்கி தண்டில் பூசினால் தண்டு வலுபெறும் . தாதுவையும் எழுப்பி வைக்கும் .
இதன் விரையை சண்டைச் சேவலுக்குக் கட்டினால் ஒரு சேவலும் இதை மிகைக்காது .

ஆதார நூல் : ஜவாஹிறுல் பவாயித்

ர.ரா

சில ரணங்கள்... சில வேதனைகள் ...1




ஜெர்மானியப் படமான **"The Boy in the stripped Pyjamas "** என்ற படம் . யூதர்களைக் கொல்வதற்கான நாஜி முகாம் ஒன்றுக்கு ஜெர்மன் அதிகாரியின் குடும்பம் ஒன்றுக்கு வருகிறது. அதிகாரிக்கு 9 வயதில் ஒரு மகன் இருக்கிறான். ராணுவ குடியிருப்பு என்பதால் வெளியே போய் விளையாட எவருக்கும் அனுமதி இல்லை. தனியே வீட்டில் இருப்பது அவனுக்கு எரிச்சலூட்டுகிறது.

ஒரு நாள் தன் வீட்டின் பின் வாசலை திறந்து ஓடுகிறான். தொலைவில் ஒரு முகாம் இருப்பதை காண்கிறான். அதில் முள் வேலி அமைக்கப்பட்டு இருக்கிறது. வேலியின் உள்ளே அவன் வயதில் ஒரு சிறுவன் அகதி உடையணிந்து அடிபட்டு வீங்கிய முகத்துடன் இருப்பதைக் காண்கிறான். ஜெர்மானிய பையனுக்கு அகதி முகாம் என்று புரியவே இல்லை,

அவன் யூதச் சிறுவனிடம் எதற்காக இந்த முகாமை சுற்றி கம்பி வேலி போடப்பட்டு உள்ளது மிருகங்கள் வராமல் தடுக்கவா ? என்று கேட்கிறான். ஜெர்மானிய சிறுவனுக்கு அது புரியவில்லை இந்த முகாமில் என்ன செய்கிறீர்கள்? என்று மறுபடி கேட்கிறான்

அதற்கு யூதச் சிறுவன் "இல்லை மனிதர்கள் வராமல் தடுக்க !" பதில் சொல்கிறான்
மறுநாள் ஜெர்மானியச் சிறுவன் வீட்டில் நடக்கும் விருந்திற்கு ஒயின் கிளாசை சுத்தம் செய்ய முகாமிலிருந்து யூதச் சிறுவனை அழைத்து வரப்படுகிறான். அங்கே ஜெர்மானிய சிறுவன் தந்த கேக்கை யூதச் சிறுவன்

தின்னும்போது பிடிபடுகிறான். உடனே ஜெர்மானிய சிறுவன் அவனை தனக்குத் தெரியாது என்று சொல்லி மாட்டிவிடவே, கேக்கை திருடி சாப்பிடுகிறாயா ? என்று ராணுவ அதிகாரிகள் அவனை அடி அடி என அடிக்கிறார்கள்.
மறுநாள் தன் தவறுக்கு மன்னிப்பு கேட்க அவனைத் தேடி முகாமுக்கு வருகிறான் ஜெர்மானிய சிறுவன்.யூதச் சிறுவன் கோபம் கொள்ளவில்லை. மாறாக, பிடிபட்டு அகதியாக உள்ளவன் அவமானங்களை தாங்கிக்கொள்ளப் பழகியிருக்கிறான் . எனவே மன்னிக்கிறான் .

இரண்டு சிறுவர்களுக்குள்ளும் நட்பு உருவாகிறது. அதன் பிறகு தன் வீட்டிலிருந்து ரகசியமாக ரொட்டி,கேக் என திருடி வந்து யூதச் சிறுவனுக்கு தருகிறான் . ஒரே வயது ஒரே விருப்பம் விளையாட்டுத்தனம் கொண்ட இரண்டு சிறுவர்களில் ஒருவன் அகதியாக, மற்றவன் அதிகார வாரிசாகவும் இருப்பது எவ்வளவு முரண்பாடு. அகதிச் சிறுவன் அவமானத்தில் குறுகி போய் ஒடுங்கி மெலிந்திருப்பது அதிர்ச்சி கொள்ள வைக்கிறது.
இதற்கிடையே யூத முகாமில் இருப்பவர்கள் கூட்டம் கூட்டமாக கொலை செய்யப்படுவதும், இறந்த உடலை மொத்தமாக எரிப்பதுமாக அழித்தொழிப்பு வேலை வேகவேகமாக நடைபெறுகிறது. இந்த உண்மை அறிந்த அதிகாரியின் மனைவி அதிர்ச்சி அடைகிறாள் கணவனோடு சண்டையிடுகிறாள்.
"ஹிட்லரின் கட்டளையை நாங்கள் மீற முடியாது. இது ஒரு தேச சேவை " என்கிறான் கணவன் . மனைவி இந்த கொடுமையை காண என்னால் முடியாது. எனது பிள்ளைகளை அழைத்துக் கொண்டு ஊருக்கு கிளம்ப முடிவு செய்கிறாள் .

ஊருக்கு புறப்படும் முதல் நாளில் யூதச் சிறுவன் தன் அப்பாவை முகாமில் காணவில்லை என்று சொல்லி கவலைப்படுகிறான். அவரை தேட தானும் அந்த முகாமிற்கு வருவதாகச் சொல்கிறான் ஜெர்மானிய சிறுவன். அதன்படி அவனுக்காக அகதி உடை ஒன்றை திருடி வந்து தருகிறான் யூதச் சிறுவன்.
இரண்டு சிறுவர்களும் முகாமுக்குள் போகிறார்கள். மனித அவலங்களை காண்கிறார்கள். ஹிட்லரின் அவசர ஆணைப்படி முகாமில் இருப்பவர்கள் மொத்தமாகக் கொல்ல அழைத்து செல்லப்படுகிறார்கள். அதில் இரண்டு சிறுவர்களும் மாட்டிக்கொள்கிறார்கள்.

இதனிடையில் தன் மகனைள காணாமல் தேடி அலைகிறாய் ஜெர்மானியத் தாய். அவனைத்தேடி முகாமுக்கே வருகிறான் தந்தை. ஆனால் யூதர்களை விஷவாயு செலுத்திக் கொல்வதற்காக அடைத்து வைக்கப்பட்ட சேம்பரில் இரண்டு சிறுவர்களும் அடைக்கப்பட்டுள்ளார்கள் என்ற உண்மை தெரியவருகிறது .காப்பாற்ற குடும்பமே போராடுகிறது. ஆனால் விஷ வாயு தாக்கி இரண்டு சிறுவர்களும் இறந்து போகிறார்கள். இருவரது கைகளும் நட்போடு ஒன்றாக கோக்கப்பட்ட நிலையில் இருக்கின்றன. ஜெர்மனிய அதிகாரியின் மனைவி கதறி அழுகிறாள்

"சொந்த உதிரம் பலியாகிய போது ஏற்படும் தவிப்பும் போராட்டமும் ஏன் ஆயிரமாயிரம் பேர் கொல்லப்பட்ட போது வரவில்லை" என்ற ஜெர்மானிய மனசாட்சியின் கேள்வியை அந்த படம் எழுப்புகிறது. மனித அவலத்தின் வலியை இரண்டு சிறுவர்களை மட்டுமே முதன்மைப்படுத்தி சொல்லி அற்புதமான படம் . யுத்த களம் , படுகொலை
காட்சிகள் வன்முறை எதுவும் இல்லை .ஆழமான வலியை உருவாக்குகிறது .
படம் முடியும்போது சரித்திரத்தின் குருதிக் கறை நம் கைகளிலும் படிகிறது !

எஸ்.ராமகிருஷ்ணன் - சிறிது வெளிச்சம்
ர.ரா

சற்குருவின் சகவாசம் 1



குரு என்பவர் தேடிக் கண்டறிய வேண்டிய விந்தை விஷயமல்ல. அவர் உங்களுக்குள் இருக்கிறார். அதனால்தான் சீடராக மாறுவதற்கு தயார் நிலையில் இருப்பது, வேட்கையுடன் இருப்பது ,ஆசையுடன் இருப்பது, உண்மையைத் தேடும் பெருவிருப்பம் கொண்டிருப்பது... போன்ற விஷயங்கள் தேவைப்படுகின்றன. ஆனால் அவை பற்றாக்குறையாக இருக்கின்றன.

ஜனங்கள் குருவைத் தேடுகிறார்கள்.அவர்களால் கண்டு கொள்ள முடியாது அவர்களால் கண்டுகொள்ள முடியாது போனால் ஆச்சரியப்பட ஏதுமில்லை. அவர்களால் கண்டுபிடிக்க முடியாது. பல குருநாதர்களிடம் செல்வார்கள். சரியானவரைத் தவறவிட்டு விடுவார்கள். நீங்கள் குறைபாடு உள்ளவராக இருக்கும்போது சரியான குருவை எப்படி கண்டறிய முடியும் ? சீடராக இருப்பது எப்படி என்று உங்களுக்குத் தெரியாதபோது குருவை எவ்வாறு உங்களால் கண்டறிய இயலும் ?

குருவைத் தேடுவது என்பது நல்ல சீடராக இருப்பதில் துவங்குகிறது. நல்ல சீடர் குருவை பற்றி கவலை கொள்ளமாட்டார். சீடனாக இருக்கும் பண்பை தன்னுள் உருவாக்கிக்கொள்வது எப்படி என்பதில்தான் கவனம் செலுத்துவார். கற்றுக் கொள்பவராக எப்படி மாறுவது , களங்கமற்ற எப்படி செயலில் ஈடுபடுவது , அறிவு என்ற தளத்தில் இல்லாமல் எவ்வாறு செயல்படுவது என்பன குறித்து அவர் யோசிக்கிறார்.
நீங்கள் அறிவின் துணையோடு செயல்பட்டால் , பல ஆசிரியர்களை கண்டறியலாம். ஆனால் ஒரு குருவை பெற்றிட உங்களால் இயலாது . அறிந்து கொள்ளுதல் என்ற நிலையிலிருந்து செயல்படும்போது, பல ஆசிரியர்களைக் நீங்கள் காண்பீர்கள், பல விஷயங்களை கற்றுக் கொள்வீர்கள் ஆனால் குருவை கண்டறிய அவரால் முடியாது .

குருவை கண்டறிய வேண்டுமானால் , நீங்கள் குழந்தையாக சூது வாது தெரியாத வெள்ளந்தியாக மாற வேண்டும். குரு கிடைக்க வேண்டுமென்றால், முழுமையாக களங்கமற்ற இருக்க வேண்டும். எதையும் தெரிந்து கொள்ளாமல் மனம் வெறுமையாக இருக்க வேண்டும். உண்மையை கண்டு உணரும் ஆவல் மட்டும் இருக்க வேண்டும்; அதைப் பற்றி எவ்வித தீர்மானங்களும் உங்களுக்குள், உங்கள் மனதில் உருவாகாமல் இருக்க வேண்டும். இதுவே உண்மையான கற்றுக்கொள்ளும் நிலையாகும். அதன் பிறகு எங்கும் போக வேண்டாம் . குரு உங்களிடம் வந்து சேர்வார்.

நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நபித்தோழர்களிடம் எது பற்றியாவது கேள்வி கேட்டால் , அதற்குரிய பதில் தெரிந்தாலும் ,
நபித்தோழர்கள் : "அல்லாஹ்வும் , ரசூலும் அறிவார்கள்" என்றே பதில் கூறுவார்கள் .
மதீனாவில் நபித்தோழர்களுடன் நபியவர்கள் நடந்து வரும் போது ஓர் ஓடைக் குறித்து கேட்டபோது , மதீனாவை பூர்வீகமாகக் கொண்ட மதீனாவாசிகளான அன்சாரிகள் கூட
"அல்லாஹ்வும் , ரசூலும் அறிவார்கள் " என்றே கூறினார்கள் .
அபூதர் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :
"நான் மஸ்ஜிதுக்குள் நுழைந்தேன் . நபி (ஸல்) அவர்கள் அங்கு
உட்கார்ந்திருந்தார்கள் . அப்பொழுது சூரியன் மறைந்து கொண்டிருந்தது .
" அபூதர்ரே..! இந்த சூரியன் எங்கே செல்கிறது என்பதை நீர் அறிவீரா ?"
"அல்லாஹ்வும் ரசூலும் அதிகம் அறிவார்கள் "
" அல்லாஹ்வின் அர்ஷுக்கு கீழில் சுஜூது செய்வதற்காகச் சூரியன் செல்கிறது .அங்கு அது உத்தரவு கேட்கிறது . அதற்குத் திரும்ப செல்ல உத்தரவு கொடுக்கப்படுகிறது .இன்னும் அது அதிகமாக சுஜுது செய்ய நெருங்கும் .ஆனால் அது அங்கீகரிக்கப்பட மாட்டாது. "வந்த வழியே திரும்பச் செல் " என்று கூறப்படும் .

சற்குருவின் சகவாசம் 2




சற்குருவின் சொல் ஒன்று போதும் .அச்சொல்லே மந்திரம். அது நிதர்சனம் .அது மறைவான இறைவனோடு மானசீக தொடர்புடையது .சில சமயம் பிரச்னைனயின் விபரம் தெரியாமல் சற்குரு சொல்லி இருப்பார். எனவே இப்பிரச்சனைக்கு தீர்வை அவர்களிடமே கேட்போம் என்ற முடிவுக்கு வருவது கூட ஒரு சோதனையாக இருக்கலாம் .சற்குருவின் சொல்லே மந்திரமாக ஏற்றுக் கொண்டவர்களுக்கு அச்சொல்லே போதும். அது வெற்றியடையச் செய்யும்.

'முஃதா' என்பது ஷாம் நாட்டின் பல்கா மாநிலத்தின் கீழ் பகுதியிலுள்ள ஓர் ஊர். இங்கிருந்து பைத்துல் முகத்தஸ், இரண்டு நாட்கள் நடக்கும் தொலைதூரத்தில் உள்ளது.

நபி (ஸல்) அவர்கள் புஸ்ராவின் மன்னருக்குக் கடிதம் ஒன்றை எழுதி அல்ஹாரிஸ் இப்னு உமைர் அல்அஸ்தி (ரழி) அவர்களிடம் கொடுத்தனுப்பினார்கள். ஆனால், போகும் வழியில் பல்கா மாநிலத்தின் கவர்னராக இருந்த ஷுரஹ்பீல் இப்னு அம்ரு அல்கஸ்ஸானி என்பவன் அவரைக் கைது செய்து கொன்று விட்டான்.
தூதர்களைக் கொலை செய்வது அரசியல் குற்றங்களில் மிகக் கடுமையானதாகும். பகிரங்கமாகப் போருக்கு அழைப்பு விடுப்பதைவிட தூதரைக் கொலை செய்வது மிகக் கொடிய ஒன்றாக கருதப்பட்டது.
தனது தூதர் கொல்லப்பட்ட செய்தியை அறிந்தவுடன் நபி (ஸல்) பெரும் கவலைக்குள்ளானார்கள். 3000 வீரர்கள் கொண்ட பெரும் படை ஒன்றைத் தயார் செய்து அவர்களிடம் போரிட அனுப்பி வைத்தார்கள்.

நபி (ஸல்) அவர்கள் இப்படைக்கு முதலாவதாக ஜைது இப்னு ஹாஸாவை (ரழி) தளபதியாக ஆக்கிவிட்டு 'ஜைது கொல்லப்பட்டால், ஜஅஃபர் தளபதியாக இருப்பார். ஜாஃபரும் கொல்லப் பட்டால் , அப்துல்லாஹ் இப்னு ரவாஹா தளபதியாக இருப்பார். அவரும் கொல்லபட்டால் , உங்களுகிடையே ஆலோசனை செய்து அடுத்த தளபதியை தேர்ந்தெடுங்கள் "
என்று கூறி வெள்ளை நிறக் கொடியை ஜைது இப்னு ஹாஸா (ரழி) கையில் கொடுத்தார்கள். (ஸஹீஹுல் புகாரி)
இதை பார்த்துக்கொண்டிருந்த நும்மான் என்ற யூதர் "இதற்கு முன் உண்டான நபிமார்கள் யாரேனும் ஒருவர் கொல்லப்படுவார் என்று கூறினால் அவர் கொல்லப்படுவது உறுதி எனவே உங்கள் நபி கூறியவாறு நீங்களும் கொல்லப்படுவது உறுதி " என்று ஹஜ்ரத் ஜைத் பின் ஹாரிஸா (ரலியல்லாஹு தஆலா அன்ஹு) அவர்களிடம் கூறினார் .

அதற்கு ஜைத் (ரலியல்லாஹு தஆலா அன்ஹு) அவர்கள் எப்போது நாயகத்தின் கரத்தை நான் பிடிதேனோ அப்போதே அவர்கள் சொல்லும் அனைத்தும் உண்மை என்பதை நான் நம்பிக்கை கொண்டவன் .நீங்கள் என்ன புதிதாக கண்டுபிடித்துவிட்டீர்கள்? என்றார்கள் .
அந்த யூதர், ' கொல்லப்படுவோம் என்று தெரிந்துமா போருக்கு செல்கிறீர்கள் ' என்றார் .
ஜைத் (ரலியல்லாஹு தஆலா அன்ஹு) " இதை விட வேறு என்ன சிறப்பு எமக்கு வேண்டும் ? " என்று சொல்லிக்கொண்டே போருக்கு தயாரானார்கள் .
அனைவர்களும் போருக்கு சென்று விட்டார்கள் .

மறுநாள் வெள்ளிக்கிழமை அண்ணலெம் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஜும்ஆ பேருரை நிகழ்த்துகிறார்கள்.மக்களை பார்க்கும்போது அங்கே அப்துல்லாஹ் பின் ரவாஹா (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் அமர்திருக்கிறார்கள் .
தொழுகை முடிந்தவுடன் அப்துல்லாஹ் பின் ரவாஹா ( ரலியல்லாஹு அன்ஹு) அவர்களை அழைத்து போருக்கு செல்லவில்லையா ? என்று கேட்கிறார்கள்.
" நாயகமே ! என்னிடம் வேகமாக செல்லும் குதிரை இருக்கிறது .நான் அவர்களோடு சென்று சேர்ந்துவிடுவேன் .எனக்கு பின் இன்னொரு தளபதி என்று நீங்கள் சொன்னதிலிருந்து இப்போரில் நான் ஷஹீத் ஆகிவிடுவேன் என்று உறுதியாக நம்புகிறேன். எனவே கடைசியாக ஒருமுறை உங்கள் பின் நின்று தொழு வேண்டும் என்ற ஆவலில் இருந்துவிட்டேன் நாயகமே" என்று கூறினார்கள் .

நாயகம் ஸல்லலாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "என்ன காரியம் செய்து விட்டீர்கள் ரவாஹா..! எப்போது போருக்கு செல்லுங்கள் என்று கூறினேனோ அப்போதே சென்றிருக்க வேண்டாமா? என்று கேட்டு அனுப்பி வைக்கிறார்கள் .

முஸ்லிம்கள் 3 ஆயிரம் பேர் எதிரிகள் 2 லட்சம் பேர் அன்றைய வல்லரசான ரோமானியப் பேரரசு இப்படிப்பட்ட மிகப்பெரும் படையை திரட்டி இருந்தது .

ஸஹாபா பெருமக்கள் ஆலோசனை செய்தார்கள் .
எதிரிகளின் பலம் தெரியாமல் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நம்முடன் குறைந்த வீரர்களை அனுப்பி இருக்கலாம். இன்னும் சில வீரர்களை நாம் கேட்போம் என்று ஆலோசிக்கிறார்கள் .
காலித் பின் வலீத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் உணர்ச்சிகரமான ஒரு உரையை மக்கள் முன் நிகழ்த்துகிறார்கள் .

" அல்லாஹ்வும் ரசூலும் நம்மை சோதிக்கிறார்கள் .
வெற்றி தோல்வியை பற்றி சிந்திப்பது நமது கடமை அல்ல .
போரிடுங்கள் என்று சொன்னால் போரிட வேண்டும் அதுதான் நமது கடமை . இறைவனுக்காக போரிடுகிறோம். உண்மைக்காக போரிடுகிறோம் .வெற்றியும் தோல்வியும் இறைவனின் கையிலல்லவா இருக்கிறது" என்று கூறினார்கள்

அதன் பிறகு நடந்த போரை மதீனாவில் இருந்து கொண்டு நாயகம் ஸல்லால்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நேரடியாக கண் முன்னே நடப்பதை போல (கிட்டத்தட்ட பல ஆயிரம் மைல்களுக்கு அப்பால் நடக்கும் போரை) வர்ணனை செய்கிறார்கள் )
" இதோ ஜைத் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் கொல்லப்பட்டுவிட்டார்கள்.அவர்களின் உயிர் தங்க கட்டிலில் வைத்து வானவர்கள் தூக்கி செல்கிறார்கள் .
இப்போது ஜஅஃபர் (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களின் கரத்தில் இஸ்லாமிய கொடி இருக்கிறது அவர்களும் கொல்லப்பட்டுவிட்டார்கள். அவர்களின் உயிரும் தங்க கட்டிலில் வைத்து வானவர்கள் தூக்கி செல்கிறார்கள் .
அடுத்து இஸ்லாமிய கொடி ரவாஹா (ரலியல்லாஹு அன்ஹு) அவர்களின் கரத்தில் இருக்கிறது அவர்களும் கொல்லப்பட்டு விட்டார்கள் அவர்களின் உயிரும் தங்க கட்டிலில் வைத்து வானவர்கள் தூக்கி செல்கிறார்கள் . ஆனால் அவர்களின் கட்டிலின் ஒரு முனை மட்டும் வளைந்து இருக்கிறது .
அப்துல்லாஹ் பின் ரவாஹா (ரலியல்லாஹு அன்ஹு) அவர்கள் தவறு செய்யவில்லை .கடைசியாக ஒரே ஒரு முறை நாயகத்தின் பின் நின்று தொழ வேண்டும் என்ற ஆசையினால் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்ன உடனே போருக்கு செல்லவில்லை .அதன் காரணத்தினால் அவர்களின் கட்டிலின் ஒரு முனை மட்டும் வளைந்து இருக்கிறது

பிறகு, தளபதியாக நியமிக்கப்படாமலேயே காலித் இப்னு வலீத் அதைக் கையிலெடுத்துள்ளார். அவருக்குவெற்றியளிக்கப்பட்டுவிட்டது. வீர மரணத்தினால் பெரும் பேற்றினைஅடைந்துவிட்டார்கள். ஷஹாதத் எனும் பெரும்பேறு அவர்களுக்குக்கிடைத்துவிட்டது. அதைவிட அவர்கள் நம்முடன் இருப்பது மகிழ்ச்சிக்குரியதல்ல ..."
இதைக் கூறியபோது நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்து கொண்டிருந்தது.
சற்குருவின் சொல் ஒன்று போதும் .அச்சொல்லே மந்திரம். அது நிதர்சனம் .அது மறைவான இறைவனோடு மானசீக தொடர்புடையது .

ர.ரா

சற்குருவின் சகவாசம் 3

கடவுளை காட்டுங்கள்...



குருகுலத்தில் பயின்ற மாணவர்களில் சைதன்யனும் ஒருவன். மற்ற மாணவர்களைக் காட்டிலும் மிகவும் புத்திசாலியாக இருந்த சைதன்யனை குருவுக்கு மிகவும் பிடித்திருந்தது.
ஆகவே, தனக்குக் தெரிந்த அனைத்தையும் சைதன்யனுக்குக் கற்றுக் கொடுத்தார். குருகுலத்தில் பல ஆண்டுகள் பயின்ற சைதன்யனுக்கு வயது பதினெட்டு ஆயிற்று.
ஒரு நாள் நாமதேவர் அவனை அழைத்து, "மகனே நீ கற்றுக்கொள்ள வேண்டிய அனைத்தையும் தெரிந்து கொண்டுவிட்டாய். இத்துடன் குருகுலவாசம் உனக்கு போதும்.
நீ இனி உன் பெற்றோரிடம் சென்று அவர்களுக்குத் தொண்டு செய்வாய். கடவுள் எப்போதும் உனக்குத் துணை இருப்பார்," என்று வாழ்த்தினார்.

தனது குருவை தரையில் விழுந்து வணங்கிய சைதன்யன் அவரிடம் பணிவாக, "குருவே எனக்கு எவ்வளவோ பாடங்கள் கற்றுக் கொடுத்தீர்கள். ஆனால், எந்தக் கடவுளைப் பற்றி இப்பொழுது குறிப்பிட்டீர்களோ அவரை மட்டும் எனக்குக் காட்டவில்லையே! கண்ணால் காண முடியாத கடவுள் எவ்வாறு எனக்குத் துணை இருப்பார்?" என்று வினவினான்.

"சைதன்யா உன்னுடைய சந்தேகத்திற்கு பிறகு ஒரு நாள் விடை அளிக்கிறேன். நீ இப்போது வடக்கு திசையில் உள்ள காட்டின் வழியே சுசந்த நகர் எனும் நகரத்தைத் தாண்டி பவானிபுரத்திற்கு சென்று அங்குள்ள என் சகோதரனை சந்தித்து அவனுடைய சேமலாபங்களை விசாரித்துக் கொண்டு வா?" என்றார்.
"அப்படியே செய்கிறேன் குருவே", என்று பதிலளித்தான் சைதன்யன். குருவின் மனைவி கொடுத்த உணவுப் பொட்டலங்களுடன், மறுநாள் காலையில் கிளம்பினான் சைதன்யன்.
நண்பகல் நேரம் காட்டு வழியில் பாதியைக் கடந்து விட்டான். அப்போது அவனுக்கு மிகவும் தாகம் உண்டாயிற்று. இந்தக் காட்டில் குடிக்கத் தண்ணீர் எங்கே கிடைக்கும் என்று தேடிய அவன் கண்களில் ஒரு வயதான பார்வையற்ற மனிதன் தென்பட்டான்.

அவன் செடியிலுள்ள இலைகளைக் கைகளால் தடவிப் பார்த்துப் பின் அதை முகர்ந்து பார்த்து சில இலைகளை மட்டும் பையினுள் போட்டுக்கொண்டான்.
"ஐயா, தாங்கள் எதைத் தேடுகிறீர்கள்?" என்று கேட்டான்.
"நான் இந்தக் காட்டில் வசிப்பவன். நான் மூலிகைகளை சேகரித்து பிறருக்கு வழங்குகிறேன். குருடன் என்பதால், முகர்ந்து பார்த்து மூலிகைகளைக் கண்டுபிடிக்கிறேன்," என்றான்.
"இப்போது நீங்கள் பறித்துக் கொண்டிருப்பது என்ன மூலிகை?" என்றான்.
"இது பாம்புக் கடிக்கான மூலிகை. இந்த மூலிகையின் சாறை பாம்பு கடித்தவன் வாயில் விட்டால், விஷம் இறங்கிவிடும். நீ காட்டு வழியில் சுற்றுகிறாயே... இந்த மூலிகையை கொஞ்சம் வைத்துக்கொள்," என்று சில இலைகளைக் கொடுத்தான்.

அவற்றை பத்திரமாக வைத்துக்கொண்ட சைதன்யன், "ஐயா, குடிக்க தண்ணீர் கிடைக்குமா?" என்று கேட்டான்.
"அருகில் ஒரு கிணறு உள்ளது!" என்று கிணறு இருக்கும் இடத்தைக் காட்டினான்.
அந்தக் கிணற்றை அடைந்து தாகம் தீரத் தண்ணீர் குடித்தபின், ஒரு மரத்தடியில் அமர்ந்து உணவு உண்டுவிட்டு அப்படியே உறங்கிவிட்டான்

பின் அங்கிருந்து பயணத்தைத் தொடர்ந்த சைதன்யன் இருட்டும் நேரத்தில் சுசாந்த நகரை அடைந்தான். அங்கு பசியால் வாடிய ஒரு பிச்சைக்கார குடும்பத்திற்கு எஞ்சிய உணவுகளை கொடுத்துவிட்டு அன்று இரவு ஒரு சத்திரத்தில் தங்கினான்.

நடு இரவில் ஏதோ சத்தம் கேட்டு திடுக்கிட்டு எழுந்த சைதன்யன் தன் அருகில் உறங்கிக் கொண்டிருந்த மனிதனின் வாயில் நுரைதள்ள முனகிக் கொண்டிருபதைப் பார்த்தான்.
கொஞ்ச தூரத்தில் ஒரு விஷப்பாம்பு ஓடிக்கொண்டிருப்பதை பார்த்தான். அந்த மனிதனின் அபாய நிலையை உணர்ந்த சைதன்யன் உடனே தன்னிடமிருந்த விஷக்கடி மூலிகைகளை எடுத்து சாறு பிழிந்து அந்த மனிதனின் வாயில் விட்டான். சற்று நேரத்திற்க்கெல்லாம் அவன் சாதாரண நிலையை அடைந்தான்.
அந்த நபர் யாருமல்ல! குடிமக்களின் குறைகளை அறிய மாறுவேடம் பூண்டு இரவில் திரிந்த அந்த நாட்டு மந்திரி.
சைதன்யனுக்குத் தன் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்த மந்திரி, "நீ என் உயிரைக் காப்பாற்றினாய். அதற்க்கு செய் நன்றியாக உனக்கு மன்னரிடம் வேலை வங்கித் தருகிறேன்," என்றார்.
"மிகவும் நன்றி ஐயா. ஆனால், நான் முக்கிய அலுவலகமாக பவானிபுரம் சென்று கொண்டிருக்கிறேன். சில தினங்கள் கழித்து உங்களை சந்திக்கிறேன்," என்று கூறி மந்திரியிடமிருந்து விடைப் பெற்றுக்கொண்டான்.
மறுநாள் காலை பவானிபுரத்தை அடைந்து குருவின் சகோதரரை சந்தித்து சேமலாபங்களை விசாரித்து அறிந்து, பிறகு தன் குருவிடம் திரும்பினான் தான் சென்று வந்த நிகழ்ச்சி விவரங்களையும், அவரது சகோதரனைப் பற்றியும் விளக்கிக் கூறினான்.

"மகனே, நினைவிருக்கிறதா? கண்ணால் காண முடியாத கடவுள் எங்கே என்று வினவினாய் அல்லவா? அந்த சந்தேகக்திற்கு நான் ஏதும் விளக்கம் கூறாமல் உனக்கு விடை கிடைத்து விட்டது. கடவுளைப் பார்த்து விட்டாய் அல்லவா?" என்றார்.
"நானா! நான் எங்கே கடவுளைப் பார்த்தேன்? பார்க்கவில்லையே!" என்றான் ஆச்சரியத்துடன் சைதன்யன்.
"மகனே கடவுள் எப்போதும் எல்லா இடங்களிலும் காணப்படுகிறார். ஆனால், ஒரே உருவத்தில் அவர் உனக்குத் தோன்றவில்லை," என்றார்.
"எந்த குருட்டு முதியவர் உனக்கு பாம்பின் விஷக்கடிக்கான மூலிகை தந்தாரோ, அவர் கடவுள். காட்டிலும் கூட கிணற்றின் தேவை ஏற்ப்படும் என்று எண்ணி, யாரோ ஒருவன் கிணறு தோண்டி இருந்தானே, அவனும் கடவுள் தான்.
எந்த மந்திரியை பாம்புக் கடியிலிருந்து நீ பிழைக்க வைத்தாயோ, அவருக்கு நீ கடவுள். இவ்வளவு உருவங்களில் கடவுளைக் கண்ட பிறகுமா கடவுளை நான் காணவில்லை என்று நீ கூறுகிறாய்?" என்றார்.
குருவின் வார்த்தைகளில் இருந்த உண்மையை அறிந்து உணர்ந்ததும் சைதன்யனுக்கு ஞானோதயம் உண்டாயிற்று. தனக்கு ஞானோதயம் உண்டு பண்ணிய குருவை விழுந்து வணங்கி விட்டு, அவரிடமிருந்து விடை பெற்றான்.
இதற்குப் பிறகு சைதன்யன் தன் பெற்றோரை அழைத்துக்கொண்டு சுசாந்த நகரை அடைந்து மந்திரியை சந்தித்தான். மந்திரியின் உதவியால் அவனுக்கு அரசாங்கத்தில் நல்ல வேலையும் கிடைத்தது.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: கண்ணியமும் மகத்துவமும் மிக்க அல்லாஹ் மறுமை நாளில், ''ஆதமுடைய மகனே! நான் நோய்வாய்ப்பட்டிருந்தேன். ஆனால் நீ என்னை நலம் விசாரிக்க வரவில்லை'' என்று கூறுவான்.
அதற்கு அவன், ''என் இறைவா! நீ அகிலத்தின் இறைவன். உன்னை நான் எப்படி நலம் விசாரிக்க முடியும்?'' என்று கேட்பான்.
அதற்கு அல்லாஹ், ''என்னுடைய இந்த அடியான் நோய்வாய்ப்பட்டிருந்தான். ஆனால் நீ அவனை நலம் விசாரிக்கச் செல்லவில்லை. அவனை நீ நலம் விசாரித்திருந்தால், அங்கே நீ என்னைக் கண்டிருப்பாய் என்பது உனக்குத் தெரியாதா?
"ஆதமுடைய மகனே! நான் உன்னிடத்தில் உணவு வேண்டினேன். ஆனால் நீ எனக்கு உணவு அளிக்கவில்லை'' என்று கூறுவான்.
அதற்கு அவன், ''என் இறைவா! நீயோ அகிலத்தின் இறைவனாக இருக்க உனக்கு எப்படி என்னால் உணவளிக்க முடியும்?'' என்று கேட்பான்.
அதற்கு அல்லாஹ், ''என்னுடைய இந்த அடியான் உன்னிடத்தில் உணவு வேண்டி வந்தான். ஆனால் அவனுக்கு நீ உணவு கொடுக்கவில்லை. அவனுக்கு நீ உணவளித்திருந்தால், எனக்கு இதைச் செய்ததாகக் கண்டிருப்பாய் என்பது உனக்குத் தெரியாதா?"
ஆதமுடைய மகனே! நான் உன்னிடத்தில் தண்ணீர் கேட்டேன். ஆனால் நீ எனக்குத் தண்ணீர் கொடுக்கவில்லை'' என்று கூறுவான்.

அதற்கு அவன், ''என் இறைவா! நீயோ அகிலத்தின் இறைவனாக இருக்க உனக்கு எப்படி நான் தண்ணீர் கொடுக்க முடியும்? என்று கேட்பான்.
அதற்கு அல்லாஹ், ''என்னுடைய இந்த அடியான் உன்னிடத்தில் தண்ணீர் கேட்டான். ஆனால் நீ அவனுக்குத் தண்ணீர் கொடுக்கவில்லை. அவனுக்கு நீ தண்ணீர் கொடுத்திருந்தால், அதை எனக்குக் கொடுத்ததாக நீ கண்டிருப்பாய்'' என்று கூறுவான். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: முஸ்லிம் (4661)

وَّيَبْقٰى وَجْهُ رَبِّكَ ذُو الْجَلٰلِ وَالْاِكْرَامِ
மிக கண்ணியமும் பெருமையும் தங்கிய உங்களது இறைவனின் திருமுகம் மட்டும் (அழியாது) நிலைத்திருக்கும். (அல்குர்ஆன் : 55:27)
ர.ரா

சற்குருவின் சகவாசம் 4

(சற்குருவின் எளிய உவமான போதனைகள் )



மிகச் சிறிய உவமானங்களிலிருந்து வாழ்க்கையின் மிகப் பெரிய தத்துவத்தை போதிப்பவர்தான் சற்குரு .
கண்ணுக்கெட்டிய தூரம் முழுக்க தண்ணீர். கடற்கரையில் நின்று கொண்டிருந்தனர் குருவும் சிஷ்யனும். ஓடிவந்த அலை நீர் இருவரது கால்களையும் நனைத்துச் சென்றது. அதன் அழகு நுரையாக விரிந்தது.

“எத்தனை முறை பார்த்தாலும் அலுக்காதவை கடல், யானை, ரயில் என்று சொல்லி இருக்கிறீர்கள் குருவே. அதன் அர்த்தம் இப்போதுதான் முழுமையாகப் புரிகிறது!” என்றான் சிஷ்யன். கடல் நீரைப் பார்த்துப் பார்த்துப் பிரமித்தான்.
“பிரமிப்புக்கு உரியது மட்டுமல்ல கடல். அது நமக்குச் சொல்லும் பாடங்களும் ஏராளம்! அதன் ஒவ்வொரு குணத்தில் இருந்தும் நம் வாழ்க்கைக்கான பாடங்களை ஒவ்வொருவிதமாகக் கற்றுக்கொள்ளலாம்!” என்றார் குரு.
“பார்க்கும் இடமெல்லாம் நீரே நிறைந்திருக்கிறது. இந்த கடல் நீரை எடுத்துப் பருகி உன் தாகத்தைத் தீர்த்துக்கொள்ள இயலுமா?” என்று கேட்டார் குரு.
“முடியாது குருவே. உப்பு நீர் தாகத்தைப் போக்காது. அதிகரிக்கவே செய்யும்..” என்றான் சிஷ்யன்.
“அள்ள அள்ளக் குறையாத நீர். ஆனாலும், ஒரு வாய்கூட பருக முடியாது..”.
“ஆம் குருவே..” என்றான் சிஷ்யன்.
“வாய் இருக்கிறது என்பதற்காக எவ்வளவு வார்த்தைகள் பேசுகிறோம்! மனம் இருக்கிறது என்பதற்காக எப்படியெல்லாம் சிந்திக்கிறோம்! செய்ய முடியும் என்பதால் எத்தனை செயல்களைச் செய்கிறோம்! சிந்தனைகளாலும் செயல்களாலும் பிறருக்கு என்ன பயன் என்று நாம் ஒவ்வொருவரும் சீர்தூக்கிப் பார்க்க வேண்டும். அதைத்தான் சொல்லாமல் சொல்கிறது இந்தக் கடல்” - பேசினார் குரு.
குரு பேச.. சிஷ்யன் சிந்திக்க.. அலையின் ஆர்ப்பரிப்பால் கடலும் ஆமோதித்தது.
“ஒருவனின் வார்த்தைகளால் யாருக்கும் பயனில்லை என்றால், அது பருக இயலாத கடல் நீருக்கே சமமாகும்.
ஒருவனின் சிந்தனைகளால் இந்தச் சமுதாயத்துக்கு உபயோகமேதும் இல்லை என்றால், அது உப்புக்கரிக்கும் கடல் நீருக்கே சமமாகும்.

ஒருவனின் செயல்களால் இந்த உலகிற்கு பலனேதும் கிடைப்பதில்லை என்றால், அது அலை தீரா நீர் கொண்டாலும் பருகப் பயன்தராத இந்த கடலுக்கே சமமாகும்!” என்றார் குரு.
மரங்களில் இப்படியும் ஒருவகை மரம் உண்டு. அதன் இலைகள் உதிர்வதில்லை. அது முஸ்லிமுக்கு உவமையாகும். அது என்ன மரம் என்பதை எனக்கு அறிவியுங்கள்' என நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள்.
அப்போது மக்களின் எண்ணங்கள் நாட்டு மரத்தின் பால் திரும்பியது. நான் அதை பேரீச்சை மரம் தான் என்று கூற வெட்கப்பட்டுக் கொண்டு அதைச் சொல்லாமல் இருந்து விட்டேன்.

